# Ä°ï ÖéÂþBÝ]_ ïVékçïï^

**முனைவர் (Ph.D) பட்டப்பேற்றிற்காக**
**மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திற்கு**
**அளிக்கப்பெறும் ஆய்வேடு**


**ஆய்வாளர்**

**மு. சுதனா**

**பதிவு எண் 5779**

**நெறியாளர்**

**முனைவர் சு. பார்வதி**

எம்.ஏ., எம்.ஏ.(சமூகவியல்), எம்ஃபில்., பி.எச்டி

**உதவிப் பேராசிரியை, தமிழ்த்துறை,**

**ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**

**குற்றாலம்.**




**தமிழியற்புல ஆய்வுமையம்**
**ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**
**குற்றாலம் – 627 802**

**மே 2016**

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் சு. பார்வதி எம்.ஏ., எம்.ஏ (சமூகவியல்), எம்.ஃபில்., பிஎச்.டி.,**
**உதவிப்பேராசிரியை, தமிழ்த்துறை,**
**ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**
**குற்றாலம் - 627 802.**

"**சங்க இலக்கியத்தில் காலவகைகள்**" என்றத் தலைப்பில் **மு.சுதனா** அவர்கள் செய்து அளித்துள்ள இவ்வாய்வேடு மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முனைவர் பட்டப்பேற்றிற்காகக் குற்றாலம், ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை ஆய்வு மையத்தில் அவரால் தன்னியல்பாகச் செய்யப் பெற்றது என்றும், இவ்வாய்வேட்டின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**இடம்**
**நாள்**

**நெறியாளர்**
**(முனைவர் சு. பார்வதி)**

## ஆய்வாளர் உறுதிமொழி

**மு. சுதனா எம்.ஏ., பி.எட்., எம்ஃபில்.,**

**முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்),**

**பதிவு எண் 5779,**

**தமிழ்த்துறை ஆய்வு மையம்,**

**ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**

**குற்றாலம் - 602 802.**

**சங்க இலக்கியத்தில் காலவகைகள்** என்னும் தலைப்பில் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக முனைவர் பட்டப்பேற்றிற்காக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு குற்றாலம், ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை ஆய்வு மையத்தில் **முனைவர் சு. பார்வதி எம்.ஏ., எம்.ஏ (சமூகவியல்), எம்.ஃபில்., பிஎச்.டி.,** அவர்களின் நெறிகாட்டுதலில் எனது சொந்த முயற்சியில் உருவானதாகும். இவ்வாய்வேடு வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

**இடம்** **ஆய்வாளர்**

**நாள்**

**முனைவர் சு. பார்வதி**

**எம்.ஏ., எம்.ஏ (சமூகவியல்), எம்.ஃபில்., பிஎச்.டி.,**

**உதவிப்பேராசிரியை, தமிழ்த்துறை,**

**ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**

**குற்றாலம் - 627 802.**

## நன்றியுரை

**“சங்க இலக்கியத்தில் காலவகைகள்”** என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்ள முதற்காரணமாய் அமைந்த கடவுளுக்கும் சிறந்ததோர் வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்த ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி நிர்வாகத்திற்கும், சிறப்பாக ஆய்வினை மேற்கொள்ள அனுமதியளித்த தமிழ்த்துறைக்கும், சிறந்ததோர் வாய்ப்பினைத் தந்த மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திற்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதியளித்த, ஸ்ரீபராசக்தி மகளிர் கல்லூரி, முதல்வர் முனைவர் **கி. திரிபுரசுந்தரி** எம்.காம்., எம்.பி.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி., அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்த்துறையைச் சார்ந்தப் பணிநிறைவு பெற்றப் பேராசிரியர்களுக்கும் அறிவுரை வழங்கி என்னை ஊக்கப்படுத்தியத் தமிழ்த் துறைத்தலைவர் முனைவர் **பா.வேலம்மாள்** எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி., அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்விற்கு மேற்பார்வையாளராக இருந்து, ஆய்வுத் தொடக்கம் முதல் இறுதி நாள் வரை நல்லதொரு ஊக்கத்தினையும் செம்மையானக் கருத்துக்களையும் அளித்து, காலம் நேரம் பாராது ஆய்விற்கான அனைத்து உதவிகளையும் இன்முகத்தோடு நல்கியத் தமிழ்த்துறை உதவிப்பேராசிரியை **முனைவர் சு.பார்வதி** எம்.ஏ., எம்.ஏ. (சமூகவியல்), எம்.ஃ.பில்., பிஎச்.டி., அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனது முனைவர் பட்ட ஆய்விற்கு முன்மாதிரியாய் விளங்கும் **தமிழ்த்துறைப் பேராசிரியர்கள்** அனைவருக்கும் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து என்னை ஊக்கப்படுத்திய எனது கணவர் ப. பிரபாகரன் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.‘

எனது ஆய்விற்குத் தேவையான நூல்களைத் தந்துதவிய அனைத்து **நூலகத்தாருக்கும்** ஆய்வுக் காலத்தில் என்னுடன் ஆய்வு செய்தத் **தோழிகள்,**

**மூத்த ஆய்வாளர்கள்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டினை நன்முறையில் அச்சிட்டுக் கொடுத்த **இலக்கியா பதிப்பகத்தார்க்கும்** நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
| --- | --- | --- |
| | ஆய்வு முன்னுரை | – 1–8 |
| 1. | சங்க இலக்கியத்தில் பெரும்பொழுதுகள் | – 9–98 |
| 2. | சங்க இலக்கியத்தில் சிறுபொழுதுகள் | – 99–186 |
| 3. | சங்க இலக்கியத்தில் காலநுட்பங்கள் | – 187–235 |
| 4. | சங்க இலக்கியத்தில் ஐம்பூதங்கள் | – 236–264 |
| 5. | சங்க இலக்கியத்தில் நவகோள்கள் | – 265–336 |
| | ஆய்வு முடிவுகள் | – 337–347 |
| | துணை நூற்பட்டியல் | |
| | பின்னிணைப்புகள் | |

# பொருளடக்கம்

*0.1.* ஆய்வு அறிமுகம்

*0.2.* ஆய்வுத் தலைப்பு

*0.3.* ஆய்வுநோக்கம்

*0.4.* ஆய்வின் கருதுகோள்

*0.5.* ஆய்வு ஆதாரங்கள்

*0.5.1.* முதன்மை ஆதாரங்கள்

*0.5.2.* துணைமை ஆதாரங்கள்

*0.6.* ஆய்வு அணுகுமுறைகள்

*0.7.* ஆய்வு முன்னோடிகள்

*0.8.* ஆய்வேட்டின் அமைப்பும் பகுப்பும்

ஆய்வு முடிவுகள்

தொடர் ஆய்வுகள்

துணைநூற்பட்டியல்

## *0.1. ஆய்வு அறிமுகம்*

*பழந்தமிழர் இயற்கையின் இயக்கங்களை உற்று நோக்கும் ஆற்றலுடன் விளங்கினர். உலகில் பல்வேறு இன்றியமையாதப் பொருள்கள் பரந்து விரிந்துள்ளன. நீரின்றியமையாது இவ்வுலகம் என்பர். ஆயினும் தொல்காப்பியர் முதற்பொருளாக நிலத்தையும் பொழுதினையும் குறிப்பிடுகின்றார். பொழுது உலகஉயிர்கள் இயக்கம் பெறக் காரணமாகின்றது. மக்கள் நிலைபெற நிலம் அரணாக அமைகிறது. ஐவகை நிலங்கள் குறித்த சங்க இலக்கியப் பாடல்களில் காலம் இடம்பெறுகிறது. நிலங்களின் தோற்றமே மனித இனம் தோன்றி அதன்பின் படிப்படியாக நாகரிகம் முகிழ்த்து ஒவ்வொரு நிலத்திற்கும் ஏற்ற பண்பாடு, ஒழுக்கம் போன்றவை நிலைபெறக் காரணமாயிற்று. முதற்பொருளின் ஒரு கூறான நிலத்தில், வாழும் மக்களின் வாழ்வியல் ஒழுக்கங்களை அங்கு நிலவும் காலநிலை நிர்ணயிக்கின்றன. ஐவகை நிலங்களில் வாழும் மக்களின் அக உணர்வுகளையும் சூழல்களையும் கொண்டு அந்தந்த நில மக்களின் அக ஒழுக்கம் நிலைபெறுகிறது. இதனையே தொல்காப்பியர் உரிப்பொருள் என்று வகுத்தார். ஒவ்வொரு காலக் கூறுகளும் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் சூழல்கள் குறித்தும் காலநிலை மக்களின் வாழ்வியல் சூழலை நிர்ணயிக்கும் விதமும் காணப்படுகின்றன.*

*முதற்பொருளில் நிலம் கூட அழியக்கூடும். காலம் அழியா முதன்மைப் பொருள். நிலங்களில் வாழும் உயிர்களின் பொருள்களும், ஒழுக்கங்களும் காலம் என்னும் வலைக்குள்ளே கட்டுப்படும். அவ்வொழுக்கம், பண்பாடு குறித்தே இலக்கியங்கள் புனையப்படுகின்றன. காலத்தின் ஆளுகைக்கு அப்பாற்பட்டு பூமியின் சுழற்சியோ அங்கு வாழும் உயிர்களோ நிலைக்க முடியாது. ஐந்திணை மக்களின் வாழ்க்கையும் ஒழுக்கமும் கால வலைப்பட்டே நிற்கும். பருவ காலச் சூழலானது மக்களின் அகவாழ்க்கையும் அகவுணர்வையும் பாதிக்கும் காரணியாக விளங்குகிறது. நாட்டில் நிலவும் பருவக்காலங்களே அதன் வளத்துக்கும் மக்களின் நாகரிக வளர்ச்சிக்கும் காரணமாயின.*

*காலக்கணக்கு நம் வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்பட்டு அன்றாட வாழ்வோடு நெருக்கமானத் தொடர்புடையாதாகிறது. காலத்திற்கு விநாடி, மணி, நாள், மாதம், ஆண்டு என அதற்கான நிர்ணய வரையறைகள் உண்டு. அக்காலக் கூறுகளை வகைப்படுத்தி அது மக்களின் வாழ்வியல் சூழலோடு விளக்கப்படுகிறது. சங்ககால மக்கள் இயற்கையோடு கொண்டிருந்த காலத் தொடர்பும் இவ்வாய்வேட்டில் ஆராயப்படுகிறது.*

### *0.2. ஆய்வுத் தலைப்பு*

*"**சங்க இலக்கியத்தில் காலவகைகள்**" என்பது ஆய்வுத் தலைப்பாக அமைந்துள்ளது.*

### *0.3. ஆய்வுநோக்கம்*

*சங்க இலக்கியங்களில் காலம் பெறும் இடம், இயற்கையாகத் தோன்றும் அக உணர்வுக்குக் காலச்சூழல் பயன்பட்ட விதம், காலம் என்ற ஒன்று இயங்கக் களமாக இருக்கும் இயற்கை பூதங்கள், மக்களின் நம்பிக்கைகளின் அடிப்படையில் கோள்கள், நாள்மீன்கள் இவற்றின் இயக்கங்கள் குறித்து ஆராய்வதே இவ்வராய்ச்சியின் நோக்கம் ஆகும்.*

### *0.4. ஆய்வின் கருதுகோள்*

*காலநிலை என்பது உலகின் ஒவ்வொரு இடங்களிலும் வேறுபாடு உடையது. நிலவமைப்புக்கு ஏற்றாற்போன்றுப் பருவகாலங்கள் மாறுபடுகின்றன. தமிழகத்தின் காலநிலையும் பருவங்களும் அமைந்திருந்ததை சங்க இலக்கியம் உணர்த்துகின்றது. மக்கள் நாகரிகம் அடைந்து, விஞ்ஞான வளர்ச்சி பெற்று, அறிவியல் வசம் தற்போது உள்ளனர். ஆயினும் காலமானது மாறாது நிலைத்து நிற்கும் தன்மையுடையது. இயற்கையோடு இணைந்து வாழ்வு நடத்தியப் பழந்தமிழர்களின் பருவகாலச் சூழல்கள், தமிழர்களின் உணர்வுகளை வெளிப்படுத்த உதவும் காரணியாக அமைந்துள்ளது. தமிழினம் போற்றிய இயற்கைச் சூழலைக் கண்டறிந்து, அவை சங்ககால மக்களின் வாழ்வியலையும் அகவுணர்வுகளோடு கொண்டிருந்த தொடர்பினையும் வெளிப்படுத்தும் முயற்சி இவ்வாய்வின் கருதுகோளாக அமைகிறது.*

### *0.5. ஆய்வு ஆதாரங்கள்*

*"**சங்க இலக்கியத்தில் காலவகைகள்**" என்னும் தலைப்பில் அமைந்து இவ்வாய்வில் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் என இருவகையான ஆதாரங்கள் அமைகின்றன.*

### *0.5.1. முதன்மை ஆதாரங்கள்*

*பண்டையத் தமிழரின் வாழ்வியல் கூறுகளில் ஒன்று, காலத்தின் பங்கினை அறிய சங்க இலக்கியங்களான,*

1. *நற்றிணை*
2. *குறுந்தொகை*
3. *ஐங்குறுநூறு*
4. *பதிற்றுப்பத்து*
5. *பரிபாடல்*
6. *கலித்தொகை*
7. *அகநானூறு*
8. *புறநானூறு*
9. *திருமுருகாற்றுப்படை*
10. *பொருநராற்றுப்படை*
11. *சிறுபாணாற்றுப்படை*
12. *பெரும்பாணாற்றுப்படை*
13. *மலைபடுகடாம்*
14. *குறிஞ்சிப்பாட்டு*
15. *முல்லைப்பாட்டு*
16. *மதுரைக்காஞ்சி*
17. *நெடுநல்வாடை*
18. *பட்டினப்பாலை*

*போன்றவை முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.*

### *0.5.2. துணைமை ஆதாரங்கள்*

*இவ்வாய்விற்குத் தொடர்பான தரவுகளை, தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், அகராதிகள், நிகண்டுகள், நம்பியகப்பொருள், சங்க இலக்கியங்கள் பற்றிய ஆய்வு நூல்கள், பிறநூல்கள், விளக்கநூல்கள், கருத்தரங்க ஆய்வுக் கட்டுரைகள், காலம் பற்றிய ஆய்வுநூல்கள் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.*

### *0.6.* ஆய்வு அணுகுமுறைகள்

"***சங்க இலக்கியத்தில் கால வகைகள்***" *என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்விற்கு சமூகவியல் அணுகுமுறை (Socialogical approach)யும், இவ்வாய்வேட்டினைப் பகுத்தும் தொகுத்தும் கூறும் போது,*

***1. பகுப்பாய்வு முறை* (Analytical Method*)***

***2. விளக்கமுறை* (Descriptive Method*)***

***3. திறனாய்வு முறை* (Criticism Method*)***

*போன்ற அணுகுமுறைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.*

### *0.7.* ஆய்வு முன்னோடிகள்

*1. வா. ச. பானு நூர் மைதீன், 1993, பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும், பர்வீன் பதிப்பகம், முதற்பதிப்பு.*

*2. சு. முத்துவேல், 2007, சங்க இலக்கியத்தில் காலக்கோட்பாடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை.*

### *0.8.* ஆய்வேட்டின் அமைப்பும் பகுப்பும்

"***சங்க இலக்கியத்தில் கால வகைகள்***" *என்றத் தலைப்பில் அமைந்துள்ள இவ்வாய்வேடு, ஆய்வு முன்னுரை, ஆய்வு முடிவுகள் நீங்கலாக ஐந்து இயல்களாகப் பிரித்து ஆராயப்பட்டுள்ளது.*

### ஆய்வுப் பகுப்பு

| | |
|---|---|
| | *ஆய்வு முன்னுரை* |
| *இயல் - 1* | *சங்க இலக்கியத்தில் பெரும்பொழுதுகள்* |
| *இயல் - 2* | *சங்க இலக்கியத்தில் சிறுபொழுதுகள்* |
| *இயல் - 3* | *சங்க இலக்கியத்தில் காலநுட்பங்கள்* |
| *இயல் - 4* | *சங்க இலக்கியத்தில் ஐம்பூதங்கள்* |
| *இயல் - 5* | *சங்க இலக்கியத்தில் நவகோள்கள்* |
| | *ஆய்வு முடிவுகள்* |
| | *தொடராய்வுகள்* |
| | *துணைநூற் பட்டியல்* |

ஆய்வு முன்னுரையில் ஆய்வு அறிமுகம், ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வின் கருதுகோள், ஆய்வு ஆதாரங்கள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வேட்டின் அமைப்பும் பகுப்பும், ஆய்வு முடிவுகள், துணைநூற்பட்டியல் போன்ற தலைப்புகளில் ஆய்வேட்டின் அமைப்பு விளக்கப்பட்டுள்ளது.

**இயல் ஒன்று**

"**சங்க இலக்கியத்தில் பெரும்பொழுதுகள்**" என்னும் முதல் இயல் ஆண்டின் ஆறுவகைப் பிரிவுகளான கார்காலம், கூதிர்காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனிற்காலம், முதுவேனிற்காலம் என்னும் பெரும்பொழுதுகள் விளக்கப்பட்டுள்ளன. கார்காலத்தின் தன்மை, கார்கால அழகு, கார்கால நிகழ்வுகள், கார்கால வரவை உயிர்கள் எதிர்நோக்கும் திறம்குறித்து ஆராயப்படுகின்றன. கூதிர்காலம் வாடையைக் கொண்டு வந்து உயிர்களை செயலறவு செய்வதைக் கூறுகிறது. வாடையினால் பிரிந்திருப்போர் படும் துன்பமும் இணைந்திருப்போர் இன்பம் துய்ப்பதும் விவரிக்கப்படுகின்றன. முன்பனிக்காலம் பனி வீசும் காலமாகவும் சிறு மழைபொழியும் காலமாகவும் காட்டப்படுகின்றன. இக்காலத்தில் பிரிந்தோர் துன்பம் உறும் இயல்பைக் கூறும் விதமும் அற்சிரம் என்றழைக்கப்படும் பனிக்காலம் முன்பனி, பின்பனி என்றுப் பிரிக்கப்பட்டாலும், வாடை வருத்தும் பின்பனிக்காலம் கடுமை நிறைந்தப் பனிப்பொழிவைக் குறிக்கிறது. பின்பனிப் பருவத்தில் முனைப்பாகவும் கொடியதாகவும் வாடை வீசுதலினால் உயிரினங்கள் அடையும் இன்பமும் துன்பமும் இயற்கைச் சூழலோடு விளக்கப்படுகிறது. மரத்தின் இலைகள் உதிர்ந்து வீழும் காலமாகவும் விளங்குவதை விளக்கப்பட்டுள்ளது.

இளவேனில் இன்பவேனில், காமர்வேனில் எனும் பெயர்களில் அழைக்கப் படுகிறது. வாடியக் கிளைகள் யாவும் தளிர்த்து இலை, மலர், காய், கனி என்று உருமாறி கண்ணுக்கு இனியப் பருவமாகக் காட்சியளிப்பதைக் கூறுகிறது. இயற்கையின் எழிற்கோலம் சிறப்புறும் இளவேனில், பன்னிறம், மணம் மிக்க மலர்கள் பூத்துக் கவினைத் தருகிறது. இக்கவின் காதலர் இன்பம் நுகர தண்ணியச் சூழலைத் தருவதை விளக்கி வரையப்படுகிறது. முதுவேனிற்பருவம் உயிரினங்களும் பயிரினங்களும் வருந்தும் நிலையைக் காட்டுகின்றது. தலைவி கூற்றில் பிரிவுத்துன்பம் மிகுந்தும், முதுவேனிலின் வருணனை கடுமையாகவும் சித்தரிக்கப்படுகிறது.

**இயல் இரண்டு**

**"சங்க இலக்கியத்தில் சிறுபொழுதுகள்"** என்னும் இரண்டாவது இயலில் ஒருநாளின் காலக் கூறுகளான வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு, மாலை, யாமம் என்னும் அறுவகை பொழுதுகளின் விளக்கங்களும் ஒவ்வொரு சிறுபொழுதின் தன்மை, நிகழ்வுகள் குறித்தச் செய்திகளை இயற்கை சூழலோடு பொருத்திக் காட்டி, சிறுபொழுதுகளின் தன்மைக்கு ஏற்ப மக்களின் அகஉணர்வுகளும் ஆராயப்பட்டுள்ளன.

**இயல் மூன்று**

**"சங்க இலக்கியத்தில் காலநுட்பங்கள்"** எனும் இயலில் காலக்கூறுகளை நுட்பமாக பகுத்துக் கூறப்பட்டுள்ளது. குறைந்த கால அளவான மாத்திரை முதல் ஊழி, யுகம் போன்றவற்றை தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. காலங்களைத் தமிழர்கள் கணித்த முறையும் காலக் குறிப்புகளை வாழ்வோடு இணைத்த முறையும் கூறப்பட்டுள்ளது. நாளோடு தொடர்புடைய நிகழ்வுகளைக் கொண்டு முதல் நாள், மறுநாள் போன்றவற்றைப் பயன்படுத்திய விதம் குறித்துப் பேசப்படுகின்றது. 30 நாள்களைக் கொண்டது மாதம். மாதத்தைத் திங்கள் எனக் கொண்டு தமிழ் மாதப் பெயர்கள் வழங்கப்பட்டதைக் கூறுகிறது. பருவச் சூழற்சியில் ஆண்டுக் கணக்கில் கணிக்கப்படுதல் விளக்கம் பெறுகிறது. ஆண்டின் பெருக்கமாக விளங்கும் ஊழிக் காலம், ஊழியின் வகைகளும் விளக்கப் பெறுகின்றன. நுண்ணிய கணிப்பான பஞ்சாங்க உறுப்புகள் பற்றிய செய்தியும் கூறப்படுகின்றன.

**இயல் நான்கு**

**"சங்க இலக்கியத்தில் ஐம்பூதங்கள்"** என்னும் தலைப்பில் அமைந்துள்ள நான்காவது இயலில் ஐம்பூதங்கள் பற்றிய விளக்கமும், அவற்றின் தன்மையும் விளக்கப்படுகிறது. காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய நான்குப் பூதங்களும் நிலைத்து நிற்க இடம் அளிப்பது வானம் ஆகும். வானில் இருந்து வரும் மாற்றம் கொண்டு கணிக்கப்பெறுவதே காலம் ஆகும். அவ்வகையில் முதற்பொருளான காலம் ஐம்பூதத் தொடர்புடையது. அகத்திணையில் முதற்பொருளை வகுத்தது பொருத்தமுடையது. ஐம்புலன்களும் ஐம்பூதம் சார்ந்தன. ஐம்பூதமோ நிலம் மற்றும் நிலத்தில் இயங்குபவை. ஐம்பூதம் இல்லை எனில் உலகமோ, உலக உயிரினங்களும்

இல்லை. மக்கள் புலன்களும், புலன் வழி நுகரப்படும் இன்பமும் அகஒழுக்கமோ இல்லை. அக ஒழுக்கங்களுக்குப் பருவகாலச் சூழல் துணைபுரிகிறது. பருவ காலங்கள் நிகழக் காரணமாகவும் அவை நிகழும் களமாகவும் ஐம்பூதங்கள் திகழ்கின்றன. ஐம்பூதங்களுக்கும் உலகம் இயங்கக் காரணமாக இருக்கும் காலத்துக்கும் உள்ள நெருங்கியத் தொடர்பு போன்றவை ஆராயப்பட்டுள்ளன.

### இயல் ஐந்து

***சங்க இலக்கியத்தில் நவகோள்கள்*** என்னும் இயலில் வானுலகு பற்றிய அக்காலத் தமிழரின் நம்பிக்கை கோள்கள் பற்றிய நம்பிக்கைகள் இடம் பெறுகிறது. கோள்களின் இயக்கங்கள் பூமியில் உள்ள மக்களின் வாழ்க்கையை நிர்ணயிப்பதை நம்பிய தமிழர்கள் கோள்களை அன்றாட வாழ்க்கை நிகழ்வுகளோடு தொடர்புபடுத்தியவிதம் விளக்கப்படுகின்றன.

ஒவ்வொரு இயலிலும் கூறப்பட்டுள்ள ஆய்வு முடிவுகளைத் தொகுத்தும் பகுத்தும் தரப்பட்டுள்ளன. ஆய்வுக்குத் துணை நின்ற நூல்கள் துணைநூற்பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

### தொடர் ஆய்வுகள்

**“*சங்க இலக்கியத்தில் கால வகைகள்*”** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வினைத் தொடர்ந்து பெரும்பொழுதின் தொழில்கள், சங்ககால பருவப் புனைவுகளும் வாழ்க்கை முறைகளும், புறவாழ்வில் காலங்களின் பங்கு என்னும் களங்களில் ஆய்வினை நிகழ்த்தலாம்.

# பொருளடக்கம்


*1.0.* முன்னுரை

*1.1.* பொழுதுகள்

*1.1.1.* பெரும்பொழுதுகள்

*1.1.2.* பிறமொழி இலக்கியங்களில் பெரும்பொழுதுகள்

*1.1.3.* கார்காலம் - மழைக்காலம்

*1.1.3.1.* தலைப்பெயல் மழை

*1.1.3.2.* வம்பமாரி

*1.1.3.3.* கால்வீழ்தல்

*1.1.3.4.* கார்காலத்தின் தன்மை

*1.1.3.5.* கார்கால நிகழ்வுகள்

*1.1.3.6.* கார்காலச் செடிகள்

*1.1.3.7.* கார்கால மலர்கள்

*1.1.3.7.1.* முல்லை

*1.1.3.7.2.* தளவம்

*1.1.3.7.3.* கொன்றை

*1.1.3.7.4.* பிடவம்

*1.1.3.7.5.* பீர்க்கு

*1.1.3.7.6.* பித்திகம்

*1.1.3.8.* கார்கால பற்றிய உவமை

*1.1.4.* கூதிர்காலம்

*1.1.4.1.* கூதிர்காலத்தின் தன்மை

*1.1.4.1.1.* கூதிர்கால நீர்

*1.1.4.1.2.* கூதிர்க் கடுமை

*1.1.4.1.3.* கூடியிருக்கும் பருவம்

*1.1.4.1.4.* கூதிர்காலத்தின் உயிரினங்கள்

*1.1.4.2.* கூதிர்கால மலர்

*1.1.4.3.* கூதிர்கால வர்ணனை

*1.1.5.* முன்பனிக்காலம்

*1.1.5.1.* முன்பனிக்காலம் - வாடைக்காலம்

*1.1.5.2.* முன்பனிப் பருவத்தின் கடுமை

*1.1.5.3.* அருவியருதல்

*1.1.5.4.* முன்பனிக்கால மலர்கள்

*1.1.5.5.* தமியோர்க்கு அரிதாகும் தண்பனிப் பருவம்

*1.1.5.6.* துள்ளுப்பெயல்

*1.1.6.* பின்பனிக் காலம்

*1.1.6.1.* பின்பனியின் தன்மை

*1.1.6.2.* பயிரினம் தழைக்கும் பருவம்

*1.1.6.3.* பின்பனிக்கால மலர்கள்

*1.1.7.* இளவேனிற் காலம்

*1.1.7.1.* இளவேனிற்கால இயல்பு

*1.1.7.1.1.* தண்பத வேனில்

*1.1.7.1.2.* நாட்பத வேனில்

*1.1.7.1.3.* பனிநீங்கு வழிநாள்

*1.1.7.1.4.* புதுமை நுகரும் காலம்

*1.1.7.2.* இளவேனிற்கால நிகழ்வுகள்

*1.1.7.2.1.* உழவுத்தொழில்

*1.1.7.2.2.* குயில் குரலெழுப்பும் இளவேனில்

*1.1.7.2.3.* சேவலும் பெடையும்

*1.1.7.2.4.* குயில் அகவும் காலம்

*1.1.7.3.* இளவேனிற்கால மரங்கள்

*1.1.7.3.1.* கடப்ப மரம்

*1.1.7.3.2.* கோங்க மரம்

*1.1.7.4.* இளவேனிற்கால மலர்கள்

*1.1.7.4.1.* வேம்பு

*1.1.7.4.2.* பல்வகை மலர்கள்

*1.1.7.5.* பிரிந்தவர் கூடும் இளவேனில்

*1.1.7.5.1.* காமர் பொழுது

*1.1.7.5.2.* செவ்வி வேனில்

*1.1.7.5.3.* துயர் தீர்க்கும் தூதர்

*1.1.7.5.4.* இளவேனிற் படுக்கை

*1.1.7.6.* பிரிந்தோரை வருத்தும் காலம்

*1.1.7.7.* தலைவி ஆற்றியிருத்தல்

*1.1.7.8.* மன்மதன் விழா

*1.1.7.9.* பிறபொழுது மயங்கிய வேனில்

*1.1.8.* முதுவேனில்

*1.1.8.1.* முதுவேனில் தன்மை

*1.1.8.2.* கோடைக்காற்று

*1.1.8.3.* உயிரினங்கள் வாடும் முதுவேனில்

*1.1.8.3.1.* களிறுகள்

*1.1.8.3.2.* பயிரினம்

*1.1.8.4.* முதுவேனில் மலர்கள்

*1.1.8.5.* கோடைமழை

*1.1.9.* வேனிற் பாசறை

முடிவுகள்

## *1.0.* முன்னுரை

*முதற்பொருள் ஐம்பூதத் தொடர்புடையது. மனித வாழ்வும் ஐம்புலத்துடன் தொடர்புடையது. ஐம்புலன்களும் ஐம்பூதத் தொடர்புடையன. ஐம்பூதம் இன்றேல் உலகமோ மக்களோ புலனோ இல்லை. புலன் வழிப்பட்ட ஒழுக்கங்களும் இன்பங்களும் இல்லை. அவ்வகையில் பொழுதானது நிலத்திற்கும் நிலம் முதலான ஐம்பூதங்களுக்கும் எல்லையற்ற மூலமாக அமைகின்றது. நிலத்தில் வாழும் உயிர்கள் பொழுதின் வலைப்பட்டு நிற்கிறது. காலமாகியப் பொழுது அழியாப் பொருள். அத்தகையப் பொழுதானது ஐந்திணைகளின் செயல்பாடுகளுக்கும் பொருள்களுக்கும் காரணமாகின்றன. பெரும்பொழுதுகள், சிறுபொழுதுகள் என்றப் பொழுதுகளின் பகுப்பில் பெரும்பொழுதின் தன்மையினை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.*

## *1.1.* பொழுதுகள்

*பொழுது என்பதற்கு,*

***"காலம், சூரியன், கணம், வாழ்நாள்"*** [1]

***(மதுரைத் தமிழ் பேரகராதி, பக்கம் 585)***

*என்னும் பொருள்களை மதுரைத் தமிழ்ப் பேரகராதி தருகிறது. பொழுது பற்றிக் கூறும்பொழுது,*

> ***"காலையாய் மாலையாய் இரவாய்ப் பின்னும் மாறி மாறிக் கணிகமாய்க் கல்பமாய்ச் சென்று கொண்டேயிருக்கும். பொழுது ஓர் அருவப் பொருள் - நொடிகள் நாழிகைகளாய், நாழிகைகள் பொழுதாய், பொழுதுகள் நாளாய், நாட்கள் வாரமாய், வாரங்கள் மாதங்களாய், மாதங்கள் வருடங்களாய், வருடங்கள் யுகம், யுகம் பல கூடிக் கல்பமாக முடியும். பெரும் பொருள் காலம் அகண்ட பரிபூரண சக்தியின் அலைகளாகப் புரண்டு செல்லும் திரண்ட கால வெள்ளத்தின் சிறுபின்னத்தில் தன்னை ஐக்கியப்படுத்திப் பாடுகின்றான்கவிஞன்"*** [2]

***(நா.பார்த்தசாரதி, கவிதைக்கலை, பக்கம் 72)***

*என்னும் கூற்றின் மூலம், பொழுது, இலக்கிய படைப்பாளனின் பாடல் களத்திற்குக் கருத்துப் பொருளாய் இருந்தது அறியப்பெறுகின்றது. இவ்வகையில் பொழுது*

உலகின் முதற்பொருளாய் ஆட்பட்டு இவ்வுலகை ஆளும் பேராற்றல் மிக்க சக்தியாக இயங்கியும் உலகை இயக்கியும் நடக்கின்றது. பொழுதின் வகைகளை,

> **"காலம் அல்லது பொழுது என்பது மாத்திரை முதலாக நாழிகை,**
> **யாமம், பொழுது, நாள், பக்கம், இருது, அயநம், ஆண்டு, உகம்**
> **எனப் பல வகைப்படும்"** [3]

***(மு.அருணாசலம், தொல்காப்பியம், அகத்திணையியல், உரைவளம், பக்கம்15)***

என்கிறார் மு. அருணாசலம். இதில் பக்கம் என்பதுப் பன்னிரு நாட்கள் கொண்ட பகுதி எனவும் இரு திங்கள் கொண்ட பருவம் இருது எனவும் ஆறு திங்கள் கொண்டது அயநம் எனவும் கொள்ளப்பட்டுள்ளது.

வாழ்வின் அடிப்படைக் கூறுகளான பண்பாடு, கலாச்சாரம், நாகரிகம் போன்ற கூறுகள் சங்க இலக்கியங்கள் முழுவதிலும் விரவியிருக்கின்றன. மக்கள் சமுதாயத்தோடு தொடர்புகொண்ட வாழ்வியலை அகம், புறம் எனச் சங்க இலக்கியங்கள் பிரித்துக்காட்டுகின்றன.

ஒவ்வொரு சமூகமும் தமக்கென ஒரு பண்பாட்டைக் கொண்டு விளங்கும். வாழ்க்கை முறை என்பது வாழும் இடம், காலம், சூழல் இவற்றோடு தொடர்புடையதாக இருக்கிறது. மக்களின் வாழ்வியல் முறைக்கு இடம் அடிப்படையாக அமைகிறது. தொல்காப்பியர் இடத்தை முதன்மைப் படுத்தி நிலத்தினை,

> **"நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்**
> **படுதிரை வையம் பாத்திய பண்பே"** [4]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 2)***

என்றுக் குறிப்பிடுகின்றார். நிலத்தை,

> **"மாயோன் மேய காடுறை உலகமும்**
> **சேயோன் மேய மைவரை உலகமும்**
> **வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
> **வருணன் மேய பெருமணல் உலகமும்**
> **முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
> **சொல்லிய முறையாய் சொல்லவும் படுமே"** [5]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் நூற்பா 5)***

எனப் பாகுபடுத்துகிறார். இவற்றுள் பாலை தவிர மற்ற நிலங்கள் முல்லை குறிஞ்சி மருதம், நெய்தல் என்பவையாகும். பாலை நிலம் என்பது மழை இல்லாமல் வறண்டு கிடக்கும் நிலப்பகுதியாகும். ஐந்திணைக்குரிய ஒழுக்கங்கள் சமுதாயத்தின் நெறிமுறைகளை செயற்பாடுகளை நடத்திச் செல்வதற்குப் பயன்படுகின்றன. சமுதாய முன்னேற்றத்திற்கு ஒழுக்கங்கள் மிகவும் இன்றியமையாததாகவும் அமைகின்றன.

அகத்திணைக் கூறுகளை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்று வகைப்படுத்துகின்றனர். முதற்பொருள் என்பது நிலமும் பொழுதும் ஆகும். தொல்காப்பியர்,

**"முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்**

**இயல்பு என மொழிப இயல்புணர்ந்தோரே"** [6]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 4)*** என்று கூறுகிறார். பொழுது என்பது இயற்கை, இயற்கையோடு ஒன்றி நிலைத்திருப்பது, இலக்கியப் பாகுபாட்டுக்கு உறுதுணையாய் இருந்துச் சிறப்படையச் செய்வது என்பது அறியப் பெறுகின்றது.

மனித நாகரிகத்திற்கும் இலக்கியங்களுக்கும் இயற்கை பொதுவுடைமை ஆனது ஆயினும் தமிழர்கள் இயற்கைச் சார்புடைய வாழ்க்கைக்கு முதன்மை அளித்தனர் என்பதுக் குறித்து கதிர் மகாதேவன்,

**"தமிழன் மரபே இயற்கை அவனுடைய வாழ்வே இயற்கையின் திருவுரு"**[7]

***(கதிர்மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், பக்கம் 9)***

என்றுத் தம் நூலில் குறிக்கின்றார்.

இயற்கை, புலவனை இயக்கும் ஒரு சக்தியாக, கருவியாக விளங்குகிறது. அவனது புலமை வெளிப்படும் ஒரு களமாக முதற்பொருள் பயன்பட்டது. மனிதனுடைய வாழ்வியல் சூழலுக்கும் வாழ்வியல் நிகழ்வு மாற்றங்களுக்கும் நிலம் பொழுது முதலிய இயற்கை சக்திகள் காரணமாக அமைவதை,

**"குறிப்பிட்ட நிலத்தின் பருவ நிலைக்கும் இயற்கை வளத்துக்கும் ஏற்பட்ட மாறுதல்கள் வெளிப்படையாகவோ குறிப்பாகவோ திகழ்ந்து, வாழ்க்கைப் போக்கை அமைப்பதற்கு முதல் காரணமாய் இயற்கை அமைகின்றது"** [8]

***(மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்கங்கள் 31-32)***

என்னும் கூற்றுப் புலப்படுத்துகின்றது.

இலக்கியங்களில் நிலத்தின் இயல்பாலும் பொழுதுகளின் மாறுதல்களினாலும் உணர்வென்னும் ஒழுக்கங்கள் உருவாகின்றன. ஐந்திணை ஒழுக்கங்களுக்கு நிலமும் பொழுதும் முதல் தேவைகளாகின்றன. அத்தகையப் பொழுதுகளில் பெரும் பொழுதுகளும், அவற்றின் தன்மைகளும் மக்களின் வாழ்க்கைச் சூழலுக்குப் பொருந்தி வருவதையும் வாழ்வியல் நிகழ்வுகளுக்குக் காரணமாகிப் பொழுதுகளினால் உணர்வுச் சாயல்கள் பெரும்பொழுதுகளில் வெளிப்படும் விதங்கள் ஆராயப்பெறுகின்றது.

மனிதனின் வாழ்வியலுக்கு அடிப்படை ஆதாரமாக நிலமும் பொழுதும் விளங்குகின்றன. எல்லா உயிரினங்களும் நிலைத்ததாகவும் அனைத்திற்கும் மூத்த பொருளாகவும் நிலம் விளங்குகின்றது. உயிரைத் தந்து, காத்து, தன்னுள் கரைத்துக் கொள்ளும் தன்மையுடையது நிலம். நிலத்தில் வாழும் அனைத்து உயிர்களும் காலத்திற்குள் அடங்கி வாழ்கின்றன. தோற்றமும் முடிவும் கூற இயலாத தன்மை உடைய கடவுளைப் போல் நிற்பது காலமாகும். இதன்படியே நிலமும் காலமும் முதற்பொருளாகக் கருதப்படுகிறது.

முதற்பொருள் வழியாக உருவான பொருள்கள் கருப்பொருள்கள் எனப்பட்டன. உயரிய மனிதப் பிறப்பின் உணர்வாக, உவமையாக அமைந்தது உரிப் பொருளாகும்.

ஐந்திணை ஒழுக்கங்களும் புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் எனப்பட்டன. இதன் தன்மையே மக்களின் அகவாழ்வு சிறப்படையச் செய்கிறது.

### *1.2. பெரும்பொழுது*

*பெரும்பொழுது என்பதற்கு,*

**"பெரும்போது, இருது, ஆனியம், பருவம்"** [9]

***(நாமதீப நிகண்டு, காலவர்க்கம், பக்கம் 166)***

*என்னும் பொருள்களை நாமதீப நிகண்டு குறிக்கின்றது.*

**"இருதிங்கள் சேர்ந்த காலப்பகுதி பருவம் அல்லது இருது எனக் கொள்ளப்படும் ஆவணி தொடங்கி இரண்டு இரண்டு மாதங்களாக முறையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறு பருவங்கள் கொள்வர்"** [10]

***(நிகண்டுச் சொற்பொருட் கோவை, பக்கம் 22)***

*எனப் பெரும்பொழுதுகள் பற்றி நிகண்டுச் சொற்பொருட்கோவை குறிப்பிடுகிறது. தொல்காப்பியர் அகத்திணையியலில் பெரும்பொழுகளை ஐவகை நிலங்களுக்குரியப் பொழுதுகளாக வகுத்துரைக்கிறார். கார், பனி, எதிர் பருவம், பின்பனி, வேனில் என்னும் முறையில் பெரும்பொழுதுகளைக் குறிப்பிட்டுள்ளார்.*

*கார்ப்பருவம் மழையைத் தருவித்து உலக உயிர்கள் வளம் பெறுவதற்குக் காரணமாக இருத்தல் கருதிக் கார்பருவத்தை முன்னிறுத்தி பிற பருவங்களைப் பகுத்ததாகக் கருதமுடிகிறது. ஆவணி மாதத்தைத் தொடக்கமாகக் கொண்டு ஆண்டு துவங்கிய வழக்கம் இங்குக் கருதத்தக்கது.*

### *1.1.2. பிற மொழி இலக்கியங்களில் பெரும்பொழுதுகள்*

*பெரும்பொழுதினை ஆவணி முதல் இரண்டிரண்டு திங்கள் அளவினவாகிய ஆறு பருவங்களாக வகை செய்தனர். இப்பருவ நிலைகளை நிலப்பிரிவுகளுக்குப் பொருத்திக்காட்டி இலக்கியத்திற்கு அடிப்படையாக அமைத்துக் கொண்டனர். இந்தப் பருவப் புனைவு, பல்வேறு மொழி இலக்கியங்களிலும் பொதுவான இலக்கிய நெறியாகப் பின்பற்றி வருவதைக் காண முடிகிறது. பருவப் பாகுபாடு வடமொழியிலும் ஆறு பருவங்களாகப் பிரிக்கப்படுகிறது.*

**"வடஇந்தியாவில் ஓராண்டு காலம் வர்-ம், சரத், ஹேமந்தம், சிசிரம், வசந்தம், கிரீஷ்மம் என்னும் ஆறு பருவங்களக அமைந்திருக்கிறது. இப்பருவநிலை தென்னிந்தியாவுக்குப் பொருந்தாது'** [11]

***(குஞ்சூன், பண்டைய கேரளம், பக்கம் 51)***

என்றுக் குஞ்சூன் கூறுகிறார்.

வடமொழி இயற்கையையும் ஆறு பருவங்களையும் தெய்வங்களாகவும் தேவதைகளாகவும் புனைந்துப் பாடுவது மரபு. பண்டைய சங்கப் பாடல்கள் பருவப் புனைவுகளை மனித வாழ்வியற் பின்னணியாகவும் அடிப்படையாகவும் மேற்கொண்டுள்ளன. காளிதாசரின் படைப்புகளான இருது சம்மாரம், மேகசந்தேசம், சாகுந்தலம் போன்றவற்றில் பருவப் புனைவுகள் பற்றியச் செய்திகள் உள்ளன. அவற்றுள் இருது சம்மாரத்தில் சிறப்பாகப் புனையப் பெறுவதை,

***"Though kalidasa also write in a sophisticated age, he composed his poem in a land in which the beauty and sublimity of nature had entered deeply into human life. Further, kalidasa has a more natural and instinctive and genuine and reverential love for nature ........... To kalidasa, nature was largely a frame for the mounting of his picture of human life."*** [12]

***(K.S.Ramasamy sastri, Kalidasa - His period personality and poerty, pp. 108-109 and 129)***

என்னும் கூற்றின் மூலம் அறியமுடிகின்றது. இருது சம்மாரத்தில் ஆறு காண்டங்களாக ஆறு பருவங்கள் பேசப் பெறுகின்றது. முதற்காண்டம் வேனிற் பருவத்தையும் (நிடகா), இரண்டாம் காண்டம் மழைப் பருவத்தையும் (வர்-), மூன்றாம் காண்டம் இலையுதிர் பருவத்தையும் (சரத்), நான்காம் காண்டம் குளிர்பருவத்தையும் (ஹேமந்த), ஐந்தாம் காண்டம் பனிப்பருவத்தையும் (சிசிர), ஆறாம் காண்டம் வசந்த பருவத்தையும் (வசந்த) குறித்து விளக்குகிறது.

சூரியன் பூமியின் கீழ்த்திசையில் தென்பாகத்தில் சில காலமும் வடபாகத்தில் சில காலமும் மத்திய ரேகைக்கு நேராகச் சில காலமும் இருப்பதால் சூரியக்கிரகணம் ஏற்படுகிறது. பூமியின் மேல் ஒரே அளவாக விழாமல் மாறுபட்டு

வருவதால் கிரகணத்தின் தன்மையை அனுசரித்துக் காலநிலைகள் மாறுபாடுகின்றன. அப்படி மாறுபடும் தன்மைகளை ஆறு வகுப்புகளாகப் பிரித்து இருது என்றுப் பெயரிட்டு இருக்கின்றனர்.

| **மாதம்** | **காலம்** | **இருது** |
|---|---|---|
| 1. சித்திரை, வைகாசி | இளவேனில் | வசந்த இருது |
| 2. ஆனி, ஆடி | முதுவேனில் | கிரிஷ்மரிது |
| 3. ஆவணி புரட்டாசி | கார்காலம் | வ ரு - ரி து |
| 4. ஐப்பசி, கார்த்திகை | கூதிர்காலம் | சரரிது |
| 5. மார்கழி, தை | முன்பனி | ஹேமந்தரிது |
| 6. மாசி, பங்குனி | பின்பனி | சசிரிது |

இந்த ஆறு பருவங்களையும் மழைக்காலம், பனிக்காலம், வெயில்காலம் என மூன்று பெரும்பிரிவுகளாகப் பிரிக்கின்றனர். மழையின் முற்பகுதி கார் எனவும் பிற்பகுதி கூதிர் எனவும் கொள்ளப்படும். முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பனவும் அவ்வப்பருவத்தின் முன்,பின் பகுதி கொண்ட பெயர்களாகும்.

இருது சம்மாரம், இயற்கையானது காதலர்களின் அகவாழ்வைக் காட்டும் நாள்காட்டி என்றுப் பேசுகின்றது.

> ***"Deals with the feeling awakened by each season in a pair of young lovers, Indeed the poem might be called a love's calender"*** [13]
>
> ***(K.S.Ramasamy Sastri, Kalidasa His period and poverty, Page 128)***

என்றுரைப்பதன் மூலம் காதலர்களின் அகவாழ்விற்கு இயற்கை உறுதுணையாக அமையும் விதம் சொல்லப் பெறுகின்றது.ஆங்கில இலக்கியங்களில் பருவக் காலங்கள் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

> **''அங்கு நில அடிப்படையை விடக் கால அடிப்படையே முக்கியமாகும். வசந்தம், கோடை, இலையுதிர் காலம், குளிர்காலம் (Spring, Summer, Autumn, Winter) என்ற நான்கு அடிப்படைகளே அங்குள்ளவையாகும்''** [14]
>
> ***(தமிழண்ணல், சங்க இலக்கிய ஒப்பீடு, பக்கங்கள் 161 - 162)***

என்னும் கூற்று உறுதிசெய்கின்றது. உலக மொழிகள் யாவற்றிலும் ஆறு பருவங்கள் பற்றிய வருணனைகளும், அது அவர்தம் மரபுகளுடன் ஊடுருவி நின்றது காணப்பெறுகின்றது. அவற்றை முன்னரே உணர்ந்து தமிழர் தம் இலக்கியத்தின் அடிப்படைக் கூறாகக் கொண்டு பாடப்பெற்றதன் மூலம் பெரும்பொழுதின் ஆற்றல் புலப்படுகின்றது. பொழுதுகள் வருணனைக்காக மட்டுமல்லாது வாழ்க்கையின் பின்னணியாகவும் உயர்ந்த வாழ்வியற் சிந்தனையின் வெளிப்பாடாகவும் ஒழுக்கத்தை உள்ளிருத்தி வழங்கிய உத்தியாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பிரபஞ்சத்தில் காலச் சுழற்சியால் ஏற்படும் தட்பவெப்பநிலை மாற்றம் மற்றும் பல்வேறு காலநிலைகளை நிலத்திற்கு ஏற்றாற் போன்றுப் பண்டையத் தமிழ் இலக்கியங்கள் பகிர்ந்தளிக்கின்றன. மழைக்காலம், பனிக்காலம், வெயிற்காலம் போன்ற மூன்று பிரிவுகளும் ஓர் ஆண்டு முழுவதும் அமையப் பெறுகின்றன. மழைக்காலத்தைக் கார், கூதிர் என்றும் பனிக்காலத்தை முன்பனி, பின்பனி என்றும், அடுத்து வரும் வெயிற்காலத்தை இளவேனில், முதுவேனில் என்றும் ஆறு பருவங்களாகத் தமிழர்கள் பிரித்துள்ளனர். இவை பன்னிரு திங்களின் பாகுபாடுகள். மழை, பனி, வெயில் என்ற மூன்றனால் காலத்தைப் பகுத்தனர். ஒவ்வொரு பருவத்திற்கும் திங்கள் எல்லையும் வரையறுக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| இளவேனில் | - | சித்திரை, வைகாசி (ஏப்ரல், மே) |
| முதுவேனில் | - | ஆனி, ஆடி (சூன், சூலை) |
| கார் | - | ஆவணி, புரட்டாசி (ஆகஸ்ட், செப்டம்பர்) |
| கூதிர் | - | ஐப்பசி, கார்த்திகை (அக்டோபர், நவம்பர்) |
| முன்பனி | - | மார்கழி, தை (திசம்பர், ஜனவரி) |
| பின்பனி | - | மாசி, பங்குனி (பிப்ரவரி, மார்ச்) |

பெரும்பொழுதுகள் ஆறு வகைப்படும் என்றக் குறிப்புத் தொல்காப்பியத்தில் நேரடியாகக் கூறப்படவில்லை. பொழுதுகளின் பிரிவுகள் உரையாசிரியர்களால் வகுக்கப்பட்டவையாகும்.

**“ஆறு என்ற தொகைக் குறியீடு தொல்காப்பியத்துள் இல்லை.**

**அஃது உரையாசிரியர்களால் பெறப்படுவதுவே. கார், கூதிர்,**

***பனியெதிர் பருவம், வேனில், பின்பனி என்ற பெயரீடுகளே தொல்காப்பியத்துள் உள்ளன. இவற்றுக்குரிய மாதக் கணக்கீடுகள் மூலநூலுள் இல்லை. எனினும் உரை நூல்கள் அவற்றை விரித்துரைக்கும்***" [15]

***(க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், பக்கங்கள் 103 - 104)***

*என்றக் கருத்தின் மூலமாகப் பெரும்பொழுதுகள் உரையாசிரியர்களால் ஆறு என்று சுட்டப்பெறுவது அறியப் பெறுகின்றன. இங்ஙனம் தமிழக வழக்கில் ஆறு பருவங்களாகப் பெரும் பொழுதைக் கணித்தல் குறித்து,*

"***ஆறு பருவங்களாக எண்ணுவது இந்திய நாட்டின் பொதுவான பருவ நிலையேயன்றித் தமிழகப் பருவநிலையன்று***" [16]

***(ப. அருணாசலம், தொல்காப்பியர், பக்கம் 59)***

*என்னும் கூற்றும் நிலவுகின்றது. அன்றாட வாழ்க்கையில் இயற்கையில் ஏற்படும் திடீர் மாற்றங்கள் இப்பருவ நிலைகளை மாற்றி அமைப்பதுமுண்டு. இன்றையக் காலச்சூழலில் பருவ மழை குறைதல், பருவம் மாறி மழைப்பொழிதல் போன்ற இயற்கை மாற்றங்கள் இப்பருவ நிலைக்களன்களை மாறுதலுக்கு உட்படுத்துகின்றன.*

### ***1.1.3. கார்காலம் - மழைக்காலம்***

*கார்காலம் மழைக்காலம் ஆகும். ஆவணி - புரட்டாசி மாதங்கள் இதன் கால எல்லையாகும். அக்கார்காலத்தில் மழையின் பெயல் நிலம் பெற்ற மாறுதல், அணி பெற்ற முல்லைநிலம், உயிரினச் செயல்கள், தலைவியின் அகஉணர்வுகள், கார்கால காட்சிகள், மலர்கள் போன்றவற்றைச் சங்க இலக்கியங்கள் நயமாக வடித்தளிக்கின்றன. அதன்வழி கார்கால இயல்புகள், நிகழ்வுகள் மற்றும் கார்கால மழையினால் நிலம் பெறும் கவின்களையும் பிரித்துணர முடிகிறது. கார்காலம் முல்லை நிலத்துக்குரியப் பெரும்பொழுதாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.*

"***காரும் மாலையும் முல்லை***" [17]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா எண்6)***

*ஏனையப் பொழுதுகளும் முல்லை நிலத்தில் வழங்கினும் முல்லை நிலத்திற்குரியப் பருவம் கார்ப்பருவம் என்பதைத் தொல்காப்பியம் உணர்த்துகின்றது. கார்காலம் வினைமேற் சென்றவன் மீளும் காலம் தலைவனைப் பிரிந்த தலைவி*

இல்லிருத்தலால் முல்லைத் திணைக்குக் கார்ப்பருவம் பொருந்துவதாயிற்று. மழை பெய்யும் பருவமே கார்காலம் என்பதை,

**"மாரிபெய்யும் பருவம்"**[18] ***(பட்டினபாலை, அடி 128)***

என்னும் பட்டினப்பாலை அடி விளக்குகின்றது.

### *1.1.3.1. தலைப்பெயல் மழை*

கார்காலத்தில் முதன்முதல் பொழியும் மழையால் வரும் வெள்ளத்தில் நீராடி மகிழ்வதுச் சிறப்புக்குரியதாகக் கருதப்படுவதை ஐங்குறுநூறு தலைப்பெயல் மழை என்று குறிப்பிடுகிறது. முதல் மழையாலே பெருகி வந்த செம்புனலில் ஆடி தலைவனின் கண்கள் மிகமிகச் சிவந்துள்ளன என்றுக் கார்கால மழையை ஐங்குறுநூற்றுப் பாடல் புலப்படுத்துகின்றது.

**"நலந்தகு மகளிர்க்குத் தோட்**
**டுணை ஆகி தலைப்பெயற் செம்**
**புனல் ஆடித் தவ**
**நனி சிவந்தன, மகிழ்ந, நின் கண்ணே"**[19]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 80, அடிகள் 2-4)***

முதன்முதல் பொழியும் கார்கால மழையை வரவேற்கும் வகையில் அப்புனலில் ஆடி வழக்கம் பெறப்படுகின்றது.

வானில் தவழும் மேகங்கள் நிறைவான கடல்நீரை முகந்துக் கொண்டு வானிடத்தே நெருங்கி இருண்டு மிக்க மழையைப் பெய்துக் கடுமையான இடிக்குரலையும் தொடர்ந்துச் செய்துக் கார்காலத்தைக் காட்டின என்றுக் கார்கால மழைப் பொழிவை நற்றிணைப் பாடல் உணர்த்துகின்றது.

**"சொல் புடைபெயர்தலோ இலரே வானம்**
**நளி கடல் முகந்து செறிதக இருளி**
**கனை பெயல் பொழிந்து கடுங்குரல் பயிற்றி**
**கார்செய்து என் உழையதுவே ஆயிடை"**[20]

***(நற்றிணை, பாடல் எண் 289, அடிகள் 3-6)***

**"இரு விசும்பு அதிர மின்னி**
**கருவி மா மழை கடல் முகந்தனவே"**[21]

***(நற்றிணை, பாடல் எண் 329, அடிகள் 10-11)***

கோடை காலத்தில் நீர் வற்றிக் கிடந்தக் குழிகளில் கார்ப்பருவ மழையினால் நீர் நிரம்பும். பள்ள நீரில் தவளைகளும் புள்ளினங்களும் ஒலிஎழுப்பி கார்காலம் தொடங்கியதைக் கூறும் விதமாக

**"அவல்தொறும் தேரை தெவிட்ட மிசைதொறும்**
**வெங்குரற் புள்ளினம் ஒலிப்ப உதுக்காண்**
**கார் தொடங்கின்றால் காலை அதனால்"** [22]

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 453, அடிகள் 1-3)**

என்னும் ஐங்குறுநூறு அடிகள் கார்மழை தொடங்குதலைக் குறிப்பிடுகின்றது. கார்கால மழையின் போது மேகமானது மலைமீது திரள் திரளாகத் தோன்றி பஞ்சுப் போன்றத் தோற்றத்தில் உள்ளதை,

**"கார்தலை மணந்த பைம்புதற் புறவின்**
**வில்எறி பஞ்சியின் வெண்மழை தவழும்"** [23]

**(அகநானூறு, பாடல் எண் 133, அடிகள் 5-6)**

என்னும் அகநானூற்று அடிகள் எடுத்து இயம்புகின்றன. கார்கால மழை உழவுத்தொழிலுக்கு உகந்தது. கார்கால மழையை உழவர்கள் காத்திருந்து எதிர்கொண்டு அழைப்பர். பேரிருள் புலர்கின்றக் காலைப் பொழுதில் பெருமழை பெய்ததினால் ஈர நிலத்தில் கொல்லை உழவர்கள் ஏர்கொண்டு உழுதனர் என்றச் செய்தியை அகநானூற்றுப் பாடல் உரைக்கின்றது.

**"பேர்உறை தலைஇய பெரும் புலர் வைகறை**
**ஏர்இடம் படுத்த இருமறுப் பூழிப்**
**புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து**
**ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்**
**வித்திய மருங்கின் விதை பல நாறி"** [24]

**(அகநானூறு, பாடல் எண் 194, அடிகள் 1-5)**

**"குவவுத்திரை அருந்து கொள்ளைய குடக்குஏர்பு**
**வயவுப்பிடி இனத்தின் வயின்வயின் தோன்றி**
**இருங்கிளைக் கொண்மூ ஒருங்குடன் துவன்றி**
**காலை வந்தன்றால் காரே"** [25]

**(அகநானூறு, பாடல் எண் 183, அடிகள் 7-10)**

என்ற அகநானூற்றுப் பாடலில் கார்காலமும் காலையும் எனச் சிறுபொழுது, பெரும்பொழுது இரண்டும் மயங்கி வந்துள்ளது நோக்கத்தக்கது. கார்ப்பருவத் தொடக்கத்தில் மழையைக் கொண்டுவரும் முகிலானது மலையை வலஞ்சூழ எழுந்து, பரந்த வானமானது இடியுடன் மழைபெய்யத் துவங்கும் என்பதை,

***"வன்புல நாடன் தரீஇய வலன் ஏர்பு***
***அம்கண்இரு விசும்புஅதிர ஏறொடு***
***பெயல் தொடங்கின்றே வானம்"*** [26]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 469, அடிகள் 2-4)***

***"கருவி வானம் பெயறொடங்கின்றோ"*** [27]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 488, அடி 1)***

***"ஏறுமுரண் சிறப்ப ஏறு எதிர் இரங்க***
***மான் பிணை மறியொடு மறுக்***
***மாதர் கார் தொடங்கின்றே காலை"*** [28]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 493, அடிகள் 1-3)***

***"நின்னே போல் மஞ்ஞை ஆல***
***கார் தொடங்கின்றால் பொழுதே"*** [29]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 413, அடிகள் 2-3)***

***"ஆர்கலி எழிலி சோர் தொடங்கின்றே"*** [30]

***(ஐங்குறுநூறு, பாடல். 428, அடி.2)***

***"ஆர்குரல் எழிலி யழிதுளி சிதறிக்***
***கார் தொடங்கின்றால் காமர் புறவே"*** [31]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 411, அடிகள் 1-2)***

***"அரசு பகை தணிய, முரசு படச் சினைஇ***
***ஆர் குரல் எழில் கார் தொடங்கின்றே"*** [32]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 455, அடிகள்1-2)***

போன்ற ஐங்குறுநூற்றுப் பாடல்கள் பேசுகின்றன. கார்காலம் தொடங்கப்பட்ட விதத்தினைக் கூறுகின்றன. எழிலியானது, விற்கோலி, மழையென அம்புமாரி சொரிந்து இக்கார் காலத்தைத் தொடங்கியது எனக் கூறுகின்றது. இம்மேக வரவினால் வறண்ட ஞாலமும் குளிர்ந்தத் தன்மை பெற்றதை,

***"வறந்த ஞாலம் தெளிர்ப்ப வீசிக்***
***கறங்கு குரல் எழிலி கார் செய்தன்றே"*** [33]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 452, அடிகள் 1-2)***

என்றப் பாடல் கூறுகின்றது. கார்காலத்தில் மேகங்களின் நகர்வுக் குறித்து விளக்கமாக,

**"மா மலைவிடரகம் விளங்க மின்னி**
**மாயோள் இருந்த தேஎம் நோக்கி**
**வியலிந விசும்பகம் புதையப் பாஅய்ப்**
**பெயில் தொடங்கினறே பெய்யா வானம்"** [34]

***(நற்றிணை, பாடல் எண் 371, அடிகள் 2-5)***

என்றுக் குறிக்கப் பெறுவதால் மேக வரவும் கார்காலப் பெயலும் விளக்கமுற எடுத்தாளப் பெறுவதை உணர முடிகின்றது.

அகன்ற பரப்பினை உடைய உலகத்தை வளைத்துச் சக்கரமும் சங்குமாகியக் குறிகளையுடையத் திருமகளை அணைத்த வலியக் கையினையுடையவனும் ஆகியத் திருமால் போல், மேகமானது ஒலி முழங்கும் கடலின் கண் நீரைக் குடித்து, வலமாக எழுந்து மலைகளிடத்தே தங்கிப் பின்னர் உலகத்தை வளைத்தெடுத்து பெரிய மழையைப் பெய்தது என்பதை,

**"நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு**
**வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**
**நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்**
**பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு**
**கோடுகாண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி**
**பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை"** [35]

***(முல்லைப்பாட்டு, அடிகள் 1-6)***

என்று முல்லைப்பாட்டு எடுத்தியம்புகின்றது.

மேகம் வளைந்து எழுந்து மழைபொழிந்தத் தன்மையையும் பருவம் பொய்க்காது பெய்தலைச் செய்த மேகமானது இருண்டு எழுந்து உலகம் குளிரும்படிக் கார்பருவத்தே மழையைப் பொழிந்தத் தன்மையை நெடுநல்வாடை,

**"வையகம் பனிப்ப வலன்ஏர்பு வளைஇ**
**பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென"** [36]

***(நெடுநல்வாடை, அடிகள் 1-2)***

என்று மேகத்தின் பெரிய எழுச்சியினை இயம்புகின்றது.

**"விசும்பு உரியது போல் வியலிடத்து ஒழுகி**
**மங்குல் மா மழை தென்புலம் படநம்"** [37]

***(அகநானூறு, பாடல் எண் 24, அடிகள் 7-8)***

என்று அகநானூறும் வான்மழையினை விளக்குகின்றது.

*கார்கால மழைப் பொழியும் திங்கள் குறித்து,*

**"எதிர்செல் வெண்மழை பொழியுந் திங்கள்"** [38]

***(முல்லைப்பாட்டு, அடி 100)***

*என்றுக் கார்ப்பருவக் காலத்தை வெளிப்படுத்துகின்றது.*

### *1.1.3.2. வம்பமாரி*

*கார்காலத் தொடக்கத்தில் புதிதாய் எதிர்வரும் மழையினைச் சில பொழுதுகளில் பருவம் மாறிச் சற்று முன்னதாகவே பொழியும் மழையினை வம்பமாரி என்றுக் குறிக்கின்றனர். வம்பு என்றாலே புதுமை. சிலபொழுது புதுமையாக முன்கூட்டி வருதலினாலும் புதிதாய் வருதலினாலும் இது வம்ப என்னும் பெயர்ப் பொருத்தம் உடையதாகின்றது. பருவம் மாறிய மழையை, இது கார் அன்று. மயக்கந்தரவல்ல புதிதாகப் பெய்யும் பருவம் பொய்த்த மழையென்பதை,*

**"பூஅமல் தளவமொடு தேங்கமழ்பு கஞல**
**வம்புப் பெய்யுமான் மழையே வம்பு அன்று**
**காரிது பருவமாயின்"** [39]

***(குறுந்தொகை, பாடல் எண் 382, அடிகள் 3-5)***

*என்றுக் குறுந்தொகை குறிக்கப்படுகின்றது. தொடர்பற்றவர் ஏதிலர் எனப்படுவர். காலத்திற்குத் தொடர்பில்லாதுப் பெய்யும் மழை ஏதில மழை என்பதை ஐங்குறுநூறு கூறுகின்றது.*

**"ஏதில பெய்ம்மழை கார் என மயங்கிய"** [40]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 462, அடி 1)***

*பெயல் பொழிதலாலும் முல்லை சிரித்தலாலும் ஆற்றில் நீர்ப்பெருகி வருதலாலும் தேரை ஒலிப்பதாலும் கார்ப்பருவ வரவு இனங்கண்டுக் கொள்ளப்படும் என்பதைக் கூறவரும் கார்காலத்தினை,*

**"பெயல் புறந்தந்த பூங்கொடி முல்லைத்**
**தொகு முகை யிலங்கெயிறாக**
**நகுமே - தோழி நறுந்தண் காரே"** [41]

***(குறுந்தொகை, பாடல் எண் 126, அடிகள் 3-5)***

*என்றும் கார்ப்பருவத் தொடக்கம், ஆற்று நீரின் வரவினாலும் சொல்லப் பெறுகின்றது. தலைவன் குறித்தக் கார்ப்பருவம் வந்தும் ஆற்றுநீரின் பெருவெள்ளம், கொடுமையை அளித்தாக நற்றிணைப் பாடல் விளக்குகின்றது. ஆற்றுநீரின்*

வெள்ளத்தால் தலைவன் வரும் பொழுதில் தடை ஏற்படுத்தியதால் கார்கால ஆற்றுநீர் வரவு தலைவிக்குக் கொடுமையாகத் தோன்றுகிறது.

**"பிரிவில் புலம்பி நுவலுங் குயிலினும்**
**தேறுநீர் கெழீஇய யாறு நனி கொடிதே"** [42]

**(நற்றிணை, பாடல் எண் 97, அடிகள் 3-4)**

என்று நற்றிணை விளக்குகின்றது.

### 1.1.3.3. கால் வீழ்தல்

கார்கால மழை இறங்கிப் பெய்தலைக் கால்வீழ்தல் என்று அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது. மேகம் காலிறங்கி பெய்தலை,

**"ஆலி அழிதுளி தலைஇக்**
**கால்வீழ்த் தன்று நின் கதுப்பு உறழ் புயலே"** [43]

**(அகநானூறு, பாடல் எண் 323, அடிகள் 12-13)**

என்றும்,

**"மாதிரம் புதையப் பாஅய் கால்வீழ்த்து"** [44]

**(அகநானூறு, பாடல் எண் 364, அடி 1)**

என்றுக் கார்கால மழை இறங்கிப் பெய்தல் குறித்து வந்துள்ளன.

மேகங்கள் முதற்சூலுடைய மகளிரைப் போல நீர்ப்பொறையை முகந்துக்கொண்டு, வளமிக்க பலமலைகளை நோக்கிப் பெருமுழக்கத்துடன் எழுந்துப் பொழிந்த மழையானது,

**"கடுஞ்சூல் மகளிர் போல நீர்கொண்டு**
**விசும்புவர் கல்லாது தாங்குபு புணரிச்**
**செழும்பல் குன்ற நோக்கி**
**பெருங்கல் வான மோர்தரும் பொழுதே"** [45]

**(குறுந்தொகை, பாடல் எண் 287, அடிகள் 5-8)**

என்றும், இடியோடும் மின்னலோடும் ஆலியொடும் பெய்யும் மழை குறித்து,

**"கொண்டல் ஆற்றி விண் தலைச் செறீஇயர்**
**திரைப்பிதிர் கடுப்ப முகடுமுகந்தேறி நிரைத்து,**
**நிறைகொண்ட கமஞ்சூல் மாமழை"** [46]

**(நற்றிணை, பாடல் எண் 89, அடிகள் 1-3)**

***"காலமாரி மாலை மாமலை***

***இன்இறை உருமினம் முரலும்"*** [47]

***(குறுந்தொகை, பாடல் எண் 200, அடிகள் 5-6)***

*என்றும்,*

***"மங்குல் மாமழை விண் அதிர்பு முழங்கி***

***துள்ளுப் பெயல்"*** [48]

*என்றும் பலவாறாக மழை பொழியும் தன்மை சுட்டப்பெறுகின்றது. பெருமளவு பொழிந்த கார்கால மழை, ஆலங்கட்டிகளோடு சிதறி வீழ்தலை,*

***"இருவிசும்பு இவர்ந்த கருவி மாமழை***

***நீர்செறி நுங்கின் கண் சிதர்ந் தவைபோல்***

***சூர்பனிப் பன்ன தண்வரல் ஆலியொடு***

***பரூஉப் பெயல் அழிதுளி தலைஇ வான் நவின்று***

***குரூஉத்துளி பொழிந்த பெரும்புலவர் வைகறை"*** [49]

***(அகநானூறு, பாடல் எண் 304, அடிகள் 1-5)***

*என்றும் கழங்குக்காய்ப் போன்ற ஆலங்கட்டிகளோடு விரைந்து மழைத்துளிகள் வீசிப்பெய்தலை,*

***"கழங்குறழ் ஆலியொடு கதழுறை சிதறிப்பெயல்"*** [50]

***(அகநானூறு, பாடல் எண் 334, அடி 8)***

*என்றும் பேசப்பெறுகின்றது.*

### *1.1.3.1.கார்காலத்தின் தன்மை*

*கார்ப்பருவத்தில் உள்ளத்தின் எழுச்சி மிகும் வண்ணம் விலங்குகளும் பறவைகளும் தத்தம் துணையோடு கூடி இன்பம் துய்க்கும் பேரின்பக் காட்சி காணமுடிகிறது. தலைவன் தன்வினை முடித்து மீண்டு தலைவியை நாடிவரும் காலம் கார்காலம் ஆகும். கார்காலம் குளிர்ந்த தன்மையை உடையது என்பதை "தண்பதக் காலை" என்று அகநானூறு குறிப்பிடுகின்றது.*

***"வண்டினம் தவிர்க்கும் தண்பதக் காலை"*** [51]

***(அகநானூறு, பாடல் எண் 244, அடி 6)***

*என்ற அடி விளக்குகின்றது.*

கார்கால மழையினால் பூமி செழிப்படைந்துள்ளது. கோடையில் வறண்டு போன நீர்நிலைகள் யாவும் கார்மழை பெய்ததும் நிரம்பி விடும். கோடை வெம்மையால் நீர் வற்றிய உலகம் மீண்டும் செழிப்புற, ஆராவாரம் மிக்க மேகம் மழையைப் பெய்யும் கார்காலத்தின் இயல்பை,

**"நீரப்பட எழிலி வீசும்**

**கார்ப் பெயற்கு எதிரிய கானமும் உடைத்தே"** [52]

என்றும் ***(ஐங்குறுநூறு, பாடல் எண் 433, அடிகள் 2-3)***

**"வறந்த ஞாலம் தெளிர்ப்ப வீசிக்**

**கறங்கு குரல் எழில் கார் செய்தன்றே"** [53]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 452, அடிகள் 1-2)***

என்றும் கூறும் பாடல்கள் கார்கால மழையினால் காடுகள் பெற்ற வளத்தைப் புலப்படுத்துகின்றன.

கார்காலத்தில் தொடக்ககால மழைக்குப் பின்பு கார்மழை விரைவெடுத்துப் பொழிந்து இரண்டாம் கட்டத்தை அடைந்து பெருமழை பொழியும் பெயலாய் பெருகியது என்பதை,

**"தனிபெறு தண்புலத்துத் தலைப்பெயல்"** [54]

***(கலித்தொகை, பாடல் எண் 101, அடி 1)***

என்றும்

**"மாரிஇரீஇ மான்றன்றால் மழையே"** [55]

***(நற்றிணை, பாடல் எண் 381, அடி 10)***

என்றும்

**"வளமழை பொழிந்த வால்நிறக் களரி"** [56]

***(அகநானூறு, பாடல் எண் 344, அடி 1)***

என்றும்

**"மாமழை யிடியூஉத் தளி சொரிந்தன்றே"** [57]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 423, அடி 1)***

என்றும்

**"இருவிசும்பு அதிர முழங்கி அரநலிந்து**

**இருபெயல் அழிதுளி தலைஇ வானம்"** [58]

***(அகநானூறு, பாடல் எண் 274, அடிகள்1-2)***

என்றும் துளித்துளியாய்ப் பெருகிச் சொரிந்த கார்மழை குறிக்கப்பெறுகின்றன.

ஆகாயமே மறையும் வண்ணம் மழைப்பெயல் பெருகிக் கார்ப்பருவம் வலுக்கத் தொடங்கியது. மின்னல் தொகுதியுடன் கூடியக் கார்மேகப் பெயலினை,

**"தண்புதல் முல்லை அணிபெற மல**

**வண்பெயல் கார்வரு பருவம்"** [59]

***(நற்றிணை, பாடல் எண் 248, அடிகள் 3,8)***

**"மாலை அந்தி மால்அதர் நண்ணிய**

**பருவம் செய்த கருவி மாமழை"** [60]

***(நற்றிணை, பாடல் எண் 238, அடிகள் 4-5)***

என்று நற்றிணைப் பாடல்கள் நவில்கின்றன.

கார்கால மழையின் இறுதிக்காலம் பெயல் கடைநாள் என்று உணர்த்தப்பட்டது. நிரம்ப மழைபெய்து நீங்கியக் கார்பருவம் வாடைக்காற்று வருத்தும் காலமாகும். அக்கார்காலத்தின் நாள்தோறும் வருத்துகின்ற வாடைக்காற்று வந்ததை நற்றிணைப் பாடல்கள் பேசுகின்றன.

**"வான் இகுபு சொரிந்த வயங்கு பெயற் கடைநாள்"** [61]

***(நற்றிணை, பாடல் எண் 142, அடி1)***

என்றும்,

**"அழிதுளி கழிப்பிய வழிபெயற் கடைநாள்"** [62]

***(நற்றிணை, பாடல் எண் 89, அடி 4)***

என்றும் கார்ப்பருவ இறுதிமழை குறிப்பிடப்படுகின்றது.

பருவங்கள் மாறிக் கொண்டே இருத்தல் இயற்கை. கார் தொடங்கியக் காலம் முதல் மழை பொழிவானது முதிர்ந்து, பொழிந்து பின்பு கூதிரும் பனியும் பிறத்தல் உண்டு. மழை மாறி கூதிரும் மறைந்து, முன்பனி முதிர்ந்தும் தலைவன் வாராத் தன்மையைக் குறிக்குங்கால் பருவ மாற்றத்தை விளக்கும் பாடல் ஒன்று,

**"இருநிலம் குளிர்ப்ப வீசி அலகலும்**

**அரும்பனி அளைஇய அற்சிரக்காலை"** [63]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 470, அடிகள் 1-2)***

என்று உரைக்கின்றது.

பிரிந்தவர் கூடும் காலம் கார்க்காலம். கார்பருவத்தில் இயற்கைக்கு அழகூட்டும் மழையினைச் சுற்றி விரித்துக் கூறி, அது பிரிந்திருக்கும் காதலருக்கு ஊற்றாக அமைந்து, உரிப்பொருள் நயத்தை ஊட்டுவதாக பாடல்கள் வன்மையுடன் சுட்டப்பெறுகின்றன. காதலர் கூடியிருந்துக் களித்து

*வாழ்வதற்குரியக் கார்ப்பருவம் வந்ததாகவும் இது பிரிதற்கேற்ற காலம் அன்று எனச் செலவழுங்கவும் தோழி கூறும் முகமாக ஐங்குறுநூற்றுப் பாடல் அமைந்துள்ளது.*

***"கார்எதிர்பொழுது என விடல் ஒல்லாயே***

***போருடை வேந்தன் பாசறை***

***வாரான் அவன் எனச் செலவு அழுங்கினனே"*** [64]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 427, அடிகள் 2-4)***

*கார்காலம் பிரியும் காலமன்று. இங்கு கார்காலத்தில் போர்ச் செலவு மேற்கொள்வது போன்று பாடுவது இல்லாத ஒன்றாகும். கார்காலம் காதலர் பிரிந்திருக்க இயலாதக் காலமாகும். தலைவனை நீங்கவொட்டாள் தலைவி. வேந்தன் தன் காதலியைத் தனிவிடுத்துப் பாசறைக்கு வாரான் என அறிந்துத் தலைவன் போர்ச் செலவைத் தவிர்த்தச் சூழல் இங்குப் பேசப்பெறுகின்றது. கார்வரவு நேர்ந்தும் பிரிந்தத் தலைவன் வராமை குறித்து,*

***"இன்னும் பெய்யும் முழங்கி***

***யென்னின் னுயிர் குறித்தே"*** [65]

***(குறுந்தொகை, பாடல் எண் 216, அடிகள் 6-7)***

*என்றுக் கூறுகின்றது. கார்பருவத்தில் வருவேன் என்றத் தலைவன் வாராமையின் மனத்துயர் மிகுந்து வருவதையும் வரத் தவறியக் கொடுமையையும் கண்டுத் தலைவி கொள்ளும் துயரினையும் குறித்து,*

***"கார் நாள் உருதொடு கையறப் பிரிந்தென***

***நோய் நன்கு செய்தன எமக்கே"*** [66]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 441, அடிகள் 2-3)***

***"கார்செய் காலையொடு கையறப் பிரிந்தோர்***

***தேர்தரு விருந்தின் தவிர்குதல் யாவது?"*** [67]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 451, அடிகள் 1-2)***

*என்று ஐங்குறுநூறு உரைக்கின்றன. கார்ப்பருவத்தில் வாராராயினும் கூதிர் இறுதியில் உறைவார் அல்லர் என்பதை ஐங்குறுநூறு,*

**"பெய்பனி நலிய உய்தல் செல்லது**

**குருகினம் நரலும் பிரிவு அருங் காலை**

**துறந்து அமைகல்லார் காதலர்"** [68]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 457, அடிகள் 1-3)***

*என்றுக் கூறுகின்றது. கார் முதிர்ந்த இடத்தும் வராதத் தலைவன் எதிர்வரும் கூதிரில் உடனுறைவாரோ என்பது பட,*

**"பகன்றை மாமலர்**

**வெண்கொடி ஈங்கைப் பைம்புதல் அணியும்**

**அரும்பனி அளைஇய கூதிர்**

**ஒருங்கு இவண் உறைதல் தெளித்து அகன்றோரே"** [69]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 456, அடிகள் 2-5)***

*என ஐங்குறுநூறு விளக்குகின்றது. நுண்துளி தூவும் தைத்திங்களின் இறுதியிலாவது கார், கூதிர், முன்பனி முடிந்தக் காலத்திலாவது தலைவன் வருவான் என எண்ணுங்கால்,*

**"சிதறல்அம் துவலை தூவலின் மலருந்**

**தைஇ நின்ற தண் பெயற் கடைநாள்"** [70]

***(அகநானூறு, பாடல் எண் 24, அடிகள் 4-5)***

*என்றுரைக்கின்றது. மழை பொழிவானது மாறியத் தன்மையை, பெயல்கடை நாள் என்றழைத்து,*

**"வானிழுபு சொரிந்த வயங்கு பெயல் கடைநாள்"** [71]

***(நற்றிணை, பாடல் எண் 142, அடி 1)***

*என்றும், மழை மாறியக் கார்காலத்தின் இறுதிச் சூழ்நிலையை,*

**"அழிதுளி கழிப்பிய வழி பெயற் கடைநாள்"** [72]

***(நற்றிணை, பாடல் எண் 89, அடி 4)***

*என்றும் நவல்கின்றது.*

### *1.1.3.2. கார்கால நிகழ்வுகள்*

*குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை போன்ற ஐந்து திணைகளுக்கும் ஆறு பெரும்பொழுதுகளைப் பகுத்துள்ளனர். அவற்றுள் முல்லையை முற்பட மொழிந்து அதற்கு முற்றிலும் ஏற்புடையக் காலமாகக் கார்காலத்தைக் குறித்தனர்.*

**“காரும் மாலையும் முல்லை”** [73]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 6)***

*என்று முல்லைக்குப் பெரும்பொழுதாகக் கார்ப்பருவம் கூறப்பட்டுள்ளது. இது பொருந்தும் விதமாக நச்சினார்கினியர்,*

***‘‘வினைவயிற் பிரிந்து மீள்வேன் விரைபரித்தேரூர்ந்து, பாசறையினின்றும் மாலைக் காலத்து ஊர்வயின் வரூஉம் காலம் ஆவணியும் புரட்டாசியும் ஆதலின் அவை வெப்பமும் தட்பமும் மிகாது இடை நிகர்த்த வாசி, ஏவல் செய்து வரும் இளைஞர்க்கு நீரும் நிழலும் பயத்தலானும், ஆர்பதம் மிக்கு நீரும் நிழலும் பெறுதலின் களிசிறந்து மாவும், புள்ளும் துணையோடு இன்புற்று விளையாடுவன கண்டு தலைவற்கும் தலைவிக்கும் காமக்குறிப்பு மிகுதலிலானும் என்பது’’*** [74]

***(அகப்பொருள் விளக்கம், நச்சினார்க்கினியர் உரை, நூற்பா 6)***

*என முல்லைக்குக் கார்ப்பருவம் பொருத்தமாவதைக் கூறுகின்றார். இதன் அடிப்படையிலேயே கார்ப்பருவத்தில் ஏற்படும் நிகழ்வுகள் அமைகின்றன.*

*போர் மேற்கொண்ட காலத்திலும் போர் நிகழ்ச்சிகளில் மனந்தலைப்பட்டு, வெற்றி ஒன்றே கருத்தாக இருத்தல் வேண்டுமேயன்றி, வாடை தன்னை நலித்தாலும் மனையை நினைக்காத நெஞ்சுடையோனாக இருத்தலும் தலைவியைப் பற்றி எந்நிலையிலும் எச்சூழலிலும் நினையாது இருத்தலும் அவனுக்குரிய முல்லைத் திணை ஒழுக்கமாகும்.*

*வினை முடித்த மகிழ்ச்சியில் தலைப்பட்டப் பின்னர், தலைவி பால் கூறியச் சொல் நினைந்து அச்சொல்லை பேணவும் தன் சொல் பிறழ்ந்தால் தலைவி உயிர் வாழாமை எண்ணி அவளைக் காக்கவும் விரைந்து வருவான். தலைவன் தேரூர்ந்தோ பிற வழிகளிலோ வர நேரும்போது பருவத்தின் தன்மை அவற்றின் சூழ்நிலை*

குறித்தும் இலக்கியங்கள் விரிவாகப் பேசுகின்றன. அச்சூழலில் நிலத்தின் தன்மையையும் அதன் மூலம் நடைபெறும் நிகழ்வுகளையும் எடுத்துக் காட்டுகின்றன. கார்ப்பருவத்தினால் நிலம் அடைந்தப் புதுப்பொலிவினையும் புவித் தேவைகளையும் உயிரினங்கள் பெற்ற மகிழ்வினையும் கூறும் பொருட்டுத் தலைவன் தலைவியரின் சூழல் விளக்கப்படுகின்றது. இச்சூழலுக்குக் கார்காலம் காரணமாக அமைகின்றது.

நிலங்கள் தனித்தனியே வகுக்கப் பெற்றதற்குக் காரணம் இருத்தல் வேண்டும். நிலத்தின் பொதுக் கூறுகளாக மலை, காடு, வயல், கடலைக் கூறுவர். இந்நான்கு இயற்கைப் பிரிவிலும் மக்கள் இயல்பாக வாழ்ந்தனர். ஒவ்வொரு நிலப்பகுதியும் மலை, காடு எனத் தனித்தனியாகக் கூறாது மலையும் மலை சார்ந்த இடமும், காடும் காடு சார்ந்த இடமும் எனக் கூறியுள்ளமையால் ஒரு நிலத்தில் பிறபொருள் மயங்கும் என்பது அறியப் பெறுகின்றது. தொல்காப்பியர்,

**"மாயோன் மேய காடுறை உலகமும்"** [75]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 2)***

என்ற நூற்பா வழி முதற்கண் முல்லையை வகுக்கின்றார்.

காடுவளம் பெருகியப் புலமாகிய முல்லை, பரிவும், காதலும் நிரம்பிய நல்லதொரு இல்லறப் பின்னணியும், கற்பின் நெறி நின்ற நல்லறமும் பெண்மையின் நிறைவும் விளக்கம் பெறும் பாங்குடைய நிலமாகத் திகழ்ந்துள்ளது. மாநிலம் நிலைபெறுதற்கான மழை பெய்யும் நிலமாகும். மாயோனாகிய ஊழிக் கடவுள் நிலைபெற்ற நிலமாதலின் தலைமை முல்லைத் தரப்பட்டுள்ளது.

முல்லைக்காடு, குறிஞ்சி நிலக்காடு போன்று மரச்செறிவுடையக் காடன்று, இளங்காடு என்றுச் சொல்லத் தகுந்த முறையில் அமைந்த நிலப்பகுதியாகும். அங்கு வேளாண்மை நடந்தச் செய்தியினைச் சங்க இலக்கியக் குறிப்புகள் உணர்த்துகின்றன.

வான் பார்த்த பூமியின் விளைச்சலுக்கு ஏற்ற கார்ப்பருவத்தில் உழவர்கள் உழவுத் தொழிலை மேற்கொள்ளுவர். மழையினால் பதமாகிய ஈரநிலத்தில் புழுதி கலக்கும்படி உழுது விதைக்கப்பட்டச் செய்தியைப் புறநானூற்றுப் பாடல் பகர்ந்து நிற்கின்றது.

**"கார்பெயல் கலித்த பெரும்பாட்டு ஈரத்து**
**பூழி மயங்கப் பல உழுது"** [76]

***(புறநானூறு, பாடல் எண் 120, அடிகள் 2-3)***

உழவுத் தொழிலுக்கு ஏற்றதாகத் திகழும், எருதினங்களை ஆராயும் உழவர்கள் இனியக் குரல் கொண்டு ஒலி எழுப்புவர். உழவர்களின் ஆரவாரத்திற்குக் காரணமான மேகம் பெருமழை பொழியக் கார்காலம் வந்ததை அகநானூறு புலப்படுத்துகின்றது.

**"இனம் தேர் உழவர் இன்குரல் இயம்ப**
**மறியுடை மடப்பிணை தழீஇ புறவின்**
**திரிமருப்பு இரலை பைம்பயிர் உகள**
**ஆர்பெயல் உதவிய கார்செய் காலை"** [77]

**(அகநானூறு, பாடல் எண் 314, அடிகள் 4-7)**

முல்லை நிலத்தின் காடு சார்ந்த இடங்களில் நீரிடங்களும் அடங்குகின்றன. அவை முல்லை நிலத்திற்குக் கவினையும் வளத்தையும் ஊட்டுகின்றன. முல்லை நிலத்தில் நீர் தேங்கியிருக்கும் சுனைகள் இருந்தமையை,

**"கண்போல் நீலம் சுனைதொறும் மலர"** [78]

**(நற்றிணை, பாடல் எண் 161, அடி 2)**

என்ற அடிக் குறிப்பிடுகின்றது. கார்ப்பருவ வருகையால் மலையில் உள்ள சுனைகள் யாவும் விலங்குகள் நீர் உண்ணுமாறு நீர் நிறைந்துக் காணப்பட்டன என்பதை அகநானூறு,

**"பகுவாய்ப் பைஞ்சுனை மாஉண மலிர**
**கார் தொடங் கின்றே காலை"** [79]

**(அகநானூறு, பாடல் எண் 364, அடிகள் 8-9)**

என்று உரைக்கின்றது. உலக உயிரினங்களின் அடிப்படைத் தேவையான நீருக்கு ஆதாரமான மழையை எதிர்நோக்கும் காலம் கார்காலமாகும். கார்கால மேகத்தைக் கண்டு ஆடுதலும், அகவுதலும் மயிலுக்கு இயல்பாகும். கார்ப்பருவம் தாம் விரும்புமாறு தொடங்கியதைத் தலைவன் கூறுவதாக ஐங்குறுநூறு பாடல் அமைகிறது.

**"நின்னே போல மஞ்ஞை ஆல**
**கார் தொடங்கின்றால் பொழுதே"** [80]

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 413, அடிகள் 2-3)**

ஆண்மயில் தன் பேடையைக் கூடுதற்கு அழைப்பதும் இக்கார்ப்பருவமே. துணையைத் தேடுகின்றக் குளிர்ந்த கார்பருவமே தலைவன் தாம் வருவதாகத் தெரிவித்தப் பருவமாகும் என்றுக் கார்கால நிகழ்வினை அகநானூறு கூறுகின்றது.

**“நறுவீ ஆடிய பொறி வரி மஞ்ஞை**

**நனைப் பசுங் குருந்தின் நாறு சினை இருந்து**

**துணைப் பயிர்ந்து அகவும் துணை தரு தண் கார்”[81]**

***(அகநானூறு, பாடல் எண் 85,அடிகள் 11-13)***

**“இனமயில் அகவும் கார்கொள் வியன்புனத்து”[82]**

***(அகநானூறு, பாடல் எண் 334, அடி 13)***

*கார்காலத்தில் தவளைகள் ஆரவாரித்தல் இயல்பு. தவளைகள் மழைதோன்றும் அறிகுறி கண்டு ஒலி செய்யும் இயல்பின. வரிகளை உடைய நுணல்கள் ஆரவாரிக்கத் தேரைகள் ஒலிக்க, கார்காலம் தொடங்கி விட்டதை,*

**“வரிநுணல் கறங்க தேரை தெவிட்ட**

**கார் தொடங்கின்றே காலை” [83]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 468, அடிகள் 1-2)***

*என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன. மழைக்காலத்தில் புற்றில் ஈயல் தோன்றுவது இயற்கை. நீண்ட செந்நிறம் கொண்ட புற்றுக்கள் ஈயல்களை வெளிப்படுத்தவும் குளிரால் நலிவுற்ற விலங்குகள் உணவு உட்கொள்ளுதலை வெறுக்கும்படியும் கார்ப்பருவம் தொடங்கியது. மழையினால் விலங்குகளின் செயலற்றத் தன்மையை ஐங்குறுநூறு,*

**“நெடும் செம்புற்றம் ஈயல் பகர**

**மா பசி மறுப்ப கார் தொடங்கின்றே”[84]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 497, அடிகள் 2-3)***

*என்று விளக்குகின்றது.*

*கார்கால மழையின் செறிந்தக் குளிர்ந்தத் தன்மையால் இல்லுறை மனையோள் பால் தலைவனை ஈர்க்கும் பொழுதாக விளங்குவதை இலக்கியங்கள் உணர்த்துகின்றன.*

*கார்காலத்தில் தலைவியைக் காண வந்த தலைவன் காணும் காட்சிகளாக ஏறுகள் மாறுபாடு கொண்டுச் சிலைத்ததையும் பெண் மான்கள் தம் மறிகளுடன் மயங்கித் திரிந்ததையும் கூறி இவை நிகழ்வதற்குக் கார்ப்பருவ வரவு ஏதுவாயிற்று என்பதனை,*

***“ஏறு முரண் சிறப்ப, ஏறு எதிர் இரங்க***

***மாதர் மான் பிணை மறியொடு மறுக***

***கார் தொடங்கின்றே காலை”[85]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 493, அடிகள் 1-3)***

என்னும் அடிகள் பேசுகின்றன.

பாசறை பற்றியச் செய்தி வேனிற் பாசறை கூதிர்ப் பாசறை என இரு திறமாக இலக்கியத்தில் பேசப் பெறுகின்றது. இவ்விரு பாசறை குறித்து,

***“கூதிர் வேனி லென்றிரு பாசறைக்***

***காதலிலொன்றிக் கண்ணிய மரபினும்”[86]***

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 76)***

என்ற நூற்பா நவில்கிறது.

கூதிர்ப் பாசறை குறித்து நெடுநல்வாடையிலும் வேனிற் பாசறை குறித்து முல்லைப் பாட்டிலும் கூறப்பட்டுள்ளது. ஏனையப் பருவங்களில் பண்டைத் தமிழர் பெரும்பாலும் போரொழிந்தனர் என்பதும் புலப்படுகின்றது.

கார்காலம் வந்தமையால் அரசன் போரை நிறுத்த வேண்டியவனானான். அரசு பகை தணிந்து எல்லோரும் மீளும் வண்ணம் கார் வந்தது என்பதை ஐங்குறுநூறு பகர்வதைக் காணமுடிகிறது.

***“அரசுபகை தணிய முரசு படச் சினைஇ***

***ஆர்குரல் எழிலி கார் தொடங்கின்றே”[87]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 455, அடிகள் 1-2)***

என்னும் அடிகள் மூலம் பகை தணியும் காலமாகக் கார்காலம் விளங்குவதை உணரமுடிகிறது.

### *1.1.3.5. கார்கால வர்ணனை*

உலக உயிர்களின் நீர்த் தேவையைப் பூர்த்தி செய்யும் கார்கால மழையின் வருகையை ஒவ்வொரு உயிரும் வரவேற்கும் என்பதை,

***“இரும்பு திர்த்தன்ன மாஇரு மருப்பின்***

***பரல் அவல் அடைய இரலை தெறிப்ப***

**மலர்ந்த ஞாலம் புலம்பு புறக்கொடுப்ப**
**கருவி வானம் கதழ் உறை சிதறி**
**கார் செய்தன்றே கவின்பெறு கானம்"[88]**

**(அகநானூறு, பாடல் எண் 4, அடிகள் 3-7)**

*என்பதன் மூலம் கார்காலத்தால் அழகுபெற்ற காட்டின் காட்சிக் கூறப்படுகிறது.*

*நிறைந்தச் சூலையுடையக் கரிய மேகங்கள் மழையைப் பொழிவித்துக் கார்காலத்தினைத் தோற்றுவித்தது. நிலவுலகம் செழித்து வளர்ந்ததனையும் கொடிகளிலிருந்து உதிர்ந்து வீழும் முல்லைப் பூக்கள் வல்லோனால் தீட்டப்பட்ட ஓவியம் போல் காட்சியளித்ததையும் அகநானூறு விளக்குகிறது.*

**"முல்லை வீ கழல் தாஅய் வல்லோன்**
**செய்கை அன்ன செந்நில புறவின்" [89]**

**(அகநானூறு, பாடல் எண் 134, அடிகள் 5-6)**

*கார் தொடங்கியதால் கானம் செழிப்படைந்துத் தத்தம் மலர்களை மலரச் செய்த அழகினைத் தலைவியைக் காணச் செல்லும் வழிதோறும் தலைவன் காண்கின்றான். மலர்கள் மலரும் கார்கால வர்ணனையை நற்றிணை பாடல் நயம்பட உரைக்கின்றது.*

**"பல்மலர் காயாங் குறுஞ் சினை கஞல**
**கார் தொடங்கின்றே காலை"[90]**

**(நற்றிணை, பாடல் எண் 242, அடிகள் 4-5)**

*கார்காலத்தில் தான் வருவதாகக் கூறிச் சென்றத் தலைவன் புத்தழகுப் பெற்றக் கானம் கண்டு தன் காதலி பெரிதும் வருந்துவாள் என எண்ணி விரைந்தான் எனக் கூறும் ஐங்குறுநூற்றுப் பாடல் கார்காலத்தில் கானம் அழகு பெற்றமையை விளம்புகிறது.*

**"பிடவம் மலர, தளவம் நனைய**
**கார்கவின் கொண்ட கானம் காணின்**
**வருந்துவன் பெரிது என அரும் தொழிற்கு அகலாது"[91]**

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 499, அடிகள் 1-3)**

*கார்காலத்தின் வருகையால் கோடை வெப்பம் முழுவதும் நீங்கி, நிலம் குளிர்தல், பூக்கள் பெருகுதல், தளிர்கள் மிகுதல், விலங்குகளும், பறவைகளும் மகிழ்ந்துச் சிறத்தல் போன்றவற்றைக் கார்காலம் அருளியதனை ஐங்குறுநூற்று அடிகள் புலப்படுத்துகின்றன.*

**"வேனில் நீங்கக் கார்மழை தலைவி**
**காடுகவின் கொண்டன்று பொழுது பாடு சிறந்து"[92]**

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 484, அடிகள் 1-2)**

**"கார்கலந்தன்றால் புறவே பலஉடன்**
**ஏர்பரந்தன்ன வால் புனமே ஏர் கலந்து"[93]**

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 417, அடிகள் 1-2)**

தலைவன் தலைவியர் இடையே தோன்றும் காமக்குறிப்பை விளக்கும் போது பொழுதுகளின் வர்ணனை இன்றி அது முழுமை பெறுவதில்லை. இது சங்கப்பாடல்களுக்குப் புத்துயிரும் புதுவனப்பும் ஊட்டி நடந்து செல்வதை,

**"முதற்பொருளின் ஒரு பகுதியாக விளங்கும் காலம் பற்றிய கற்பனைகள் உரிப்பொருளுக்கு உறுதுணையாக அமைந்துள்ளன. பெரும்பொழுது ஆறும் சிறுபொழுது ஆறும் சிறப்பான இடத்தைப் பெறுவதோடு கற்பனை அழகோடும் இடம்பெறுகின்றது"[94]**

**(க.சுப்பிரமணியன், சங்கம், பக்கங்கள் 97-98)**

என்னும் கூற்றால் உணர முடிகின்றது.

### 1.1.3.3. கார்காலச் செடிகள்

படுமலைப்பாலை எனும் பண்ணோசை போல் பேரொலியோடு மழையேற்ற முல்லைப்புலத்தை,

**"பாணர் படுமலை பண்ணிய ஏழா லின்**
**வானத்து அஞ்சுவர் நல்லிசை வீழ**
**பெய்த புலத்துப் பூத்த முல்லைப்"[95]**

**(குறுந்தொகை, பாடல் எண் 323, அடிகள் 2-4)**

என்றுரைக்கின்றது. மழை பெய்து வளம் செழித்த முல்லையினை,

**"வானம் வாய்ப்பக் கவினி கானம்**
**கமஞ் சூன் மாமழை கார் பயந்து இறுத்தென**
**மணிமருள் பூவை அணிமலர் இடைஇடை"[96]**

**(அகநானூறு, பாடல் எண் 134, அடிகள் 1-3)**

என்றழைக்கப் பெறுகின்றது. மரஞ்செடி கொடிகள் யாவும் தளிர்ந்து அரும்பு மலர்ந்துப் புத்தழகுடன் பொலிந்து வெப்பம் நீங்கப் பெற்ற புறவினை,

**"புதுநலம் பெற்ற வெய்து நீங்கு புறவு"[97]**

***(அகநானூறு, பாடல் எண் 224, அடி 10)***

*என்றும் அழைக்கப்பெறுகின்றது.*

*கார்கால மழை தாவரங்கள் தழைத்துச் செழிப்புறும் படி தனது பெய்தலைத் தொடங்கும் இண்டஞ்செடியானது கூதிர்காலத்தில் மலர்ந்து உதிரும் இயல்புடையது. கார்காலத்தில் தளிர்க்கும் இயல்புடையது என்பதையும் அவை பிரப்பங் கொடியுடன் பின்னிக் கிடக்கும் என்றச் செய்தியையும் அகநானூற்று அடிகள் புலப்படுத்துகிறது.*

**"மாரி ஈங்கை மாத் தளிர் அன்ன**
**அம்மா மேனி ஐது அமை நுசுப்பின்"[98]**

*என்றும்* ***(அகநானூறு, பாடல் எண் 75, அடிகள் 17-18)***

**"கொடுமுள் ஈங்கை சூரலொடு மிடைந்த**
**வான்முகை இறும்பின் வயவொடு வதிந்த"[99]**

***(அகநானூறு, பாடல் எண் 357, அடிகள் 1-2)***

*என்றும் கார்காலத்தில் தளிர்க்கும் செடியின் இயல்பினைக் கூறுகின்றது.*

### *1.1.3.4. கார்கால மலர்கள்*

*கார்கால மழையினால் காடு தழைத்து, தளிர் சிறந்து, பலவித மலர்கள் அணிபெறப் பூத்தமை குறித்து,*

**"கோட்டவும் கொடியவும் பூப் பல பழுனி**
**மல்லாகிய மணங்கமழ் புறவு"[100]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 414, அடிகள் 2-4)***

*கார்கால மழையின் காரணமாக செழிப்படைந்தச் செடிகள் அரும்புகளை அவிழ்க்கும். கார்காலத்தில் மலரும் மலர் வகைகளாகப் பிடவம், செங்காந்தள், காயா, காக்கணங்கொடி, கொன்றை, முல்லை, காந்தள், கடப்பமலர், நொச்சி, செம்முல்லை, நெய்தல், காயாம்பூ போன்றவற்றை இலக்கியங்கள் குறிப்பிடுவதைக் காண முடிகின்றன. அவற்றை வகைப்படுத்தும் வண்ணம்,*

**"காயா கொன்றை நெய்தல் முல்லை**
**போதவிழ் தளவொடு பிடவலர்ந்து கவினிப்**
**பூவணி கொண்டன்றால் புறவே" [101]**

*என்றும்* ***(ஐங்குறுநூறு, பாடல் எண் 412, அடிகள் 1-3)***

***"கண்ணகனிரு விசும்பிற் கதழ்பெயல் கலந்து ஏற்ற***
***தண்ணறும் பிடவமுஞ் தவழ் கொடித் தளவமும்***
***வண்ண வண்டோன்றியும் வயங்கிணர்க் கொன்றையும்***
***அன்னவை பிறவும் பன்மலர் துதைய"*** [102]

என்றும் ***(கலித்தொகை, பாடல் எண் 102, அடிகள் 2-4)***

***"மணிகண்டன்ன மாநிறக் கருவிளை***
***ஒண் பூந்தோன்றியொடு தண்புதல் அணிய***
***பொன் தொடர்ந்தன்ன தகைய நன்மலர்க்***
***கொன்றை ஒள்இணர் கோடு தொறும் தூங்க***
***வம்பு விரித்தன்ன செம்புலப் புறவில்"*** [103]

***(நற்றிணை, பாடல் எண் 221, அடிகள் 1-5)***

*என்றும் குறிக்கப்படுகின்றன.*

*தலைவன் குறித்துச் சென்ற கார்காலத்தில் வந்துவிடுவான். தலைவன் வாராமல் பெய்து விட்ட மழையைக் கார் காலம் என்றெண்ணி பிடவம் போன்ற மலர்கள் மலர்ந்தது என்றுத் தலைவி கூறுவதாக அமைந்த நற்றிணை பாடல் கார்காலத்தில் மலர்ந்த மலர்களை எடுத்துரைக்கிறது.*

***"கார் என்று அயர்ந்த உள்ளமொடு தேர்வுஇல***
***பிடவமும் கொன்றையும் கோடலும்***
***மடவ அகலின் மலர்ந்தன பலவே"*** [104]

***(நற்றிணை, பாடல் எண் 99, அடிகள் 8-10)***

### ***1.1.3.4.1. முல்லை***

*ஒவ்வொரு நிலங்களுக்கும் பொருந்தும் பெயரானது, அங்கு மிகுந்து வளர்ந்துள்ள மரங்ள் மற்றும் மலர்களின் சிறப்புக்கு உரியவையானது. குறிப்பாக மலர்களின் மிகுதி அதன் தனித்தன்மை கொண்டே நிலங்களுக்குப் பெயர்கள் வழங்கப்பட்டமையை தமிழர்கள் உணர்ந்தனர்.*

*கார்காலத்தில் மலரும் மலர் முல்லை மலராகும். கார்கால மழை தொடங்கியதை அறிவிக்கும் பொருட்டும் கார்காலக் காட்சியின் கவினை எடுத்து இயம்பும் படியான சூழலில் முல்லை மலர் கார்கால மலர் என்பதை உணர்த்துகின்றது.*

***“நீஇணர்க் கொன்றை கவின்பெற காடுடன்***
***சுடர்புரை தோன்றிப் புதல்தலைக் கொளாஅ***
***முல்லை இல்லமொடு மலர”*** [105]

***(அகநானூறு, பாடல் எண் 364, அடிகள் 5-7)***

*அனைத்து மலர்களிலும் முல்லை மிகுதியாகப் பூத்த தன்மையால், கானகம் சிறக்கும் விதத்தில் கார்ப்பருவம் அமைந்த தன்மை பல பாடல்களில் விளக்கப் பெறுகின்றன.*

***“முகை முற்றினவே முல்லை முல்லையொடு***
***தகை முற்றினவே தண்கார்”*** [106]

***(குறுந்தொகை, பாடல் எண் 188, அடிகள் 1-2)***

***“கருவி வானங் கார் சிறந்து ஆர்ப்ப***
***பருவம் செய்தன பைங்கொடி முல்லை”*** [107]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 476, அடிகள் 1-2)***

***“முகைவாய் திறந்த நகைவாய் முல்லை***
***கடிமகள் கதுப்பின் நாறி கொடிமிசை”*** [108]

***(அகநானூறு, பாடல் எண் 244, அடிகள் 4-5)***

***“கார் நயந்தெய்தும் முல்லை அவர்”*** [109]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 454, அடி 3)***

***“தண் கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை”*** [110]

***(அகநானூறு, பாடல் எண் 144, அடி 3)***

***“பல்லான் கோவலர் கண்ணிச்***
***சொல்லுபவன்ன முல்லை வெண் முகையே”*** [111]

***(குறுந்தொகை, பாடல் எண் 358, அடிகள் 6-7)***

***“நாழிகொண்ட நறுவீ முல்லை***
***அரும்பு அவிழ் அலரி தூஉய் அடி”*** [112]

***(முல்லைப்பாட்டு, அடிகள் 8-10)***

***“ஆர்கலியேற்றொடு கார்தலை மணந்த***
***கொல்லை புனத்த முல்லை மென்கொடி”*** [113]

***(குறுந்தொகை, பாடல் எண் 186, அடிகள் 1-2)***

***"கார்பெயற்கு எதிரிய காண்தகு புறவில்***
***கணங்கொள் வண்டின் அம்சிறைத் தொழுதி***
***மணம் கமழ் முல்லை மாலை ஆர்ப்ப"*** [114]

***(அகநானூறு, பாடல் எண் 204, அடிகள் 5-7)***

***"ஆலித் தண்மழை தலைஇய***
***வாலிய மலர்ந்த முல்லையும் உடைத்தே"*** [115]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 437, அடிகள் 2-3)***

***"முல்லை நுண்முகை அவிழ்ந்த புறவு"*** [115]

***(நற்றிணை, பாடல் எண் 59, அடி 9)***

*என்றவாறு முல்லை மலர் செறிந்தக் கார்ப்பருவம் பலபடப் பேசப் பெறுகின்றன. முல்லைக் கொடியை வீட்டில் வளர்க்கும் பழக்கம் இருந்து வந்துள்ளது. நொச்சி வேலியிடத்து மனையின்கண் நடுவே முளைத்த முல்லைக் கொடி படர்ந்து இரண்டும் ஒருங்கே அரும்பு முதிர்ந்து மலருமாறு கார்காலம் வந்தது. விடியலில் மழை பெய்ததைக்கூறும் நற்றிணைப் பாடலில் சிறுபொழுதும் பெரும்பொழுதும் மயங்கி வருதலைக் காண முடிகிறது.*

***"மயில் அடி இலைய மாக்குரல் நொச்சி***
***மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழ***
***கார் எதிர்ந்தன்றால் காலை"*** [116]

***(நற்றிணை, பாடல் எண் 115, அடிகள் 5-7)***

*இடையர் மழை பெற்றமையின் அரும்பி மலரும் முல்லையின் மலர்களைத் தம் இலை மாலைகளோடுக் கூட்டித் தொடுத்ததை ஐங்குறுநூறு விளக்குகிறது. முல்லை கார்மழை ஏற்று மலரும் மலர் என்பதனை,*

***"கருவி வானம் கார் சிறந்து ஆர்ப்ப***
***பருவம் செய்தன பைங்கொடி முல்லை***
***பல்ஆன் கோவலர் படலை கூட்டும்"*** [117]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 476, அடிகள் 1-3)***

*என்னும் பாடல்உணர்த்துகின்றது. கார்பருவம் வந்தும் தலைவன் வராமையால் தனித்திருக்கும் தலைவியை நோக்கி முல்லை மலர் நகுவதாகக் கூறும் குறுந்தொகைப் பாடல் வரிகள் கார்காலத்தில் முல்லை மலர் மலர்வதை உணர்த்தி நிற்கின்றன.*

***“பெயல் புறந்தந்த பூங்கொடி முல்லைத்***
***தொகுமுகை இலங்கு எயிறு ஆக***
***நகுமே - தோழி நறுந்தண் காரே”*** [118]

***(குறுந்தொகை, பாடல் எண் 126, அடிகள் 3-5)***

***“ஆர்கலி ஏற்றொடு கார்தலை மணந்த***
***கொல்லை புனத்து முல்லை மென்கொடி***
***எயிறு என முகையும் நாடற்கு”*** [119]

***(குறுந்தொகை, பாடல் எண் 186, அடிகள் 1-3)***

*என்றும் முல்லை மலர் அரும்பும் கார்காலம் என்றும் குறிக்கப்படுகின்றன.*

### *1.1.3.4.2. தளவம்*

*தளவம் என்பது செம்முல்லை மலர் அவை மலரும் காலம் கார்காலம். கார்காலத்தில் ஒள்ளிய சுடர்வீசும் தோன்றி மலரும் தளவ மலரும் மலர்ந்து இனிமை தந்ததை,*

***“தண்பெயல் அளித்த பொழுதின்***
***ஒண்சுடர்த் தோன்றியும் தளவமும் உடைத்தே”*** [120]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 440, அடிகள் 2-3)***

*என்றும்*

***“கடும்பரி நெடுந்தேர்க் கால்வல் புரவி***
***நெடுங்கொடி முல்லையொடு தளவ மலர் உதிர”*** [120]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 422, அடிகள் 1-2)***

*என்றும் ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் பகர்கின்றன.*

### *1.1.3.4.3. கொன்றை*

*கொன்றை மலர் கார்காலத்தில் மலரும் மலர் ஆகும். சரக்கொன்றை உயர்ந்த மலையின் உச்சியிடத்தில் சிறப்புற மலர்ந்து கார்கால வருகையை அறிவித்த விதத்தினை நற்றிணைப் பாடல் நவில்கின்றது.*

***“புழற் காயக் கொன்றை கோடு அணிகொடி இணர்***
***ஏகல் மீமிசை மேதக மலரும்”*** [121]

***(நற்றிணை, பாடல் எண் 276, அடிகள் 4-5)***

***"காசின் அன்னபோது ஈன்கொன்றை***

***குருந்தொடு அலம்வரும் பெருந்தண் காலையும்***

***கார்அன்று அன்றி ஆயின்"*** [122]

***(குறுந்தொகை, பாடல் எண் 148, அடிகள் 3-5)***

*கொன்றை மலரானது கார்காலத்தில் செறிந்தப் பூக்களுடன் கொத்துக்களாகக் கொடிப்போல் பூப்பன என்பதைக் குறுந்தொகைப் பாடல்*

***"கதுப்பிற் தோன்றும் புதுப்பூங் கொன்றைக்***

***கானம் கார் எனக் கூறினும்"*** [123]

*என்றும்* ***(குறுந்தொகை, பாடல் எண் 21, அடிகள்3-4)***

***"தவளைவாய பொலசெய் கிண்கிணிக்***

***காசினன்ன போதீன் கொன்றை***

***குருந்தோடலம் வரும் பெருந்தண் காலையும்"*** [124]

***(குறுந்தொகை, பாடல் எண் 148, அடிகள் 2-4)***

***"கார்எதிர் புறவினத்துவே உயர்ந்தோர்க்கு***

***நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்"*** [125]

***(குறுந்தொகை, பாடல் எண் 233, அடிகள் 4-5)***

*என்றும் எடுத்துரைக்கின்றன.*

*கொன்றை மலர் கார்காலத்து மலர்வனக் குறித்து ஐங்குறுநூறு,*

***"குறும்பல் கோதை கொன்றை மலர***

***நெடும்செம் புற்றம் ஈயல் பகர"*** [126]

*என்றும்* ***(ஐங்குறுநூறு, பாடல் எண் 497,அடிகள் 1-2)***

***"துணர்க் காய்க் கொன்றை குழற்பழம் ஓழ்த்தன்ன***

***அதிர் பெயற்கு எதிரிய சிதர்கொன் தண்மலர்"*** [127]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 458, அடிகள் 1-2)***

*என்றும் கூறுகின்றன.*

*கார்காலத்தில் மட்டும் மிகுதியாகப் பூக்கின்றக் கொன்றை மலர் மாலையினைச் சூடியவர் சிவபெருமான் என்று திருநாவுக்கரசர் தம் தேவாரப் பாடலில் குறிப்பிடுகின்றார்.*

***"காருலா மலர்க் கொன்றையா தாரனை"*** [128]

***(திருநாவுக்கரசர் தேவாரம், பாடல் எண் 353, அடி 1)***

***"காரூடைக் கொன்றை மாலை"*** [129]

***(திருநாவுக்கரசர் தேவாரம், பாடல் எண் 576, அடி 1)***

***"கார்மல்கு கொன்றையந் தாரார் போலும்"*** [130]

***(திருநாவுக்கரசர் தேவாரம், பாடல் எண் 542, அடி 1)***

***"கார்கமழ் கொன்றைக் கண்ணி யோனுங்"*** [131]

***(திருநாவுக்கரசர் தேவாரம், பாடல் எண் 816, அடி 1)***

*இறைவனுக்குரிய மாலையாக கொன்றை மலர்மாலை குறிக்கப்பட்டு அது மலரும் கார்காலம் பற்றியக் குறிப்பும் காணப்படுகிறது.*

*இறைவன் திருமுடியிலும், திருமார்பிலும் சூடிடும் மாலை கார்காலத்தில் மலரும் மணமிகுந்த கொன்றைப் பூவால் ஆனது என்பதை,*

***"கண்ணி கார் நறுங் கொன்றை காமர்***
***வண்ண மார்பின் தாரும் கொன்றை"*** [132]

***(புறநானூறு, பாடல் எண் 1,அடிகள் 1-2)***

*என்று உரைக்கின்றது.*

### *1.1.3.7.4. பிடவம்*

*கார்காலத்தில் மலரும் மற்றுமோர் மலர் பிடவம். வானம் சிதறிய மழைத்துளியாலே மொட்டு விட்ட பிடவ மலர் கார்கால வருகையை அறிவிக்கும் பொருட்டு மலர்ந்ததை,*

***"வான்பிசிர்க் கருவியின் பிடவு முகை தகைய***
***கான் பிசிர் கற்ப கார் தொடங்கின்றே"*** [133]

*என்றும்* ***(ஐங்குறுநூறு, பாடல் எண் 461,அடிகள் 1-2)***

***"பிடவம் மலர தளவ நனைய***
***கார்கவின் கொண்ட கானம் காணின்"*** [134]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 499,அடிகள் 1-2)***

***"சுரும்பு இமிர்பு ஊத பிடவுத்தளை அவிழ"*** [135]

***(அகநானூறு, பாடல் எண் 304,அடி 11)***

*என்றும் வரும் பாடல்கள் உணர்த்தி நிற்கின்றன.*

### *1.1.3.7.5. பீர்க்கு*

*கார்ப்பருவத்தில் புதர்கள் தோறும் பீர்க்கு பூத்தச் செய்தியைக் குறுந்தொகை அடிகள் குறிக்கின்றன.*

***"நீர்வார் பைம்புதல் கலித்த***
***மாரிப் பீரத்து அலர்சில கொண்டே"** [136]*

***(குறுந்தொகை, பாடல் எண் 98, அடிகள் 4-5)***

*என்றும்* ***"பொன்புனை பீரத்து அலர் செய்தன்றே"** [137]*

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 452, அடிகள் 5)***

*என்றும் குறிப்பிடுகின்றன.*

### *1.1.3.7.6. பித்திகம்*

*கார்ப்பருவத்தே மலரும் மலர் பித்திகம் ஆகும். இன்று பிச்சிப்பூ என்று இது அழைக்கப்படுகிறது.*

***"பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து***
***அரும்பே முன்னும் மிகச் சிவந்தனவே"** [138]*

***(குறுந்தொகை, பாடல் எண் 94, அடிகள் 1-2)***

***"மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை"** [139]*

***(குறுந்தொகை, பாடல் எண் 168, அடி 1)***

*எனவும் குறுந்தொகைப் பாடகளில் பேசப்பெறுகின்றன.*

### *1.1.3.8. கார்காலம் பற்றிய உவமை*

*முல்லைக்கு கார்காலம் பெரும்பொழுதாகக் கொள்ளப்படுகிறது. தலைவன் பிரிந்ததால் தனித்த தலைவி, பிரிந்து மீண்டு வந்த தலைவனின் திறமெல்லாம் கூறுவது முல்லைத்திணைப் பொருளாகும். முல்லைத்திணை ஒழுக்கமான தலைவி இருத்தற்கும், தலைவன் மீட்சிக்கும் கார்காலம் ஏதுவாக அமைவதால் கார்காலம் முல்லைக்குப் பொருந்துவதாயிற்று. வினை முடிந்து மீண்டுவரும் காலம் ஆவணியும் புரட்டாசியும் ஆகும். அக்காலம் தட்பமும் வெப்பமும் மிகாத ஒரு காலநிலையாகும். வினைசெய்யும் இளையோர்க்கு நீரும் நிழலும் அளிக்கும் காலமாகும். நீரும் நிழலும் கிடைத்தலால் மாவும் புள்ளும் தம் துணையோடு இன்புற்று வாழும் காலமாகும். அவை இன்பமாக விளையாடுவன கண்டு தலைவற்கும் தலைவியற்கும் காமக்குறிப்பு மிகும் காலமாகும்.*

*கார்காலத்தின் தன்மையும் அதன் நிகழ்வுகளும் தலைவன் தலைவியரின் சூழலுக்கு இயற்கை இயல்பாகவே உறுதுணையாக அமைகிறது. கோடையின் வெப்பம் நீங்கி நிலமானது குளிர்ச்சி பெற்று புத்துயிர் பெறுவது போல, தலைவியின் தனிமைத் துன்பமும் நீக்கி தலைவன் வருகையை எதிர்பார்க்கும் காலமாக அமைகிறது.*

*சிறப்பான ஒன்றைப் புலவன் உவமை காட்டுவது மரபு. உயிர்களுக்குப் புதுப்பொலிவைப் பெற்றுத் தரும் கார்காலம் உவமைக்காக இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.*

*இருண்ட மலைப்பகுதிகளில் கார்கால மின்னல் காயாங் குன்றத்துக் கொன்றை போல் உள்ளது. இவ்வுவமை நற்றிணை பாடலில்,*

***"காயாங் குன்றத்துக் கொன்றை போல***
***மாமலை விடர் அகம் விளங்க மின்னி***
***மாயோன் இருந்த தேஎம் நோக்கி***
***வியல்இரு விசும்பு அகம் புதையல் பாஅய்"*** [140]

***(நற்றிணை, பாடல் எண் 371, அடிகள் 1-4)***

*என்றுப் பேசப்பெறுகின்றது. கார்கால மேகம் பலத்த ஓசையுடன் பொழிவதை முரசம் அதிர்வதற்கு உவமையாகக் காட்டப்பட்டுள்ளது.*

***"எடுத்து எறிந்த விறல் முரசம்***
***கார்மழையின் கடது முழங்க"*** [141]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 80,அடிகள் 3-4)***

*என்னும் பாடல் உணர்த்தி நிற்கின்றது. கார்கால மழை வள்ளல் அதியனின் கொடை வள்ளல் தன்மைக்கு உவமை கூறப்படுகிறது. மாரியாற் பெறும் பயன் அதியனின் வண்கையாற் பெறும் பயனை ஒத்ததுஎன்பதை நற்றிணை நவில்கின்றது.*

***"கடும் பகட்டு யானை நெடுமான் அஞ்சி***
***ஈரு நெஞ்சமோடு இசைசேண் விளங்க***
***தேர்வீசு இருக்கை போல***
***மாரி இரீஇ மான்றன்றால் மழையே"*** [142]

***(நற்றிணை, பாடல் எண் 381, அடிகள் 7-10)***

### *1.1.4. கூதிர் காலம்*

*அறுவகைப் பெரும்பொழுதுகளுள் ஒன்று கூதிர்காலம் ஆகும். ஐப்பசி, கார்த்திகை ஆகிய இருதிங்களுக்குரியப் பருவமாகக் கூதிர்காலம் பேசப்படுகின்றது. மலையும் மலை சார்ந்த இடமாகியக் குறிஞ்சி நிலத்துக்குரியப் பெரும்பொழுதாகக் கூதிர்ப்பருவத்தைக் குறிப்பிடுங்கால்,*

***"குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்"*** [143]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 6)***

*என்று விளக்குகின்றது. மழைக்காலத்தின் முற்பகுதி கார் எனவும் பிற்பகுதி கூதிர் எனவும் கொள்ளப்படும். இக்கூதிர் பருவத்திலும், முன்பனியிலும் மாவும் புள்ளும் குளிரின் பொருட்டு தத்தம் துணையோடு இன்புற்று வசித்தல் கண்டு களவில் ஒழுகும் தலைவன் கடத்தற்கரிய நெறிகளைப் தன் ஆற்றலால் கடந்து, பெருகி வரும் காமக் குறிப்புடன், புணர்தலாகிய உணர்வுக் கொண்டு பெரும்பாலும் இரவுக் காலங்களில் தலைவியைக் குறிக்கண் நாடிக் கூடுதலான இப்பொழுதுகள் குறிஞ்சிக்குப் பொருத்தமானதை,*

***"பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப"*** [144]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 7)***

*என்றுத் தொல்காப்பியம் உணர்த்துகிறது. உடனுறைந்திருப்பார்க்கு வாடையைச் சுமந்து வரும் இக்கூதிர்காலம் இன்புற்றிருக்க ஏற்ற காலமாகும்.*

### *1.1.4.1. கூதிர்காலத்தின் தன்மை*

*கார்காலத்து மழை பெய்தபின் மேகத்தில் எஞ்சியிருக்கும் துளிகள் கூதிர் காலத்து வீழ்தலுண்டு. நுண்ணிய மழை பொழிந்துப் பின்னர் சிறுசிறுத் துளியாகப் பெய்கின்றக் குளிர்ச்சியாக வீசும் வாடைக் காற்றினை உடையக் கூதிர்காலம் என்றுக் கூதிர்காலத்தின் தன்மை,*

***"நுண்உறை அழிதுளி தலைஇய***
***தண்வரல் வாடையும், பிரிந்திசினோர்க்கு அழல்"*** [145]

*என்றும்* ***(குறுந்தொகை, பாடல் எண் 35, அடிகள் 4-5)***

***"தண்வரல் அசைஇய பண்புஇல வாடை"*** [146]

***(அகநானூறு, பாடல் எண் 58, அடி 11)***

*என்றுக் குறிப்பிடுகின்றது.*

### தாழ்பெயற் கடைநாள்

கூதிர் பருவத்து இறுதிநாளில் குறைந்த அளவு மழையை வானம் பொழிவிக்கும். குறைந்த பெயலைக் கொண்ட கூதிர்ப்பருவத்து இறுதிநாள் தாழ்பெயற் கடைநாள் என்று அழைக்கப்பட்டுள்ளமையை,

**"தண்மழை பொழிந்த தாழ்பெய் கடைநாள்"** [147]

***(அகநானூறு, பாடல் எண் 163, அடி 2)***

என்ற அடி விளக்குகிறது.

### *1.1.4.1. 1. கூதிர் கால நீர்*

கூதிர் காலத்தில் நீரானது கலங்கியும் குளிர்ந்தும் இருக்கும் தன்மை உடையதைத் தண்கலிழ் என்று,

**"கூதிர் ஆயின் தண்கலிழ் தந்து"** [148]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 45, அடி 1)***

என்னும் பாடலடியில் குறிக்கின்றது.

### *1.1.4.1.2. கூதிர்கடுமை*

கூதிர்காலத்தில் வீசும் வாடை, கடுமையானக் குளிர்த்துன்பத்தைத் தரும். குளிர்ந்த இவ்வாடை, உயிர்களுக்கு நடுக்கஞ் செய்வதால் நற்பண்பு சிறிதுமில்லாத வாடை என்பர். இதற்கு அஞ்சித் தலைவன் தலைவியர் வாழ்வர் என்பதை,

**"அசைவரல் வாடை தூக்கலின் ஊதுஉலை**
**விசைவாங்கு தோலின் வீங்குடி ஞெகிழும்"** [149]

***(நற்றிணை, பாடல் எண் 152, அடிகள் 4-5)***

என்றப் பாடல் உணர்த்துகின்றது. எருதுகள் துன்புறும் பருவம் என்பதனைக் குறிக்கும் போது, மழைத்துளி மிக்க வாடைக் காற்றுடன் வரும் கூதிர்கால நள்ளிரவில் எருதானது, ஈ அமர்வதினால் தலையாட்ட, கழுத்தில் கட்டிய மணியானது அசைந்து ஒலிக்கும் கூதிர் யாமம் என்பதைக் குறித்து,

**"உறைசிறந்து ஊதை தூற்றும் கூதிர் யாமத்து**
**ஆன்நுளம்பு உலம்புதொறு உளம்பும்**
**நாநவில் கொடுமணி நல்கூர் குரலே"** [150]

***(குறுந்தொகை, பாடல் எண் 86, அடிகள் 3-6)***

என்னும் குறுந்தொகைப் பாடல் விளக்குகின்றது.

கூதிர்காலத்தே வீசும் வாடையைக் கொடிய வாடை, இன்னா வாடை என்றெல்லாம் புனைந்துரைத்து, வாடை வரின் இறத்தலும் கூடும் என்பதைக் குறிக்கும் வண்ணம்,

**"வருவை அல்லை வாடை நனி கொடிதே"** [151]

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 233, அடி 1)**

என்று ஐங்குறுநூறு உரைக்கின்றது. அரும்பனியும் பெருந்தண் வாடையும் உடையக் கூதிர்வரின் இறந்துபடுதல் கூடும் என்றக் கொடுமையை,

**"அரும்பனி அளைஇய விரை கூதிர்ப் பெயல்**

**பெருந்தண் வாடையின் முந்துவந்தனனே"** [152]

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 252, அடிகள் 3-5)**

என்றப் பாடல் குறிப்பு விளக்குகின்றது.

**"குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப் பானாள்"** [153]

**(நெடுநல்வாடை, அடி 12)**

எனக் கூதிர்காலத்தில் உலகம் குளிரால் நடுங்குவதை நெடுநல்வாடை குறிக்கிறது.

### *1.1.4.1.3. கூடியிருக்கும் பருவம்*

களவுப்புணர்ச்சி மேற்கொண்ட காதலர் தனிப்பட்டு ஒழுகும் காலம் கூதிர்காலம். இளைய பெண் வண்டுடன் ஆண் வண்டும் சூழுமாறு அமைந்த முல்லை மலரினைச் சூடியிருக்கும் கூந்தல் படுக்கையில் கிடந்து துயிலுதலே இன்பமானது. இத்தகையக் கூதிர்பருவத்திலே பிரிபவர் இவ்வுலகில் அறியாமை மிக்கவர் என்பதை,

**"மாதர் வண்டொடு சுரும்பு படமுடித்த**

**இரும்பல் மெல் அணை ஒழிய கரும்பின்"** [154]

**(நற்றிணை, பாடல் எண் 366, அடிகள் 2-3)**

என்று நற்றிணை நயம்பட உரைக்கின்றது. கூதிர்காலம் யாரும் பொறுத்துக் கொள்ளுவதற்கு அரியது. தனித்துறைவார்க்கு அதன் கொடுமை பன்மடங்காகப் பல்கும்.

***"அரும்பனி அளைஇய கூதிர்***

***ஒருங்கு இவண்உறைதல் தெளித்து அகன்றாரே"*** [155]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 456, அடிகள் 4-5)***

*என்று ஐங்குறுநூறு இயம்புகின்றது.*

*காதலர்களைப் பிரிந்து தனித்து இருப்பவர்கள் துன்புறுதலே தக்கது என ஊதைக் காற்றின் குளிர்ச்சியோடு மிக மயங்கிக் கலந்தக் கூதிர்பருவத்தினைக் கூற்றம் வடிவாக உருவகிப்பதை,*

***"ஊதை அம்குளிரொடு பேதுற்று மயங்கிய***

***கூதிர் உருவின் கூற்றம்"*** [156]

***(குறுந்தொகை, பாடல் எண் 197, அடிகள் 3-4)***

*என்றுக் குறுந்தொகை கூறுகின்றது.*

### ***1.1.4.1.4. உயிரினங்கள்***

*கூதிர்பருவ காலத்தே நடைபெறும் நிகழ்ச்சிகள் குறித்தும் அப்போது உயிரினங்கள் அடையும் மாறுதல்கள் குறித்தும், வீசும் வாடை குறித்தும் பல்வேறு சூழல்கள் நெடுநல்வாடையில் இடம்பெறுகின்றது. மலையிடத்தே பெய்த மழை, வெள்ளமாய்ப் பெருகி முதற்கண் முல்லை நிலத்தாரை அலைத்தலால், விலங்குகள் மேய்தலை விடுக்க மந்தி வருந்த, பறவை வீழ கறவை கன்றுகளைத் தவிர்க்கும்படி குளிர்விக்கும் கூதிர்காலம் என்பதை நெடுநல்வாடை குறிப்பிடுகின்றது.*

***"ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்***

***ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பி***

***புலம்பெயர் புலம்பொடு கலங்கி கோடல்***

***நீடு இதழ்க் கண்ணி நீர்அலைக் கலாவ***

***மெய்க்கொள் பெரும்பனி நலியப் பலருடன்"*** [157]

***(நெடுநல்வாடை, அடிகள் 3-7)***

*கூதிர்காலம் பறவைகளுக்கும் தலைவிக்கும் துன்பத்தைக் கொடுக்கும் வாடைக் காற்றினை வீசும் தன்மை உடையது என்பதை,*

**“இரைதேர் நாரைக்கும் எவ்வம் ஆகத்**
**தூஉம் துவலைத் துயர்கூர் வாடையும்**
**வாரார் போல்வர் நம் காதலர்”** [158]

***(குறுந்தொகை, பாடல் எண் 103, அடிகள் 3-5)***

*என்றும் குறுந்தொகை குறிக்கின்றது. குறுகினம் நரலும் காலம் பனிபெய் காலமானக் கூதிர் காலம் என்பதை உணர்த்துமாறும்,*

**“பெய்பனி நலிய உய்தல் செல்லாது**
**குருகினம் நரலும் பிரிவு அருங்காலை”** [159]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 457, அடிகள் 1-2)***

*எனும் ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் அமைகின்றன.*

### *1.1.4.2. கூதிர்கால மலர்*

*கூதிர்காலத்தில் மலரக்கூடிய மலர் பகன்றை மலர். திங்கள் போலும் உருவத்தினைக் கொண்ட பகன்றை மலர் வெண்ணிறக் கொடியாகிய ஈங்கையின் பசியப் புதரின் மேல் மலர்ந்து அழகூட்டும் என்றுக் கூதிர்கால மலராகப் பகன்றைக் குறிப்பிடப்படுவதை,*

**“பகல்மதி உருவின் பகன்றைமா மலர்**
**வெண்கொடி ஈங்கைப் பைம்புதல் அணியும்**
**அரும்பனி அளைஇய கூதிர்”**[160]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 456, அடிகள் 2-5)***

*என்னும் பாடல் அடிகள் பேசுகின்றன.*

### *1.1.4.3.கூதிர்கால வர்ணனை*

*தலைவன் தலைவியருக்கு இடையில் தோன்றும் காமக்குறிப்பை நிலத்தின் அடிப்படையில் கூறும் போது அவற்றைப் பொழுதுகளின் வருணனையே முழுமையடையச் செய்கிறது.*

**“உரிப்பொருளாகிய ஒழுக்கம் நிகழுதற்கு முதற்பொருள் நிலைக்களமாகவும், கருப்பொருள் அதற்கு உதவுமாறும் செய்யுட்கள் செய்யப்பட்டன”** [161]

***(ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பக்கம் 3)***

*என்னும் குறிப்பு வழி அக்கருத்துப் புலனாகிறது.*

கூதிர்ப் பருவத்தே நடைபெறும் நிகழ்வுகள் குறிக்கப்பெறும் போது, மலையுறை புலம், இரவும் பகலும் எதுவென அறியாது மயங்கும் காலம் என்றும், குற்றேவல் வினைஞர் குளிர்க்கு மருந்தாகும் பல்கூட்டினை அரைக்கும் காலம் என்றும், சிலாவட்டம் ஆகியன பயன்படாக் காலம் என்றும் மகளிர் மலர் மாலைகளை விடுத்து சில்மலர் சூடும் காலம் என்றும் மயிர்ச் சந்தனத்தை விறகாக்கி அகிலையும் கண்ட சருக்கரையையும் இட்டு புகைக்கும் காலம் என்றும் குறிக்கப்படுகின்றன.

ஆலவட்டம் உறையிடப்பட்டு சிலந்தி நூல் சூழப்பட்ட காலம் என்றும், வாடைக்காற்றும் மழைத்துளியும் பரவுவதால் எப்பருவ மக்களும் குடத்தின் குளிர்நீரைக் குடியாது இந்தளத்தில் மூட்டிய செந்நெருப்பின் வெம்மை ஆரும் காலம் என்றும் ஆடல் மகளிர் கூதிர்பருவக் குளிர்ச்சியாலே நிலைகுலைத்த இனிய குரலாகிய நரம்பைத் தம் மார்பிடத்தே வெப்பத்தை உண்டாக்கத் தடவி சிறிய யாழைப் பண் நிற்கும் முறையில் நிறுத்தும் காலம் என்றும், காதலரைப் பிரிந்தோர் புலம்பும் காலம் என்றும் பலபட கூதிர் நிகழ்ச்சிகளைப் பிரித்துக் கூறுகின்றனர். இத்துணை அளவிற்கு வாடை வீசும் கூதிர்பருவத்தினை,

> ***“பகுவாய்த் தடவில் செந்நெருப்பு ஆர***
> ***ஆடல் மகளிர் பாடல்கொளப் புணர்மார்***
> ***தண்மையின் திரிந்த இன்குரல் தீம் தொடை***
> ***கொம்மை வருமுலை வெம்மையில் தடைஇ***
> ***கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப***
> ***காதலர்ப் பிரிந்தோர் புலம்ப பெயல் கனைந்து***
> ***கூதிர் நின்றன்றால்”*** [162] ***(நெடுநல்வாடை, அடிகள் 66-72)***

என்று நெடுநல்வாடை புலப்படுத்துகிறது.

குறிஞ்சியாவது இயற்கைப் புணர்ச்சியாகும். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின் களவினை நீட்டிக்கக் கருதும் தலைவனுக்குக் களவின் சிறப்பைக் கூறும்போது தலைவியைச் சிறப்பானவளாக ஆக்குவது ஐப்பசியும், கார்த்திகையுமாகிய கூதிர் காலமாகும். இருள் விளங்கியிருக்கும் இக்காலத்தில் மாவும் புள்ளும் இன்புற்று இருப்பதைக் கண்டு தலைவனுக்கு காமக்குறிப்பு மிகுவதாயிருக்கும். காவல் மிகுதியை கண்டுகொள்ளாது வரும் தலைவனைக் குறிக்கண் கண்டு புணரும் போது இன்பம் கொள்வதால் கூதிர்காலம் சிறப்பாகக் கூறப்படுகிறது. கூதிர்கால வாடைக் காற்றும் இயற்கைச் சூழலும் தலைவன் தலைவியின் இன்பத்திற்கு ஏற்புடையதாக அமைகிறது.

***"இருள்தூங்கித் துளி மிகுதலின் சேறல் அரிதாகலானும் பானாட் கங்குலிற் பரந்துடன் வழங்காது, மாவும் புள்ளும் துணையுடன் இன்புற்று வதிதலில் காமக்குறிப்புக் கழியப் பெருகுதலானும், காவல் மிகுதி நோக்காது வரும் தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின் இந்நிலத்திற்கு கூதிர்காலம் சிறந்தது எனப்படும்."[163]***

***(நச்சினார்க்கினியர் உரை, தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 6)***

*எனும் கூற்றால் குறிஞ்சிக்குக் கூதிர்ப்பருவம் பொருந்துமாறு விளக்கப்படுகின்றது.*

### *1.1.5. முன்பனிக்காலம்*

*பெரும்பொழுதுகளுள் மூன்றாம் பிரிவாகிய முன்பனிக்காலம், இலக்கியத்தில் அச்சிரம் எனப் பெறுகின்றது. இஃது மார்கழி, தை உள்ளிட்ட பருவகாலமாகும். இது மழை பெய்து வெளிறிய முகில் சில நுண்டுளிகளைத் தூவி, வாடையோடு நடக்கும் பருவமாகும். முன்பனிக் காலம் பிரிந்தோரைப் பெருந்துன்பம் உறச் செய்வதாகும்.*

### *1.1.5.1. முன்பனிக்காலம் - வாடைக்காலம்*

*மேகமானது இறுதி மழையைப் பொழிந்து முடிந்து அதன்பின்பு வரும் வாடை கமழ்கின்ற பனிப்பருவம் முன்பனிப்பருவம் ஆகும். இது குறிஞ்சி நிலத்திற்குரியக் காலமாகும். தொல்காப்பியம்,*

***"குறிஞ்சி***
***கூதிர் யாமம் என்மனார் புலவர்"[164]***

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 7)***

***"பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப"[165]***

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 8)***

*என்னும் நூற்பாக்கள் மூலம் புலப்படுத்துகிறது. மழை என்னும் கடமையாற்றிய மேகங்கள் சில துளிகளை அவ்வப்போது தூவி குளிர்வாடையைத் தோற்றுவிக்கும் காலம் முன்பனிக்காலம் என்பதை இலக்கியங்கள் இயற்கை வழி உணர்த்துகின்றன.*

*குறிஞ்சி நிலத்திற்கு முன்பனிக்காலமாகிய மார்கழியும் தையும் உரியது என்பதை நச்சினார்க்கினியர் உரை விளக்குகிறது.*

### 1.1.5.2. பனிப்பருவத்தின் கடுமை

மழை பொழிந்து முடிந்தப் பின்பு வரும் வாடைகமழ் பனிப்பருவத்தின் கடுமையை,

**"பெரும்பெயல் பொழிந்த தொழில் தெற்கு**
**ஏர்பு இரங்கும் அற்சிரக் காலையும்"[166]**

***(நற்றிணை, பாடல் எண் 5, அடிகள் 5-6)***

**"வந்த வாடைச் சில்பெயற் கடைநாள்"[167]**

***(குறுந்தொகை, பாடல் எண் 332, அடி 1)***

**"முளரி கரியும் முன்பனிப் பானாள்**
**குன்று நெகிழ்பு அன்ன குளிர்கொள் வாடை"[168]**

***(அகநானூறு, பாடல் எண் 163, அடிகள் 8-9)***

என்றும் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகியன விளக்குகின்றன.

மெல்லென வரும் பனியைத் தூவி வடதிசையினின்றும் வீசப்பெறும் வாடைக்காற்று வடந்தை என்றும் அழைக்கப் பெறுகின்றது.

**"பையென வடந்தை துவலை தூவ"[169]**

***(நற்றிணை, பாடல் எண் 152, அடிகள் 5-6)***

பனிப்பருவம் பெரிதும் துன்பத்தைச் சுமந்து வருகின்றது என்பதை நற்றிணை நயம்பட உரைக்கின்றது.

### 1.1.5.3.அருவியருதல்

மழை வெள்ளமும் காட்டாறும் மிக்கு ஓடி உருவாக்கும் மலைவீழ் அருவி குறித்து இலக்கியங்களில் பல சான்றுகள் உள்ளன. அருவிதவழ் மலைச் சிகரங்கள் குறிஞ்சிக்கு அழகூட்டும். அருவி விழும் இடத்தே மகளிர் அருவியாடிக் களிப்பர் என்பதை,

**"அருவியாடி சாரல் ஆரம் வண்டு படநீவி"[170]**

என்றும், ***(நற்றிணை, பாடல் எண் 259, அடிகள் 5-6)***

**"பொருவில் ஆயமொடருவியாடி"[171]**

***(நற்றிணை, பாடல் எண் 44, அடி 1)***

என்றும் நற்றிணை கூறுகிறது. ஐங்குறுநூறு அருவியினை அயம் என்று குறிப்பிடுகிறது.

**"அயந்திகழ் சிலம்ப"[172]**

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 264, அடி 3)**

குறிஞ்சி இடங்கள் முழுமையும் தலைவனும் தலைவியும் சந்திக்கும் புணர்ச்சிக்குரியக் களங்களாக அமைந்து, அவர்தம் ஒழுக்க உணர்வும் உடன் உரைக்கப் பெறுகின்றது. மகளிர் பூக்குற்றி, தொடலை இயற்றி, தழை புனைந்து, அருவியாடி கிளிகடிந்து, ஆயமொடு விளையாடி, மலையிடத்தில் உலாவுவார். இதில் அருவியாடுதல் அருவியருதல் என்று குறிக்கப் பெறுகின்றது.

**"தமிழ் அகத்திணை கூறும் பல்வேறு காதற் கூறுகள் தமிழகத்தின் பல்வேறு நிலக்கூறுகளைச் சார்ந்து எழுந்தன என்றொரு கோட்பாடு உள்ளது"[173]**

**(ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், பக்கம் 14)**

என்ற கூற்றின் வழி அகஒழுக்கங்கள் நிலத்தைச் சார்ந்து உரைக்கப்பட்டது.

குறிஞ்சி நிலக்கூறுகளில் ஒன்றான மலைவீழ் அருவியில் முன்பனிக்காலத்தில் அருவியருதல் நடைபெறுதல் உண்டு. அச்சிரப்பொழுதில் அருவியருதல் இயல்பு என்பதையும், இக்காலத்தே காந்தள்கள் முதிர்ந்து வளர்ச்சியுறும் என்பதையும்

**"வரைஆம் இழிய கோடல் நீட**
**காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும்**
**தண்பனி வடந்தை அற்சிரம்"[174]**

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 223,அடிகள் 2-4)**

என்னும் பாடலில் பேசப்பெறுகின்றது. பிரிந்துறையோரை முன்பனிப் பருவமானது கூதிர்காலத்தை விடவும் வாட்டும் தன்மையுடையது. கூதிர்காலத்தில் மலரக் கூடியக் காந்தள் இப்பருவத்தில் முதிர்ந்து வளர்ச்சியுறும்.

கூதிர்பொழுதில் காந்தள் மலர்ந்து அச்சிரப் பொழுதில் முதிரும் தன்மை உடையது. கோடல் நீட என்பது பிரிந்தோரை அற்சிரமானது கூதிரை விட வாட்டும் எனக் குறித்து வந்தது.

### 1.1.5.4. முன்பனிக்கால மலர்கள்

வாடையொடு வரும் பனிக்காலத்தில் சில பயிர்வகைகளும் மலர்களும் தழைத்தலும் கிளைத்தலும் உண்டு. குளிர்ந்த மழை நின்றத் தைத்திங்களாகிய முன்பனிக் காலத்தில் பகன்றை மலரின் அரும்புகள் தோன்றியதை,

***"தளை பிணி அவிழா சுரிமுகப் பகன்றை***

***சிதரல் அமதுவலை தூவலின் மலரும்***

***தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்" [175]***

***(அகநானூறு, பாடல் எண் 24, அடிகள் 3-5)***

*என்னும் அகநானூற்றுப் பாடல் விளக்குகிறது. அவரைக்கொடி பூக்கும் காலம் பொறுத்தற்கு அரிய முன்பனிக் காலமாகும்.*

***"கொழுகொடி அவரை பூக்கும்***

***அரும்பனி அற்சிரம் வாரா தோரே" [176]***

***(குறுந்தொகை, பாடல் எண் 82, அடிகள் 5-6)***

*முன்பனிக்காலத்தில் முண்டகத்தின் மலரானதுப் பறிக்கப்படாமல் காற்றினால் உதிர்ந்து மணற்பரப்பை அழகுடையதாக்குவதை*

***"கூன்முள் முண்டகக் கூர்மபனி மாமலர்***

***நூல் அறுமுத்தின் காலொடு பாறித்***

***துறைதொறும் பரக்கும் தூமணற் சேர்ப்பனை" [177]***

***(குறுந்தொகை, பாடல் எண் 51, அடிகள் 1-3)***

*எனக் குறுந்தொகை கூறுகின்றது. பகன்றை மலரும், காந்தள் மலரும் மலர்ந்து செழிக்கும் முன்பனிப் பருவம்.*

***"பண்டில் ஒப்பின் பகன்றை மலரும்***

***கடும்பனி அற்சிரம் நடுங்க காண்தகக்" [178]***

***(நற்றிணை, பாடல் எண் 86, அடிகள் 3-4)***

***"நீடு இதழ் நெடுந்துடுப்பு ஒசிய தண்ணென***

***வாடை தூக்கும் வருபனி அற்சிரம்" [179]***

***(அகநானூறு, பாடல் எண் 78, அடிகள் 9-10)***

*என்றும் குறிப்பிடப்பெறுகின்றது. முன்பனிக்காலம் நீங்கும் பொழுதில் மலர்வன குரவம் மலர்கள். குரவம் மலர்ந்து முன்பனிக்காலம் நீங்கியதை*

***"கண்பனி நிறுத்தல் எளிதோ குரவு மலர்ந்து***

***அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்" [180]***

***(அகநானூறு, பாடல் எண் 97,அடிகள் 16-17)***

***"பின்பனி அமையம் வரும்என முன்பனிக்***

***கொழுந்து முந்துறீஇக் குரவு அரும்பினவே" [181]***

***(நற்றிணை, பாடல் எண் 224, அடிகள் 2-3)***

*என்றும் குறிக்கப்பட்டு,*

*கருவிளை மலர்கள் கண்களோ என்று ஐயுறுமாறு மலர்தலும் பீர்க்கங் கொடிகள் பெரிய புதல்களின் மேல் பொன்போல மலர்தலும் முன்பனிக் காலத்தில் என்பதைக்*

***"கண்ணெனக் கருவிளை மலர பொன் என***
***இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்***
***அற்சிரம் மறக்குநர் அல்லர்"*** [182]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 464 அடிகள்1-3 )***

*என்னும் பாடல்வழி உணரமுடிகிறது.*

### *1.1.5.5. தமியோர்க்கு அரிதாகும் தண்பனிப்பருவம்*

*பருவகாலச் சூழல் அகவாழ்வைப் பாதிக்கும்.*

***"இயற்கைப் புறச்சூழல் அகவாழ்வை ஆட்டுவிக்கும் என்பது, மனித இயற்கையில் ஓர் அடிப்படை உண்மை"*** [183]

***(கதிர் மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், பக்கம் 8)***

*என்றக் கூற்றும் உறுதிப்படுத்துகிறது. மக்கள் தங்கள் வாழ்நாளில் நடைபெறுகின்ற இன்றியமையாத நிகழ்ச்சிகளையும் பொழுதுகளையும் பருவ வேறுபாடுகளைக் கொண்டு குறித்து வந்தனர். பனிப்பருவத்தே தலைவன் வினை குறித்துப் பிரிகின்றான். தலைவி இப்பனிப் பருவ நாளில் தனிமைக்காக நோகின்றாள்.*

***"காதலுணர்வின் பல நிலைகளைக் குறிப்பிட்ட நிலப்பகுதிகளுக்கும் பருவங்களுக்கும் நேரங்களுக்கும் வகுத்தனர்"*** [184]

***(மு.வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்கம் 17)***

*என்னும் கூற்றும் உணர்த்துகின்றது. தண்ணிய வரவையுடைய வாடைக்காற்று பிரிவுத் துன்பத்தை நடுங்குமாறு தந்தது என்பதை,*

***"தண்வரல் வாடை தூக்கும்***
***கடும்பனி யற்சிரம் நடுங்கு அஞர் உறவே"*** [185]

***(குறுந்தொகை, பாடல் எண் 76, அடிகள் 5-6)***

*என்றப் பாடல் விளக்குகின்றது. இப்பனிப் பருவத்தில் தலைவன் பிரியாது உறுதியாக வருவான் எனத் தோழி, கிழத்தி பால் வற்புறுத்துங்கால்,*

***"வடபுல வாடைக் கழி மழை***
***தென்புலம் படரும் தண்பனி நாளே"*** [186]

***(குறுந்தொகை, பாடல் எண் 317, அடிகள் 6-7)***

என்று பனிக்கொடுமை குறித்துச் சொல்லப்படுகின்றது. பனிக்கொடுமையைத் தீர்க்கும் மருந்து தலைவனின் மார்பின்றி பிறிதில்லை என்பதை,

**"அரும்பனியச்சிரம் தீர்க்கும்**

**மருந்து பிறிதில்லையவர் மணந்த மார்பே"** [187]

***(குறுந்தொகை, பாடல் எண் 68, அடிகள் 3-4)***

என்னும் குறுந்தொகைப் பகுதி உணர்த்துகின்றது. முன்பனிப் பருவம் பிரிவெய்தியவர்க்கு அரிதானது என்பதை,

**"தெற்குஏர்பு இரங்கும் அற்சிரக் காலையும்**

**அரிதே காதலர் பிரிதல்"** [188]

***(நற்றிணை, பாடல் எண் 5, அடிகள் 6-7)***

**"கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்**

**தண்பனி அற்சிரம் தமியோர்க்கு அரிது என"** [189]

***(அகநானூறு, பாடல் எண் 178,அடிகள் 18-19)***

என்றும் நயம்பட உணர்த்தப்படுகின்றது. பனிப்பருவத்தில் பிரிந்தோர் படும் துயரைக் கூறும் பொருட்டு அமையும் பாடல்களில் பனிவாடையின் வருத்தத்தில் பிரிந்துறைவோர் மேற்கொள்ளும் மனஉணர்வை உணர முடிகிறது.

**"குறிப்பிட்ட நிலத்தின் பருவ நிலைக்கும் இயற்கை வளத்துக்கு ஏற்ப வாழ்க்கை மாறுதல்கள் வெளிப்படையாகவோ குறிப்பாகவோ திகழ்ந்து வாழ்க்கைப் போக்கை அமைப்பதற்கு முதல் காரணமாய் இயற்கை அமைகின்றது"** [190]

***(மு.வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்கங்கள் 31-32)***

என்னும் கூற்றும் இதனை உறுதி செய்கின்றது. தலைவனைப் பிரிந்த தலைவியைப் பனிக்காலம் அறிவைத் தின்னும் துன்பத்தில் ஆழ்த்தியதை,

**"தவல்இல் நோய் செய்தவர்க் காணாமை நினைத்தலின்**

**இகல் இடும்பனி தன எவ்வத்துள் ஆழ்ந்து ஆங்கே"** [191]

***(கலித்தொகை, பாடல் எண் 134, அடிகள் 11-12)***

என்னும் அடிகள் விளக்குகின்றன.

### 1.1.5.6. துள்ளுப்பெயல்

துள்ளுப்பெயல் என்பது கார்காலத்துப் பெய்யும் மிக்க மழையைக் குறித்து வந்தது. தலைவி முன்பனிப் பருவநாளில் தனிமையினால் வருத்தமுறுவதால் அவளது நீர்சொரியும் கண்கள் கார்காலத்து மழையினை ஒத்தது என்பதை,

> **"துள்ளுப்பெயல் கழிந்த பின்றை புகைஉறப்**
> **புள்ளி நுண் துவலை பூவகம் நிறைய**
> **காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்**
> **நீர்வார் கண்ணின் கருவிளை மலர்"** [192]

**(அகநானூறு, பாடல் எண் 294, அடிகள் 2-5)**

என்னும் அடிகள் நயம்பட நவில்கின்றது.

இங்ஙனம் மழையும் பனியும் விரவிய முன்பனிப்பருவம் பனி மட்டும் மிக்குப் பெய்வதாகி, களவின்பத்திற்குச் சிறந்ததாகி, தனித்துறைய இயலாததாகி, ஆற்றற்கரியதாக, தலைவன் வரைவொடு வருவானோ எனக் காலம் கருதிக் காத்திருக்கும் பருவமாகத் திகழ்வதைக் காணமுடிகின்றது.

### 1.1.6. பின்பனிக்காலம்

சங்க இலக்கியங்களில் முன்பனி, பின்பனி ஆகிய காலங்களிடையே அதிக வேறுபாடு இல்லை. பின்பனிப் பருவத்திற்குரிய காலம் மாசி, பங்குனி ஆகிய மாதங்களாகும். இது பாலைத் திணைக்குரிய பருவமாக இலக்கியங்களில் பேசப்பெறுகின்றது. பின்பனிக்காலமும் பாலைக்கு உரியது என்பதைத் தொல்காப்பியமும் உரைக்கின்றது.

> **"பின்பனி தானும் உரித்தென மொழிப"** [193]

**(தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 12)**

குறிஞ்சியும் முல்யையும் திரிந்த நிலம் பாலையாகும். அதற்குப் பெரும்பொழுதாக இரு வேனிலையும் பின்பனியையும் நூற்பாக்கள் உரைக்கின்றன.

### *1.1.6.1. பின்பனியின் தன்மை*

*பனிக்காலம் தனித்தோரை நலிவு செய்ய வல்லது. மழைக்காலம், இளவேனில் காலம் போன்று காதலர் சேர்ந்திருந்து காதலின்பம் நுகர விழையும் காலம் பின்பனிக் காலமாகும். அற்சிரப் பொழுதின் தாங்குதற்கருமை நோக்கி அரும்பனி என்றுக் குறிப்பிடுவதை,*

***"அரும்பனி அளைஇய அற்சிரக் காலை***
***உள்ளார் காதலர் ஆயின் ஒள்ளிழை"*** [194]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 470, அடிகள் 1-2)***

***"அரும்பனி அறிசிரம் தீர்க்கும்***
***மருந்து பிறிது இல்லை அவர் மணந்த மார்பே"*** [195]

***(குறுந்தொகை, பாடல் எண் 68, அடிகள் 4-5)***

*என்று கூறும் அடிகள் மூலம் விளங்குகின்றது. பின்பனிக் பருவமானது தண்ணியப் பனியையும் நுண்ணிய துளிகளையும் கொண்டு விளங்குவதை,*

***"நுண்பல் துவலைய தண்பனி நாளே"*** [196]

***(அகநானூறு, பாடல் எண் 13, அடி 24)***

*என்னும் அகநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. நூலற்ற முத்து வடத்தினின்றும் தணித்து உதிர்ந்த முத்துக்களைப் போலக் குளிர்ந்தப் பனித்துளிகள் துளிக்கும் காலம் என்பதை,*

***"நூல்அறு முத்தின் தண்சிதர் உருப்பத்***
***தாளித் தண்பவர் நாள் ஆமேயும்***
***பனிபடுநாளே"*** [197]

*என்றும்,* ***(குறுந்தொகை, பாடல் எண் 104, அடிகள் 2-4)***

***"புகையெனப் புதல் சூழ்ந்து பூவங்கட் பொதிசெய்யா***
***முகை வெண்பல் நுதிபொர முற்றிய கடும்பனி"*** [198]

***(கலித்தொகை, பாடல் எண் 31, அடிகள் 19-20)***

*என்றும் பனியின் தோற்றம் புனையப்படுகிறது. பின்பனிப்பருவத்தில் வாடையானது கொடியதாகவும் நடுக்கந் தருவதாகவும் அமைந்து இருப்பதை இலக்கியங்கள் வழி காணமுடிகின்றது. பனியும் வாடையும் நுண்துளிகளும் விரவிய இப்பருவம்,*

**"புலம்பொடு வந்த பொழுது கொள் வாடை"[199]**

***(அகநானூறு, பாடல் எண் 13, அடி 21)***

*என்றும்* **"பனிகடி கொண்ட பண்புஇல் வாடை"[200]**

***(அகநானூறு, பாடல் எண் 235, அடி15)***

**"தளிமழை பொழிந்த தண்வரல் வாடையொடு பனி மீக்கூரும்"[201]**

*என்றும்* ***(நற்றிணை, பாடல் எண் 305, அடி )***

**"பெரும்பெயல் பொழிந்த வழிநாள் அமையத்து"[202]**

*என்றும்* ***(நற்றிணை, பாடல் எண் 157, அடி2)***

**"மாரி நின்ற மையல் அற்சிரம்"[203]**

***(நற்றிணை, பாடல் எண் 312, அடி5)***

*எனவும் பலவகையால் விளக்கப்படுகின்றன. பிரிந்தார்க்குப் பெரிதும் துயரத்தைத் தரும் பருவம். இத்தகைய காலத்தில் பிரிந்தால், அப்பிரிவு உயிரைக் கொள்ளும் துயர் செறிந்தது என்பதை,*

**"தேற்றம் அன்றே - தோழி தண்எணனத்**
**தூற்றுந் திவலைத் துயர்கூர் மாலை" [204]**

***(குறுந்தொகை, பாடல் எண் 398, அடிகள் 1-2)***

*என்றும் அது கையறவுடன் கூடியக் கலக்கத்தை விளைவிக்கும் என்பதை,*

**"மெய்கூர்ந்த பனியொடு மேல்நின்ற வாடையால்**
**கையாறு கடைக்கூட்டக் கதக்குறூஉம் பொழுது மன்" [205]**

***(கலித்தொகை, பாடல் எண் 31, அடிகள் 6-7)***

*என்றும் குறிக்கின்றது. பனிப்பருவத்தில் தலைவன் பிரிவு மேற்கொண்டு தொலை நாட்டுக்குச் சென்றான் என நினைத்து தலைவி வருந்துவதை,*

**"பெயல் ஆனாதே வானம் காதலர்**
**நனிசேய் நாட்டார்நம் உன்னலரே**
**யாங்கு செய்வோம் கொல் தோழி - ஈங்கைய**
**வண்ணத் துய்ம்மலர் உதிர**
**முன்னர்த் தோன்றும் பனிக்கடு நாளே" [206]**

***(குறுந்தொகை, பாடல் எண் 380, அடிகள் 3-7)***

*என்னும் பாடல் உணர்த்தி நிற்கின்றது.*

கடப்பருங்காதலுடையார் பனிக்காலத்தில் பிரிவைப் பொறுத்துக் கொள்ளவும் கடந்துச் செல்லுவதற்கும் அஞ்சுகின்றத் தன்மையை,

**"கூதிர் அற்சிரத்து ஊதை தூற்ற**
**பனி அலைக் கலங்கிய நெஞ்சமொடு**
**வருந்துவம் அல்லமோ பிரிந்திசினோர் திறத்தே"** [207]

**(அகநானூறு, பாடல் எண் 183, அடி 13-15)**

என்றுப் பேசுகின்றது.

வாடை அலைக்கின்ற இப்பனிப் பருவத்தில் பிரிபவர் அறிவில்லாதவர் என்று கூறும் நற்றிணை பாடல் கலக்கந் தரும் பனிப் பருவத்தின் தன்மையை,

**"வடபுல வாடைக்குப் பிரிவோர்**
**மடவர் வாழி இவ்வுலகத்தானே"** [208]

**(நற்றிணை, பாடல் எண் 366, அடிகள் 11-12)**

என்றவாறும் எடுத்துரைக்கின்றது. பொறுத்தற்கரியப் பனிக்காலத்தால் உண்டாகும். இக்காம நோயைத் தீர்க்கும் மருந்து என்னைத் தழுவியக் காதலனின் மார்பே என்னும் தலைவியின் கூற்றாக,

**"அரும்பனி அற்சிரம் தீர்க்கும்**
**மருந்து பிறிது இல்லை அவர் மணந்த மார்பே"**[209]

**(குறுந்தொகை, பாடல் எண் 68, அடிகள் 4-5)**

என்னும் குறுந்தொகை பாடல் அமைகிறது. பகலிலும் இருளினைப் பரப்பிப் புகையின் நிறத்தைப் போன்றப் பனியையுடையப் பனிக்காலம் நீங்கியதை,

**"பாஅய் அன்ன பகல் இருள் பரப்பி**
**புகைநிற உருவின் அற்சிரம் நீங்க"**[210]

**(அகநானூறு, பாடல் எண் 317, அடிகள் 2-3)**

என்னும் தொடர்வழி அறியமுடிகின்றது. பின்பனிப் பருவத்தில் முனைப்பாகவும் கொடியதாகவும் வீசப் பெறுவது வாடையாதலின் அது குறித்த தனித்தக் குறிப்புகளும்,

**"இம்மென இறைக்கும் வாடை இருள்கூர் பொழுது"**[211]

என்றும் **(நற்றிணை, பாடல் எண் 109, அடிகள் 5-6)**

**"மின்னிடை நடுங்கும் கடைப்பெயல் வாடை"**[212]

**(குறுந்தொகை, பாடல் எண் 277, அடி 6)**

என்றும் கூறுகின்றன.

### *1.1.6.2. பயிரினம் தழைக்கும் பருவம்*

*நிலத்தில் கதிரீன்று முடிந்ததும் பனிப்பருவம் வந்தடையும் என்பதை,*

***“புலம்புனிறு தீர்ந்த புதுவரல் அற்சிரம்”[213]***

***(அகநானூறு, பாடல் எண் 273, அடி 4)***

*என்னும் பாடல் அடிகள் விளக்குகின்றது. இக்காலத்தே பயற்றங்காய்கள் தோன்றி முதிராமல் நின்றுள்ளது.*

***“பற்றுவிடு விரலின் பயறுகாய் ஊழ்ப்ப***

***அற்சிரம் நின்றன்றால் பொழுதே”[214]***

***(அகநானூறு, பாடல் எண் 339, அடிகள் 4-5)***

*என்னும் குறிப்பினால் அறிய முடிகின்றது.*

### *1.1.6.3. பின்பனிக்கால மலர்கள்*

*பின்பனிக் காலத்தில் குறிப்பிட்ட சில மலர்களும் மலர்கின்றன. பகன்றை வெள்ளி வட்டில் போல் மலர்ந்துள்ளது.*

***“பாண்டில் ஒப்பின் பகன்றை மலரும்***

***கடும்பனி அற்சிரம் நடுங்க காண்தகக்” [215]***

***(நற்றிணை, பாடல் எண் 86, அடிகள் 3-4)***

*என்னும் பாடலில் குறிக்கப்படுகின்றது. மீன்கொத்தியின் அலகு போன்ற சிவந்த தளவின் அரும்பானது குளிர்ந்த பருவத்தில் வளரும் இயல்புடையது என்பதை, பனி வளர் தளவு என்று,*

***“பிணிவீடு பெறுக மன்னவன் தொழிலே***

***பனிவளர் தளவின் சிரல் வாய்ச் செம்முகை” [216]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 447, அடிகள் 1-2)***

*என்னும் பாடல் குறிப்பால் உணர முடிகிறது. பின்பனிக்காலத்தில் கரும்பு, பகன்றை அவரைக் கொடி, தோன்றி மலர் ஆகிய மலர்கள் மலர்ந்து மணம் பரப்புவதை அகப்பாடல் விளக்குகிறது.*

***“நீடு கழைக் கரும்பின் கணைக்கால் வான்பூ***

***கோடைப் பூளையின் வாடையொடு துயல்வர***

***பாசிலை பொதுளிய புதல்தொறும் பகன்றை***

***நீலஉண் பச்சை நிறம் மறைத்து அடைச்சிய***

***தோல்எறி பாண்டிலின் வாலிய மலர***

***கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ***

***ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிட"***[217]

***(அகநானூறு, பாடல் எண் 217, அடிகள் 4-10)***

*என்னும் அகப்பாடல் விளம்புகின்றது. குரவ மலர்கள் மலர்ந்துப் பின்பனிப் பருவம் நீங்கியத் தன்மையை அகநானூறு,*

***"குரவம் மலர்ந்து***

***அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்"*** [218]

***(அகநானூறு, பாடல் எண் 97, அடிகள் 16-17)***

*என்னும் பாடல் அடிகள் மூலம் விளக்கி நிற்கிறது.*

### *1.1.7. இளவேனில் காலம்*

*இளவேனிற்காலம் பாலைத் திணைக்குரியதாகப் பேசப்பெறுகின்றது. இலக்கியம் யாத்த புலவர்கள் இளவேனிற் காலத்தை காமர் வேனில், இன்னமர் வேனில், மேதகு இளவேனில், தண்பத வேனில், முற்றா வேனில், இன்ப வேனில், பெரும்பத வேனில் என்று பல திறம்பட்ட தன்மைகளில் புனைகின்றனர். சித்திரை, வைகாசி இளவேனிற் பருவத்திற்குரியத் திங்களாகும்.*

*இளவேனிற் குறித்து, சங்க இலக்கியங்கள் பரவலாகக் குறித்தாலும், ஐந்து திணைகளில் பாடப்பெற்ற கலித்தொகையில் பாலைக்கென்றே பேசப்பெற்றக் கலிப்பாடல்களில் இது விளக்கமாகப் புனையப்படுகின்றது. திணைச் சூழ்நிலைகள் மக்கள் ஒழுக்கத்தோடு உறவு மேற்கொண்டதைச்*

***"சங்ககால மக்கட் பாகுபாடும் வாழ்க்கையும் ஒழுக்கமும் நில***

***இயற்கைக்கு ஏற்பவே அமைந்திருந்தன"*** [219]

***(சு.வித்தியானந்தன், தமிழர்சால்பு, பக்கம் 8)***

*என்னும் கூற்று உறுதிச்செய்கின்றது.*

### *1.1.7.1. இளவேனிற் கால இயல்பு*

*இளவேனிற் பருவம் கண்ணுக்கினிய பருவமாகக் காட்சியளிப்பதைப் பல பாடல்கள் விளம்புகின்றன. வாடிய மரங்கள் யாவும் கிளைத்து தளிர்த்து, அரும்பும் காலமாக விளங்குவதைப் பலதரப்பட்டச் சூழ்நிலையோடு காணமுடிகின்றது. இப்பருவத்தில் மரம், செடி, கொடிகளின் தளிர்த்தல் முதல் பூத்துக்காய்த்தல் வரையுள்ள அடுத்தடுத்த செயல்கள்,*

***"மடியிலான் செல்வம் போல் மரன் நந்த அச்செல்வம்***
***படியுண்பார் நுகர்ச்சி போற் பல் சினை மிஞுறார்ப்ப***
***மாயவள் மேனி போல் தளிர் ஈன, அம்மேனித்***
***தாய சுணங்கு போல் தளிர் மிசைத் தாது உக***
***மலர்தாய பொழில் நண்ணி மணிநீர கயம் நிற்ப***
***அலர்தாய துறை நண்ணி அயிர் வரித்து அறல்வார***
***நனியள்ளும் குயில் நோக்கி இனைபு உரு நெஞ்சத்தால்"*** [220]

***(கலித்தொகை, பாடல் எண் 35, அடிகள் 1-7)***

*என்றப் பாடல் வழி விளக்கப் பெறுகின்றது.*

### *1.1.7.1.1.தண்பத வேனில்*

*இளவேனிற் பருவத்தில் பொழில்கள் புதுத் தளிரீன்று மலர்கள் நல்ல நிழல் செய்வதாலும் இப்பருவத்தைத் தண்பத வேனில் என்றுக் குறிக்கின்றனர்.*

***"எரிப்பூ இலவத்து ஊழ் கழி பல்மலர்***
***பொரிப் பூம் புன்கின் புகர்நிழல் வரிக்கும்***
***தண்பத வேனில் இன்ப நுகர்ச்சி"*** [221]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 368, அடிகள் 1-3)***

*என்னும் அடிகள் மூலம் இன்பநுகர்ச்சி எய்துவதற்கு உகந்தது இளவேனிற் காலம் என்பதை உணரமுடிகின்றது.*

### *1.1.7.1.2. நாட்பத வேனில்*

*பெருமழை பொழிதலால் மலர்கள் செறிந்துள்ளதற்கும் வண்டினங்களின் முரலுதலுக்கும் காரணம் இளவேனிற் பருவ செவ்வியால் என்பதை நற்றிணைப் பாடல்,*

**"பெரும்பயல் பொழிந்த வழி நாளமையத்துப்**
**பல்பொறி அரவின் செல் புறங்கடுப்ப**
**ஆற்றல் நுணுங்கிய நாட்பத வேனில்"** [222]

***(நற்றிணை, பாடல் எண் 157, அடிகள் 2-4)***

என்று உரைக்கின்றது. வேனிலாவது கோடைக்காலம். கோடைக்காலத்தில் நீர்நிலையானது நீலமணி போலும் தெளிந்த நீரைக் கொண்டு அழகு பெறுதலை,

**"ஆயின் தண் கலிழ் தந்து**
**வேனில் ஆயின் மணிநிறம் கொள்ளும்"** [223]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 45, அடிகள் 1-2)***

என்றுக் கூறுகின்றது.

### 1.1.7.1.3. பனி நீங்கு வழிநாள்

பின்பனிக் காலம் முடிந்து தொடங்கும் இளவேனிற்காலம், பனி நீங்கு வழிநாள் என்று குறிக்கப்படுகின்றது. பனி நீங்கிய இளவேனிற் பருவத்து மாலைப் பொழுது இணைந்து செல்லும் காதலர் இருவருக்கும் பேரின்பம் பயப்பதாக இருப்பதை,

**"நனிநன்று ஆகிய பனிநீங்கு வழிநாள்**
**பால் எனப் பரத்தரும் நிலவின் மாலைப்**
**போது வந்தன்று தூதே நீயும்"** [224]

***(அகநானூறு, பாடல் எண் 259, அடிகள் 8-10)***

என்றுக் கூறுவதைக் காணமுடிகிறது. மக்களின் இன்ப நுகர்ச்சிக்கு இதமாக இளவேனிற்பருவம் அமைதலைப் பல்வேறு இலக்கியங்களும் பகர்கின்றன.

**"மானிட உணர்ச்சிச் சாயல்களைக் கொண்டே இயற்கைப்**
**புனையப் படுகின்றது. மனித உணர்வின் மறுபதிப்பாகவே**
**இயற்கை வர்ணிக்கப் பெறுதலையும் காணலாம்"** [225]

***(மு.வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்கம் 537)***

என்னும் கூற்று உறுதிசெய்கின்றது. ஆற்றில் வெள்ளம் பெருகியப் பொழுது நீரை உண்ட மரங்கள் நீர்வற்றிய இளவேனிற் காலத்தில் சுரும்புகள் ஒலிக்க வண்டுகள் ஆரவாரிக்க, கொம்புகளினின்றும் பல மலர்கள் ஆற்றிலே உகும்படி இனிமை பொருந்திய இளவேனில் வந்துவிட்டப் பொழுதினைக் கலித்தொகை,

**“முன்ஒன்று தமக்கு ஆற்றி முயன்றவர் இறுதிக்கண்**

**பின் ஒன்று பெயர்த்து ஆற்றும் பீடுடையாளர் போல்**

**பன்மலர் சினைஉக சுரும்பு இமிர்ந்து வண்டுஆர்ப்ப**

**இன்அமர் இளவேனில் இறுத்தந்த பொழுதினான்”[226]**

***(கலித்தொகை, பாடல் எண் 34,அடிகள் 4-7)***

*என்றவாறு சித்தரிக்கிறது.*

### *1.1.7.1.4.* புதுமை நுகரும் காலம்

*இளவேனிற் பருவத்தில் கவிதையை நுகரும் மனநிலையில் சான்றோர்கள் இருந்ததைக் கலித்தொகை விளக்குகின்றது. தலைவன் மீண்டு வருவதாக உரைத்த காலம் மதுரை மாநகரில் வாழும் அறிவினை உடையச் சான்றோர் நாவிற்பிறந்த கவிதைகளின் புதுமையை நுகரும் இளவேனிற் காலம் ஆகும்.*

**“நிலன் நாவில் திரிதரூஉம் நீள்மாடக் கூடலூர்**

**புலன் நாவில் பிறந்த சொல் புதிது உண்ணும் பொழுது அன்றோ”[227]**

***(கலித்தொகை, பாடல் எண் 35, அடிகள் 17-18)***

*என்னும் பாடல் அடிகள் மூலம் அறியப் பெறுகின்றது.*

*புலவர் நாவில் பிறந்த சொல் புதிது என்ற அடி மூலம் புதிய இலக்கியங்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் வரவேற்கப்பட்டன. கூடல்நகரத்தில் உள்ள மக்கள் புலவரது பாடல்களைக் கேட்டு மகிழும் காலத்தில் திரும்பி வருவதாகத் தலைவன் சொல்லிச் சென்றான். இதிலிருந்து சங்கத்தில் புலவர்கள் பாடல்பாடும் நிகழ்ச்சி அமைந்திருந்தது. தலைவன் பொருள்தேடச் சென்று மீண்டு வரும் காலமாகப் பொதுவாகக் கருதப்படும் வேனிற்காலத்தின் இறுதியில் இக்கூட்டம் நடைபெற்றுள்ளது.*

*இளவேனிற் காலத்தில் விரிந்து நின்ற அரும்புகளின் கொம்புகள் தோறும் தாவி விரும்பும் தாதைப் பொருந்தி உண்டு வண்டுகளும் கருந்தும்பிகளும் ஆரவாரித்தன என்பதை,*

***"விரிந்து ஆனாச் சினைதொறுஉம் வேண்டும் தாது அமர்ந்து ஆடி***
***பிரிந்து ஆர்க்கும் வண்டொடு புலம்பு தீர்ந்து எவ்வாயும்***
***இருந்தும்பி இறைகொள எதிரிய வேனிலான்"[228]***

***(கலித்தொகை, பாடல் எண் 30, அடிகள் 2-4)***

*என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன.*

## *1.1.7.2. இளவேனிற்கால நிகழ்வுகள்*

*பெரும்பொழுதின் எக்காலமும் மருதத்திற்கு வரையறுக்காமல் சிறுபொழுதுகளை மட்டுமே குறித்தனர். மருதத்திற்குத் தொல்காப்பியர் எந்தப் பொழுதையும் கூறவில்லை. உரையாசிரியர்கள் அறுவகைப் பொழுதும் மருதத்திற்குக் கொள்ளப்படும் என்கின்றனர். பெரும்பான்மை இளவேனில் முதுவேனில், கார்காலம் என்ற மூன்று பெரும்பொழுதுகளுடன் மருதத்திற்குப் பொருந்துமெனக் கொண்டுள்ளனர். இளவேனிற் காலத்தில் மக்களும் உயிரினங்களும் மேற்கொள்ளும் செயல்கள் இளவேனிற்கால நிகழ்வுகளாகக் கொள்ளப்படுகின்றன.*

### *1.1.7.2.1.உழவுத்தொழில்*

*நிலம் அழகுற காட்சி தருவதற்குக் காரணமான இளவேனிற் காலத்தில் வயல்களில் நெற்பயிரின் விளைச்சலுக்குப் பின் உழவர்கள் உழவினை மேற்கொள்வர் என்பதை,*

***"நெடுநெல் அடைச்சிய கழனி ஏர் புகுத்து***
***குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர***
***அரிகால் போழ்ந்த தெரி பகட்டு உழவர்" [229]***

***(அகநானூறு, பாடல் எண் 41, அடிகள் 4-6)***

*என்னும் பாடல் அடிகள் உறுதி செய்கின்றன.*

## *1.1.7.2.2. குயில் குரலெழுப்பும் இளவேனில்*

*மரம், செடி, கொடிகள் தளிர்விட்டு அரும்புகள் மலர்ந்து நிலத்திற்குப் பொலிவான தோற்றத்தைக் கொண்டு வருவது இளவேனில் காலமாகும். பெரும்பொழுதுகளுள் காம நுகர்ச்சிக்குச் செறிந்த சூழலையுடைத்தது இளவேனிற் பருவமாகும்.*

இளவேனிற் காலத்தில் நொச்சி, மா முதலிய மரக்கிளையிலிருந்து ஊரெல்லாம் கேட்கும் வண்ணம் பெடையோடு கூவுவது இயல்பு. குயிலோசை செவிப்புலனுக்கு மட்டும் இன்பம் செய்யும் ஏனையப் புலன்கள் தலைவன் வந்தாலன்றி இன்பம் துய்ப்பதில்லை என்றுத் தலைவி குயிலோசை கேட்டு துயருறுவதை,

**"இருங்கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவிப்**
**பெரும்பெயல் பொழிந்த வழிநாள் கடுப்ப**
**யாற்று அறல் நுணங்கிய நாட்பத வேனில்**
**இணர்துதை மாஅத்த புணர் குயில் விளித்தொறும்"** [230]

**(நற்றிணை, பாடல் எண் 157, அடிகள் 1-5)**

என்று நவில்கின்றது. வெண்மேகங்கள் தவழும் இளவேனில் இன்பத்தை நுகரும் குயில்கள் பாடும் குரலினைக் கேட்போர்க்குத் துன்பம் தருவதை,

**"புகை புரை அம் மஞ்சு ஊர**
**நுகர் குயில் அகவும் குரல் கேட்போர்க்கே"** [231]

என்றும் **(அகநானூறு, பாடல் எண் 97,அடிகள் 22-23)**

**"குயில் குரல் கற்ற வேனிலும் துயில் துறந்து"** [232]

**(அகநானூறு, பாடல் எண் 237, அடி 5)**

என்றும் அகப்பாடல் விளக்குவதைக் காணமுடிகின்றது.

### 1.1.7.2.3. சேவலும் பெடையும்

இளவேனிற் பருவத்தில் சிவந்தக் கண்ணையுடையக் கரியக் குயிலின் சேவலும் பெடையும் எதிரெதிரிருந்து குரலெழுப்பி இன்பம் துய்ப்பதை,

**"செங்கண் இருங் குயில் எதிர் குரல் பயிற்றும்**
**இன்ப வேனிலும் வந்தன்று நம்வயின்**
**பிரியலம் என்று தெளிந்தோர் தேஎத்து"** [233]

என்றும் **(நற்றிணை, பாடல் எண் 224, அடிகள் 5-7)**

**"மனை மா நொச்சி மீமிசை மாச்சினை**
**வினை மாண் இருங் குயில் பயிற்றலும் பயிற்றும்"** [234]

**(நற்றிணை, பாடல் எண் 246, அடிகள் 3-4)**

என்றும் நற்றிணைப் பாடல்கள் பகர்கின்றன.

### *1.1.7.2.4. குயில் அகவும் காலம்*

*குயிற்பெடையானது தன் இனியக் குரலெடுத்து அகவுவதற்கு இதமானது இளவேனிற் காலமாகும். காதலர் உடனுறைந்து இன்பத்தைத் துய்ப்பது இளவேனிற் காலத்தில் வழக்கமாதலின் குயிலின் குரல் அதனை மிகுவிப்பதை,*

***"குயிற்பெடை இன் குரல் அகவ***
***அயிர்க் கேழ் துண் அறல் நுடங்கும் பொழுதே"*** [235]

*என்றும்,* ***(ஐங்குறுநூறு, பாடல் எண் 341, அடிகள் 2-3)***

***"குரவ நீள் சினையுறையும்***
***பருவமாக் குயிற் கௌவையின் பெரிதே"*** [236]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 369, அடிகள் 4-5)***

*என்றும் புனையப்படுகின்றன. காமநுகர்ச்சிக்குப் பெரிதும் தகுதியுடைய பருவ இயல்புகளுள் ஏனைய பருவங்களினும் இளவேனிற்கேயுடைத்தது என்பர். அருவிகள் ஆடற்கினியதாகி வீழ்ந்து தண்டமிழ்த் தென்றல் வந்துலாவி வேனில் திங்கள் நன்கு ஒளி பரப்பி, இவற்றினும் மேலாக காதலர் தம் உயிரை உண்ணுதல் போலக் குயில் கூவியமைவதும் இதற்குக் காரணமாகும். இக்காலத்தே குயில்கள், தளிர்தின்று, மலர்க்கோதிக் களிப்புற்று ஊரெங்கும் கேட்கும்படி கூவும்என்பதை,*

***"குயில் குரல் கற்றவேனில்"*** [237]

***(அகநானூறு, பாடல் எண் 237, அடி 5)***

***"வெயிலொளி அறியாத விரிமலர்த் தண்காவிற்***
***குயில் ஆலும் பொழுது எனக் கூறுநர் உளராயின்"*** [238]

***(கலித்தொகை, பாடல் எண் 30, அடிகள் 7-8)***

*எனவும் குறிப்பிடுகின்றன. மயிலும் இனிதாக ஆடிக்களிக்கும் இளவேனிற் பருவம் என்பதை,*

***"தொகுபு உடன் ஆடுவ போலு மயில் கையில்"*** [239]

***(கலித்தொகை, பாடல் எண் 33, அடி 18)***

*என்று கூறுகின்றது. யானை இனங்களும் இன்பம் கொள்ளும் பருவம் என்பதை,*

***"ஆர முளிசினை மராஅத்துப் பொளி பிளந்து ஊட்ட"*** [240]

***(அகநானூறு, பாடல் எண் 335, அடி 7)***

*என்னும் பாடல் அடி உணர்த்துகின்றது.*

### 1.1.7.3. இளவேனிற்கால மரங்கள்

மரங்கள் தளிர்விட்டு மலர்களை மலரச் செய்யும் பருவம் இளவேனிலாகும். பலதரப்பட்ட மரங்கள் வேனிற்காலத்தே புதுத் தளிரீன்று மலர்ப்பொலிவுடன் காட்சியளிப்பது குறித்து, இலக்கியங்களில் சூழலோடு அழகுறப் புனையப்பட்டுள்ளது.

நுணா மரம் கோடையில் பூத்து மணம் பரப்பும் மரமாகும். அதன் மலர்கள் நறுமணத்தைப் பரப்பி நிற்கும் இளவேனிற் பருவத்தில் திரும்புவதாகச் சொல்லிப் பிரிந்தத் தலைவன் வராமையைக் குறித்து,

**"காதலர் எயிறு ஏய்க்கும் தண் அருவி நறுமுல்லைப்**
**போது ஆரக்கொள்ளும் கமழ்குரற்கு என்னும்**
**தூது வந்தன்றே தோழி"** [241]

என்றும் ***(கலித்தொகை, பாடல் எண் 32, அடிகள் 16-18)***

**"அவரோ வாரார் தான் வந்தன்றே**
**சுரும்பு களித்து ஆலும் இருஞ்சினைக்**
**கருங்கால் நுணவம் கமழும் பொழுதே"** [242]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 342, அடிகள் 1-3)***

என்றும் நவில்கின்றன.

இளவேனிற் பருவத்தே மாமரம் தன் முற்றிய இலைகளை உதிர்த்து இளந்தளிர்களைத் தோற்றுதல் இயல்பு. மாமரம் தம் கிளைகள் மறையும் வண்ணம் தீச்சுடர் போலும் இளந்தளிர்களை விட்டுத் திகழும் இளவேனில் வந்துள்ளது.

**"அவரே வாரார் தான் வந்தன்றே**
**பொரி கால் மாஞ் சினை புதைய**
**எரிகால் இளந்தளிர் ஈனும் பொழுதே"** [243]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 349, அடிகள் 1-3)***

பொன்னின் உரைத்துகள் விளங்கும் உரைக்கல்லைப் போல மாமரத்தின் அரும்பிலுள்ள நறிய மகரந்தங்களைக் குயிலானது கொழுதும் இளவேனிற் காலம்,

***“மின்னின் தூவி இருங்குயில் பொன்னின்***

***உரைத்திகழ் கட்டளை கடுப்ப மாச்சினை***

***நறுந்தாது கொழுதும் பொழுதும்”[244]***

***(குறுந்தொகை, பாடல் எண் 192, அடிகள் 3-5)***

*என்றுக் கூறுகின்றது.*

### *1.1.7.3.1.கடப்ப மரம்*

*வலமாகச் சுழித்த பூக்களைக் கொண்ட வெண்கடப்ப மரம் தம் மலர்களைத் தோற்றுவித்து நறுமணம் கமழக்கூடியக் காலம் இளவேனிற் காலமாகும்.*

***“எழில் தகை இளமுலை பொலியப்***

***பொரிப் பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே”[245]***

***என்றும் (ஐங்குறுநூறு, பாடல் எண் 347, அடிகள் 2-3)***

***“சிலம்பு அணி கொண்ட வலம்சுரி மராஅத்து***

***வேனில் அம்சினை கமழும்” [246]***

*என்றும்* ***(குறுந்தொகை, பாடல் எண் 22, அடிகள் 3-4)***

*குராமரம் பொரி போன்றப் பூக்களை உடையப் புன்கு மரத்தோடு சோலையை அழகு கொள்ளச் செய்யும். அம்மரங்களின் ஒவ்வொரு கொம்பும் இனிதாகத் தோன்றும் இளவேனிற் பருவம் என்பதை,*

***“பவ்வீ படரிய பசுநணைக் குரவம்***

***பொரிப்பூம் புன்கொடு பொழில் அணிக்கொளாஅச்***

***சினை இனிது ஆகிய காலையும்” [247]***

***(குறுந்தொகை, பாடல் எண் 341, அடிகள் 1-3)***

*என்றவாறு பேசுகின்றது. தலைவன் வினைமுடித்து வருவதாகக் கூறிச் சென்றப் பருவம் வேம்பு பூப்பூக்கும் இளவேனிற் காலம் என்பதை,*

***“கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்***

***என்னை இன்றியும் கழிவது கொல்லோ”[248]***

***(குறுந்தொகை, பாடல் எண் 24, அடிகள் 1-2)***

*என்றுக் குறுந்தொகை உணர்த்துகின்றது.*

### 1.1.7.3.2. கோங்க மரம்

வேனிற் காலத்தில் மலரும் கோங்க மரத்தின் பொன் போன்றப் பூக்களைக் கொத்தாக மலர்ந்த வேங்கைப் பூக்களோடு தலைவன் வேறுபட அணிந்த செய்தியை ஐங்குறுநூறு உரைக்கின்றது.

**“பொரி அரைக் கோங்கின் பொன் மருள் பசு வீ**
**விரி இணர் வேங்கையொடு வேறுபட மிலைச்சி**
**விரவு மலர் அணிந்த வேனில் கான் யாற்றுத்**
**தேரொடு குறுக வந்தோன்”** [249]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 367, அடிகள் 1-4)***

கோங்கினது அரும்புகள் உடைந்து மணம் பரப்பும் இளவேனிற் பருவம் வந்து நின்றதை ஐங்குறுநூறு உரைக்கின்றது.

**“திணிநிலைக் கோங்கம் பயந்த**
**அணிமிகு கொழுமுகை உடையும் பொழுதே”** [250]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 343, அடிகள் 2-3)***

புதுமலர்களைக் கொண்ட கோங்க மரங்கள் பொன்துளிகளைச் சிதறினாற் போலத் தாதுக்களைச் சிதறியதை,

**“புதுமலர்க் கோங்கம் பொன் எனத் தாது ஊழ்ப்ப”**[251]

என்றும் ***(கலித்தொகை, பாடல் எண் 33, அடிகள் 1-2)***

**“கோங்கங் குவிமுகை அவிழ ஈங்கை**
**நற்றளிர் நயவர நுடங்கும்**
**முற்றா வேனில் முன்னி வந்தோரே”** [252]

***(நற்றிணை, பாடல் எண் 86, அடிகள் 7-9)***

என்றும் கூறப்பெறுகின்றன.

தலைவன் பிரிந்து சென்ற நாட்டில் மரம் தளிர்த்து, அலர் வேய்ந்து, இளவேனிற் பருவ வரவு வருதலுண்டோ எனத் தோழி வினவுங்கால்,

**“மணிபோல அரும்பூழ்த்து மரமெல்லாம் அலர்வேய்**
**காதலர்ப் புணர்ந்தவர் கவவுக்கை நெகிழாது**
**தாதவிழ் வேனிலோ வந்தன்று”** [253]

***(கலித்தொகை, பாடல் எண் 33,அடிகள் 6-8)***

என்று மரம் தளிர்த்து மலர்ந்த இளவேனிற்பருவம் குறித்துப் பேசப்பெறுகின்றது.

இளவேனிற் பருவம் ஏதிலான் படைபோல் வந்து, பிரிந்தார்க்குக் கொடுமை புரியும் வண்ணம் தளிரும் தாதும் சிறக்க வரும் என்பதைக் குறிக்க,

**"தாதொடுந் தளிரொடுந் தண்ணறல் தகைபெற**

**பேதையோன் வினைவாங்க பீடிலா அரசனாட்**

**ஏதிலான் படைபோல இறுத்தந்தது இளவேனில்"** [254]

***(கலித்தொகை, பாடல் எண் 27, அடிகள் 6-8)***

என்று இடம்பெறுகின்றது. இளவேனிற் காலத்தே செழித்த மரங்கள், செடிகள் குறித்துக் கூறும் போது மள்ளர்கள் போல் மரங்களும் அவற்றைச் சுற்றித் தழுவி நிற்கும் மகளிர் போல் கொடிகளும் காட்சியளித்ததை,.

***"மள்ளர்அன்ன மரவந்தழீஇ***

***மகளிரன்ன வாடுகொடி நுடங்கும்***

***அரும்பதங் கொண்ட பெரும்பத வேனில்"*** [255]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 400, அடிகள் )***

என்று ஐங்குறுநூறு குறிக்கின்றது.

## 1.1.7.4. இளவேனிற்கால மலர்கள்

முதிர்ந்த இலைகள் உதிர்ந்து தளிர்விட்டு புதுமலர்கள் மலர்ந்து மணம் வீசும் பருவம் இளவேனிற் பருவம். இளவேனிற்காலத்தில் பன்னிற, பல்மணமிக்க மலர்கள் பூத்துக் கவினுற்றுக் காட்சியளித்த இயல்பு. இவ்விளவேனில் செறிந்த மலர்த்தாது கொட்டிக் கிடக்க வல்ல பன்மலர் பூத்த பருவம் என்பதை,

**"வளையவர் வண்டல் போல் வார்மணல் வடுக்கொள**

**இளையவரைம்பால் போல் எக்கர் போழ்ந்தறல் வார**

**மாவீன்ற தளிர்மிசை மாயவள் திதலை போல்**

**ஆயிதழ்ப் பன்மலர் ஐயகொங் குறைத்தர**

**மேதக இளவேனில் இறுத்தந்த பொழுதின் கண்"** [256]

***(கலித்தொகை, பாடல் எண் 29, அடிகள் 5-9)***

என்பது கலித்தொகை உரைக்கின்றது.

மலர்க்கூட்டங்கள் தாதினைச் சொரிந்து, மணம் பரப்பிய இப்பருவம் குறித்து,

**"எரியுரு உறழ இலவ மலர**

**பொரியுரு உறழப் புன்கு பூவுதிர**

***புதுமலர்க் கோங்கம் பொன்னெனத் தாதூழ்ப்ப***

***தமியார்ப் புறத்தெறிந்து எள்ளி முனிய வந்து***

***ஆர்ப்பது போலும் பொழுது" [257]***

***(கலித்தொகை, பாடல் எண் 33, அடிகள் 10-14)***

*இளவேனிற் பருவத்தில் சிறப்பாக மலரும் தன்மையுடையது பாதிரி மலர் என்பதை,*

***"வேனில் பாதிரி கூனி மாமலர்***

***நறைவாய் வாடல் நாறும் நாள் சுரம்" [258]***

***(அகநானூறு, பாடல் எண் 257, அடிகள் 1-2)***

*என்றுக் கூறி அதன் துய்மைப் போன்று மயிரெழுந்து படர்ந்த அழகொழுகும் மாமையுடையவள் தலைவி என்பதனை,*

***"வேனிற் பாதிரிக் கூன் மலரன்ன***

***மயிர் ஏர்பு ஒழுகிய அம்கலும் மாமை" [259]***

***(குறுந்தொகை, பாடல் எண் 147, அடிகள் 1-2)***

*என்னும் பாடல் குறிக்கின்றது. அழகியக் கிளைகளையுடையப் பாதிரி மலர்ந்து விட்டதாகச் சிவந்த கண்களைக் கொண்ட குயில் உலகுக்கு அறிவிக்கும் வகையில் இளவேனில் வந்தது என்பதனை,*

***"அவரோ வாரார் தான் வந்தன்றே***

***அம்சினைப் பாதிரி அலர்ந்தென***

***செங்கண் இருங்குயில் அறையும் பொழுதே" [260]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 346, அடிகள் 2-3)***

*என்னும் ஐங்குறுநூற்று அடிகள் உணர்த்துகின்றது. தம் தொழில் திறமிக்க ஓவியரின் ஒளி பொருந்திய அரக்கினில் தோய்த்த எழுதுகோல் போன்றுள்ள தலையில் நுண்ணிய பஞ்சினையுடைய பாதிரி மலர்ந்தன என்று பாதிரிப் பூவின் வடிவத்தினையும் அது மலரும் பருவம் இளவேனில் என்பதையும் நற்றிணை உரைக்கின்றது.*

***"துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி***

***வால் இதழ்அலரி வண்டுபட ஏந்தி" [261]***

***(நற்றிணை, பாடல் எண் 118, அடிகள் 8-9)***

*உயர்ந்த கரைகளைக் கொண்ட காட்டாற்றின் ஒளிமிக்க மணற் பரப்பைக் கொண்ட துறையிடத்தே வேனிற் காலத்தில் மலரும் தன்மையுடையதுப் பாதிரிப் பூ என்பதை,*

***"உயர்கரைக் கான் யாற்று அவிர் மணல் அகன்துறை***
***வேனிற் பாதிரி விரிமலர்க் குவைஇத்***
***தொடலை தைஇய மடவரல் மகளே"*** [262]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 361, அடிகள் 1-3)***

*என்னும் பாடல் கூறுகின்றது. பாதிரி மலரோடு காட்டு மல்லிகையும் விரவி மலரக்கூடிய வேனிற் பருவம் என்பதை அகப்பாடல் அடிகள் வழி விளக்கப்பட்டுள்ளது.*

***"கானப் பாதிரிக் கருந் தகட்டு ஒள்வீ***
***வேனில் அதிரலொடு விரைஇ காண் வர"*** [263]

***(அகநானூறு, பாடல் எண் 261, அடிகள் 1-2)***

***"புகர்இல் குவளைப் போதொடு தெரி இதழ்***
***வேனில் அதிரல் வேய்ந்த நின்"*** [264]

***(அகநானூறு, பாடல் எண் 393, அடிகள் 24-25)***

*என்னும் அடிகள் வேனிற்கால மலர்கள் விரவி மலர்ந்த அழகு குறிப்பிடப்படுகின்றன. தலைவி தன் ஐந்துப் பகுப்புக்களைக் கொண்டக் கூந்தலில் காட்சி உண்டாக, வேனிற் காலத்து மலரும் பாதிரியின் மலரை அழகுறச் செருகிக் கொண்டதை அகநானூற்றுப் பாடல் எடுத்தியம்புகின்றது.*

***"கானப் பாதிரிக் கருந்தகட்டு ஒள்வீ***
***வேனில் அதிரலொடு விரைஇ காண்வர***
***சில்ஐங் கூந்தல் அழுத்தி மெல்இணர்த்***
***தேம்பாய் மராஅம் அடைச்சி"*** [265]

***(அகநானூறு, பாடல் எண் 261, அடிகள் 1-4)***

*தலைவியைக் களவில் துய்த்த இடமும் அவள் நலமும் தோன்றுமாறு இளவேனிற் காலத்தில் மலரும் பாதிரி மலர் நினைக்கப்படுவதைக் குறுந்தொகைப் பாடல் மூலம்,*

***"வேனிற் பாதிரிக் கூன் மலர்அன்ன"*** [266]

***(குறுந்தொகை, பாடல் எண் 147, அடி1)***

*என்றுக் கூறுகின்றது.*

### 1.1.7.4.1. முருக்க மலர்

முருக்க மலர்கள் செறிந்த வேனிற் காலம்,

**"செம்முகை முருக்கினைப் போது அவிழ்அலரி கொழுதி"** [267]

**(அகநானூறு, பாடல் எண் 229, அடி )**

என்று கூறப்படுகின்றது. நெருப்பைப் போன்ற நிறம் கொண்ட முருக்க மரத்தினது மலர்கள் மலரும் இளவேனிற் பருவத்தின் தன்மையை,

**"பொங்கு அழல் முருக்கின் ஒண்குரல் மாந்தி**
**சிதர் சிதர்ந்து உகுத்த செவ்வி வேனில்"** [268]

**(அகநானூறு, பாடல் எண் 277, அடிகள்17-18)**

என்று அகநானூறு பகர்கின்றது.

### 1.1.7.4.2. வேம்பு

வேம்பு இளவேனிற் பருவத்தில் மலரும் இயல்பினது. அதுவே தலைவன் வருவதாக உரைத்தக் காலம் என்பதை,

**"வேம்பின் ஒண்பூ உறைப்ப**
**தேம்படு கிளவி அவர் தெளிக்கும் பொழுதே"**[269]

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 350, அடிகள் 2-3)**

**"கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்"**[270]

**(குறுந்தொகை, பாடல் எண் 24, அடி 1)**

என்னும் பாடலடி உணர்த்துகின்றன.

### 1.1.7.4.3. பல்வகை மலர்கள்

இளவேனிற் காலத்தே, பன்னிற பல்மண மிக்க மலர்கள் மலர்ந்து மணம் வீசி கவின் பெற்று காட்சியளிக்கும். இவ்விளவேனில் காலத்தில் மலர்கள் செறிந்து, மலர்த்தாது அவிழும், பன்மலர் மணம்கமழும் பருவம் என்பதைக் கலித்தொகை புலப்படுத்துகின்றது.

**"மாவீன்ற தளிர்மிசை மாயவள் திதிலை போல்**
**ஆயிதழப் பன்மலர் ஐகொங்குறைத்தர**
**மேதக இளவேனில் இறுத்தந்த பொழுதின்கண்"** [271]

**(கலித்தொகை, பாடல் எண் 23, அடிகள் 7-9)**

*குரவம் மலர்தலும், மரவம் மலர்தலும் கூட இளவேனிற் பருவ கால வருகையை அறிவித்ததை ஐங்குறுநூறு வழி அறியப்பெறுகின்றது.*

***"குரவம் மலர மரவம் பூப்பச்***
***சுரன் அணி கொண்ட கானம் காணுஉ***
***குரவநீள் சினையுறையும் பருவம்"*** [272]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 357, அடிகள் 1-2)***

*கோங்கும்வேங்கையும் பூக்கும் வேனிற் பருவத்தை*

***"பொரியரைக் கோங்கின் பொன்மருள் பசுவீ"*** [273]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 369, அடி 4)***

*என்றும் மாமரம் வேனிற் காலத்தில் பூப்பது குறித்து,*

***"தீய்ந்த மராஅது ஓங்கல் வெஞ்சினை***
***வேனில் ஓர்இணர் தேனொடு ஊதி"*** [274]

***(குறுந்தொகை, பாடல் எண் 211, அடிகள் 4-5)***

*என்றும் குறிக்கப் பெறுகின்றது.*

*மகளிரது நகத்தினை ஒத்த குவிந்த அரும்புகளைக் கொண்ட முருக்க மரத்தின் மலர்களும் மெல்லிய வெள்ளியக் கம்பியை அறுக்கும்போது அதன்மேல் உதிர்கின்ற துகள்களைப் போல கோங்கின் மலர்களும், குரவ மரத்தின் ஓங்கி உயர்ந்த கிளைகளில் மலர்களினின்றும் பூந்துகள்கள் உதிர்ந்துவிழும் அழகிய இளவேனிற்காலம் வந்தததை,*

***"குவிமுகை முருக்கின் கூர்நுனை வைஎயிற்று***
***நகைமுக மகளிர் ஊட்டு உகிர் கடுக்கும்***
***முதிராப் பல்இதழ் உதிரப் பாய்ந்து உடன்***
***மலர் உண் வேட்கையில் சிதர் சிதர்ந்தது உருப்பு***
***பொன்செய் கன்னம் பொலிய வெள்ளி***
***நுண்கோல் அறைகுறைந்து உதிர்வன் போல***
***அரவன வண்டினம் ஊதுதொறும் குரவத்து***
***ஓங்கு சினை நறுவீ கோங்குஅலர் உறைப்ப***
***துவைத்து எழுதும்பி, தவிர்இசை விளரி***
***ஆன்ஏ முற்ற காமர் வேனில்"*** [275]

***(அகநானூறு, பாடல் எண் 317, அடிகள் 8-14)***

*என்னும் அகப்பாடல் வழி உணர்த்தப்படுகின்றது.*

*இயற்கையே இறைவன். இயற்கையை படைத்தது இறைவன் எனப் பல காட்சிகளிலும் இறைவனைக் காணும் தமிழர்கள் இயற்கையின் ஒவ்வொரு விளைவையும் இறை அம்சமாகக் கண்டதை இலக்கியங்கள் அறிவுறுத்துகின்றன. காலமாற்றம் இயற்கை வடிவம், அந்த இயற்கை விளைவான மலர்களை இறை வடிவமாகக் கலித்தொகை உருவகிப்பதைக் காணமுடிகிறது.*

**"ஒருகுழை ஒருவன் போல், இணர் சேர்ந்த மராஅமும்**
**பருதிஅம் செல்வன் போல், நனை ஊழ்த்த செருந்தியும்**
**மீன் ஏற்றுக் கொடியேன் போல், மிநிறு ஆர்க்கும் காஞ்சியும்**
**ஏனோன் போல் நிறம் கிளர்ப்பு கஞலிய ஞாழலும்"** [276]

**"ஆண் ஏற்றுக் கொளடியேன் போல் எதிரிய இலவமும் ஆங்கு**
**தீது தீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோல**
**போது அவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற**
**நோதக வந்தன்றால் இளவேனில் மேதக"** [277]

***(கலித்தொகை, பாடல் எண் 26, அடிகள் 1-8)***

*என்னும் பாடல் மனிதன் காணும் ஒவ்வொரு இயற்கை காட்சியிலும் இறைவனைக் கண்ட விதம் கூறப்படுகிறது.*

### *1.1.7.5.பிரிந்தவர் கூடும் இளவேனில்*

*காதலர் அகல விரும்பாத, பிரிய இயலாத, பருவம் இளவேனில் பருவம். தலைவன் தாம் மீண்டும் வரும் பருவமாக இளவேனிற் பருவத்தைக் குறித்துச் சென்றதாகத் தலைவி கூறுவதை அகநானூற்றுப் பாடல் விளக்குகிறது.*

**"இகழுநர் இகழா இளநாள் அமையம்**
**செய்தோர் மன்ற குறி என நீ நின்**
**பைதல் உண்கண் பனி வார்பு உறைப்ப"** [278]

***(அகநானூறு, பாடல் எண் 25, அடிகள் 12-14)***

*துறவோரும் இகழாத இளவேனில் காலம் மாண்புடையப் பெண்மை நலத்தினைத் துய்க்கும் துணையைக் கொண்டோர்க்கு உரியது என்பதை,*

**"காமர் வேனில்மன் இது**

**மாண்நலம் நுகரும் துணை உடையோர்க்கு"** [279]

***(அகநானூறு, பாடல் எண் 37, அடிகள் 17-18)***

என்று அகநானூறு விளக்குகிறது.

### 1.1.7.5.1.காமர் வேனில்

துணையுடையோர்க்கு இன்பமான பொழுது இளவேனிற் காலமாகும். அத்தகைய இன்பம் தரும் இளவேனிற் பொழுது விருப்பத்திற்குரியப் பொழுதாகையால் அதனைக் காமர் பொழுது என ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

**"புதுப் பூ அதிரல் தாஅய்க்**

**கதுப்பு அறல் அணியும் காமர் பொழுதே"** [280]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 345, அடிகள் 2-3)***

என்னும் அடிகள் காமம் துய்க்க ஏதுவானது இளவேனில் என்றுக் கூறுகின்றது.

### 1.1.7.5.2.செவ்வி வேனில்

காம நுகர்ச்சிக்குப் பெரிதும் தகுதியுடையச் செவ்வி ஏனைப் பருவங்களை விடவும் இளவேனிற்கேயுடையதாயிற்று. காம நுகர்ச்சியில் கலந்தக் காதலர் மெய் மறந்து இருத்தல் இயல்பு என்பதை,

**"செழுமண மறக்கும் செவ்வி வேனில்**

**தானே வந்தன்று ஆயினன் ஆனாது"**[281]

***(அகநானூறு, பாடல் எண் 355, அடிகள் 8-9)***

என்னும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

### 1.1.7.5.3. துயர் தீர்க்கும் தூதர்

காம நோயைத் தீர்க்கும் மருந்தாக இளவேனில் கருதப்படுகின்றது. காதலர் இனிய உயிரை வாழ்விக்கும் மருந்தினைப் போல் துயர் தீர்க்கும் இனிய மொழிகளைக் கூறிக் கொண்டே முயங்கியக் காதலருடையத் தூதராய் இளவேனில் வந்ததை,

**"தூது வந்தன்றே, தோழி**

**துயர் அறு கிளவியோடு அயர்ந்தீகம் விருந்தே"** [282]

***(கலித்தொகை, பாடல் எண் 32, அடிகள் 18-19)***

*எனக் கலித்தொகை உரைக்கின்றது.*

### *1.1.7.5.4.இளவேனிற் படுக்கை*

*விண்ணுலகத்தைத் தீண்டும்படி உருவாக்கப்பட்டுள்ள எழுநிலை மாடங்களின் மேல் மாடத்தில் இளவேனிற் பருவத்தில் உறங்குவதற்காகப் படுக்கைகள் அமைக்கப் பட்டிருந்ததை நெடுநல்வாடை உணர்த்துகின்றது.*

**"வான்உற நிவந்த மேல்நிலை மருங்கின்**

**வேனில் பள்ளித் தென்வளி தரூஉம்"** [283]

***(நெடுநல்வாடை, அடிகள் 60-61)***

*சிலப்பதிகாரமும் எழுநிலை மாடம் அமைத்து இளவேனிற்கால தென்றல் வீசும் இனிமையை கண்ணகி, கோவலன் துய்த்த விதத்தை மனையறம் படுத்த காதை விளக்குகிறது.*

### *1.1.7.6.பிரிந்தோரை வருத்தும் காலம்*

*பிரிந்த மகளிரை நகுதற்குக் காலம் வரவில்லையே என்றுக் காதலர் இளவேனில் வந்தது கண்டு தம் வருத்தம் மிகும்படியாக மலர்கள் தம்மைக் கண்டு சிரிப்பனபோல் இருந்ததை,*

**"நொந்து நகுவன போல் நந்தின கொம்பு நைந்து உள்ளி**

**உகுவது போலும் என் நெஞ்சு எள்ளி உள்ளி"** [284]

***(கலித்தொகை, பாடல் எண் 33, அடிகள் 16-17)***

*என்றுக் கலித்தொகை உரைக்கின்றது.*

***"மானிட உணர்ச்சிச் சாயல்களைக் கொண்டே இயற்கை***

**புனையப் படுகிறது"** [285]

***(மு.வரதராசனார், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்கம் 537)***

*என்னும் கூற்றின்படி, மக்களின் வாழ்வியல் கூறுகள் இயற்கையோடு இழையோடி இருந்துள்ளது.*

### *1.1.7.7.தலைவி ஆற்றியிருத்தல்*

*பருவக் காலச் சூழல் அகவாழ்வைப் பாதிக்கும் காரணியாக இருப்பதை,*

> **"இயற்கைப் புறச் சூழல் அகவாழ்வை ஆட்டுவிக்கும் என்பது**
> **மனித இயற்கையில் ஓர் அடிப்படை உண்மை"** [286]
>
> ***(கதிர் மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், பக்கம் 9)***

*என்றக் கூற்று உணர்த்துகிறது. நாட்டில் நிலவும் பருவகாலங்களே அதன் வளத்துக்குக் காரணமாகின்றது. அதுவே சங்கப் பாடல்களின் பின்னணியாக இருந்து உரிப்பொருள் நேயமுற அமைதற்கு அடித்தளமாய் நின்றது.*

*கார்ப் பருவத்தே வருவதாகக் கூறிச் சென்றத் தலைவன் கூதிர்போன்றப் பருவங்களைக் கடந்து இளவேனிற் பருவம் வந்தும் வராததால் ஆற்றியிருக்கும் தலைவியின் நிலையை அகப்பாடல், கண்முன் நிலை நிறுத்துகின்றது.*

> **"செங்கண் இருங்குயில் நயவரக் கூஉம்**
> **இன் இளவேனிலும் வரார்**
> **இன்னே வருதும் எனத் தெளிந்தோரே"** [287]
>
> ***(அகநானூறு, பாடல் எண் 229, அடிகள்19-21)***

*ஆறு பருவங்களில் கார்காலமும் இளவேனிலும் இன்பந்தரும் பருவங்கள் என்பர். இதற்குக் காரணம் இவ்விரு பருவங்களையும் குறித்தே தலைவன் வினை மேற்செல்வது வழக்கமாயிருந்தது.*

> ***"கார் கூதிர் முன்பினி பின்பனி இளவேனில், முதுவேனில் என்ற ஆறு பருவங்கள் இருப்பினும், காரும் இளவேனிலுமே கணவன்மார் வீடு திரும்பும் காலங்களாக எண்ணப்பட்டு மனைவியர் வரவு பார்த்திருக்கும் பருவங்களாகும்"*** [288]
>
> ***(வ.சு.ப.மாணிக்கம், தமிழ்க்காதல், பக்கம் 103)***

*என்றக் கூற்று உறுதிப்படுத்துகின்றது. குழவி வேனில், இன்னிள வேனில் என்றெல்லாம் பாராட்டப்பெறும் இக்காலம் வடமொழியில் வசந்த காலம் எனப் பெறுகின்றது.*

*பெறலரும் பொழுது என்று வர்ணிக்கப்படும் இவ்வேனிற் பிரிவைப் பொறுக்க இயலாத தலைவன் பிரிந்தாரோ என இரங்கும் தலைவி குறித்து,*

**"திண்நிலைக்கோங்கம் பயந்த**

**அணிமிகு கொழுமுகை உடையும் பொழுதே"** [289]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 343, அடிகள் 2-3)***

*என்றப் பாடல்வழி இளவேனிற் பருவச் செய்தி உரைக்கப்படுகின்றது.*

*இவ்விளவேனிற் காலத்தில் பெருமாட்டியை உடன் கொண்டுத் தலைவன் போகவில்லை என்றால் தலைவி தலைவன் செல்வதைத் தடுத்துத் தன்னுடன் இருத்திக் கொள்வாள் என்பதைத் தோழி கூறவரும் பொழுது கனியையுடைய ஆலமரம் பறவையின் செலவைத் தடுத்துத் தன்பால் இருத்திக் கொள்ளும் வேனில் எனக் குறிப்பதைப்*

**"புதுக்கலத்தன்ன இனிய ஆலம்**

**போகில்தனைத் தடுக்கும் வேனில் அருஞ்சுரம்"** [290]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 303, அடிகள் 1-2)***

*என்ற படல் விளக்குகின்றது. இத்தகைய இளவேனில் பொழுதில் கடத்தற்கு அரிய பாலைநிலம் கடந்துச் சென்றத் தலைவனை நினைந்து தலைவி வருந்தியதை,*

**"வேனில் திங்கள் வெஞ்சுரம் இறந்து**

**செலவு அயர்ந்தனையால் நீயே நன்றும்"** [291]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 309, அடிகள் 1-2)***

*என்றுப் பேசப்பெறுகின்றது.*

*இளவேனிற்காலம் பொழில்விளையாடி, பூக்கொய்து, அருவியாடி காதலர் இன்பம் நுகர்தற்கு ஏற்ற காலமாதலின், அதனைப் பிரியாதிருத்தற்குரிய வேனில் எனக் குறித்து அதற்கு வேனில் திங்கள் என்றே பெயரிடப்பட்டுள்ளது.*

### *1.1.7.8. மன்மதன் விழா*

*இளவேனிற் பருவம் மன்மதனுக்குரியப் பருவமாகும். இக்காலத்தே மன்மதனுக்கு விழாவெடுக்கும் பழக்கம் இருந்து வந்துள்ளது. இவ்விழாவின்போது மகளிரும் மைந்தரும் இளமரச் சோலையிலும் நீர்த்துறையிலும் நீராடி மகிழ்வர். பூக்கள் நிறைந்த பெருந்துறையில் பகற்பொழுதிலே அனைவரும்கூடி இளவேனிற் செவ்வியை நுகர்ந்து மகிழ்வர்.*

தலைவன் வருவதாக உரைத்த காலம் நீர்நிறைந்த ஆற்றிடை அவர் தம்மை விரும்பி மகிழும் பரத்தையரைக்கூடிக் காமனுக்கு நிகழ்த்துகின்ற விழாவில் விளையாடும் இளவேனிற்காலம் என்பதனைத் தலைவி குறிப்பிடுகின்றாள்.

**“மல்கிய துருத்தியுள் மகிழ்த்துணைப் புணர்ந்து அவர்**

**வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ**

**வலன்ஆகவினை ஏன்று வணங்கி நாம் விடுத்தக்கால்”**[292]

***(கலித்தொகை, பாடல் எண் 35,அடிகள் 13-15)***

மன்மதனுக்கு இளவேனில் காலத்தில் விழாஎடுத்ததை இதன்மூலம் கலித்தொகை பாடல் புலப்படுத்துகின்றது. இளவேனில் விழா, காமதேவன் விழா என்றும் அக்காலத்தில் வழங்கப்பட்டு வந்து, வில்லன்விழா என்றும் வழங்கப்பட்டது.

**“இளவேனிற் காலத்து இன்ப உணர்ச்சியைத் தூண்டும்**

**தெய்வமாகிய காமனை வழிபட்டுக் கொண்டாடி மகிழ்தல்**

**காமவேள் விழாவாகும்.”**[293]

***(க. வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ்மக்கள், பக்கங்கள் 54-55)***

எனும் கூற்றின்படி, இளவேனில் காலம் காமனுக்கு உரிய காலமாக இருந்துள்ளது.

கணவனைப் பிரிந்த மகளிர் மன்மத விழாவின்போது வருந்தினர். இளவேனிற் பொழுதில் வருவதாகக் கூறிச் சென்றத் தலைவன் வராமைக் கண்டு காமனுக்கு எடுத்த விழாவில் பரத்தையருடன் விளையாடியதை நினைந்து நம்மை மறந்திருக்கக் கூடும் என்பதாகக் தலைவி உரைக்கிறாள்.

**“உறல் யாம் ஒளிவாட உயர்ந்தவன் விழவினுள்**

**விறல் இழையவரோடு விளையாடுவான் மன்னோ**

**பெறல் அரும்பொழுதோ பிறங்கு இணர்த்துருத்தி சூழ்ந்து”**[294]

***(கலித்தொகை, பாடல் எண் 30, அடிகள் 13-15)***

காமன் விழாவில் தலைவன் பரத்தையரோடு விளையாடி மகிழ்தலும் உண்டு என்பதை இப்பாடல் புலப்படுத்துகிறது.

இளவேனிற்காலம் மன்மதனுக்கு விழா நிகழ்த்தும் காலமாகும். காமவேளுக்குப் இளவேனிற் காலத்தில் விழா எடுக்க சிறந்தப் பொழுதாவது செவ்வியோடு வந்ததையும் பிரிந்தார்க்கு நடுக்கம் செய்யும் காலமாய் அது இருந்ததையும்

***"குழவி வேனில் விழவு எதிர்கொள்ளும்***
***சீரார் செவ்வியும் வந்தன்றே"*** [295]

***(கலித்தொகை, பாடல் எண் 36, அடிகள் 9-10)***

*என்றும், இளவேனிற் காலத்தில் நடைபெறும் மன்மத விழாவில் காமனை வேண்டிச் சில வழிபாடுகளும் செய்யப்பட்டன. தலைவன் ஒருவன் தலைவி ஊரில் காமவேள் விழா நடப்பதை அறிந்தான். விழா நடக்கும்போது தான் அங்கு இல்லையென்றால் தலைவி வருந்துவாள் எனக் கருதி, திண்தேரேறி தலைவன் வந்ததாகத் தோழி கூறுவதைக் கலித்தொகை அடிகள் குறிப்பிடுகின்றன.*

***"காமவேள் விழாவாயின் கலங்குவாள் பெரிது என***
***ஏமுறு கடுந்திண் தேர் கடவி***
***நாம் அமர்காதலர் துணைதந்தார் விரைந்தே"*** [296]

***(கலித்தொகை, பாடல் எண் 27, அடிகள் 24-26)***

*காதற்கடவுளான காமனைப் போற்றும் இவ்விழா இளவேனிற் காலத்தில் கொண்டாடப்பட்டது.*

### *1.1.7.9. பிற பொழுது மயங்கிய வேனில்*

*இளவேனில் பொழுதில் சிறு பொழுதுகளாகிய மாலையும் கங்குலும் இவையேயன்றி வாடைக்காலமும் மயங்கி வேறுபட்ட சூழ்நிலைகளைச் சித்தரிப்பதை,*

***"வீழ்கதிர் விடுத்த பூவிருந்துண்ணும் இருந்தும்பி***
***யாழ்கொண்ட இமிழ்இசை இயல் மாலை அலைந்தரூஉம்"*** [297]

*எனவும்,* ***(கலித்தொகை, பாடல் எண் 29, அடிகள் 16-17)***

***"நெடுநிலா திறந்துண்ண நிரையிதழ் வாய்விட்ட***
***கடிமலர் கமழ் நாற்றங்கங்குல் வந்தலைத் தரூஉம்"*** [298]

*எனவும்* ***(கலித்தொகை, பாடல் எண் 29, அடிகள் 20-21)***

***"வயங்குஇழை தண்ணென வந்தவிவ்வசை வாடை"*** [299]

***(கலித்தொகை, பாடல் எண் 31, அடி 12)***

***"நோய்சேர்ந்த வைகலான் வாடை வந்தலைத்தரூஉம் போழ்து"*** [300]

***(கலித்தொகை, பாடல் எண் 29, அடி 13)***

*எனவும் தண்மை பொருந்திய இளவேனில் குறிக்கப்பெறுகின்றன.*

### *1.1.8.* முதுவேனில்

முதுவேனில் பாலைத்திணைக்குரியப் பருவமாகப் பேசப்பெறுகின்றது. வெப்பம் மிகுந்த அரிய வெயிற் பருவத்தைக் குறிப்பதே முதுவேனிற் பருவமாகும். இப்பருவத்திற்குரியத் திங்கள் ஆனி, ஆடி ஆகும். இக்கொடியக் கோடைப்பருவம் கோடைக்காற்று வீசும் பருவம் என்றும் பயிரினங்களும் பல்வேறு உயிரினங்களும் வாடுகின்ற வெப்பம் செறிந்தப் பருவம் என்றும் பகுத்துக் கூறுகின்றது.

#### *1.1.8.1.*முதுவேனில் தன்மை

முதுவேனில் கோடைப்பருவம் நிகழும் மாதங்களாகும். கோடைப் பருவத்தில் காலையும் மாலையும் கூட நண்பகல் போல வெம்மை மிக்குத் தோன்றும். அதன் காரணமாகச் சோலைகள் வாடியும் குளம் குட்டைகள் வறண்டும் உலகம் அழகிழந்துப் பயனும் இழந்துப் போனதால் வெஞ்சுரம் என்றுக் குறிப்பிடப்படுகிறது.

வேனில் திங்களில் கொடியச் சுரநெறியைக் கடந்து சென்றுத் தலைவன் பொருள் ஈட்டுதலை விரும்புவதைக் கூறும் ஐங்குறுநூற்றுப் பாடல் வேனில் பருவத்தில் கொடியச் சுரத்தை வெஞ்சுரம் என்றுக் குறிப்பிடுகிறது.

**"வேனில் திங்கள் வெஞ்சுரம் இறந்து**
**செலவு அயர்ந்தனையால் நீயே"**[301]

**(ஐங்குறுநூறு, பாடல் எண் 309, அடிகள் 1-2)**

ஏனையப் பருவம் ஒன்றும் எய்தாமல் வேனிற்பருவம் ஒன்றனையே அறிந்த வெப்பம் வீசுகின்ற நீண்ட சுரம் பசுமையற்று வெம்மை மிகுந்து இருப்பதை

**"நின்ற வேனில் உலர்ந்த காந்தள்**
**அழல் அவிர் நீள் இடை நிழலிடம் பெறாஅது"** [302]

**(நற்றிணை, பாடல் எண் 29, அடிகள் 1-2)**

என்றுக் குறிப்பிடுகின்றது.

பாலைக்கலியில் முதுவேனிற் பருவத்தின் தன்மை விரிவாகப் பேசப்பெறுகின்றது. சூரியனின் வெம்மையால் நிலம் கொதித்துப் பரந்து கிடக்கின்றக் குன்றுகளைக் கடந்து வெம்மை கொண்ட கோடைக்காலம் என்பதைக் கூறும் கலிப்பாடல் பாலை வெஞ்சுரத்தின் இயல்பை விளக்குகிறது.

**"கொதித்துஉராய்க்குன்று இவர்ந்து, கொடிக்கொண்ட கோடையால்**

**ஒதுக்கு அரிய நெறி எண்ணார், ஒண்பொருட்கு அகன்றவர்"** [303]

***(கலித்தொகை, பாடல் எண் 150, அடிகள் 15-16)***

*மேகங்கள் மழைப்பொழியாது கோடையால் அலைக்கழிக்கப்பட்டு, நீரில்லாதக் கொடுமையின் தன்மையை,*

**"மணிதிகழ் விறல் மலை வெம்ப மண்பக**

**துணிகயம் துகள்பட்ட தூங்குஅழல் வெஞ்சுரம்"** [304]

***(கலித்தொகை, பாடல் எண் 20, அடிகள் 5-6)***

*என்று நவில்கின்றது.*

*முதுவேனிற் காலத்தில் ஞாயிற்றுக் கதிர்களின் வெப்பம் மிகுந்திருக்கும். பரந்த இருளை விழுங்கிப் பகற்பொழுதைத் தோற்றுவித்த ஞாயிற்றின் காய் சினத்தால் முறுகிய முதுவேனிற் பருவம் என்று வேனலின் தன்மையைப் பெரும்பாணாற்றுப்படை,*

**"பகல்கான்று எழுதரு பல்கதிர்ப் பருதி**

**காய்சினம் திருகிய கடுந்திறல் வேனில்"** [305]

***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 2-3)***

*என்று விளக்குகின்றது. மலைக்குகைகள் வெடிக்கும் படியான வேனிற் காலத்தில் தலைவனுடன் தலைவி சென்றதைக் கூறும் பொருட்டு வேனிற் பருவ இயல்புக் கூறப்படுகின்றது.*

**"முகைதலை திறந்த வேனிற்**

**பகைதலை மணந்த பல் அதார்ச் செலவே"** [306]

***(அகநானூறு, பாடல் எண் 105, அடிகள் 16-17)***

*என்று நவில்கின்றது.*

*கோடையின் வெப்பத்தைப் புலவர்கள் நெருப்புடன் சார்த்திக் கூறுகின்றனர். கோடைப் பருவமும் அதன் வெம்மையும் இணைந்து நீரும் நிழலும் அற்றுப் பசுமையற்றுப் போனது. முதுவேனிற்பருவம் நீடித்து கோடையும் சுழன்று அடித்ததால், அழல்கதி சுரமும் மலைப் பகுதிகளும் வருந்தும் உயிரினங்களும் வாடும் செடியினங்களும் அப்புலம் விட்டே ஓடும் குடிகளும் குறித்து,*

**"இடிஉமிழ் வானம் நீங்கி, யாங்கணும்**

**குடிப்பதிப் பெயர்ந்த கட்டுடை முதுபாழ்"** [307]

***(அகநானூறு, பாடல் எண் 77, அடிகள் 5-6)***

என்று அகநானூறும்,

**“பல்வளம் பகர்பு ஊட்டும் பயன்நிலம் பைது அற**

**செல்கதிர் ஞாயிறு செயிர்சினம் சொரிதலின்**

**தணிவுஇல் வெங்கோடைக்குத்தண்நயத்து அணிகொள்ளும்”** [308]

***(கலித்தொகை, பாடல் எண் 20, அடிகள் 1-3)***

என்று கலித்தொகையும் உரைக்கின்றன.

மலையானது வெம்பி அழல் வீசும். வேனில் கல்லும் புலம்பும். அழல் நிறைந்த இவ்வேனிலை அகநானூறு,

**“வேனில் வெற்பின் கானங்காய”** [309]

***(அகநானூறு, பாடல் எண் 187, அடி 16)***

**“பைதுஅற வெம்பிய கல்பொரு பரப்பின்**

**வேனில் அத்தத்து ஆங்கண் வான்உலந்து”** [310]

***(அகநானூறு, பாடல் எண் 185, அடிகள் 8-9)***

எடுத்துக்காட்டுகின்றன.

கோடைப்பருவம் நீண்டு தனக்குரியக் காலத்தினும் மிக்கமை தோன்றி, கொடிய கதிர்களை ஞாயிற்று மண்டிலம் வீசுகின்றக் கானகத்தை வாட்டும் அழல்கதி வேனில் என்று,

**“நெடுங்கழை முளிய வேனில் நீடி**

**கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்”** [311]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 322, அடிகள் 1-2)***

என்று ஐங்குறுநூறும்,

**“பசும்பழ்ப் பலவின் கானம் வெம்பி**

**விசும்புதண் அழிய வேனில் நீடிள”**[312]

***(அகநானூறு, பாடல் எண் 189, அடிகள் 1-2)***

என்று அகநானூறும் பேசுகின்றன.

### *1.1.8.2.கோடைக்காற்று*

பாலை நிலமெங்கும் மேலைக்காற்று எனப்படும் கோடைக்காற்று வீசும். அலைத்துக் கொண்டிருக்கும் கோடையில் வீசும் காற்றினால் வளர்ந்த மூங்கில் சுருங்கும் என்பதை,

**"ஆடு தழை இருவெதிர் கோடைக்கு ஒல்கும்"**[313]

**(அகநானூறு, பாடல் எண் 27, அடி 2)**

என்பதால் உணரப்படுகின்றது. வெம்மையுடையக் கோடைக்காற்றானது செந்நிற மூங்கிலின் அசையும் தண்டினைத் தாக்கி ஞெமை மரத்தின் இலைகளை உதிர்த்ததை அகநானூறு,

**"அமைஆடு அம்கழை தீண்டி, கல்லென**

**ெ ஞெமை இலை உதிர்த்த எரிவாய்க்கோடை"** [314]

**(அகநானூறு, பாடல் எண் 353, அடிகள் 7-8)**

என்னும் அடிகளால் குறிப்பிடுகின்றன.

வேனில் பருவத்தில், வைகறைப் பொழுதில் கோடைக்காற்று வீசும் என்பதை, **"வழிநாள் ஊசலின், கோடை தூக்கு தொறும்"** [315]

**(நற்றிணை, பாடல் எண் 162, அடி 10)**

என்று குறிப்பிடுகின்றது.

முதுவேனிற்பருவம் நீடியதால், கோடைக்காற்றினால் காடு வெப்பம் மிகுந்து காணப்படும். இக்கோடைக் காற்றானது காட்டின் கவினை அழிக்கும். கோடைக் காற்று வீசும் வேனில் காலத்தை,

**"வேனில் நீடிய வெங்கடற்று அடைமுதல்"** [316]

என்றும், **(அகநானூறு, பாடல் எண் 389, அடி 17)**

**"காடு கவின்அழிய உரைஇ கோடை"** [317]

என்றும் **(அகநானூறு, பாடல் எண் 173, அடி 12)**

**"உதிர்ந்த கோடை உட்குவரு கடத்திடை"** [318]

**(அகநானூறு, பாடல் எண் 267, அடி 5)**

என்றும் எடுத்துக்காட்டுகின்றன.

### 1.1.8.3. உயிரினங்கள் வாடும் முதுவேனில்

பாலைத்திணையின் இயல்பை ஆழ்ந்து நோக்கினால் இப்பொழுதின் பொருத்தம் இனிது விளங்கும். பாலைக்குப் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் ஒழுக்கம் என்பர். எத்திணையிலும் தலைவன் தலைவியர் கூடுதலும் பிரிதலும் இயற்கை. அது

இயற்கை ஊழின் வயப்பட்டுக் கூடினாலும் சரி, செயற்கையாகக் கூடினாலும் சரி, தலைவன் பிரிந்தான் எனக் கையறவு கொண்டு கழிபடர் மிகுதி யோடு துன்புற்றுத் தலைவனைத் தலைப்பெய்தாலும் சரி, எக்காலத்தும் பிரிவு என்பதுப் பாலை ஒழுக்கமாகத் திகழ்வது இயல்பு. இளவேனில் முதுவேனில் முதலியவற்றைச் சிறப்பாகப் பேசக்காரணம் பிரிவுத்துன்பம் என்பது வெயில் துன்பத்திலும் வறட்டுப் பனித் துன்பத்திலும் பெரிதாகலின், அவ்வெயிற் காலத்து உணங்கியச் செடி, கொடி முதலியனவும் அவற்றால் வாடும் விலங்கினங்களின் நலிவும் நீரின்மையும் அவ்வொழுக்கத்திற்குத் துணைபுரிந்துள்ளது.

கொடிய முதுவேனிற் பருவத்தில் உயிரினங்கள் நீரின்றி, பசுமையின்றி, வருந்தி அழியும் நிலையைச் சங்கப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

### *1.1.8.3.1.களிறுகள்*

முதுவேனிற் காலத்தின் வெம்மை, வருத்தம் தாங்காமல் சோர்ந்தக் களிறுகள் மழை இல்லாமையால் உண்ணுதற்கு நீரின்றி வாடியத் தன்மை,

***"வேனில் உழந்த வறிது உயங்கு ஓய் களிறு***
***வான்நீங்கு வைப்பின் வழங்காதத் தேர்நீர்க்கு அவாஅம்"*** [319]

***(கலித்தொகை, பாடல் எண் 7, அடிகள் 1-2)***

என்னும் கலித்தொகை அடிகளில் விளக்கப்பெறுகின்றது. மழை இன்மையால் உணவு பெறாது ஊன் வற்றியப் பசி வருத்தம் மிகுந்தே யானை திரியும் வேனிற் காலம்.

***"ஊன்இல் யானை உயங்கும் வேனில்"*** [320]

***(அகநானூறு, பாடல் எண் 12, அடிகள் 3-4)***

***"கடுநவை ஆர்அற்று அறுசுணை முற்றி***
***உடங்குநீர் வேட்ட உடம்பு யானை"*** [321]

***(கலித்தொகை, பாடல் எண் 12, அடிகள் 3-4)***

***"இடுமருப்பு யானை இலங்கு தேர்க்கு ஓடும்"*** [322]

***(கலித்தொகை, பாடல் எண் 24, அடி 10)***

என்று அகநானூறும் கலித்தொகையும் எடுத்துக்கூறுகின்றன.

யானைகள் புழுதியில் அளைந்து நீங்கியப் பகுதியில் வேனிற்பருவத்துச் சிறிது பெய்த மழையால் குழிகளில் தேங்கிய நீரினை குரால் என்னும் ஒரு வகைப் பசு, நீர் வேட்கையில் உண்டச் செய்தியைப் புறநானூற்றுப் பாடல் பகர்கின்றது.

**"களிறு நீறுஆடிய விடுநில மருங்கின்**

**வம்பப் பெரும்பெயல் வரைந்து சொரிந்து இறந்தென"** [323]

***(புறநானூறு, பாடல் எண் 325, அடிகள் 1-2)***

வேனிற் வெம்மையால் ஆனேறு துன்புறும் தன்மையை,

**"வேனில் ஆனேறு போலச்"** [324]

***(குறுந்தொகை, பாடல் எண் 74, அடி 4)***

என்றுக் குறிக்கிறது. பறவைகள் அஞ்சும் வேனிலை,

**"வேனில்அரையத்து இலை ஒலிவெரீஇ**

**போகில் புகாஉண்ணாது பிறிது புலம் படரும்"** [325]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 325, அடிகள் 1-2)***

என்றும் கூறுகின்றன.

இத்தகு கடும்வேனில் வெப்பம் படர்ந்த உயிர்க்கு வருத்தம் தருகின்ற வேனிலாக முதுவேனில் இலக்கியங்களில் காணப்படுகிறது.

கொடிய முதுவேனிற்பருவத்தில் கடும் சுரத்தினைக் கடந்துத் தலைவன் பிரிந்தான் என்பதைக் கூறவரும் அகச்செய்திகள் இலக்கியத்தில் பரந்துள்ளன. தலைவி உறும் பிரிவுத் துன்பத்தை மிகுந்துக் காட்டுவது போல், முதுவேனிலின் வருணனைகள் கடுமையுடன் சித்தரித்துக் காட்டப்பட்டுள்ளன.

பொழுதுகளுக்கேற்ப மலரும் மலர், தழைக்கும் மரம், திரியும் பறவை, விலங்கு முதலியவற்றின் ஊடாகப் புலவர் கருத்துக்களை மாறுபடாது மொழிந்து உள்ளனர்.

***"மனித வாழ்க்கையோடு பாடற்பொருளாகக் கொண்டாலும் புலவர்கள் இயற்கையை நிலம் பொழுது ஆகியவற்றுக்கு மாறுபடாமல் தெளிவாக வருணித்துள்ளார்கள்"*** [326]

***(மு. வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்கம் 611)***

என்றக் கூற்றும் பெரும்பொழுதின் தன்மையை நிறுவுகிறது.

### ***1.1.8.3.2.பயிரினம்***

*வேனிற் காலத்துச் சுடுகின்ற கதிரவனின் வெம்மையால் காய்ந்தக் கானகத்தில் வீசியப் பெருங்காற்றுத் தழைத்த மூங்கிலின் கணுக்களைப் பொருந்தித் தாக்கும் என்பதை அகப்பாடல்கள்,*

***"தெறுகதிர் உலைஇய வேனில் வெங்காட்டு***
***உறுவளி ஒலிகழைக்கண் உறுபு தீண்டலின்"***[327]

***(அகநானூறு, பாடல் எண் 153, அடிகள் 8-9)***

*என்றும் வேனிற்காலத்தில் உகாமரத்தின் மெல்லிய கிளைகளில் காய்முற்றி வீழும் என்பதை,*

***"குயிற்கண் அன்ன குரூஉக்காய் முற்றி***
***மணிக்காசு அன்ன மால்நிற இருங்கனி***
***உகாஅய் மென்சினை உதிர்வன கழியும்"*** [328]

***(அகநானூறு, பாடல் எண் 293, அடிகள் 6-8)***

*என்றும் குறிக்கின்றது. வேனிலின் வெம்மையால் பசிய ஓமை மரங்கள் உலர்ந்து விட்டதை,*

***"ஓமைக் குத்திய உயர்கோட்டு ஓருத்தல்***
***வேனிற் குன்றத்து வெவ் அறைக் கவாஅன்"*** [329]

***(குறுந்தொகை, பாடல் எண் 396, அடிகள் 4-5)***

*என்னும் குறுந்தொகை அடிகள் உணர்த்துகின்றன.*

*முதுவேனிற் பருவத்தில் சில மரங்கள், பயிர்கள், மலர்கள், தழைக்கும் தன்மையினை அகநானூறு எடுத்துரைக்கின்றது. நெல் விளையும் பருவம், நெல்லிக்காய்க்கும் பருவம் முதுவேனிற் பருவமாகும்.*

***"சேண்உயர்ந்து ஓங்கிய வான்உயர் நெடுங்கோட்டுக்***
***கோடைட வெவ்வளிக்கு உலமரும்***
***புல்இலை வெதிர நெல்விளை காடே"*** [330]

*என்றும்* ***(அகநானூறு, பாடல் எண் 397, அடிகள் 14-16)***

***"பராரை நெல்லிஅம் புளித்திரள்காய்***
***கானமடமரைக் கணநிரை கவரும்***
***வேனில் அத்தம் என்னாது"*** [331]

***(அகநானூறு, பாடல் எண் 69, அடிகள் 7-9)***

என்றும் கூறுகின்றன. விளாம்பழம் செழித்து வளரும் முதுவேனிற்காலம்,

**"வெள்ளில் வல்சி வேற்று நாட்டு ஆரிடைச்"** [332]

***(நற்றிணை, பாடல் எண் 24, அடி 5)***

என்று இயம்புகின்றது.

### *1.1.8.4.முதுவேனில் மலர்கள்*

உயிரினங்களும் பயிரினங்களும் வாழப் போராடும் முதுவேனிற் பருவத்தில் சிலவகை மலர்களும் மலர்வதுண்டு. இருப்பை மற்றும் முருக்க மலர்கள் வேனிற்காலத்தில் செறிந்து மலர்ந்துள்ளன. இருப்பை மலர்கள் வேனிற் காலத்தில் மலர்வன. வேனிற்காலத்தில் வீசும் கோடைக்காற்று இருப்பைப் பூவினை உதிர்த்தச் செய்தியினை,

**"கானஇருப்பை வேனில் வெண்பூ"** [333]

***(குறுந்தொகை, பாடல் எண் 329, அடி 1)***

என்றுக் காட்டுகிறது. முருக்கம்பூ வேனிற் காலத்திலும் செறிந்து மலர்ந்ததை,

**"வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன"** [334]

***(நற்றிணை, பாடல் எண் 73, அடி 1)***

என்னும் அடிப் புலப்படுத்துகின்றது.

### *1.1.8.5.கோடை மழை*

கோடை வெம்மையில் மழை பொழிவதுண்டு. கோடையில் பெய்யும் மழையானதுக் கடுமையான மழைத்துளிகளைப் பெய்து விளங்கும் என்பதனை,

***"முழங்கு கடல் முகந்த கமஞ்சூல் மாமழை***
***மாதிர நனந்தலை புதையப் பாஅய்***
***ஓங்கு வரை மிளிர ஆட்டி, பாம்பு எறிபு***
***வான்புகு தலைய குன்றம் முற்றி***
***அழிதுளி தலைஇய பொழுதில் புலையன்"*** [335]

***(நற்றிணை, பாடல் எண் 347, அடிகள் 1-5)***

என்று நற்றிணை கோடை மழையினைக் குறித்து நிற்கிறது.

*1.1.9.* **வேனிற் பாசறை**

*சங்ககால சமூகத்தில் போர்க்களத்திற்குச் சென்றுப் போர்செய்யும் கடமை ஒவ்வொரு ஆண்மகனுக்கும் இருந்தது.*

> ***"போர்செய்யும் போது மறனிழுக்கா மானமுடைய முறையில் செய்தல் வேண்டும் என்னும் உணர்ச்சி அக்காலத்தில் உயர்ந்திருந்தது. பெண்டிரையும் நோயுடையோரையும் ஆண்மகவைப் பெறாத ஆடவரையும் வீரர் துன்புறுத்தலாகாது என்னும் கோட்பாடு தமிழரிடையே காணப்பட்டது."*** [336]
>
> ***(சோ. ந. கந்தசாமி, புறத்திணை வாழ்வியல், பக்கம் 38)***

*மறவுணர்வு மிக்க இச்சமூகத்தின் மனவெழுச்சிக்கான வீரமும் புகழுணர்வுமே போர்கள் எல்லாவற்றிற்கும் அடிப்படைக் காரணங்களாய் அமைந்தன. சங்ககால மக்கள் ஓர் ஆண்டின் பெரும்பொழுதுகளுள் வேனிற்பொழுதையும் கூதிர்ப் பொழுதையும் போர்செய்வதற்கு ஏற்ற பொழுதுகளாகக் கருதினர்.*

> ***"வேனிற்காலத்தில் பெரும்போர் துவங்கி நடைபெறுகையில் வேனில் கழிந்து கார்காலந் தோன்றியதாக இருபடை மக்களும் அக்காலங் கழியுந் துணையும் போர் விட்டிருந்தது. மறித்துங்கூதிர்காலத் தொடக்கத்திலே போர் துவங்குவராகலின், அக்காலத்திலே அரசர் தம் மனைக்கு மீண்டு வந்து தங்கிப் பின்னரும் கூதிர் காலத்திலே போரை நச்சிப்போவது வழக்கமாகும்"*** [337]
>
> ***(மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை, பக்கம் 61)***

*வேனில், கூதிர் தவிர எஞ்சியப் பருவங்களில் போர் மேற்கொள்ளாமல் இருந்துள்ளனர். கூதிர்காலத்தும் வேனிற்காலத்தும் அரசர்கள் போர்மேற்கொண்டு பாசறைக்கண் இருப்பது பண்டைக்கால மரபாக இருந்துள்ளது.*

> ***"கூதிர் வேனில் என்றிரு பாசறைக்***
> ***காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்"*** [338]
>
> ***(தொல்காப்பியம், புறத்திணையியல், நூற்பா 75)***

*அரசர்கள் தங்கியிருந்த பாசறை கூதிர்ப்பாசறை, வேனிற்பாசறை என இருவகையான பாசறைகள் காணப்பட்டுள்ளன.*

## முடிவுகள்

தமிழர் அகம் புறம் என்று வகுக்கப்பட்ட வாழ்வில் வாழ்ந்துள்ளனர். நிலம் என்பது மக்களின் வாழ்க்கை நெறியுடன் நெருங்கியத் தொடர்புடையது. திணைச் சூழல்கள் மக்களின் அன்றாட வாழ்வியல் ஒழுக்கத்தோடு உறவு கொண்டிருந்தது.

பொழுது என்னும் காலமானது அனைத்திற்கும் முற்பட்டது மட்டுமல்ல மேலானதும் கூட. பொழுதானது, அந்தந்த காலத்திற்கேற்ற அகஉணர்வுகளை மக்களுக்கு உருவாக்கித் தந்துள்ளது.

நிலமும் பொழுதும் முதற்பொருளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

நிலத்தை ஐவகையாகப் பிரித்தத் தமிழர்கள் காலத்தையும் மிக நுட்பமாகப் பிரித்தார்கள். பெரும்பொழுது என்றப் பகுப்பில் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் முதலியன அடங்குவனவாகும்.

பெரும்பொழுதானது வினை நிகழ்விடமாகிய நிலத்துடன் சேர்ந்து, மக்கள் வாழ்வைச் சித்தரிக்கின்றன. தலைவன் தலைவியரிடையே தோன்றும் காமக்குறிப்பை நிலப்பின்னணியில் அகத்திணைக் கூறுகளில் விளக்கும்போது, பொழுதுகளின் வர்ணனை இன்றேல் அது முழுமை பெறுவதில்லை. இவை சங்க இலக்கியங்களுக்கு புத்துயிரும் புதுவனப்பும் தருவதோடு உரிப்பொருளுக்கு உறுதுணையாகவும் அமைகின்றன. அகத்தே அமைந்த உரிப்பொருளான ஒழுக்க உணர்வின் தாக்கம் பொழுதால் விளைவனவாகும்.

கார்காலம் இடையறாது மழையைப் பொழியும் காலமாகும். தலைவன் தலைவியர் இல்லறக் கடமையாற்றும் காலமாகும். தலைவன் வினைமுடிந்து மீளும் பருவமாகும்.

பிரிந்தவர்கள் கூடும் காலமாகப் பேசப்பெறும் கார்காலத்தில் முதன்முதல் பொழியும் மழையின் வெள்ளத்தில் நீராடி மகிழ்வதுச் சிறப்பான ஒன்றாகக் கருதப்பட்டுள்ளது.

கார்ப்பருவம் உழவுத்தொழிலுக்கு ஏற்ற பொழுதாகத் திகழ்ந்து பகைதணியும் காலமாக பேசப்பெறுகின்றது. கார்காலம் தொடங்கியும் தலைவன் வராமைக் கண்டு பெருமுதுபெண்டிர் விரிச்சி கேட்ட செய்தியும் பெறப்படுகின்றது.

முல்லைத்திணைக்குரியக் காலமாகக் கருதப்படும் கார்காலம் தலைவனைப் பிரிந்து தலைவி ஆற்றியிருக்கும் காலமாக விளங்கி திணைஒழுக்கத்தை நிலை நிறுத்துகின்றது.

வாடை கமழும் கூதிர்காலம் காதலர் கூடி இருக்கும் காலமாகும். இரவும் பகலும் எதுவென அறியாது மயங்கும் காலமான கூதிர்காலம் தலைவன் தலைவியற்கு உரியக் களவு ஒழுக்கம் கொள்ளத்தக்கக் காலமாகும்.

கூதிர்பருவத்தில் பெரும்பாலும் பழந்தமிழ் நாட்டில் போர்கள் தொடங்கப் பெறுவதில்லை. முன்னரே தொடங்கப்பட்டப் போர்கள் அப்பருவங்களில் நீடிப்பதுண்டு.

பனிக்காலம் தனித்திருப்போர்க்குப் பிரிவுத்துன்பம் பெருகும் காலமாக இருந்துள்ளது. முன்பனிப் பருவத்தில் மகளிர் அருவியில் ஆடி மகிழ்ந்துள்ளனர். பின்பனிக்காலம் பயிரினம் தழைக்கும் பருவமாகத் திகழ்ந்துள்ளது.

இளவேனிற் காலம் புதுத்தளிர் விடும் காலமாகவும் பிரிந்தோரை வருத்தும் காலமாகவும் காமனுக்கு விழா எடுக்கும் காலமாகவும் காணப்படுகிறது.

மகப்பேறு உண்டாகும் காலமாகக் கருதப்படும் இளவேனில் காமனுக்கு விழா எடுக்கும் காலமாகவும் உள்ளது.

தெய்வம் மற்றும் மக்கள் களிக்கும் விழாக் காலமாகக் கொள்ளப்படும் இளவேனில் மறைந்தால் என்று வருமென ஏங்கித் தவிக்கும் காலமாக அமைந்துள்ளது. இளவேனிற் பருவமானச் சித்திரைத் திங்களில் தோன்றும் நிலவும் தனித் தன்மையுடையதாகும்.

உயிரினங்கள் வாடும் பருவமாக முதுவேனில் அமைகிறது. கோடைக் காற்றினால் வெப்பம் மிகுந்து காட்டின் அழகு குறைந்து காணப்படும் பருவமாக உள்ளது. விலங்கினங்கள் ஊன் வற்றிப் பசியோடு உலவிவரும் நிலை காட்டப் படுகின்றன. உயிரினங்களும் பயிரினங்களும் வாழப் போராடும் முதுவேனில் பருவத்தில் கோடைகால மலர்கள் மலருமாறு கோடை மழை பொழிந்துள்ளது.

பெரும்பொழுதானது மக்களின் வாழ்வுக்கு எல்லைக்கற்களாக அமைந்திருந்ததை இயற்கைச் சூழல்களோடும் அகஉணர்வுப் போராட்டங்கனோடும் மக்களின் மன உணர்வுகளோடும் புலவர்கள் சிறப்பாகப் பொருத்திக் காட்டியுள்ளனர்.

# பொருளடக்கம்


*2.0. முன்னுரை*

*2.1. சிறுபொழுதுகள் விளக்கம்*

*2.2. பிறமொழிகளில் சிறுபொழுதுகள்*

*2.3. வைகறை - விளக்கம்*

*2.3.1. வைகறைப் பொழுதின் தன்மைகள்*

*2.3.1.1. கன்னி விடியல்*

*2.3.1.2. வைகறைப் பெயல்*

*2.3.1.3. வைகறைத் தேறாறம்*

*2.3.1.4. காதலரைப் பிரியச்செய்யும் வைகறை*

*2.3.1.5. புன்னம் புலரி*

*2.3.2. வைகறை நிகழ்வுகள்*

*2.3.2.1. பாணர் செயல்*

*2.3.2.2. துயில் எழுப்பல்*

*2.3.2.3. தயிர்க்கடைதல்*

*2.3.2.4. கூடல்*

*2.3.2.5. நீராடல்*

*2.3.2.6. தலைவன் செயல்*

*2.3.2.7. தலைவியின் நாணம்*

*2.3.2.8. வெற்றிச் சிறப்பு*

*2.3.3. வைகறை மலர்*

*2.3.3.1. நெய்தல் மலர்*

*2.4.* விடியல்

*2.4.1.* விடியல் - பொருள்

*2.4.2.* விடியலின் பல பெயர்கள்

*2.4.2.1.* காலை

*2.4.2.2.* சிறுகாலை

*2.4.2.3.* ஞாயிற்றாகம்

*2.4.2.4.* அமையம்

*2.4.3.* விடியலின் தன்மை

*2.4.3.1.* நாள்

*2.4.3.2.* நாள் ஆ

*2.4.3.3.* நாள்வலை

*2.4.3.5.* நாட்சோறு

*2.4.3.6.* நாளிரை

*2.4.3.7.* நாட்பலி

*2.4.3.8.* நாள்மலர்

*2.4.4.* விடியல் நிகழ்வுகள்

*2.4.4.1.* பறவைதுயில் எழுதல்

*2.4.4.2.* எருமை மேய்தல்

*2.4.4.3.* பாணன் அரசனைப் புகழ்தல்

*2.4.4.4.* பொது அறிவித்தல்

*2.4.5.* தொழில்கள்

*2.4.5.1.*மீன்பிடித்தல்

*2.4.6.* தலைவி ஆற்றியிருத்தல்

*2.5.* நண்பகல்

*2.5.1.* நண்பகலுக்குரியப் பெயர்கள்

*2.5.1.1.* எல்லை

*2.5.1.2.* நாள்

*2.5.1.3.* பகல்

*2.5.1.4.* பானாள்

*2.5.2.* நண்பகல் பொழுதின் தன்மை

*2.5.2.1.* வெம்மை

*2.5.3.* நண்பகல் நிகழ்வுகள்

*2.5.3.1.* தினைப்புனம் காத்தல்

*2.5.3.2.* கடலாடுதல்

*2.5.3.3.* புனலாடுதல்

*2.5.3.4.* காவல்

*2.5.3.5.* ஆற்றியிருத்தல்

*2.5.3.6.* தலைவன் செயல்

*2.5.3.7.* தலைவன் செலவயர்தல்

*2.5.3.8.* நாள்அங்காடி

*2.5.3.9.* எல் விருந்து

*2.5.3.10.* வேட்டையாடுதல்

*2.5.4.* பகற்பண்

*2.5.5.* பகற்குறி

*2.5.5.1.* பகற்குறி வேண்டல்

*2.5.5.2.* பகற்குறி இன்பம்

*2.5.5.3.* பகற்குறி இடையீடு

*2.6.* எற்பாடு

*2.6.1.* எற்பாட்டின் தோற்றம்

*2.6.2.* எற்பாட்டின் தன்மை

*2.6.2.1.* பகலொழிந்த காலம்

*2.6.2.2.* தயர்தரும் எற்பாடு

*2.6.3.* எற்பாட்டின் நிகழ்வுகள்

*2.6.3.1.* வெம்மை தணிதல்

*2.6.3.2.* பொலிவிழத்தல்

*2.6.3.3.* நெய்தல் கூம்புதல்

*2.7. மாலை*

*2.7.1. மாலையின் தோற்றம்*

*2.7.1.1. செக்கர் வானம்*

*2.7.1.2. செவ்வந்தி*

*2.7.2. மாலைபொழுதின் தன்மை*

*2.7.2.1. கல் என்னும் ஓசை*

*2.7.2.2. நள் என்னும் ஓசை*

*2.7.2.3. அஃறிணை உயிர்களின் இன்பம்*

*2.7.2.4. மாலையில் நெய்தல் நிலம்*

*2.7.2.5. களவுக்கால மாலை*

*2.7.2.6. கூதிர்கால மாலை*

*2.7.2.7. பிரிவுத்துன்பம்*

*2.7.2.8. மயக்கம் தரும் மாலைக்காலம்*

*2.7.2.9. தலைவியின் இன்பம்மிகும் மாலை*

*2.7.2.9.1. புல்லென் மாலை*

*2.7.2.9.2. புன்கண் மாலை*

*2.7.2.9.3. சிறுபுன் மாலை*

*2.7.2.9.4. பெரும்புன் மாலை*

*2.7.2.9.5. கையறு மாலை*

*2.7.2.9.6. பையுள் மாலை*

*2.7.2.9.7. மையல் மாலை*

*2.7.2.9.8. புலம்புகொள் மாலை*

*2.7.3. மாலைக்கால நிகழ்வு*

*2.7.3.1. முரசு முழங்குதல்*

*2.7.3.2. ஆநிரை மன்றம் புகுதல்*

*2.7.3.3. இரை தேடல்*

*2.7.3.4. பலியுணவு*

*2.7.3.5.* கடல்விளையாட்டு

*2.7.3.6.* இரங்கும் பொழுது

*2.7.3.7.* மகிழ்தற்குரியப் பொழுது

*2.7.3.8.* மாலை வேள்வி

*2.7.3.9.* முதுமொழி நினைவு கூறல்

*2.7.3.10.* மாலைநேரக் காவல்

*2.7.3.11.* கள்ளுண்டு மகிழ்தல்

*2.7.3.12.* தலைவி ஆற்றியிருத்தல்

*2.7.3.13.* தலைவன் வருகை

*2.7.3.14.* மாலையில் விளக்கேற்றுதல்

*2.7.4.* மலர்கள் மலரும் மாலை

*2.7.4.1.* முல்லை

*2.7.4.2.* காந்தள்

*2.7.4.3.* செங்காந்தள், முசுண்டை

*2.7.4.4.* புதல்

*2.7.4.5.* பிடவம்

*2.7.4.6.* புன்னை, தாழை

*2.7.5.* மாலை நேரப் பண்

*2.7.5.1.* துன்பம் தரும் மாலை பண்

*2.8.* யாமம்

*2.8.1.* யாமப்பொழுதின் பெயர்கள்

*2.8.2.* யாமப்பொழுதின் தன்மை

*2.8.2.1.* நள் என்னும் யாமம்

*2.8.2.2.*கான்மடி இரவு

*2.8.2.3.* பானாட்கங்குல்

*2.8.2.4.* உயிரினம் உறங்கும் யாமம்

*2.8.2.5.* இரவுப் பெயல்

*2.8.2.6.* பையுள் யாமம்

*2.8.2.7.* பிரிவுத்துன்பம்

*2.8.2.8.* குருகு திணையாதல்

*2.8.2.9.* தனிமைத்துயர்

*2.8.2.10.* காமத்துன்பம்

*2.8.3.* யாமப்பொழுதின் நிகழ்வுகள்

*2.8.3.1.* ஆநிரை கவரும் யாமம்

*2.8.3.2.* மீன் பிடித்தல்

*2.8.3.3.* தினைப்புனம் காத்தல்

*2.8.3.4.* இரவுக்காதல்

*2.8.3.5.* அல்குல் இரை

*2.8.3.6.* இரவில் விளக்கேற்றுதல்

*2.8.3.7.* உரிப்பொருள் நிகழும் காலம்

*2.8.4.* யாமப்பொழுதின் மலர்கள்

*2.8.4.1.* அதிரல்

*2.8.4.2.* முல்லை

*2.8.4.3.* முசுண்டை

*2.8.4.4.* கரியமலர்

*2.8.5.* யாமப்பொழுதின் இசை

*2.8.6.* இரவுக்குறி

*2.8.6.1.* இரவுக்குறி வகை

*2.8.6.2.* இரவுக்குறி வேண்டல்

*2.8.6.3.* இரவுக்குறி இன்பம்

*2.8.6.4.* இரவுக்குறி இடையீடு

*2.8.6.5.* இரவுக்குறி மறுத்தல்

முடிவுகள்

## 2.0. முன்னுரை

நிலத்தை அடிப்படையாக வைத்துப் பொழுதுகள் பகுக்கப்படுகின்றன. பொழுதுகள் சூரியன், சந்திரன் ஆகியவற்றின் சுழற்சியினால் ஏற்படுகின்றன. நிலத்தினை அடிப்படையாகக் கொண்டே மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள் அமைகின்றன. மக்களின் செயல்பாடுகள் அனைத்தும் பொழுதுகளின் அடிப்படையிலேயே கட்டமைக்கப்படுகின்றன. ஆகவே நிலமும் பொழுதும் மக்களின் அனைத்துச் செயல்களுக்கும் காரணிகளாக அமைகின்றன என்பது உண்மை. சங்ககாலப் புலவர்கள் நிலத்தினையும் பொழுதினையும் முதற்பொருளாக்கித் தன் கற்பனை காவியத்திற்கு உரமேற்றுகின்றனர்.

சங்ககாலத்தில் புலவர்கள் இயற்கையின் மாறுபாட்டிற்கேற்ப குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என நிலத்தின்கண் ஐவகையாகப் பாகுபடுத்தி மக்களின் பண்பாட்டு பழக்க வழக்கங்களைக் கூறியதோடு மட்டுமில்லாமல் பொழுதுகளையும் சிறுபொழுது, பெரும்பொழுது என வகைப்படுத்தியுள்ளனர். ஒரு வருடத்தினை கார்காலம், கூதிர்காலம், முன்பனிக்காலம், பின்பனிக்காலம், இளவேனில் காலம், முதுவேனில் காலம் என ஆறு கூறுகளாகப் பிரித்து, பெரும்பொழுதுகளாகவும், ஒரு நாளின் கால எல்லையை மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு எனப் பாகுபடுத்திச் சிறுபொழுதுகளாகவும் பகுக்கப்பட்டுள்ளன.

சிறுபொழுதுகளின் தன்மைகளும் நிகழ்வுகளும் விளக்கப்பெற்று பொழுதுகளின் புனைவுகள் சங்ககாலத் தமிழர்களின் வாழ்வியல் சூழலோடு பொருந்திவரும் இயைபையும், பருவ புனைவுகள் மக்களின் அகஉணர்வினை எடுத்து இயம்புவதையும் இவ்வியல் ஆராய்கிறது.

## 2.1. சிறுபொழுதுகள் - விளக்கம்

ஒரு நாளின் கால எல்லையைச் சிறுபொழுது என்பர். ஞாயிறு திங்கள் இவற்றின் இயக்கத்தால் இரவும் பகலும் உருவாகி நாளின் கூறுகள் உருவாகின்றன. ஒருநாளின் கூறுகள் மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு என்னும் கூறுகளாகப் பகுக்கப்படுகின்றன.

*மாலை - காலை 6 மணிமுதல் 10 மணிவரை - 31-40 நாழிகைகள்*

*யாமம் - இரவு 10 மணிமுதல் 2 மணிவரை - 41-50 நாழிகைகள்*

*வைகறை - காலை 2 மணிமுதல் 6 மணிவரை - 51-60 நாழிகைகள்*

*விடியல் - காலை 6 மணிமுதல் 10 மணிவரை - 1-10 நாழிகைகள்*

*நண்பகல் - காலை 10 மணிமுதல் 2 மணிவரை - 11-20 நாழிகைகள்*

*எற்பாடு - மதியம் 2 மணிமுதல் 6 மணிவரை - 21-30 நாழிகைகள்*

"அல்லும் பகலும் அறுபது நாழிகை" என்னும் பொன்மொழிப்படி ஒவ்வொரு நாளின் சிறுபொழுதின் உட்கூறுகளுக்கும் நான்கு மணிநேரங்களும் 10 நாழிகைகளாக வகுத்துச் சொல்லப்பெறுகின்றன. நாளின் தொடக்கம் வைகறை என்றும் நண்பகல் என்றும் மாலை என்றும் கூறுகின்றனர். நாளின் தொடக்கம் வைகறை என வைத்துப் பெறப்படுவதே பெரும்பான்மை ஆகிறது.

தொல்காப்பியம் ஒவ்வொரு திணைக்கும் உரியப் பெரும்பொழுதினையும் சிறுபொழுதினையும் இணைத்தே கூறுகின்றது. உலகிற்கு நீர் ஆதாரம் ஆகும். உயிர்களின் வாழ்வியல் தேவையான நீருக்கு மழையே ஆதாரம் என்பதால் மழை காலமான கார்காலம் முதலில் வைத்துப் போற்றப்பட்டது. முல்லைக்குக் கார்காலம் பெரும்பொழுதாகக் கூறப்பட்டு சிறுபொழுதும் மாலை எனக் குறிக்கப்படுகின்றது. தொல்காப்பியர் மாலையையே முதலில் வைத்துக் கூறுகின்றார்.

**"காரும் மாலையும் முல்லை"[1]**

**(தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்பா 6)**

**"குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார்ப் புலவர்"[2]**

**(தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்பா 7)**

**"வைகறை விடியல் மருதம்"[3]**

**(தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்பா 9)**

**"எற்பாடு**
**நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்"[4]**

**(தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்பா 10)**

**"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"[5]**

**(தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்பா 11)**

என்னும் நூற்பாக்கள் மூலம் தொல்காப்பியம் சிறுபொழுதினை ஆறு எனக் குறிப்பிடுகின்றது.

*ஒரு நாளின் அறுபது நாழிகைகள் பத்துப் பத்து நாழிகைகளாகப் பிரிக்கப்பட்டுச் சிறுபொழுதுகளுக்கு ஆறுபிரிவுகளாக வரும். சிலர் ஒரு நாளினை பன்னிரு நாழிகைகளாகப் பிரித்துச் சிறுபொழுது ஐந்து எனப் பகுப்பார்.*

*நம்பியகப்பொருள் மாலை முதலாக நண்பகல் ஈறாகச் சொல்லப்பட்ட ஐவகையும் சிறுபொழுது என்பதையும்,*

***"மாலை யாமம் வைகறை யெற்படு***
***காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்***
***கைவகைச் சிறுபொழு தைவகைத்தாகும்"[6]***
***(நம்பியகப்பொருள், நூற்பா 12)***

*எனும் நூற்பா மூலம் உரைக்கின்றது. சிறுபொழுதினைக் குறுந்தொகை,*

***"காலையும் பகலும் கையறு மாலையும்***
***ஊர் துஞ்சும் யாமமும் விடியலும்"[7]***
***(குறுந்தொகை, பாடல் எண் 32, அடி 1-2)***

*காலை, பகல், கையறுமாலை, யாமம், விடியல் என ஐவகையாகப் பிரிக்கின்றது. தொல்காப்பியர் அகத்திணை ஏழு, புறத்திணை ஏழு எனப் பகுத்துள்ளார்.*

### *2.2. பிறமொழிகளில் சிறுபொழுதுகள்*

*ஆங்கிலேயர் ஒருநாளினை Dawn, Day, break, Forenoon, Afternoon, Evening, Night என்ற ஆறு பொழுதாகப் பிரிக்கின்றனர். வடமொழியினர் பூசை கால முறையை ஒட்டி உ-த், சந்தி, உச்சி, சாயரட்சை, இரண்டாங்காலம், அர்த்தசாமம் என்று ஆறு வகையாகப் பிரித்துள்ளனர்.*

### *2.3. வைகறை - விளக்கம்*

*சிறுபொழுதுகளின் தொகுப்பை அறுபது நாழிகைகளாகப் பகுத்துக் கணக்கிட்டார்கள். ஆறு சிறுபொழுதுகள் கழிவதற்கு அறுபது நாழிகைள் எடுக்கின்றன என்றுத் தமிழர்கள் பண்டைக் காலத்தில் கணக்கிட்டார்கள். ஒரு நாழிகை என்பதுத் தற்போதைய 24 நிமிடங்களைக் கொண்டதாகும். ஒரு சிறு பொழுதிற்கு 10 நாழிகை கொண்டு, 240 நிமிடங்களாகக் கணக்கிடப்பட்டது. ஒவ்வொரு சிறு பொழுதும் நான்கு மணிநேரம் காலக்கூறு பெற்றது. விடியல் பொழுதின் முந்தையக் காலம் வைகறை பொழுதாகக் கொள்ளப்பட்டது. வைகறை அதிகாலை 2 மணிமுதல் 6 மணி வரையிலான இருள் புலராத காலமாகும்.*

வைகறை என்பதற்கு,

> **"விடியல், கதிரவன் கிழக்கே எழத்தொடங்கும் சிறு காலைப் பொழுது, பொழுது விடியத் தொடங்கும் காலம், அதிகாலைப் பொழுது என அகராதிகள் பொருள் தருகின்றன. வைகறைப் பொழுதுக்கு, விடியலின் முதல் பத்து நாழிகையளவு காலம், விடியற்காலம்"[8]** ***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 484)***

என்று யாழ்ப்பாண அகராதி பொருள் தருகின்றது.

வைகறைப் பொழுதும் விடியலும் மருதத்திணைக்குரியப் பொழுதாகப் பேசப் பெறுகின்றது.

> **"வைகறை விடியல் மருதம்"[9]**
>
> ***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 9)***

ஒருநாளின் தொடக்கம் வைகறைப் பொழுதாகும். ஒரு நாளின் 60 நாழிகைகளில் காலை 2 மணிமுதல் 6 மணிவரையிலான 10 நாழிகைகள் வைகறைப் பொழுதாகப் பகுக்கப்பெற்றுள்ளன. இருள் புலராத சூரியக் கதிர் எழுவதற்கு முன்புள்ள பொழுதே வைகறைப் பொழுதாகும்.

வைகறைப் பொழுது குறித்து வைகுறுமீன், விடியல் வைகறை, வாடை வைகறை, கதிர்விரி வைகல் என்று நற்றிணை, அகநானூறு, கலித்தொகை ஆகியவை எடுத்தியம்புகின்றன.

### 2.3.1. வைகறைப் பொழுதின் தன்மைகள்

மருதத்திற்கு வைகறையும், விடியலும் சிறுபொழுதாக வகுக்கப்பட்டுள்ளன. மருதத்திணைக்குரியச் சிறுபொழுதினைத் தொல்காப்பியர்,

> **"வைகுறு விடியன் மருதம்"[10]**
>
> ***(தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 9)***

என்னும் நூற்பாவில் வைகறையும், விடியலும் மருதத்திற்கு உரியனவாகக் கூறுகின்றார்.

புறத்தொழுக்கம் மேற்கொண்டத் தலைவன் தலைவி புலம்புவதனை பிறர் அறிந்தால் தன் தலைமைக் குணத்திற்கு ஊறு விளையுமென வைகறையில் இல்லம் திரும்புகின்றான். எப்பருவமாயினும் புறப்பெண்டிர் பால் மருவியத் தலைவன் பிறர் அறியா வகையில் இல்லம் புகும் காலம் வைகறை ஆகும். இதனைக்

*கலித்தொகைப் பாடல் உணர்த்துகின்றது. பரத்தையருடன் நீராடி மாலை மயங்கிய தோற்றத்துடன் தலைவன் வரும் வைகறைத் தோற்றம்,*

**"விரிகதிர் மண்டிலம் வியல் விசும்பூர்தரப்**

**புரிதலை தனையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி"[11]**

***(கலித்தொகை, பாடல் எண் 71, அடிகள் 1-2)***

*மருதத்திற்கு வைகறை பொழுது வகுக்கப் பட்டமைக்கு நச்சினார்க்கினியர்,*

**"பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும், பாடலும் கண்டுங்கேட்டும் பொழுது கழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமல் மீளும் காலம் ஆதலானும், தலைவிக்கும் கங்குல் யாமம் கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலான் ஊடல் உணர்தற்கு எளிதாவதோர் உபகாரம் உடைத்தலாலும் வைகறை கூறினார்"[12]**

***(நச்சினார்க்கினியர் உரை, தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 8)***

*என்ற உரை தருகிறார்.*

*இரவு முழுவதும் பரத்தையர் பால் ஆடல், பாடலில் களித்துப் பிறர் காணும் முன் தனது இல்லம் செல்லக் கருதி, வானம் புலரா வைகறையில் வீடு திரும்புகின்றான். தலைவியோ, இரவெல்லாம் காலத்தை அரிதாகக் கடந்து காத்திருக்க, வீடு திரும்பியத் தலைவன் இரந்து நிற்க வாயில் மறுப்பாள். இறுதியில் தலைவன் நிலைக்கு இரங்கி தலைவியும் ஊடல் விலக்கி ஏற்பதற்கு வானம் புலராத வைகறை பொருத்தமானக் காலமாயிற்று.*

### *2.3.1.1. கன்னி விடியல்*

*காலையில் மலர்வது தாமரை. மாலையில் மலர்வது அல்லி. இருள் புலராத வைகறையில் முந்தைய நாள் மாலையில் மலர்ந்து இன்னும் தன் இதழ்விரிய நின்றதால் ஆம்பல் மலரானதுத் தாமரை மலர்போல்தோற்றம் கொள்ளும். விடிந்தும், விடியாத வைகறை வேளையைக் "கன்னி விடியல்" என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது.*

**"கன்னி விடியல் கணைக்கால் ஆம்பல்**

**தாமரை போல் மலரும் ஊர"[13]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 68, அடிகள் 1-2)***

*எனும் பாடலில் வைகறையின் தன்மையைக் கன்னிவிடியல் என்றுக்கூறி பெண்மைத் தன்மைக்கு ஒப்பிட்டுக் கூறும் போக்குப் பெறப்படுகின்றது.*

### *2.3.1.2. வைகறைப் பெயல்*

*வைகறைப் பொழுதில் மலர்கள் மலர்ந்து மணம்வீசும். அந்தப் பொழுதில் பெய்த மழை சலனமற்று இருந்தது. இடியும், முழக்கமும் இன்றி வைகறையில் பெய்த மழையின் அழகானது பாணரது யாழிசைப் போன்று சலனமற்று இருந்ததை,*

> ***"வடிஉறு நல்யாழ் நரம்பு இசைத்தன்ன***
> ***இன்குரல் அழிதுளி தலைஇ, நன்பல***
> ***பெயர் பெய்து கழிந்து பூநாறு வைகறை"***[14]
>
> ***(அகநானூறு, பாடல் எண் 374, அடிகள் 8-10)***

*என்றுக் கூறப்பட்டு மலர்கள் மலர்ந்து மணம் வீசும் வைகறைப் பொழுது கார்காலத்தில் பெற்றத் தோற்றம் புலப்படுகிறது.*

### *2.3.1.3. வைகறைத் தோற்றம்*

*வைகறைப் பொழுதின் இயற்கை தோற்றத்திற்கு உவமை எடுத்தாளப் பெறுகின்றது. முன்பனிக் காலத்தின் இறுதிநாள்களில் வைகறைப் பொழுதில் ஆகாயத்தில் மேகங்களின் இயக்கமானது வானம் தோல் உரிவதுபோன்று உள்ளதை,*

> ***"வயங்கு கதிர் சுரந்த வாடை வைகறை***
> ***விசும்பு உரிவது போல் வியல் இடத்து ஒழுகி"***[15]
>
> ***(அகநானூறு, பாடல் எண் 24, அடிகள் 6-7)***

*என்ற அகநானூற்றுப் பாடல் புலப்படுத்துகின்றது. மேகங்களின் இயக்கம் வானம் தோல் உரித்தலுக்கு உவமையாக்கப்பட்டது.*

### *2.3.1.4. காதலரைப் பிரியச் செய்யும் வைகறை*

*இணைந்திருக்கும் காதலரைப் பிரிக்கின்றப் பொழுதாக வைகறைக் கருதப் படுகிறது. எனதுத் தோளை மணந்த காதலரைப் பிரியச் செய்யும் வாளைப் போல வைகறைப்பொழுது வந்ததைத் தலைவி கூறுவதாகக் குறுந்தொகையில்,*

> ***"தோள்தோய் காதலர்ப் பிரிக்கும்***
> ***வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே"***[16]
>
> ***(குறுந்தொகை, பாடல் எண் 157, அடிகள் 3-4)***

*தலைவி கடிந்துக் கொள்வதில் புணர்ந்தாரைப் பிரிக்கும் வைகறை வாளைப் போன்று வந்ததை உணர முடிகிறது.*

**2. 3.1.5. புன்னம் புலரி**

விடியதற்கு முன்னதாகிய வைகறையின் இறுதிப் பகுதி புன்னம் புலரி என்று அழைக்கப்படுகிறது. நீராடற்குப் புலரி என்னும் வைகறை பொழுதில் புறப்பட்டுச் செல்லுதல் மரபு.

இரவில் காமவேளால் தாக்கப்பட்டக் காதலர்களின் தாக்குதல்களை, அவர்களுக்குள் ஊடி அறுத்தெறிந்த மாலை முதலியவற்றை வைகறைப் பொழுதிலே தெருக்கள் வெறுமையாகும்படி அடித்துக் கொண்டுவரும் இயல்புடையது வையை என்பதை,.

**"சலப் படையான் இரவில் தாக்கியது எல்லாம்**
**புலப்படப் புன்அம் புலரியின் நிலப்படத்**
**தான் மலர்ந்தன்றே**
**தமிழ் வையைத் தண்ணம் புனல்"[17]**

**(பரிபாடல், பாடல் எண் 6, அடிகள் 57-60)**

என்றுப் பரிபாடல் கூறுகிறது.

**2.3.2. வைகறை நிகழ்வுகள்**

கதிரவனின் தோற்றத்தையும் மறைவையும் கொண்டு ஒரு நாளின் ஆறு கூறுகளும் கணிக்கப்படுகின்றது. கதிரவன் தோற்றம் முதல் மீண்டும் தோன்றும் காலம் வரை ஒருநாள் என்று எண்ணப்பட்டது. இதனைக் கொண்டே ஒரு நாளின் தொடக்கம் வைகறை எனக் கொள்ளப்பட்டது.

வைகறைப் பொழுதில் பாணர்கள் மன்னனைத் துயில் எழுப்பல், புகழ்பாடுதல், வேட்டை, தயிர்கடைதல் போன்ற நிகழ்வுகள் நடப்பதாக இலக்கியங்களில் பெறமுடிகின்றது. உடலை வருத்தி உழைப்பவர் வெயிலின் தாக்கம் இல்லாத வைகறையில் தங்கள் தொழிலை மேற்கொண்டுள்ளனர்.

**2.3.2.1. பாணர் செயல்**

வைகறையில் பாணர்கள் அரண்மனை வாயிலில் நின்றுப் பாடும் மரபு கூறப்பட்டுள்ளது. வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பானது வள்ளல் தன்மையை வைகறை யாமத்தே பாணன் பாடும் நிகழ்வை அகநானூறு அடிகள் உரைக்கின்றன.

**"யாம இரவின் பெருங்கடை நின்று**
**தேம்முதிர் சிமையக் குன்றம் பாடும்**
**நுண்கோல் அகவுநர் வேண்டின் வெண்கோட்டு**
**அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்**
**வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்"[18]**

**(அகநானூறு, பாடல் எண் 28, அடிகள் 2-6)**

என்பதில் வைகறையில் பாடிப் பரிசில் பெறும் பாணர்கள் மன்னர் அரண்மனை வாயிலில் நின்று மன்னனது புகழைப் பாடுவது பெறப்படுகின்றது.

### 2.3.2.2. துயில் எழுப்பல்

காவலையுடையப் பாசறைக்கண் கிணைப்பொருநன் மன்னனைத் துயில் எழுப்பும் பொருட்டு வைகறைப் பொழுதில் பாடுவதாகப் புறநானூற்றுப் பாடலில் அமைகிறது. வைகறைப் பொழுதின் காட்சிகள் அழகுறச் சித்தரிக்கப்படுகின்றன. கிணைப்பொருநன் கூற்றில் மன்னனைத் துயல்எழுப்பும் போக்கில் பாடப்பட்ட இப்பாடல் எஃகு இருள் என வைகறையின் குறைந்த இருளினைக் குறிப்பிடுகின்றன.

**"இரவுப்புறங் கண்ட காலைத்தோன்றி**
**எஃகு இருள் அகற்றும் ஏமப் பாசறை**
**வைகறை அரவம் கேளிர்"[19]**

**(புறநானூறு, பாடல் எண் 397, அடிகள் 6-8)**

என்றப் புறநானூற்றுப் பாடல் வழி காணமுடிகின்றது.

### 2.3.2.3. தயிர்க்கடைதல்

காலை எழுந்து ஆய்ச்சியர் தயிர்க்கடைதல் முல்லை நில மரபு. வெண்ணெய் தோன்றக் கடைதலால் தறியடியன் ஓசை கேட்கின்றது. தங்கிய இருள் நீங்கும் வைகறைப் பொழுதினில் ஆய்ச்சியரின் தயிர்கடையும் செயல்பாடு நடைபெறும் என்பதை நற்றிணை விளக்குகின்றது.

தயிர்ப்பானையில் முடைநாற்றம் தீர விளம்பழத்தை இட்டு வைத்துள்ளனர். தேய்ந்த மத்தினால் வெண்ணெய் தோன்றக் கடைதலால் தறியடியில் ஓசை முழங்கும். இத்தகைய ஓசை கேட்கும் தங்கிய இருள் தீரும் வைகறைப் பொழுதினை,

**"விளாம்பழம் கமழும் கமஞ்சூற்குழிசிப்**
**பாசம் தின்ற தேய்கால் மத்தம்**
**நெய்தெரி இயக்கம் வெளியில் முதல்முழங்கும்**
**வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்"[20]**

***(நற்றிணை, பாடல் எண் 12, அடிகள் 1-4)***

*என்றுக் குறிப்பிடுகின்றது.*

*பறவைகள் துயிலெழுந்து இன்னிசைபாடும் வைகறை பொழுதில் ஆயர்மகள் தயிர்கடைந்து வெண்ணெய் எடுத்தனள். வைகறையில் தயிர்க்கடையும் முழக்கமானது புலியின் முழக்கத்தினைப் போன்று இருப்பதைப் பெரும்பாணாற்றுப் படை,*

**"நள்இருள் விடியல் புள்எழப்போகி**
**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**ஆம்பி வால் முகை அன்ன கூம்புமுகிழ்**
**உறைஅமை தீம்தயிர் கலக்கி"[21]**

***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 155-158)***

*என்னும் அடிகளில் குறிப்பிடுகின்றது.*

### *2.3.2.4. ஊடல்*

*தலைவன் தலைவியரிடையே தோன்றும் காதல் உணர்வுகளை விளக்குவதற்கு, பருவங்களின் வர்ணனைகள் உறுதுணையாக அமைகின்றன. தலைவனின் வதுவைக்கோலம் தந்த நறுமணத்தைத் தலைவி நுகர்ந்த வைகறைப் பொழுதை,*

**"பொதுக்கொண்ட கவ்வையிற் பூமணி, பொலிந்தநின்**
**வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை"[22]**

***(கலித்தொகை, பாடல் எண் 66, அடிகள் 11-12)***

*என்னும் கலித்தொகைப் பாடல் கூறுகின்றது.*

### *2.3.2.5. நீராடல்*

*பரத்தையருடன் நீராடி மாலைமயங்கியத்தோற்றத்துடன் தலைவன் வைகறையில் வருகின்றதைக் கலித்தொகை,*

**"விரிகதிர் மண்டலம் வியல்விசும்பூர்தரப்**
**புரிதலை தளையவிழ்ந்த பூவங்கட் புணர்ந்தாடி"[23]**

***(கலித்தொகை, பாடல் எண் 71, அடிகள் 1-2)***

*என்றுக் கூறுகின்றது.*

**2.3.2.6. தலைவன் செயல்**

பரத்தையை இரவிலே கூடி மகிழ்ந்தத் தலைவன் அத்தோற்றத்தோடே வைகறைப் பொழுதில் தலைவியை நாடிவந்த செய்தியை,

**"கதிர்விரி வைகலின் கைவாரூஉக் கொண்ட**
**மதுரைப் பெருமுற்றம் போநின் மெய்க்கட**
**குதிரையோ வீறியது"[24]**

***(கலித்தொகை, பாடல் எண் 96, அடிகள் 22-24)***

என்றுக் கலித்தொகை நவில்கின்றது.

பரத்தையிற் பிரிந்தத் தலைவன் அவர்களுடன் இரவுப்பொழுதினைக் கழித்துப் புறத்தார்க்குப் புலனாகமல் மீண்டும் வரும் காலம் இருள் விலகாத அதிகாலைப் பொழுதாகிய வைகறையாகும். தலைவன் மீது கமழும் நாற்றத்தைக் கண்டு தலைவி தலைவனிடம் ஊடல் கொள்ளும் பொழுதாக வைகறை அமைந்தது புலனாகிறது.

**2.3.2.7. தலைவியின் நாணம்**

தலைவியானவள் புணர்ச்சியினால் உண்டானக் குறியீடுகளைச் சுற்றத்தார் முன்னர் மறைக்க விரும்பித் தலைமுடியினை நீவுகின்றப் பொழுது வைகறை என்பதைக் குறுந்தொகை,

**"நள்ளென் கங்குல் நாம் ஓரன்னள்**
**கூந்தல் வேய்ந்த விரவு மலர் உதிர்த்து**
**சாந்து உளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி**
**அமரா முகத்தாள் ஆகித்**
**தமர் ஓரன்னள், வைகறை யானே"[25]**

***(குறுந்தொகை, பாடல் எண் 312, அடிகள் 4-8)***

எனக் குறிப்பிடுகின்றது. உதிர்த்தலும், நீவுதலும் ஆகியச் செயல்கள் புணர்ச்சியால் உண்டாக்கியச் சின்னங்களைச் சுற்றத்தார்முன் மறைத்தொழுக விரும்பும் முயற்சியைக் காட்டுவதாகும்.

*தலைவனுடனானப் புணர்ச்சியினால் உண்டானத் தோற்றத்தைப் பெண்மைக்குரியக் குணமான நாணத்தின் காரணமாக பிறர் அறியாவண்ணம் தலைவி மறைக்க முயலும் காலமாக வைகறைப் பொழுது அமைந்திருப்பதைக் குறுந்தொகை உரைக்கின்றது.*

### *2.3.2.8. வெற்றிச் சிறப்பு*

*வெற்றிச் சிறப்பைக் கொண்டாடும் வடுகர் இன மக்கள் வைகறைப் பொழுதில் மலரும் மல்லிகை மலரைச் சூடிக் கொண்டு முதிர்ந்த கள்ளினை பலியாகக் கொடுப்பர்.*

***"கொய்குழை அதிரல் வைகுபுலர் அலரி***
***சுரிஇரும்பித்தை கரும்பு படச்சூடி***
***இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை***
***நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்***
***வால் நிணப்புகவின் வடுகர் தேஎத்து"[26]***

***(அகநானூறு, பாடல் எண் 213, அடிகள் 4-8)***

*என்று அகநானூறு உணர்த்துகின்றது.*

### *2.3.3. வைகறை மலர்*

*தலைவன் தலைவியரிடையே நிகழும் அகஉணர்வுக்குப் பொழுதுகளின் வர்ணனைகள் பெரும் பங்காற்றுகின்றன. பொழுதுகளின் ஒவ்வொரு இயற்கை நிகழ்வுகளும் மக்களின் வாழ்வியல் உண்மைத் தன்மைக்கு ஒப்பிடப்படுகின்றன. அக ஒழுக்கங்களைக் குறிப்பிடும் இடங்களில் மலர்கள் சிறந்ததொரு இடத்தைக் கொள்கின்றன.*

### *2.3.3.1. நெய்தல் மலர்*

*வைகறையில் மலரும் மலர் நெய்தல். தலைவியின் கண்கள், நெய்தல் மலரைப் போன்று அழகுடையன. முதல் நாள் மாலையில் கூம்பிய நெய்தல் மலரானது மறுநாள் கதிரவன் தோன்றியப் பின் மலர்கின்றத் தன்மை போலவே பலநாட்கள் தன் பிரிவைத் தாங்கி, தான் வந்ததும் கண்களை அகல விழித்துத் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினாள் என்பதை ஐங்குறுநூறு,*

**"வைகறை மலரும் நெய்தல் போல**

**தகை பெரிது உடைய காதலி கண்ணே"[27]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 188, அடிகள் 3-4)***

என்றுக் கூறுகின்றது.

வைகறைப் பொழுதில் நெய்தல் மலர் மலர்தல் தலைவியின் மகிழ்ச்சிக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

ஒருநாளின் ஆறு கூறுகளுள் வைகறை நாளின் தொடக்கமாகக் கொள்ளப் படுகின்றது. வைகறை என்பதுச் சூரியனின் தோற்றத்திற்கு முந்தையக் காலமாகக் கருதப்படுகின்றது. பறவையினங்களும், விலங்கினங்களும் துயிலெழும் பொழுதான வைகறையின் இனிமைத்தன்மை, தோற்றப் பொலிவு, தெளிவுற விளக்கப்படுகின்றது. வைகறைப் பொழுதில் அன்றாட தொழில்கள் ஆரம்பமாவதை வைகறை நிகழ்வுகள் குறிப்பிடுகின்றன.

### 2.4. விடியல்

விடியல் மருதத்திணைக்கு உரியச் சிறுபொழுதாகும். தலைவன் புறத்தொழுக்கம் மேற்கொண்டு பரத்தை வழிச்சேர்ந்து, அது பிறருக்குப் புலனாகாதவாறு வைகறை, விடியல் ஆகியப் பொழுதின்கண் இல்லத்தை அடைவான். ஆதலின், பிறர் அறியாத அக்காலம் ஊடல் ஒழுக்கத்திற்குச் சிறப்புடையக் காலமாக அமைத்துப் பாடப்பெறுகின்றது. இந்த மருதநில ஊடல் ஒழுக்கத்திற்குச் சிறுபொழுதாகிய விடியல் சிறப்பாகப் பொருந்தித் துணையாக அமைகின்றது.

#### 2.4.1. விடியல் பொருள்

விடியல் என்பதற்கு,

**"பொழுது உதயமாகும் வேளை"[28]**

***(ந. சி. கந்தையா அகராதி, பக்கம் 615)***

என்று அகராதி பொருள் தருகிறது. விடியல் என்பதுக் கதிரவன் தோற்றம் கொண்டுள்ள காலமாகும். பரத்தையர் பால் ஆடிக்களித்து வைகறையில் வீடு திரும்பும் தலைவனுக்குத் தலைவி வாயில் மறுப்பாள். தலைவி ஊடல் விலக்கி ஏற்கும் காலம் இருள் பிரியா வைகறையில் மெல்லப் புலரும் விடியலாகும். விடியலுக்குள் தலைவி ஊடல் தீர்ந்துத் தலைவனுக்கு வாயில் நேர்ந்துவிடுகிறாள்.

தலைவனின் மாறுபட்டத் தோற்றத்தைப் பிறர் காணக்கூடாது எனத் தலைவி எண்ணுகிற பொழுதுதான் விடியற் பொழுதாகும். இவற்றால் தான் வைகறையும், விடியலும் மருதத்திற்குப் பொருந்துகின்றன.

### 2.4.2. விடியலின் பெயர்கள்

விடியல் என்பதற்குக் காலை, சிறுகாலை, ஞாயிற்றாகம், அமையம் என்னும் பல பெயர்கள் வழங்கப்பட்டுள்ளன.

#### 2.4.2.1. காலை

காலை என்பது விடியல் என்னும் பொருளில் வருவதாகும். காலை என்பதற்குப் பொழுது, காலம், நேரம் என்றப் பொதுவானப் பொருள் உண்டு. விடியல் என்பதைக் குறிக்கச் சிறுபான்மையாக வரும்.

**"காலை எழுந்து கடுந்தேர்ப்பண்ணி"[29]**

**(குறுந்தொகை, பாடல் எண் 45, அடி 1)**

என்று குறுந்தொகை, இரவெல்லாம் பரத்தை வீட்டில் தங்கிய தலைவன் காலையில் தேரினில் தம் இல்லம் புகுதலைக் கூறுகிறது.

#### 2.4.2.2. சிறுகாலை

வைகறையும் விடியலும் இல்லாத இடைப்பட்டக் காலம் சிறுகாலை என்றச் சொல்லால் அழைக்கப்படுகின்றது. கலித்தொகையில்,

**"என்னைப் புலப்பது ஒறுக்குவென்மன்யான்**
**சிறுகாலையிற் கடைவந்து, குறிசெய்த**
**அவ்வழி என்றும் யான் காணேன் திரிதர**
**எவ்வழிப் பட்டாய்"[30]**

**(கலித்தொகை, பாடல் எண் 97, அடிகள் 2-5)**

எனும் பாடல் பரத்தையரைப் புலந்து வந்தத் தலைமகனைத் தலைவி, தான் புணர்ந்தற்கு நீ வருவதாகச் சொன்னக் குறியிடத்தில் உன்னைக் காணாமல் தேடி அலைந்தேன். இரவு முழுவதும் எங்கே சென்றாய்? சிறுகாலைப் பொழுதிலே இங்கே வந்துள்ளாய் என்றுக் கூறும் சூழல் விடியலைச் "சிறுகாலை" என்றுப் பெயர்க் கொண்டுக் குறிப்பிடுகிறது.

**2.4.2.3. ஞாயிற்றாகம்**

இளஞாயிறு தோன்றும் விடியற்காலம், ஞாயிற்றாகம் என்றப் பெயரால் அழைக்கப் பெற்றுள்ளது. அக்காலத்தே தழையாடை அணிந்தத் தலைவியோடு தலைவன் விளையாட்டு அயர்ந்தச் சூழலினை,

**"கழனியாம்பல் முழுநெறிப் பைந்தழை**

**காயா ஞாயிற்றகத் தலைப்பெயப் பொய்தலாடி"**[31]

**(அகநானூறு, பாடல் எண் 156, அடிகள் 9-10)**

என்று அகநானூறு விளக்குகின்றது. ஞாயிற்றாகம் என்பது விடியல் பொழுதினைக் குறித்து வந்தது.

**2.4.2.4. அமையம்**

அமையம் என்பதற்கு,

**"நேரம், சமயம்"** [32]

**(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 394)**

என்று யாழ்ப்பாண அகராதி பொருள் தருகின்றது. ஞாயிறு தோன்றுக் காலைப் பொழுதில் ஞாயிற்றுக் கதிர்களின் வெப்பம் குறைந்துக் காணப்படும் பொழுதே அமையம் எனப்படும்.

**"ஒண்சுடர் முதிரா இளங்கதிர் அமையத்து"**[33]

**(அகநானூறு, பாடல் எண் 187, அடி 19)**

என்றுக் காலைப் பொழுதினை அமையம் என்றச் சொல்லால் குறிக்கின்றது. நற்றிணையும்,

**"பெரும்பெயல் பொழிந்த வழிநாள் அமையத்து"** [34]

**(நற்றிணை, பாடல் எண் 157, அடி 2)**

என்றுக் குறிப்பிடுகின்றது.

**2.4.3. விடியலின் தன்மை**

இருள் புலர்ந்த விடியல் பொழுது, ஒவ்வொரு உயிரினங்களும் இயக்கம் பெறும் பொழுதாக அமைகிறது. அன்றாடச் செயல்பாடுகளை இயல்பானச் சூழலோடு செயலாற்றப்படுகிறது. நாளின் செயல்கள், தொடக்கம் பெறும் பொழுதாகையில் விடியல், நாள் என்றப் பெயரிலேயே பெரும்பாலும் குறிக்கப்பட்டுள்ளது.

குளிர்ந்த இருள் அகலும் விடியற்காலை, தண்புலர் விடியல் என்றும் நிறைந்த இருள் நீங்கிய விடியற்பொழுது பெரும்புலர் விடியல் என்றும் தங்கிய இருள் நீங்கும் விடியல் பொழுது வைகுபுலர் விடியல் என்றும் நற்றிணை குறிப்பிடுகின்றது.

***"கண்படைபெறாஅது தண்புலர் விடியல்"*** [35]

***(நற்றிணை, பாடல் எண் 60, அடி 3)***

***"பெரும்புலர் விடியலின் விரும்பி போத்தந்து"*** [36]

***(நற்றிணை, பாடல் எண் 80, அடி 4)***

***"வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்"*** [37]

***(நற்றிணை, பாடல் எண் 12, அடி 14)***

செறிந்த இருள் புலருகின்ற விடியல் பொழுதின் தன்மையை அதன் அழகினை வர்ணிக்கும் விதமாகக் குறிப்பிடப்படுகின்றது. விடியலின் அழகினை வைகுதல், வைகல், வைகுறு போன்றச் சொற்கள் மூலம் இலக்கியங்களில் தெளிவுப்படுத்தப் படுகின்றது. விடியல் பொழுது புலர்வதை வைகுற என்றச் சொல்லால் குறிக்கப்படுதலை,

***"அருமுனைப் பாக்கத்து அல்கி, வைகுற"*** [38]

***(அகநானூறு, பாடல் எண் 245, அடி 13)***

என்னும் அகப்பாடல் கூறுகின்றது.

### 2.4.3.1. நாள்

நாள் என்றப் பெயர்க்கொண்டு விடியல் அழைக்கப்பெறுகிறது. விடியற் பொழுதின் நிகழ்வுகள் குறித்த செய்திகள் ஒவ்வொரு உயிர்களின் செயல்களைக் கொண்டு வாழ்வியல் சூழலோடு பொருந்திக் காட்டப்பட்டுள்ளது. நாள்ஆ, நாளிரை, நாட்பலி, நாள்வலை, நாள்முரசு, நாட்சோறு என விடியல் பொழுதின் ஒவ்வொரு நிகழ்வுகள் குறிக்கப்படுகின்றன.

### 2.4.3.2. நாள் ஆ

வீரர்கள் வெட்சிமலர் சூடி விடியல் பொழுதில் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துச் செல்லுதலை அகப்பாடல் கூறுகின்றது. விடியற்பொழுதில் கவர்ந்துச் செல்லப்படும் பசுக்கள் நாள்ஆ என்றுக் குறிப்பிடப்பெறுவதை,

***"வீளை அம்பின் விழுத்தொடை மழவர்***
***நாள்ஆ உய்த்த நாமவெஞ் சுரத்து"*** [39]

***(அகநானூறு, பாடல் எண் 131, அடிகள் 6-7)***

என்று அகநானூறு விளக்குகின்றது.

**2.4.3.3. நாள்வலை**

பரதவர்கள் கடலில் மீன்பிடிக்கச் செல்லும் பொழுது காலையாகும். காலைப் பொழுதில் பரதவர்கள் வலைகொண்டு மீன்பிடிக்கச் செல்வதை நாள்வலை என்று, குறிப்பிடுவதை,

**"நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்"** [40]

***(அகநானூறு, பாடல் எண் 300, அடி 1)***

என்று அகநானூறு சுட்டுகின்றது.

**2.4.3.4. நாள்முரசு**

விடியற்பொழுதில் முழங்கும் முரசு நாள்முரசு எனப்படும்.

**"நாள்முரசு இரங்கும் இடனுடைய வரைப்பில்நின்**
**தாள்நிழல் வாழ்நர் நன்கலம் மிகுப்பு"** [41]

***(புறநானூறு, பாடல் எண் 161, அடிகள் 29-30)***

என்றுப் புறநானூறு குறிப்பிடுகின்றது. நாட்காலையில் முரசு முழங்கும் இடத்தின் எல்லைக்கண் தன் நிழலில் வாழ்வோரின் கலங்கள் நிறையுமாறு செல்வத்தை மிகுதியாகக் கொடுத்தான் குமணன் என்று அவனின் வள்ளல் தன்மையைக் கூறுகின்றது.

**2.4.3.5. நாட்சோறு**

ஒய்மான் வில்லியாதன் பன்றியின் ஊனை நெய்யில் பொரித்து விடியல் பொழுதில் உணவாக அளித்துள்ளான் என்பதைப் புறநானூறு கூறுகிறது. விடியல் பொழுதில் கொள்ளப்படும் உணவினை "நாள்சோறு" என்றுக் குறிப்பிடுகின்றது. ஒய்மான் வில்லியாதன் வள்ளல்தன்மை பற்றிக் கூறும் புறநானூற்றுப்பாடல் நாள் என்னும் பெயரில் விடியல் பற்றிச் செய்தியைப் பதிவுச் செய்கிறது.

**"குறுந்தாள் ஏற்றைக் கொழுங்கண் அவ்விளர்**
**நறுநெய் உருக்கி, நாட்சோறு ஈயா"** [42]

***(புறநானூறு, பாடல் எண் 379, அடிகள் 8-9)***

என்று புறநானூறு தெளிவுபடுத்துகின்றது.

**2.4.3.6. நாளிரை**

பறவைகள், விலங்குகள் முதலியவற்றின் உணவு இரை என்றுக் கூறுவர். விடியற் பொழுதில் இவைகள் மேற்கொள்ளும் உணவினை "நாளிரை" என்றுக் குறிப்பிடப்படுகின்றது. நீர்நாய், தன் விடியல் உணவாக வாளைமீனை உண்ணும் என்றச் செய்தியைக் கூறும் அகநானூற்றில் நீர்நாயின் விடியல் உணவு நாளிரை என்றுக் குறிக்கப்படுவதை,

**“பொய்கை நீர்நாய்ப் புலவுநாறு இரும்போத்து**
**வாளை நாள்இரை தேரும் ஊர”** [43]

***(அகநானூறு, பாடல் எண் 386, அடிகள் 1-2)***

*என்று அகநானூறு சுட்டுகின்றது.*

### *2.4.3.7. நாட்பலி*

*விடியலில் இறைவனுக்குப் பலியிடும் பழக்கம் இருந்துள்ளது. வானம் மழையின்றிப் பொய்த்தலால் இறைவர்க்கு இடுகின்றப் பலியைச் செய்யாது மறந்தனர் என்றுக் கூறும் அகநானூற்றுச் செய்தி விடியலில் இறைவனுக்குப் பலியிடுவதைக் குறிப்பிடுகின்றது.*

**“சுரை இவர் பொதியில் அம்குடிச்சீறூர்**
**நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை”** [44]

***(அகநானூறு, பாடல் எண் 287, அடிகள் 5-6)***

*எனும் அடிகள் விடியல்காலை பலியினை நாட்பலி என்றுக் குறிக்கப்பட்டுள்ளது.*

*முன்னோர் வழிபாடாகக் கருதப்பெறும் நடுகல் வழிபாட்டில் நடுகல்லுக்கும் பலியிடும் வழக்கம் இருந்துள்ளது. நடுகல்லிற்கு விடியற்பொழுதில் பலியிடும் மரபு இருந்ததை,*

**“இல் அடுகள்ளின் சில்குடிச் சீறூர்ப்**
**டைநடு கல்லின் நாட்கலி ஊட்டி”** [45]

***(புறநானூறு, பாடல் எண் 329, அடிகள் 1-2)***

*எனும் புறநானூற்று அடிகள் புலப்படுத்துகின்றன. விடியற்காலையில் தரப்படும் பலிப்பொருள்கள் “நாட்பலி” என்றுக் குறிக்கப்பெறுகின்றன.*

*மல்லிகையின் மலர்க்கொண்டு நெடிதுக் காலம் நிலைத்து நிற்கும் நடுகல் தெய்வத்திற்கு நாட்பலி இட்டு வழிபாடு செய்வதை,*

**“உயர்பதுக்கு இவர்ந்த ததர்கொடி அதிரல்**
**நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்”** [46]

***(அகநானூறு, பாடல் எண் 289, அடிகள் 2-3)***

*எனும் அகநானூற்று அடிகளில் குறிப்பிடுகின்றது.*

### *2.4.3.8. நாள்மலர்*

*விடியற்பொழுதில் மலர்கள் மலர்தல் இயற்கை. தலைவி, பிற பெண்களைப் போல இயல்பானத் தோற்றமுடையவள் அல்ல. விடியற்காலைப் பொழுதிலே நீண்ட மலையிலே செழித்தப் பெரியத் தண்டினை உடையக் குறிஞ்சிப் பூவைப் போன்ற உடலை உடையவள். விடியலில் மலர்ந்தக் குறிஞ்சி மலருக்கு ஒப்புமை*

*உடையவள் தலைவி என்பதைக் கூறும் நற்றிணை பாடல், விடியற்பொழுதில் மலர்ந்த மலரை "நாள்மலர்" என்று நவில்கின்றது.*

**"நீள்மலைக் கலித்த பெருங்கோற் குறிஞ்சி**
**நள்மலர் புரையும் மேனி, பெருஞ்சுனை"** [47]

***(நற்றிணை, பாடல் எண் 301, அடிகள் 1-2)***

*என்று நற்றிணைப் பாடல் பகிர்கின்றது.*

### *2.4.4. விடியல் நிகழ்வுகள்*

*கதிரவன் உலகை ஒளி பரப்பி நிற்கும் நேரமே விடியல். பறவைகளும் விலங்குகளும் தங்களின் அன்றைய உணவுக்கானத் தேடலைத் தொடங்கும் நேரம். ஒவ்வொரு உயிரினங்களும் காலை கடமைகளைச் செய்யும் செயல்கள் விடியல் நிகழ்வுகளாகக் காட்டப்படுகின்றன.*

### *2.4.4.1. பறவை துயில் எழுதல்*

*இருள் புலர்ந்து விடியல் வரும் நேரமே உலகின் பல்வேறு நிகழ்வுகளின் ஆரம்பமாகும். உயிரினங்கள் துயிலெழும் பொழுதாகையால் பறவைகள், இன்னிசை பாடி விடியலை வரவேற்பதை,*

**"இடுமுள்வேலி எருப்படு வரைப்பின்**
**நள்இருள் விடியல் புள் எழப்போகி"** [48]

***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 154-155)***

*என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன.*

### *2.4.4.2. எருமை மேய்தல்*

*இராப்பொழுதுப் புலரும் விடியற்காலத்தில் மேயச்சென்ற எருமையானது நெய்தல் மலரைத் தின்றதை,*

**"வைகுறு விடியல் போகிய எருமை**
**நெய்தல் அம்புது மலர் மாந்தும்"** [49]

***(அகநானூறு, பாடல் எண் 100, அடிகள் 16-17)***

*என்று அகநானூறு விளங்குகின்றது.*

### *2.4.4.3. பாணன் அரசனைப் புகழ்தல்*

*அரண்மனை வாயிலில் நின்று ஒள்ளியப் புள்ளிகளை உடையச் சேவலானது எழுப்பத் துயில் எழுந்து குளிர்ந்தப் பனித் துளிக்குப் புலராத விடியற்காலத்தே*

நுண்ணியக் கோல் கொண்டுத் தடாரிப் பறையை அடித்துப் பாணன் அவியனது புகழைப் பாடியச் செய்தியைப் புறநானூறு குறிப்பிடுகின்றது.

**"ஒண்பொறிச் சேவல் எடுப்ப, ஏற்றுஎழுந்து**
**தண்பனி உறைக்கும் புலரா ஞாங்கர்"**[50]

***(புறநானூறு, பாடல் எண் 383, அடிகள் 1-2)***

எனும் அடிகள் பாணன் அவியன் என்னும் அரசனைப் புகழ்தலைப் பற்றியக் குறிப்பாக எடுத்துரைக்கின்றது.

### 2.4.4.4. பொழுது அறிவித்தல்

விடியற் பொழுதினை வரவேற்கும் பொருட்டுப் பறவையின் இன்னிசை அமையும். விடியற் பொழுதின் வரவைச் சேவல் அறிவிக்கும் என்பதை,

**"பொறிமயிர் வாரணம் பொழுது அறிந்து இயம்ப"**[51]

***(புறநானூறு, பாடல் எண் 398, அடி 3)***

என்றுக் கூறுகின்றது. பொறிகள் பொருந்திய மயிரை உடையக் கோழிச்சேவல் விடியல் பொழுதின் வரவை அறிந்து கூவியதை விளக்கி நிற்கின்றது.

### 2.4.5. தொழில்கள்

தொழிலைச் செய்வோர் சூரியக்கதிர்களின் வெம்மை குறைந்தப் பொழுதிலேயே தம் தொழிலை மேற்கொள்வர். இருள் புலர்ந்து விடியல் வரும் நேரத்தில் பல்வேறு தொழில்கள் ஆரம்பமாகும்.

### 2.4.5.1. மீன் பிடித்தல்

மீன்பிடிக்கச் செல்பவர்கள் அதிகாலையில் செல்வர். சிறுவர்கள் வயல்வெளிகளில் மீன்பிடிக்கச் செல்வதை "அதிகாலை வேட்டை" என்று குறிப்பதை,

**"இருஞ்சேற்று அள்ளல் நாள்புலம் போகிய**
**கொழுமீன் வல்சிப் புன்தலைச் சிறாஅர்"**[52]

***(அகநானூறு, பாடல் எண் 290, அடிகள் 2-3)***

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

### 2.4.6. தலைவி ஆற்றியிருத்தல்

தலைவனை எதிர்பார்த்து தலைவி காத்திருந்து அவன் வரும்வரை ஆற்றியிருக்கும் பொழுது விடியல் பொழுதாகும். ஆற்றியிருந்தத் தலைவி பொழுது புலர்ந்தும் தலைவன் வராததை,

**"வைகலை வைகலை வைகவும் வாரார்"** [53]

**(குறுந்தொகை, பாடல் எண் 285, அடி 1)**

என்னும் குறுந்தொகை பாடலில் கூறுகின்றது. இருள் கழிந்த விடியற்காலத்தை வைகல் என்றுக் குறிப்பிடுகின்றது.

பறவைகளும், விலங்குகளும், வண்டுகளும் தங்களது துயில் நீங்கி உலகம் விழித்தெழத் தொடங்குவது விடியல் பொழுதாகும். அவ்விடியலை இசையோடு வரவேற்பதை இலக்கியங்கள் இயல்பான மனிதச் சூழலோடு சான்றுப் பகர்கின்றன. ஒவ்வொரு உயிர்களின் வாழ்வியல் தொடக்கமும் விடியல் பொழுதில் ஆரம்பமாவதைத் தொழில் மரபாகவும் வர்ணனையாகவும் விளக்கப்படுகின்றது.

இளங்கதிர் ஞாயிறு தோன்றும் விடியற்காலை நிகழ்ச்சிகள் மாந்தர்களின் செயல்களை உள்ள உணர்வுகளை எடுத்துக்காட்டும் திறத்தில் அமைந்துள்ளன. தலைவன் தலைவியுடன் உறையாதுப் பரத்தையுடன் பயின்று வந்த புறத்தொழுக்கத் தினைச் சிலபொழுது மறைத்தும், சிலபொழுது புறத்தொழுக்கம் தலைமக்களுக்கு அமைந்தவொரு ஒழுக்கமென்று ஊடல் தீர்த்தலும் ஆகியச் செயல்களை விளக்கவல்லப் பொழுதாக விடியல் சிறப்புறக் கூறப்பெறுகின்றது.

### 2.5. நண்பகல்

காலை முதல் மாலை வரையிலானக் காலம் பகல் எனப்படுகிறது. பகலில் ஒளி செய்வதனால் எல் என்னும் பெயரால் சூரியன் சுட்டப்பெறுகின்றது. ஞாயிறு விளங்கும் காலமாதலால் பகலை ஆக்குபவன் என்னும் பொருளில் பகலவன் என்றுச் சூரியனை அழைக்கப்படுகிறது. பகலில் ஒளி செய்யும் சூரியன் எல் என்றதால் எலலை, எல்லி என்னும் பெயர்கள் பகற்பொழுதுக்கு வழங்கப்படுகின்றன.

பாலைத்திணைக்குரியச் சிறுபொழுதாக நண்பகல் குறிப்பிடப்படுகின்றது. நண்பகல் 10 மணிமுதல் 2 மணி வரையிலான 10 நாழிகைப் பொழுதாகும்.

**"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு**
**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"**[54]

**(தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 11)**

என்று தொல்காப்பியம் நவில்கின்றது.

### 2.5.1. நண்பகலுக்குரியப் பெயர்கள்

நண்பகல் பெரும்பாலும் பகல் என்றப் பெயரில் குறிக்கப்படுகிறது. நாள் என்னும் பெயர்க் கொண்டும் பகல் அழைக்கப்படுகின்றது. எல், எல்லை, எல்லி என்றும் பகற்பொழுது ஆங்காங்கே குறிப்பிடப்பெறுகின்றது.

**2.5.1.1. எல்லை**

எல்லை என்பதற்குப் பகற்பொழுது என்னும் ஒரு பொருள் உண்டு. கரிகாற் பெருவளத்தான் பொருநனுக்குக் கொடுத்த உணவினை போற்றும் வகையில் அமைந்தப் பாடல் எல்லை என்பதற்குப் பகல் என்னும் பொருளைத் தருகின்றது. மன்னன் எம்மோடு உடனுறைந்து, இனிதாக இருந்து இரவும் பகலும் இறைச்சியை மென்றதால் எம் பற்கள் முனை மழுங்கியது. இதனை,

**"கொல்லை உழுகொழு ஏய்ப்ப, பல்லே**
**எல்லையும் இரவும் ஊன்தின்று மழுங்கி"[55]**

***(பொருநராற்றுப்படை, அடிகள் 117-118)***

என்னும் அடிகள் எல்லையைப் பகல் என்றுக் குறிப்படுகிறது.

**2.5.1.2. நாள்**

நண்பகற்பொழுது நாள் என்றச் சொல் கொண்டு அழைக்கப்பெறுதல் உண்டு. பாலை நிலத்தின்கண் தலைவனுடன் சென்றத் தலைவியின் நடையாற்றலைத் தலைவன் வியந்து கூறும் விதத்தினை,

**"வேனிற் பாதிரிக் கூனி மாமலர்**
**நிறைவாய் வாடல் நாறும் நாள் சுரம்[56]**

***(அகநானூறு, பாடல் எண் 257, அடிகள் 1-2)***

எனும் அகநானூற்றுப் பாடல் கூறுகின்றது. வேனில் காலத்தின் பகற்பொழுதை நாள் என்றுக் குறிப்பிடுகின்றது. பாதிரியின் தேன் பொதிந்த வாடற் பூக்கள் மணக்கின்ற வேனிற்காலத்தின் பகற்பொழுதில் பரல்கற்கள் ஒலி செய்யும் சிலம்பணிந்த நின் சிற்றடிகள் சிவக்குமாறு எம்முடன் இணைந்து நடந்து வருகின்றாய் என்றுத் தலைவன் தலைவியைக் கூறி வியக்கின்றான்.

**2.5.1.3. பகல்**

நண்பகற்பொழுது பகல் எனக் குறிப்பிடப்படுகிறது. பகலிலும் இரவிலும் இடைவிடாது மேகம் மழையைத் தந்ததால் ஏற்பட்ட வாடைக்காற்றினால் காதலர் இணைந்ததை,

**"பகலினும் அகலாதாகி யாமம்"[57]**

***(அகநானூறு, பாடல் எண் 305, அடி 1)***

என்று அகநானூறு விளக்குகின்றது.

கதிரவன் காயும் பகற்பொழுதில் வெப்பம் மிகுந்தக் காட்டினைக் கடந்துத் தலைவியை விட்டுப் பிரியும் தலைவனின் எண்ணத்தைக் கூறும் பாலைக்கலிப் பாடல் பகற்பொழுதை,

**"பகல்முனி வெஞ்சுரம் உள்ளல் அறிந்தேன்**
**மகன்அல்லை மன்ற, இனி"[58]**

***(கலித்தொகை, பாடல் எண் 19, அடிகள் 5-6)***

என்றுக் கூறுகின்றது.

### *2.5.1.4. பானாள்*

பானாள் என்றச் சொல்லுக்கு,

**"அரைநாள், அர்த்தசாமம், மத்தியான"[59]**

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 223)***

என்று யாழ்பாண அகராதி பொருள் தருகின்றது. பானாள் என்றச் சொல் பெரும்பாலும் நள்ளிரவுப் பொழுதினைக் குறிக்க வழங்குவதாகும். பகற்பொழுதினைக் குறிக்க வருதல் சிறுபான்மையாகும். காக்கை, பகலில் உலாவும் பறவை. அது தன் இரை தேடும் காலம், பகலின் நடுப்பகுதியாகும். பகற்பொழுது முழுவதும் தன் இரையைத் தேடி காக்கை, நெய்தலின் இலைகளை கலக்கி துழாவிக் கொண்டிருப்பதை,

**"களிற்றுச்செவி அன்ன பாசடை மயக்கி**
**பனிக்கழி துழவும் பானாள் தனித்துஓர்"[60]**

***(குறுந்தொகை, பாடல் எண் 246, அடிகள் 2-3)***

என்றுக் குறுந்தொகை எடுத்துக்காட்டுகிறது.

### *2.5.2. நண்பகல் பொழுதின் தன்மை*

பகற்பொழுதில் வெயில் முனைப்பாக எரிக்கும் தன்மை உடையது. பாலைத் திணைக்குரியச் சிறுபொழுதாக நண்பகலைப் பொருந்திக் காட்டும் நச்சினார்க்கினியர்

**"காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமைகூரச் சோலை தேம்பி கூவல்மாறி, நீரும் நிழலும் இன்றி நிலம்பயர் துறந்து, புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெருகுவதொரு காலமாதலின் இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலும் சிறப்புடைத்தாயிற்று."[61]**

***(நச்சினார்க்கினியர் உரை, தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 9)***

என்பர். இக்கூற்றின் படி வேனிற்காலம் காலை, மாலை கூட நண்பகல் போல கொடுமையான வெப்பம் உடையதாகக் கருதப்பட்டுள்ளது.

### *2.5.2.1. வெம்மை*

*நண்பகற்பொழுதில் வெயிலானது வெப்பம் மிகுந்தக் கதிர்களை வீசுவதுண்டு. மூன்றுக் கண்களை உடையச் சிவபெருமான் சினந்து அவுணர்களின் கோட்டையைத் தெய்வக்கணையால் எரித்தார். அப்போது அவர்முகம் கொண்ட வெம்மை போல் ஞாயிறானது சுடுகின்றது என்றுக் கலித்தொகை,*

***"மடங்கல் போல் சினைஇ மாயம்செய் அவுணரைக்***
***கடந்து அடு முன்பொடு முக்கண்ணான் மூஎயிலும்***
***உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலின்"[62]***

***(கலித்தொகை, பாடல் எண் 2, அடிகள் 3-5)***

*எனும் பாடலில் நண்பகலில் வெப்பத்தின் தன்மையை விளக்குகின்றது.*

*ஞாயிற்றின் மிக்க ஒளியினால் தன்னுடைய ஒளி கெடுகின்ற உச்சிக்காலத்து மதியைப் போல தலைவியின் ஒளிநலம் குறைந்ததைக் கூறும் பொருட்டுப் பகற் பொழுதின் வெப்பத்தன்மையை,*

***"ஒண்சுடர் ஞாயிற்று விளக்கத்தான் ஒளிசாம்பும்***
***நண்பகல் மதியம்போல் நலம்சாய்ந்த அணியாட்டு"[63]***

***(கலித்தொகை, பாடல் எண் 121, அடிகள் 17-18)***

*என்றுப் பாம்பின் தோல் நிமிர்ந்து நின்றதைப் போல் வெப்பம் மிகுந்தக் கனலுடன் கோடையின் நண்பகல் பொழுது விளங்குகிறது.*

***"யாங்கு அறிந்தனர் கொல் தோழி பாம்பின்***
***உரி நிமிர்ந்தன்ன உருப்பு அவர் அமையத்து"[64]***

***(குறுந்தொகை, பாடல் எண் 154, அடிகள் 1-2)***

*எனும் பாடல் பாலையில் வேனிற்காலத்து, நண்பகல் பொழுதில் கதிரவனின் கொடியக் கதிர்கள் வீசும் தோற்றம், பாம்பின் உரித்தத் தோல்நிமிர்ந்து நின்றதற்கு உவமிக்கப்படுகிறது.*

### *2.5.3. நண்பகல் நிகழ்வுகள்*

*அனைத்து உயிர்களும் இயக்கம் பெற்றிருக்கும் நண்பகல் பொழுதில் பல்வேறு நிகழ்வுகள் அரங்கேறுகின்றன.*

### *2.5.3.1. தினைப்புனம் காத்தல்*

*சிறியத் தினைகளை உண்பதற்காக வரும் கிளிகளிடமிருந்துத் தினைக் கதிர்களைக் காக்க, பெண்கள் பகற்பொழுதில் தினைப்புனம் காக்கச் செல்வர் என்பதை,*

**"நல்கோட் சிறிறுதினைப் படுபுள் ஓப்பி**

**எல்பட வந்தியர் என நீ விடுத்தலின்"[65]**

**(குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 38-39)**

என்னும் பாடல்கள் அடிகள் கூறுகின்றன.

### 2.5.3.2. கடலாடுதல்

மகளிர் தோழியர்க் கூட்டத்தோடு சேர்ந்துப் பகற்பொழுதில் கடலில் விளையாடுவர். கடற்கரைச் சோலையில் சிற்றில் புனைவர். சிறுசோறு ஆக்கிக் குவித்து விளையாடுவர். இச்செய்தியினை,

**"கடுஞ்சூள் தருகுவள் நினக்கே கானல்**

**தாடலை ஆயமொடு கடல் உடன்ஆடியும்**

**சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்**

**வருந்திய வருத்தம் தீர, யாம் சிறிது**

**இருந்தனமாக எய்த வந்து**

**தடமென் பணைத்தோள் மடநல்லீரே**

**எல்லும் எல்லின்று அசைவு மிக உடையேன்"[66]**

**(அகநானூறு, பாடல் எண் 110, அடிகள் 5-11)**

எனும் அகப்பாடல் உணர்த்துகின்றது.

### 2.5.3.3. புனலாடுதல்

வையையில் புதுப்புனல் வரும் காலத்து ஆடவரும் மகளிரும் புதுப்புனலாடுதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதைப் பரிபாடல் வையைப் பற்றிக் கூறும் போது,

**"கண்ணியர்தாரர், கமழ் நறுங்கோதையர்**

**பண்ணிய ஈகைப் பயன்கொள்வான் ஆடலால்**

**நாள்நாள் உரையும் நறுஞ்சாந்தும் சோறையும்"[67]**

**(பரிபாடல், பாடல் எண் 16, அடிகள் 3-5)**

என்று உணர்த்துகின்றது. புனலாட்டுத் தலைவியுடனும் காமக்கிழத்தி, பரத்தை போன்றோருடன் நிகழும். பரத்தையிற் பிரிந்து வந்தத் தலைவன் தான் காலம் தாழ்த்தி வந்தமைக்குக் காரணம் புதுப்புனல் ஆடியதனால் என்கிறான். பகற்பொழுதிலே புது வருவாயையுடையப் புதுப்புனலில் தலைவன் ஆடியதை,

**"நாணுச்சிறை அழித்து நண்பகல் வந்த அவ்**
**பாணர்ப் புதுப்னல் ஆடினாய் முன்மாலை**
**பாணன் புணையாகப் புக்கு"[68]**

***(கலித்தொகை, பாடல் எண் 98, அடிகள் 17-19)***

என்று கலித்தொகை பாடல் குறிப்பிடுகின்றது.

**2.5.3.4. காவல்**

தலைவன் தலைவியைக் காண வருவதலினால் எழும் அலரால், தலைவி காவலுறுகிறாள். தலைவியிடம் பெரிதும் அன்பு கொண்டத் தலைவன் பல மலர்களையுடையக் கடற்கரைச் சோலைக்குப் பகலிலும் வருகின்றான். இக்களவொழுக்கம் தலைவிக்கு இன்பம் கொடுத்தாலும் ஊரில் எழும் அலரால் அவள் காவலுறப் பெற்றதை,

**"அன்பு பெரிது உடைமையின், அளித்தல் வேண்டி**
**பகலும் வருதி பல் பூங்கானல்**
**இன்னீர் ஆகலோ இனிதால் எனின், இவள்**
**அலரின் அருங் கடிப்படுகுவள்"[69]**

***(நற்றிணை, பாடல் எண் 223, அடிகள் 2-5)***

எனும் நற்றிணைப் பாடல் பேசுகின்றது.

**2.5.3.5.ஆற்றியிருத்தல்**

ஆற்றியிருத்தல் என்பதுப் பொறுத்துக் கொண்டிருத்தல் என்றுப் பொருள் படுகிறது. தனக்குத்தானே தேற்றுதல், ஆற்றியிருத்தலாகும். தலைவன் வருவதாக உரைத்தப் பருவம் வந்தும் அவன் வராமையால் தலைவி பெரிதும் வருத்தமுற்றனள். இரவுப் பொழுதெல்லாம் அவர் விடியலில் வருவார் என்று எண்ணி ஆற்றியிருத்தனள். பகற்பொழுது எல்லாம் அவர் பகல் ஒளி மங்கும் மாலையில் வருவார் என ஆற்றியிருந்தனள் என்பதை,

**"வைகா வைகல் வைகவும் வாரார்**
**எல்லா எல்லை எல்லவும் தோன்றார்"[70]**

***(குறுந்தொகை, பாடல் எண் 285, அடிகள் 1-2)***

எனும் குறுந்தொகைப் பாடல் ஒளி மங்காத பகல் பொழுது முடிந்தும் தலைவன் வராததுக் குறித்துத் தலைவி புலம்புவதை உணர்த்துகிறது. பகல் முழுவதும் தலைவனை எண்ணி தலைவி ஆற்றியிருத்தலை மொழிகின்றது.

*தலைவனைக் காண வேண்டும் என்ற எண்ணம் கொண்டத் தலைவி தன் தனிமைக்குப் பகற்பொழுதே துணையாகிறது என்று ஆற்றியிருக்கின்றாள்.*

**"படிவ நெஞ்சமொடு பகல்துணை ஆக**
**நோம்கொல்? அளியள் தானே"[71]**

***(அகநானூறு, பாடல் எண் 287, அடிகள் 2-3)***

*எனும் அகப்பாடல் தலைவி ஆற்றியிருத்தலை உணர்த்துகின்றது.*

***2.5.3.6. தலைவன் செயல்***

*தலைவனின் புறவொழுக்கத்தைக் கூறும் காமக்கிழத்தி பகலில் தலைவனின் செயலைச் சுட்டிக் காட்டுகிறாள்*

**"முன்பகல் தலைக்கூடி நண்பகல் அவள் நீத்து**
**பின்பகல் பிறர்த்தேரும் நெஞ்சமும் ஏமுற்றாய்"[72]**

***(கலித்தொகை, பாடல் எண் 74, அடிகள் 10-11)***

*எனும் கலித்தொகை பாடல் தலைவன், முற்பகலிலே ஒருத்தியுடன் கூடியிருந்தும் நண்பகலிலே அவளை விட்டுப் பிறரிடம் சென்றுவிட்டுப் பிற்பகலிலே வேறொருத்தியைத் தேடுகின்றவன். தலைவன் பரத்தையர் பலரைப் பகற்பொழுதில் நுகரும் தன்மையுடையவன் என்பதைச் சுட்டிக்காட்டுகிறாள்.*

***2.5.3.7. தலைவன் செலவயர்தல்***

*பிரிதலும் பிரிதல் நிமித்தமும் ஆகிய அகஒழுக்கங்களும் நண்பகல் சூழலில் இடம்பெறுகின்றன. அழகியக் குடியிருப்புகளையுடைய எயினர்கள் வாழ்கின்றப் பாலைநிலச் சிற்றூர்களில் தலைவன் பகற்பொழுதில் தங்கி செலவயர்ந்தச் செய்தியினை,*

**"குவிந்த குரம்பை அங்குடிச் சீறூர் படுமணல்**
**இயம்பப் பகலியைந்து"[73]**

***(அகநானூறு, பாடல் எண் 329, அடிகள் 4-5)***

*எனும் அகப்பாடல் குறிக்கின்றது.*

***2.5.3.8. நாள் அங்காடி***

*பகற்பொழுதில் நடைபெறும் கடைவீதி நாளங்காடி என்றுக் குறிக்கப் பெறுகின்றது. பாண்டிய மன்னனது மதுரை மாநகரின் மணங்கமழும் காலைக் கடை வீதியைப் போன்ற மணக்கும் நெற்றியினை உடையவள் தலைவி.*

**"வாடா வேம்பின் வழுதி கூடல்**
**நாள்அங்காடி நாறும் நறுநுதல்"[74]**

***(அகநானூறு, பாடல் எண் 93, அடிகள் 4-5)***

எனும் அகப்பாடல் பகற்பொழுதின் கடைவீதி நாளங்காடி என்றுக் குறிக்கின்றது. பகல் பொழுதில் நடைபெறும் வணிகம் பற்றியச் செய்தியையும் நவில்கின்றது.

### 2.5.3.9. எல்விருந்து

புதியதாக வருவோரை வரவேற்று உணவு அளித்து மகிழ்வித்தல் மரபு. இது பகலில் செய்வதால் பகல்விருந்தாயிற்று. எல்விருந்து என்றும் புலவர் கூறுவர்.

**"கல்கெழு சிறப்பின் நம் ஊர்**
**கல்விரந்து ஆகிப் புகுகம் நாமே"[75]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 396, அடிகள் 4-5)***

எனும் ஐங்குறுநூற்று அடிகள் பகலில் கொடுக்கப்படும் விருந்துப் பற்றியும் விருந்தோம்பல் பற்றியும் குறிப்பிடுகின்றது.

வண்டு மலரின்கண் பகற்பொழுதில் தங்கி விருந்தயர்ந்தன என்று வண்டு மலரில் பகல் உணவுக்காகத் தங்குதலை பகல் விருந்துக்காகத் தங்குவதாக,

**"ஆங்கு அவை விருந்து ஆற்ற பகல்அல்கு கங்குலான்"[76]**

***(கலித்தொகை, பாடல் எண் 66, அடி 4)***

எனும் பாடல் மொழிகின்றது.

### 2.5.3.10. வேட்டையாடுதல்

பகற்பொழுதில் மக்கள் வேட்டையாடுவதில் ஈடுபட்டுள்ளனர். கல்லென்னும் ஓசையையுடையக் காட்டின்கண் கடமானை வேட்டைக்காகத் துரத்திப் பகற்பொழுதுக் கழிந்தன என்பதைக் குறுந்தொகையில்,

**"கல்லென் கானத்தைக் கடமா ஆட்டி**
**எல்லும் எல்லின்று ஞமலியும் இளைத்தன்"[77]**

***(குறுந்தொகை, பாடல் எண் 179, அடிகள் 1-2)***

என்னும் அடிகள் விளக்குகின்றன. எல் என்பதற்குப் பகற்பொழுது என்றுப் பொருள் படுகிறது.

### 2.5.4. பகற்பண்

பகற்பொழுதில் வாசிக்கப்படும் பண் பகற்பண். பாலையாழில் வாசிக்கப் பெறும் நட்டராகம் என்பது பகற்பண்களில் ஒன்று. இது "நைவளம்" என்றும் குறிக்கப் பெறும்.

காதல் உணர்வினை உடைய வண்டின் ஓசையானது நட்டராகம் என்னும் பண்ணை ஒத்து இருந்தது. நட்டராகம் என்னும் பண்ணின் இயல்பு அமைந்தப் பாலையாழை வாசிக்கவல்ல ஒருவன் தன் கையினால் இசைக்கும் நரம்பின் ஓசை போன்று வண்டின் ஓசை உள்ளது என்பதை,

**"நைவளம் பழுநிய பாலை வல்லோன்**

**கைவர் நரம்பின் இம்மென இமிரும்"[78]**

***(குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 147-148)***

*என்னும் அடிகள் பகலில் இசைக்கப்படும் பண்ணினைப் பற்றி நவில்கின்றது.*

### *2.5.5. பகற்குறி*

*தலைவனும் தலைவியும் பகற்பொழுதில் தம்முள் கூடும் கூட்டம் பகற்குறி ஆகும். களவுப் புணர்ச்சியில் தலைவன் தலைவியர் சந்திக்கும் வேளையும் குறிப்பிடப்படும் இடமும் பகற்குறி என்றழைக்கப்படுகின்றது.*

*எல்லை என்றச் சொல்லால் குறிக்கப்படும் பகற்பொழுதில் தலைவனும் தலைவியும் கூடி இன்பம் துய்ப்பர். இது பகற்குறி வேண்டல், பகற்குறி இன்பம் துய்த்தல், பகற்குறி இடையீடு, பகற்குறி மறுத்தல் என்னும் நிலைகளில் அமைகின்றது.*

### *2.5.5.1. பகற்குறி வேண்டல்*

*பகற்குறியில் பெறும் இன்பங்களைக் கூறித் தலைவனைப் பகற்குறிக்கு வேண்டுவள் தலைவி. பகற்பொழுதின் இன்பச் சூழல்களைப் புலப்படுத்தும் அகநானூற்றுப் பாடல் பகற்பொழுதில் தலைவன் தலைவி சந்திப்பை விளக்குகிறது. இரவுக்குறியை மறுத்து பகலில் வரும்படி கூறும் தலைவி, பகற்பொழுது வருவாயானால் காவலர் கண்களுக்கு எதிர்ப்படாது மறைந்து செல்லலாம் என்றுக் கூறுகின்றாள்.*

**"தேம்பாய ஒண்பூ நறும்பல அடைச்சிய**

**கூந்தல் மெல்அணைத்துஞ்சி பொழுதுபட**

**காவலர்க்கரந்து,கடிபுனம் துழைஇய"[79]**

***(அகநானூறு, பாடல் எண் 308, அடிகள் 11-13)***

*இரவின் துன்பங்களைக் கூறி, துன்பங்கள் அகன்று நிற்கும் பகற்பொழுதில் வந்து காணுமாறுத் தலைவி கூறுவதை நற்றிணை கூறுகின்றது. பலநாளும் சிறியத் தினைப்புனம் காப்பதற்காகச் செல்கின்றோம். அத்தினைப் புனத்தின் கண்ணே இரவின் பல்வேறு துன்பங்கள் அகலுமாறு பகலில் வருவாயாக என்பதை,*

**"சிறுதினை காக்குவம் சேறும் அதனால்**

**பகல் வந்தீமோ, பல்படல் அகல"[80]**

***(நற்றிணை, பாடல் எண் 156, அடிகள் 5-6)***

தலைவியின் ஆற்றாமைக் காரணமாகத் தோழி, தலைவனைத் தம் ஊரின்கண் வருமாறு கூறும் விதமாகப் பகற்குறி வேண்டல் நிகழ்கிறது. இருவரிடத்துப் பலநாளாக இரந்து வந்த வருத்தம் நீங்கப் பகற்பொழுதில் வந்துப் புன்னை மரங்களையுடையச் சோலையின் குளிர்ந்த நிழலிலே பொழுதை இனிமையாகக் கழிப்பாய் என்கிறாள் தோழி.

### 2.5.5.2. பகற்குறி இன்பம்

பகற்குறியின் போது தான் இன்பம் துய்த்தத் தன்மையைக் கூறி, அவ்வின்பம் முடித்துத் தலைவன் திரும்புதலை விரும்பாதத் தலைவியின் நிலையைக் கூறும் அகநானூறு, பகற்குறியில் துய்த்த இன்பம் குறித்து,

**"பொம்மற் படுதிரை கம்மென உடைதரும்**
**மரன் ஓங்கு ஒரு சிறை பல பாராட்டி**
**எல்லை எம்மொடு கழிப்பி, எல்உற"[81]**

**(அகநானூறு, பாடல் எண் 200, அடிகள் 8-10)**

என்றுப் புலப்படுத்துகின்றது. பகற்குறியில் கூடியத் தலைவன் தலைவியின் மேனி அழகுக் கெடுமாறுப் பிரிந்துச் சென்றதை நற்றிணை,

**"பல் பூங்கானல் பகற்குறி வந்து, நம்**
**மெய்கவின் சிதையப் பெயர்ந்தனன்"[82]**

**(நற்றிணை, பாடல் எண் 235, அடிகள் 4-5)**

என்றுக் குறிப்பிடுகின்றது. தலைவன் பகற்குறிக் கண் வரும் மலைப் பக்கத்தில் தினைப்புனம் காக்கச் செல்லுவதால் பகற்குறி இன்பத்தினை எண்ணி மகிழும் தலைவி உள்ளம் குறித்து,

**"இனிதின் இனிது தலைப்படும் என்பது**
**இதுகொல்? வாழிதோழி - காதலர்**
**வருகுறி செய்த வரையகச் சிறு தினைச்**
**செவ்வாய் பாசினம் கடீஇயர் கொடிச்சி"[83]**

**(நற்றிணை, பாடல் எண் 134, அடிகள் 1-4)**

என்று நற்றிணை நயம்பட உரைக்கின்றது.

### 2.5.5.3. பகற்குறி இடையீடு

பகற்குறி இடையீடு எல்இடையீடு என்றும் அழைக்கப்படுகின்றது. பகலில் வரக்கூடிய அலர்களை எடுத்துக் கூறித் தலைவியை மணக்குமாறு தோழி தலைவனை வற்புறுத்துவாள். பகற்குறி வரும் தலைவனை இரவில் வருமாறு

வேண்டுகின்றாள். பகற்பொழுதில் தலைவியும் தலைவனும் கூடும் கூட்டத்திற்கு ஏற்படும் இடையூறுகள் பகற்குறி இடையீடு எனப்படும். தலைவி வீட்டில் இற்செறிக்கப்படுதல், ஊரில் எழும் அலர் இவற்றினால் பகற்குறியில் இடையீட்டினை ஏற்படுத்துகிறது. பகற்குறி இடையீடு பட்டதை எண்ணித் தலைவி வருத்தம் கொள்கிறாள்.

**"இயன்முருகொப்பினை வயநாய் பற்படப்**
**பகல்வரின் கங்கை அஞ்சுதும் இகல்கொள்"[84]**

**(அகநானூறு, பாடல் எண் 118, அடிகள் 5-6)**

என்னும் அடிகள் பகற்பொழுதில் தலைவன் வந்தால் ஊரில் எழும் அலருக்கு யான் அஞ்சுவேன் என்பதைத் தலைவி உணர்த்தும் வகையில் பகற்குறி இடையீடுபட்டதைக் கூறுகிறது.

பகற்குறிக்கண் வந்தத் தலைவனுக்குத் தலைவி இற்செறிக்கப்பட்டமையைத் தோழி உணர்த்தி நிற்பதை நற்றிணைப் பாடல் உரைக்கின்றது.

**"பல்பூங்கானல் பகற்குறி மரீஇச்**
**செவ்வல் கொண்க - செறிந்தனள் யாயே?"[85]**

**(நற்றிணை, பாடல் எண் 258, அடிகள் 1-2)**

என்னும் அடிகள் தலைவனை நாளும் பகற்குறியில் சந்திக்கும் தலைவி இடையீட்டினால் அவனைப் பிரிந்துச் செல்ல அஞ்சினாள் என்றுக் குறிப்பிடுகின்றது.

### 2.6. எற்பாடு

எற்பாடு என்றால் கதிரவன் மறைவு ஆகும். ஞாயிறு படுதல் என்பதற்குப் பட்டுப்போதல், வீழ்தல், அழிதல் என்றுப்பொருள் கொள்ளப்படுகிறது. கதிர்படும் காலம், பொழுது பட என்னும் சொற்களில் படுதல் என்பதற்கு மறைதல் என்னும் பொருளைத் தருகிறது. 2 மணி முதல் 6 மணிவரையிலான நாள் கூறு எற்பாடு எனக் குறிக்கப்படுகிறது. எற்பாடு என்பது நெய்தல் திணைக்குரியச் சிறுபொழுதாகும். தொல்காப்பியர்,

**"எற்பாடு**
**நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்"[86]**

**(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 10)**

என்கிறார். எற்பாட்டின் தோற்றம், அக்காலத்தில் உண்டாகும் நிகழ்ச்சிகள், எற்பாட்டுக்குப் பின்வரும் மாலையின் வரவு, மதியத்தின் வரவு, பிரிவுற்ற அகவுணர்வுக் கொண்ட மாந்தர்க்கு எற்பாடு தரும் துயரம் போன்றவற்றைப் பேசுகின்றன.

**2.6.1. எற்பாட்டின் தோற்றம்**

*கதிரவன் மறையும் பொழுதாக எற்பாடு தோற்றம் பெறுகிறது. எற்பாடு வெயிலின் வெம்மைத் தன்மை குறைந்துக் காணப்படும் நேரம். கதிரவன் பகல் முழுவதும் தன் கதிர்களை வீசுகின்றப் பொழுது நண்பகல். கதிர் மறைந்து பகல்பொழுது மறைந்து எற்பாடு தோன்றும் என்பதைக் கலித்தொகையில்,*

**"கல்சேர்பு ஞாயிறு கதிர்வாங்கி மறைதலின்"[87]**

**(கலித்தொகை, பாடல் எண் 134, அடி 4)**

*என்று எற்பாட்டின் தோற்றம் குறித்தச் செய்தியை விளக்கிக்கூறுகின்றது.*

*ஒளிவீசும் கதிர்களை உடைய ஞாயிறானது குன்றினைச் சேர்ந்து மறைதலால் உலகெல்லாம் கதிர்களின் வெப்பம் குறைந்து தண்மை பொருந்திய ஒளி பரக்கின்றத் தன்மை அடைந்ததை,*

**"ஒண்சுடர் கல்சேர உலகு ஊருந்தகையது**
**தெண்கடல் அழுவத்துத் திரைநீக்கா எழுதரூஉம்**
**தண் கதிர்மதியத்து அணிநிலா நிரைத்தர"[88]**

**(கலித்தொகை, பாடல் எண் 121, அடிகள் 1-3)**

*அழகிய மேற்றிசை மலையிடத்து ஞாயிறு சென்றுச் சேர்ந்தது. ஞாயிறு இன்றித் தனிமையுற்று வருந்திய உலகை நோக்கி தன்னையே உலகம் கொண்டாடுமாறு மதி அழகுடன் எழுவதற்குரிய நேரம் எற்பாடு என்பதை,*

**"பொன்மலை சுடர்சேர, புலம்பிய இடன்நோக்கி**
**தன்மலைந்து உலகு ஏத்த, தகைமதி ஏர்தர"[89]**

**(கலித்தொகை, பாடல் எண் 126, அடிகள் 1-2)**

*என்றுக் கூறும் கலித்தொகை உலகே கொண்டாடும் வண்ணம் மதி எழுந்து எற்பாட்டுக் காலம் தோன்றியதைக் கூறுகிறது.*

**2.6.2. எற்பாட்டின் தன்மை**

*எற்பாடு நெய்தலுக்குரியச் சிறுபொழுதாகக் கொள்ளப்படுகிறது. நெய்தலுக்கு எற்பாட்டுப் பொழுதினைப் பொருந்திக் கூறும் நச்சினார்க்கினியர்,*

**"வெஞ்சுடர் வெப்பந்தீரத் தண்ணறுஞ்சோலை தாழ்ந்து நிழற் செய்யவும் தண்பதம்பட்ட தெண்கழி மேய்ந்து பல்வேறு வகைப்பட்ட புள்ளெல்லாம் குடம்பை நோக்கி உடங்கு பெயரவும், புன்னை முதலிய பூவின் நாற்றம் முன்னின்று கஞற்றவும், நெடுந்திரை அழுவத்து நிலாக்கதிர் பரப்பவும் காதல் கைம்மிக்குக் கடற்கண்ணும் கானற்கண்ணும் நிறைகடந்து வெளிப்பட்டு உரைத்தலின், ஆண்டுக் காமக்குறிப்பு வெளிப்பட்டு**

***இரங்கற்பொருள் சிறத்தலின் எற்பாடு நெய்தற்கு வந்தது”[90]***

***(நச்சினார்க்கினியர் உரை, தொல்காப்பியம் பொருளதிகாரம், நூற்பா 8)***

என்பார்.

கதிரவன் மறையும் பொழுதில் புள்ளினங்கள் தத்தம் துணையோடு வசிக்கவும் தன் குஞ்சுகளைக் காணவும் பெயர்ந்துச் செல்வன. பூவின் மணமும் நிலவின் ஒளியும் வெளிப்படத்தயராகும் எற்பாட்டின் தன்மையை சங்க இலக்கியங்கள் பல்வேறு சூழலில் புலப்படுத்துகிறது.

எற்பாடு என்பதற்கு,

***“மாலைப்பொழுதுக்கு முன் பத்து நாழிகை நேரம்”[91]***

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 173)***

என்று யாழ்ப்பாண அகராதி பொருள் தருகின்றது. எற்பாட்டுக் காலத்தில் பூவுதிர்ந்தக் கொடி போல ஞாயிற்றை இழந்த பொழுது, ஞாயிறு இல்லாதப் பொழுது தனித்து நின்றுத் தோற்றப்பொலிவுக் குன்றி இருந்ததை,

***“ஞாயிறு ஞான்று கதிர் மழுங்குகின்றே எல்லீயும்***
***பூவீ கொடியிற் புலம்பு அடைந்தன்றே”[92]***

***(நற்றிணை, பாடல் எண் 218, அடிகள் 1-2)***

என்று நற்றிணை கூறுகின்றது. ஞாயிறு மறைந்த எற்பாட்டுக் காலம் வெறிச்சென்று இருந்த தன்மையை உணர்த்துகிறது.

கதிரவன் குன்றினைச் சார்தலினால் சக்கரப் படையுடைய மாயோனைப் போல் எற்பாட்டுக்குப் பின் இருள் பரவியதை,

***“அகன்ஞாலம் விளக்குந்தன் பல்கதிர் வாயாகப்***
***பகல் நுடங்கியது போலப் படுசுடர் கல்சேர***
***இகன் மிகுநேமியான் நிறம்போல இருள்இவர”[93]***

***(கலித்தொகை, பாடல் எண் 119, அடிகள் 1-3)***

என்றுக் கலித்தொகை இயம்புகின்றது.

***2.6.2.1. பகலொழிந்த காலம்***

பகற்பொழுதானது அனைத்துத் தொழிலும் நடைபெறும் பொழுதாகும். பகல் முழுவதும் இறாமீன் உணக்கலை உண்ணவரும் காக்கைகளை விரட்டுதலில் பகற்பொழுது நீங்கியதைக் கூறும் நற்றிணை,

***“படுபுள் ஒப்பலின் பகல் மாய்ந்தன்றே”[94]***

***(நற்றிணை, பாடல் எண் 49, அடி 4)***

என்றுக்கூறி, பகலானது ஒழிந்தக் காலமே எற்பாடு என்பதை உணர்த்துகின்றது.

பிரிவு ஆற்றாதத் தலைவி நாணம் கடந்து உள்ளம் கலங்கிப் பொழுதொடு புலம்புகின்றாள். ஞாயிறே, நீ குவிந்து, செல்லும் பல கதிர்களையும் ஒடுக்கிப் பகல் ஒழியுமாறு செய்து விடாதே. சில கதிர்களையாவது விட்டுச் செல் என்கிறாள்.

**"பல்கதிர் சாம்பிப் பகலொழியப் பட்பீமோ**

**செல்கதிர் ஞாயிறே நீ"[95]**

***(கலித்தொகை, பாடல் எண் 147, அடிகள் 34-35)***

பகல் முடிந்து மாலை வந்தால் பிரிவுத்துன்பம் அதிகரிக்கும். மாலைக்கு முந்தைய எற்பாட்டில் மாலையை எண்ணி தலைவி வருந்தும் தன்மையைக் கூறும் கலித்தொகை எற்பட்டினை பகலொழிந்தக் காலம் என்றுப் பேசுகின்றது.

### 2.6.2.2. துயர் தரும் எற்பாடு

ஞாயிறு படும் காலத்தே தனித்திருக்க இயலாதத் தலைவி புலம்புகிறாள். ஞாயிறு ஒளி மழுங்கி மாலைக்காலம் வரவே துன்பம் மிகுதலின், ஞாயிறு துன்பம் பயந்தது என்றனள். சூரியன் ஒளி மழுங்கித் தலைவிக்குத் துயரத்தைத் தந்தபொழுது எற்பாடு என்பதை,

**"இலங்கு கதிர் மழுங்கி, எல் விசும்பு படர**

**புலம்பு தந்தன்றே புகன்று செய் மண்டிலம்"[96]**

***(நற்றிணை, பாடல் எண் 152, அடிகள் 3-4)***

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன.

கதிரவன் வெப்பம் நீங்கி குன்றை அடைதலால் தலைவனைப் பிரிந்தத் தலைவியின் துன்பம் அதிகமாகின்றது.

**"சுடர் சினந் தணிந்து குன்றஞ்சேரப்**

**படர் சுமந்தெழுதரு பையுண் மாலை"[97]**

***(குறுந்தொகை, பாடல் எண்195, அடிகள் 1-2)***

எனும் குறுந்தொகை அடிகள் விளக்குகின்றன.

### 2.6.3. எற்பாட்டின் நிகழ்வுகள்

ஞாயிறு படுதலின் போதில் நிகழும் நிகழ்ச்சிகளாக, ஞாயிறு மேலைத் திசையில் மறைவதும் அப்போது புட்களின் ஆரவாரம் ஒடுங்குவதுமான எற்பாட்டின் நிகழ்வுகளை,

**"விரிகதிர் ஞாயிறும் குடக்கு வாங்கும்மே"[98]**

***(நற்றிணை, பாடல் எண் 398, அடி 2)***

என்று நற்றிணை அழகுற உணர்த்துகின்றது.

**2.6.3.1. வெம்மை தணிதல்**

கடுமையானக் கதிர்களை உடையக் கதிரவனும் மேற்கே மலையிடை மறைந்தான் என,

**"கடுங்கதிர ஞாயிறு மலை மறைந்தன்றே"[99]**

**(நற்றிணை, பாடல் எண் 338, அடி 1)**

எனும் அடி ஞாயிற்றின் கடும்வெப்பம் குறைந்த ஞாயிறு மேல்திசையில் மறையும் எற்பாட்டினைப் பேசுகின்றது.

**2.6.3.2. பொலிவிழத்தல்**

பறவைகள், தங்கள் வசிக்கும் கூடுகளில் புகுந்துப் புலம்புவதும் கடல்தாமரை முதலியப் பகலில் பூக்கும் பூக்களும் கூம்பின. ஆகாயமும் ஞாயிறு நீங்கியதால் தலைவியைப் போன்று மயக்கம் கொண்டது போல் பொலிவிழந்து நிற்கும் எற்பாட்டு நிகழ்வை,

**"புள்ளும் புலம்பின பூவும் கூம்பின**
**கானலும் புலம்புநனி உடைத்தே வானமும்**
**நம்மே போலும் மமமர்த்து ஆகி**
**எல்லை கழியப் புல்லென்றன்றே"[100]**

**(குறுந்தொகை, பாடல் எண் 310, அடிகள் 1-4)**

என்றுக் கூறுகின்றது.

**2.6.3.3. நெய்தல் கூம்புதல்**

நெய்தல் நிலத்திற்கு அழகைச் சேர்க்கும் இடப்பகுதியாகத் துறை என்னும் இயற்கை இடப்பகுதி அமையும். கடற்கரையை அடுத்துச் செறிந்திருக்கின்ற இத்துறையிடங்கள் நீர்வளத்தாலும், மலர் வளத்தாலும் பலபடப் புனையப் படுகின்றன.

நெய்தல் நிலத்தில் சில மலர்கள் கூம்பும் காலமாக எற்பாடு திகழ்வதை,

**"எல்லை சென்றபின், மலரும் கூம்பின"[101]**

**(நற்றிணை, பாடல் எண் 385, அடி1)**

என்னும் நற்றிணை அடி குறிப்பிடுகின்றது.

தலைவன் பகற்குறி வந்து மீண்டுச் சென்றான். அவன் செல்லும்பொழுதுத் தலைவன் தேரும் கண்ணில் படாதவாறு மறையும் பொழுதாகும். அப்பொழுதில், நெய்தல் மலர் கூம்ப, நிழல்கள் கிழக்கு திசையை அடைய, மேற்கிலுள்ள கதிர் மறையும் குன்றில் சென்று, சேருகின்றச் சூரிய வட்டமும் சிவந்த நிறமுற்று நிலத்தில், தான் பரப்பிய வெம்மை குறையும் காலம் என்று எற்பாட்டு பொழுதினை,

**"நெய்தல் கூம்ப, நிழல் குணக்கு ஒழுக**
**கல்சேர் மண்டிலம் சிவந்து நிலம் தணிய**
**பல்பூங் கானலும் அலகின்றன்றே"[102]**

***(நற்றிணை, பாடல் எண் 187, அடிகள் 1-3)***

என்று நற்றிணை நவில்கின்றது.

கதிரவனின் வெம்மை குறையும் காலப்பொழுது எற்பாடு என்றுக் குறிக்கப் படுகின்றது. பகற்பொழுதின் நடுக்கூறாக விளங்கும் எற்பாடு பிரிந்தார்க்கும் துன்பத்தைத் தரும் மாலையாகக் கொண்டு வருவதாகக் கொள்ளப்படுகிறது. பிரிந்தோர் எற்பாடு கண்டு இன்னும் சிறிது நேரத்தில் மாலை வந்துவிடுமே என்றுக் கலக்கத்தோடு கழிக்கும் காலமாகக் காட்டப்படுகிறது. எல் வீழ்வது போல் மக்களின் அன்றாடக் கடமைகளை முடிக்க எத்தனிக்கும் பொழுதாக அமைவதைக் காணமுடிகிறது.

### 2.7. மாலை

மாலைக்காலம் 6 மணிமுதல் 10 மணிவரையிலான 10 நாழிகைப் பொழுதாகும். மாலைக்காலம் அந்திப் பொழுது என்றும் அழைக்கப்படும். மாலைக் காலத்தை முன்னந்தி, பின்னந்தி என்றுப் பிரித்துக் கூறுவது மரபு. முன்னந்தி என்பது செவ்வானம் பரந்த அந்தி. பின்னந்தி என்பதுக் கருவானம் பரந்த அந்தி. கம்பராமாயணம்,

**"எரி நிறச் செக்கரு மிருளுங் காட்டலால்**
**அரிய வட்குஅனல் தருமந்தி மாலை"[103]**

***(கம்பராமாயணம், பாடல் எண் 541, அடிகள் 2-3)***

மழை, கூதிர் பருவகாலங்களில் இவ்வந்தியை இனம் பிரித்துக் காணஇயலாதப் போது மக்கள் மலர்கள் மலர்தலின் மூலம் அதனைப் பிரித்தறிகின்றனர். கருப்பொருளாகியப் பயிர் முளைத்தல், மலர்கள் மலர்தல் இவற்றைக் கொண்டும் பொழுது அறியப்படுகின்றது.

மாலைப்பொழுது முல்லை நிலத்திற்குரியதாகக் கூறப்படும். இதனைத் தொல்காப்பியர்,

**"காரும் மாலையும் முல்லை" [104]**

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் நூற்பா 6)***

என்னும் நூற்பாவில் உணர்த்துகின்றார். இளம்பூரணர் மாலை என்பதற்கு இராப்பொழுதின் முதற்கூறு என்று உரை கூறுகின்றார்.

மாலை மிக நீண்டு அமையும் பொழுதாக வர்ணிக்கப்படுகிறது. அந்தி மாலையில் உயிரினங்கள் இருப்பிடம் திரும்பும் இளமாலைப் பொழுதாக அமைகிறது. மாலைப் பொழுதின் வரவும் அதன் இயல்பும் மாலைக்காலத்தில் நிகழும் நிகழ்வும் மாலை காதலுற்றோர்க்குத் துயர் தரும் பொழுதாக

உருவெடுப்பதையும் பற்றியப் பல செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம்பெறுகின்றன.

### 2.7.1. மாலையின் தோற்றம்

மேற்றிசையில் மறையும் கதிரவன் மாலைப்பொழுதில் தன் ஒளிகுன்றி உலகானது இருள்சூழ தோற்றம் பெறுதலை அகநானூறு,

**"எல்வழி அலைக்கும் இருள்கூர் மாலை"[105]**

***(அகநானூறு, பாடல் எண் 77, அடி 14)***

என்றுக் குறிப்பிடுகின்றது.

### 2.7.1.1. செக்கர் வானம்

வானத்தின் மேற்குத்திசையில் சென்று வீழும் ஒளியானது மழுங்கி ஞாயிற்று மண்டலத்தால் உண்டானச் செவ்வானம் கரைந்த மாலைக்காலம் செக்கர் வானம் என்றுக் குறிப்பிடப்படுகின்றது.

**"செல்கதிர் மழுங்கிய உருவ ஞாயிற்றுச்**
**செக்கர் வானஞ் சென்ற பொழுதில்"[106]**

***(அகநானூறு, பாடல் எண்184, அடிகள் 15-16)***

என்றுக் கூறுகின்றது.

### 2.7.1.2. செவ்வந்தி

செக்கர் வானம் தோன்றும் மாலைப் பொழுது செவ்வந்தி என்று அழைக்கப் படுகின்றது. மங்கியச் சூரியக் கதிரானது பொன்னின் நிறமாகத் தோற்றம் பெறுவதைச் செவ்வந்திப் பொழுதாக வர்ணிக்கப்படுகிறது. குற்றம் இல்லாத மான் கூட்டம் மயங்கி நிற்பதும், உலையின்கண் தீயில் வெந்து ஆறிய பொன்போன்ற நிறமுடையவாய்ச் செவ்வந்தியரும்புகள் மலரும் அந்திப் பொழுது என்பதை,

**"மைஇல் மான்இனம் மருளப் பையென**
**வெந்து ஆறு பொன்னின் அந்தி பூப்ப"[107]**

***(அகநானூறு, பாடல் எண் 71, அடிகள் 5-6)***

என்றுக் காட்சிப் படுத்தப்படுகிறது. புறநானூறும்,

**"விசும்பு நீத்தம் இறந்த ஞாயிற்றுப்**
**பசுங்கதிர் மழுகிய சிவந்து வாங்கு அந்தி"[108]**

***(புறநானூறு, பாடல் எண் 376, அடிகள் 1-2)***

எனும் அடிகளில் எடுத்து இயம்புகின்றது.

### *2.7.2. மாலைப்பொழுதின் தன்மை*

*மாலையில் ஆகாயத்தின் நிறமும் தோற்றமும் உலக உயிர்கள் அடையும் மாற்றங்களைக் கூறும் வகையில் அமைந்திருக்கும். மாலைப்பொழுதின் ஓசை, நிலமும் நிலத்தில் உள்ள உயிர்களும் அடையும் இன்ப துன்பங்களைக் கூறும் வகையில் மாலைப்பொழுதின் தன்மை உரைக்கப்படுகின்றது.*

*மாலைப்பொழுது தலைவனோடு கூடிக் கலந்தவர்க்கு இன்பத்தைச் செய்வதையும் துணையைப் பிரிந்திருப்போர்க்குத் துன்பத்தைச் செய்வதுமானத் தன்மையை உடையது என்பதைச் சங்க இலக்கியச் சூழல்கள் வழி விளக்கம் பெறுகின்றது.*

#### *2.7.2.1. கல் என்னும் ஓசை*

*மாலை நேரத்தின் ஓசைதன்மையை கல் என்பதாகும். காட்டிலுள்ள விலங்குகள் எல்லாம் கல் என்ற ஓசையுடையதாய் ஒன்றையொன்று அழைக்கும் என்பதை,*

***"வானம் மாமலை வாய் சூழ்பு கறுப்ப கானம்***
***கல்லென்று இரட்ட, புள்ளினம் ஒலிப்ப"[109]***

***(குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 227-228)***

*என்றுக் குறிப்பிடப்படுகின்றது.*

#### *2.7.2.2. நள் என்னும் ஓசை*

*பறவைகளும் விலங்குகளும் தம் இருப்பிடங்களை அடைவதைக் கண்டத் தலைவி, தான் தன் துணையோடு மாலையில் வசிக்கப் பெறாமைகண்டு கலங்கினாள். தனிமைத் துயருடன் தங்குமாறு நள் என்னும் ஓசையுடன் அன்பில்லாத மாலைப்பொழுது வந்ததைக் குறுந்தொகை,*

***"புள்ளும் மாவும் புலம்பொடு வதிய***
***நள்ளென வந்த நார்இல் மாலை"[110]***

***(குறுந்தொகை, பாடல் எண் 118, அடிகள் 1-2)***

*என்றுக் கூறுகிறது. துணையோடு தங்கும் பறவைகளுக்கும் விலங்குகளுக்கும் மாலை இன்பம் தருவது, அது நள் என்னும் ஓசை கொண்டதை அழகுற உரைக்கின்றது.*

#### *2.7.2.3. அஃறிணை உயிர்களின் இன்பம்*

*ஆனேறு தன்னுடன் விருப்பம் கொண்ட இளையப் பசுவினைத் தழுவியும் கறவைப் பசுக்கள் தன் கன்றுகளை ஒன்றுச் சேர்த்து அழைத்தும் தொழுவங்களில் சென்றுச் சேரும் காலம் மாலைப்பொழுதாகும்.*

***"மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு***
***உடன்நிலை வேட்கையின் மடநாடு தழீஇ***
***ஊர்வயின் பெயரும் பொழுதில், சேர்புஉடன்***
***கன்று பயிர்குரல் மன்று நிறை புத்தரும்***
***ஆபூண்தெண்மணி இது இயம்பு இன்இசை***
***புலம்புகொள் மாலை கேட்டொறும்"[111]***

***(அகநானூறு, பாடல் எண் 64, அடிகள் 11-16)***

எனும் அடிகள் அஃறிணை உயிர்களின் அன்பின் இனிமைத் தன்மையை உணர்த்தும் காட்சிகளைப் புலப்படுத்துகின்றன. அனைத்து உயிர்களுக்கும் காதலும் பாசமும் இயற்கையான உணர்வு என்பதையும் அது வெளிப்படும் பொழுது மாலை என்பதையும் இச்சூழல் வெளிப்படுத்துகின்றது.

பகலைச் செய்த கதிரவன் மலையிடத்து அடைந்தது. உயிர்கள் தத்தம் கடமை உணர்வினால் இணையையும் தன் பிள்ளைகளையும் சேரும் இயல்புடையது. கலைமான் இளமை மிக்கத் தன் இணைமானைத் தழுவிய மாலைப்பொழுதில்,

***"பல்கதிர் மண்டிலம் பகல்செய்து ஆற்றி***
***சேய்உயர் பெருவரைச் சென்று அவண்மறைய***
***பறவை பார்புவயின் அடைய புறவில்***
***மா எடுத்து இரலை மடப்பிணை தழுவ"[112]***

***(நற்றிணை, பாடல் எண் 69, அடிகள் 1-4)***

என்னும் அடிகளால் உரைக்கப்படுகின்றது. சூரியன் பகற்பொழுது முடிந்து, மலையிடத்தே சேர்ந்தது. உயிரினங்கள் எல்லாம் தத்தம் கடமை உணர்வால் தத்தம் இல்லம் சேர்ந்தன. இவற்றுக்கெல்லாம் வீட்டை நினைந்து இன்புறுமாறு மாலைப் பொழுது வந்ததை உணரமுடிகின்றது.

முல்லை நிலத்திற்குரியப் பொழுதாக விளங்கும் மாலைப்பொழுது ஆடுகளின் கூட்டமானதுத் தங்கள் மேயச்சல் முடிந்துத் தொழுவம் நோக்கிச் செல்லும் வேளையாகவும் பார்ப்பன மகளிர் முல்லை மலரைச் சூடும் கார்கால மாலைப் பொழுதாகவும் வந்ததை,

***"செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை***
***பாடுஇன் தெள்மணித் தோடு தலைப்பெயர***
***கானமுல்லைக் கயவாய் அலரி***
***பார்ப்பன மகளிர் சாரற் புறத்து அணிய***
***கல்சுடர் சேரும் கதிர் மாய் மாலை"[113]***

***(நற்றிணை, பாடல் எண் 321. அடிகள் 1-5)***

என்று நற்றிணை இயம்புகின்றது.

**2.7.2.4. மாலையில் நெய்தல் நிலம்**

நிலத்தின் தன்மைகளுக்கேற்ப அங்கு வாழும் உயிர்களும் அவற்றின் செயல்பாடுகளும் அமைவது இயல்பு. நெய்தல் நிலத்தில் வாழும் உயிரினங்களின் செயல்களைக் குறிப்பிட்டு அந்நிலத்தின் மாலைப்பொழுதின் தன்மை உணர்த்தப் படுகின்றது. ஆமைகளும், நண்டுகளும், தன் வளையில் சென்று அடங்குதலும் பறவைகள் உப்பங்கழிகளில் இரைதேடிய வருத்தத்தினால் தம் பிள்ளைகளோடு தங்குதலையும் உடையது என்றுப் பகல் முடிந்த மாலைப்பொழுதின் நெய்தல் நிலக் காட்சியினை,

**"எல்லை சென்ற பின் மலரும் கூம்பின்**
**புலவுநீர் அடைகரை யாமைப் பார்ப்போடு**
**அலவனும் அளைவயிற் செறிந்தன கொடுங்கழி**
**இரைநசை வருத்தம் வீட மரமிசைப்**
**புள்ளும் பிள்ளையொடு வதிந்தன"**[114]

***(நற்றிணை, பாடல் எண் 385, அடிகள் 1-5)***

என்று நற்றிணைப் பாடல் உரைக்கின்றது.

மணற்பகுதியை அடுத்து நீர்த்ததும்பும் அலை ஆர்ப்பரிக்கும் கடற்கரையைப் புலவுநீர் அடைகரை என்றுக் குறித்து அப்பகுதி மாலைவேளை கொண்டக் காட்சியைப் புலப்படுத்துகிறது.

**2.7.2.5. களவுக்கால மாலை**

களவுக் காலத்தில் தலைவன் தலைவியர் சந்திக்கும் பொழுதாக மாலைப் பொழுது விளங்குகிறது. அத்தகைய மாலையில் தலைவன் தலைவிக்கு மலர் சூட்டியதை,

**"ஆய்தொடி அரிவை கூந்தலிற்**
**போது குரல் அணிய வேய்ந்தோயே"**[115]

***(அகநானூறு, பாடல் எண் 104, அடிகள் 15-16)***

என்னும் அடிகள் மூலம் பெறப்படுகின்றது.

**2.7.2.6. கூதிர்கால மாலை**

பனி அரும்பு கூதிர்கால மாலைப்பொழுதை விளக்குகள் எதிர்கொள்ளும் பனி உண்டான மாலைப்பொழுதில் பிரிந்துவாழும் மகளிர் செயலற்று இருப்பர் என்பதை,

**"முரசுமுதல் கொளீஇய மாலை விளக்கின்**
**வெண்கோடு இயம்ப நுண்பனி அரும்பே"**[116]

***(நற்றிணை, பாடல் எண் 58, அடிகள் 6-7)***

எனும் நற்றிணைப் பாடல் உணர்த்துகின்றது.

***2.7.2.7. பிரிவுத் துன்பம்***

*பிரிந்து உறைவார்க்கு எல்லாப் பொழுதும் மாலையைப் போன்றதாகும். எனினும் மாலைப்பொழுதானதுக் காதலரைப் பிரிந்த மகளிர்க்குக் கொல்வது போல் வரும் என்பதை,*

***"யாதுசெய் வாம்கொல்? தோழி - நோதகக்***
***கொலை குறித்தன்ன மாலை"***[117]

***(அகநானூறு, பாடல் எண் 364, அடிகள் 12-13)***

*என்றுக் கூறுகிறது.*

*காதலரைப் பிரிந்து உறைவோர் எதிர்ப்பார்ப்புடன் அவரை நினையும் பொழுது மாலைப்பொழுதாகும். எம் காதலி உள்ளம் உவக்குமாறுத் தேரை விரைந்துச் செலுத்துக என்றுத் தலைவன் கூறுவதாக ஐங்குறுநூறு,*

***"இது மன் பிரிந்தோர் உள்ளும் பொழுதே***
***செறிதொடி உள்ளம் உவப்ப***
***மதியுடை வலவ - ஏமதி தேரே"***[118]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 487)***

*என்னும் அடிகளில் உணர்த்துகிறது. காதலர் ஒருவரையொருவர் எண்ணி உருகி உள்ளும் பொழுது மாலைப்பொழுது என்பதை உணர்த்துகின்றது.*

*பகல் முடிந்தப் பின் வரும் மாலைப்பொழுது மகளிர்க்கு மயக்கம் தருவதாக அமைகிறது. பிரிந்தத் தலைவி பகலானதுக் கடந்துத் தோன்றும் மாலை தனக்குப் பகையாவதைக் கூறும் கலித்தொகை,*

***"மாலைப் பகை தாங்கி யான்?"*** [119]

***(கலித்தொகை, பாடல் எண் 145, அடி 3)***

*எனும் அடியில் விளக்குகிறது.*

*தலைவியின் வருத்தமானது ஆநிரைத் தலையெடுத்துப் பார்த்து வருந்தினாற் போன்ற துயரத்தையுடைய மாலையைப் போன்றது என்பதை உரைக்கும் வண்ணம் குறுந்தொகையில்,*

***"புன்றலை மன்ற நோக்கி மாலை***
***மடக்கட்குழவி அலம் வந்தனன்***
***நோயெம்"***[120]

***(குறுந்தொகை, பாடல் எண்64 , அடிகள் 2-4)***

*எனும் அடிகளில் மாலையின் தன்மையைக் கூறுகிறது.*

*பிரிவாற்றாமை தலைவனுக்கும் இருக்கவேண்டும். தலைவன் பிரிந்திருக்கும் நாளில் தலைவன் பிரிந்துச் சென்ற ஊரிடத்தும் மாலைக்காலம் உண்டோ என்றுத் தலைவி வினவும் வண்ணம் அமைந்த துயர்கொள்ளும் மாலைக்காலத்தை,*

***“மன்பின் மாலையு முடைத்தோ***
***அன்புஇல் பாண, அவர் சென்ற நாட்டே?”[121]***
***(ஐங்குறுநூறு, பாடல் எண் 476, அடிகள் 4-5)***

*என்றுக் குறிப்பிடும் அடிகள் மாலைப்பொழுதுத் தலைவன் சென்ற ஊரிலும் இருக்குமாயில் அதன் கொடுமையைக் காதலரும் உணர்ந்திருக்கக் கூடும். பிரிவுத் துன்பம் இருவருக்கும் மாலையில் கொடுமையைத் தரக்கூடியது ஆகும்.*

***“பனிவார் கண்ணள் பல புலந்து உறையும்”[122]***
***(அகநானூறு, பாடல் எண் 104, அடி 15)***

*என்றுக் குறிப்பிடுகின்றது. தலைவனை நினைத்து வெறுத்து இல்லத்திலே உறைதற்குக் காரணமானக் காமநோய் மலருகின்றக் கொடிய மாலைப்பொழுது என்பதை நல்விகின்றது.*

*இன்பத்தோடு இருக்கும் பொழுதில் பின்னர் வரப்போகும் துன்பத்தைப் பற்றிய எண்ணம் தோன்றாதிருத்தல் இயல்பாகும். மாலைக்காலம் துன்பத்தையும் தனிமையையும் தரும் என்பதை அறிந்திருப்பின் தலைவன் தன்னை பிரிந்திருக்க உடன்பட்டிருக்கமாட்டேன் என்றுத் தலைவி புலம்பும் மாலைப்பொழுதினை,*

***“வால்இழை மகளிர் விழவு அணிக்கூட்டும்***
***மாலையோ அறிவேன் மன்னே மாலை***
***நிலம் பரந்தன்ன புன்கணொடு***
***புலம்பு உடைத்து ஆகுதல் அறியேன் யானே”[123]***
***(குறுந்தொகை, பாடல் எண் 385, அடிகள் 3-6)***

*என்றுக் கூறும் பாடல் அடிகள் தனிமைத் துன்பம் உடைய மாலைக்காலம் குறித்து தலைவி வருந்துவதைப் புலப்படுத்துகிறது.*

### ***2.7.2.8. மயக்கந்தரும் மாலைக் காலம்***

*தலைவன் முல்லை மலரும மாலையில் வருவதாக உரைத்தான். அவன் வருகைக்காகக் காத்திருக்கும் பொழுது எல்லாம் மாலைப்பொழுதாகவே தோன்றியது. குடுமிச்சேவல் மாலையில் இயம்பும் செயல்கொண்டது. அதைக்கேட்ட அகமாந்தர்க்கு மயக்கமேறும் மாலைக்காலமாக அமைந்தது. பிரிந்தார்க்கு விடியலும் பகலும் கூட மலைபோலும் துன்பந்தருவது என்பதைக் குறுந்தொகை,*

***“குடுமிக்கோழி நெடுநகர் இயம்பும்***
***பெரும்புலர் விடியலும் மாலை***
***பகலும் மாலை - துணை இலோர்க்கே”[124]***
***(குறுந்தொகை, பாடல் எண் 234, அடிகள் 4-6)***

*என்று உரைக்கின்றது.*

*தலைவி துயிலாமையால் கண்கள் ஒளியிழந்த நிலையில் மயங்கி எல்லாப் பொழுதும் மயக்கம் தரும் மாலையாகவே அமைந்ததை உணர்த்துகின்றது.*

*இவ்வழி தனித்துறைவார்க்குத் துன்பம் தரும் மாலைக்காலத்தை அகநானூறு,*

**"அல்கல் புன்கண் மாலையொடு பொருந்தி"[125]**

***(அகநானூறு, பாடல் எண் 74, அடி 15)***

*என்றும் உணர்த்துகின்றது.*

### *2.7.2.9. தலைவியின் துன்பம் மிகும் மாலை*

*காதல் மிக்கோரின் அகஉணர்வுளைத் தூண்டும் விதமாக மாலைப்பொழுதும் அதன் நிகழ்வுகளும் அமைவதை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. காதல்நோய் மாலையில் மலரக்கூடியது என்பதைத் திருவள்ளுவரும்,*

**"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி**
**மாலை மலரும் இந்நோய்"[126]**

***(திருக்குறள், எண் 1227)***

*என்னும் திருக்குறளில் விளக்குகிறார். பகல்முழுவதும் ஆற்றியிருந்தத் தலைவியின் காதல் நோய்த் துன்பம் தரக்கூடியப் பொழுதாக அமைவதை இலக்கியங்கள் வர்ணிக்கின்றன. அரிய உயிரை வருத்தும் தனிமையில் இருப்பதற்கு அரிய மாலைப் பொழுதில் தலைவி தனித்து இருப்பதால் தலைவியின் துன்பம் மிகுந்து இருப்பதை சங்க இலக்கியங்கள் பல்வேறு சூழலில் கூறுகின்றன.*

*ஆற்றியிருத்தல் முல்லை நில ஒழுக்கம் ஆகும். முல்லையில் இல்லறப் பாங்கு இனிதாக நிகழ்ந்தமையால் இல்லறம் நல்லறமாக இருந்தது. இல்லறக் கடமைகளுள் ஆற்றியிருத்தல் என்னும் கடமையின் இலக்கணமாய் தலைவித் திகழ்ந்ததை முல்லை நில ஒழுக்கத்தில் காணமுடிகிறது.*

*இயற்கைச் சூழல், இலக்கிய மரபு இவற்றைப் பொறுத்து ஒவ்வொரு திணைக்கும் பொருத்தமான ஓர் ஒழுக்கம் நிகழ்ந்துள்ளமையை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. மாலை, முல்லைத் திணைக்குரியப் பொழுதாகையில் முல்லை நில ஒழுக்கமான ஆற்றியிருத்தல் பண்பு அப்பொழுதில் தரும் துன்பம் மேன்மையாகக் காட்டப்படுகிறது. அத்துணைத் துன்பங்ளையும் பொறுத்துக் கொண்டுத் தலைவி, தலைவனின் வரவை விளக்கேற்றி எதிர்நோக்கும் இல்லறப் பாங்கு இனிதாகப் பேசப்படுகின்றது.*

*தலைவியின் வருத்தமானது ஆநிரை தலையெடுத்துப் பார்த்து வருந்தினாற் போன்றத் துயரத்தையுடைய மாலையைப் போன்றது என்பதைக் குறுந்தொகை,*

**"பல்ஆ நெடுநெறிக்கு அகன்று வந்தென**
**புன்தலை மன்றம் நோக்கி மாலை**
**மடக்கண்  குழவி அலம் வந்தன்ன"[127]**

***(குறுந்தொகை, பாடல் எண் 64, அடிகள் 1-3)***

*என்னும் அகநானூற்றுப் பாடல் தலைவனுடைய வருகையை எதிர்நோக்கியத் துன்பம் உடையவளாகத் தலைவி இருப்பதைக் கூறுகின்றது.*

### *2.7.2.9.1. புல்லென மாலை*

*புன்மை என்பதுத் துன்பத்தைக் குறிக்கும் சொல். கார்ப்பருவம் வந்தமையால் முல்லை நிலத்து வண்டினங்கள் தேனிருக்கும் முல்லைப் பூக்களில் உள்ள தேனினை உண்டு மகிழும் காட்சியினையும் பிணைமானும் கலைமானும் ஒன்றுபட்டு இன்பம் துய்த்துத் துள்ளித்திரியும் காட்சியினையும் காணும் தலைவி பெருந்துன்பத்தால் வருந்துகிறாள். அவளது பிரிவுத்துன்பம் மாலையில் மிகுவதால் பகல் முடிந்தபின் வரும் அம்மாலையைப் புல்லென மாலை என்றுக் குறிப்பிடுவதை,*

**"ததர்தழை முனைஇய தெறிநடை மடப்பினை**
**ஏறுபுணர் உவகையே ஊறுஇல உகன**
**அம்சிறை வண்டின் மென்பதைத் தொழுதி**
**முல்லை நறுமலர்த் தாது நயந்து ஊத**
**எல்லை போகிய புல்லென் மாலை"[128]**

***(அகநானூறு, பாடல் எண் 234, அடிகள் 10-14)***

*எனும் அடிகள் உணர்த்துகின்றன.*

*முல்லையின் மலரை மலைச் சாரலின் புறத்தே உள்ள மக்கள் பறித்துச் சூடுவர். சூரியனும் தான் மறையும் மேற்கு மலையைச் சாரும். இத்தகைய ஒளியற்ற மாலைப் பொழுதின் கண்ணே நான் இல்லாதத் தனிமையில் வறிதாக அமைந்த இல்லத்தைக் கண்டுத் தலைவி வருந்துவாள். வினை முடிந்து மீளும் தலைவன் தான் இல்லாது வருந்தும் தலைவியின் துன்பம் மாலை நேரக் காட்சியினால் மிகும் என்பதை எண்ணுமாறு,*

**"பார்ப்பன மகளிர் சாரற் புறத்து அணிய**
**கல்சுடர் சேரும் கதிர் மாய்மாலை**
**புல்லென்று வறுமனை நோக்கி மெல்ல**
**வருந்தும் கொல்லோ, திருந்து இழை அரிவை"[129]**

***(நற்றிணை, பாடல் எண் 321, அடிகள் 4-7)***

*என்னும் நற்றிணை அடிகள் அமைந்துள்ளன.*

***2.7.2.9.2. புன்கண் மாலை***

*புன்மையாவதுத் துன்பமாகும். சேர்ந்தார்க்கு அன்றி பிரிந்தார்க்குத் துன்பம் செய்யும் மாலை வருத்தம் தரும் நோயைக் கொண்டு வருவதால் புன்கண் மாலை என்றுக் கூறப்படுகின்றது. மாலைக்காலத்தில் காக்கைகள், தம் கூடுகளில் தங்கும் இயல்புடையது. கூடுகளில் காக்கைகள், சேவல், பெடை எனக் கூடியிருத்தலைக் கண்டத் தலைவி, தலைவன் வராததால் தான் கூடியிருக்கும் இன்பம் பெறாமைக் கண்டுப் புலம்புகின்றாள். மாலை மட்டுமல்லாது, மாலை நேரக் காட்சிகளும் தலைவியின் துன்பம் மிகுமாறுச் செய்வதை,*

***"வள் இதழ் நெய்தல் கூம்ப, புள் உடன்***
***கமழ் பூம் பொதும்பர்க் கட்சி சேர***
***செல்சுர் மருங்கச் சிவந்து வாங்கு மண்டிலம்***
***கல்சேர்பு நண்ணிப் படர் அடைபு நடுங்க***
***புலம்பொடு வந்த புன்கண் மாலை"[130]***

***(நற்றிணை, பாடல் எண் 117, அடிகள் 3-7)***

*எனும் நற்றிணை அடிகள் நயம்படக் காட்டுகின்றன.*

*தலைவன், இளவேனிற் பருவத்தில் வருவதாக உரைத்துப் பொருள்வயின் பிரிந்துச் சென்றான். பசுக்கள் தம் கன்றினை எண்ணி விடையொடு வீடு திரும்பும் மாலைக் காலம் அவளுடையத் துன்பத்தை மேலும் மிகுவித்தது. பனிமிகுந்த மாலைப் பொழுதில் தலைவன் வருவதற்காக மகளிர் தவம் செய்வதுப் போல் காத்திருக்கும் மாலைக் காலத்தை*

***"பால்வார்பு குழவி உள்ளி நிரைஇறந்து***
***ஊர்வயின் பெயரும் புன்கண் மாலை***
***அரும்பெறல் பொருட்பிணிப் போகிப்***
***பிரிந்துஉறை காதலர் வர, காண்போரே"[131]***

***(குறுந்தொகை, பாடல் எண் 344, அடிகள் 5-8)***

*என்று வர்ணிக்கப்படுகின்றது.*

*கார்ப்பருவத்தின் இறுதியில் வீசி வருத்தும் வாடைக்காற்று வந்தது. வாடையானது யானை பெருமூச்சு விட்டாற்போல வந்தது. மாலைப்பொழுதையும் மாலையின் வருத்தம் தரும் சூழலையும் முன்னரே செலுத்திக் கொண்டு வந்து வாடைத் துன்பம் தருதலை,*

***"அல்கலும் அலைக்கும் நல்கா வாடை***
***பருமம யானை அயா உயிர்த்தாஅங்கு***
***இன்னும் வருமே - தோழி - வாரா***

**வன்கணாளரோடு இயைந்த**

**புன்கண் மாலையும் புலம்பும் முந்துறுத்தே"**[132]

***(நற்றிணை, பாடல் எண் 89, அடிகள் 7-11)***

என்றுக் கூறித் தலைவன் வந்தாலன்றி அந்நோய்த் தீராது என்பதை விளக்குகின்றது.

தலைவன் கார்ப்பருவத்தில் வருவதாகக் கூறிப் பிரிந்துச்சென்றான். கார்ப் பருவம் முடிந்துக் கூதிர்க் காலமும் வந்தது. அக்காலத்து மாலைப்பொழுதில் நெய் ஊற்றி ஏற்றிய விளக்கு அடங்கிக் கிடந்தத் துன்பத்தை மாலைப்பொழுதில் மிகுவிப்பதாகும். பகலில் மனையறத்தால் அடங்கியத் துயரத்தை எழச்செய்யும் மாலைப்பொழுதை,

**"கையுறை ஆக நெய்பெய்து மாட்டிய**

**சுடர் துயர் எடுப்பும் புன்கண் மாலை"**[133]

***(குறுந்தொகை, பாடல் எண் 398, அடிகள் 4-5)***

என்று குறுந்தொகை கூறுகின்றது.

### *2.7.9.3. சிறுபுன் மாலை*

தலைவனைக் கண்ட வழி, மாலைப்பொழுதுப் பெரிய, இனிய மாலையாக விளங்கும். தலைவனைப் பிரிந்து, அவன் வரக் காணாத போது சிறியப் புல்லிய மாலையாக வருத்தத்தினைச் செய்வதாய்த் தோன்றும். உடனுறைவார்க்குக் காலைப் பகையாதலும் மாலை இனிதாவதும் பிரிந்தார்க்கு மாலைப் பகையாதலும் இயல்பாகும்.

மாலை சிறிது பொழுதே, காணப்பட்டாலும் அது புன்கண்மையுடைய மாலைப் பொழுதாக அமைந்ததைத் தலைவனைக் காணாதப் பொழுதுத் தலைவி உணர்ந்ததைக் குறுந்தொகை,

**"சிறுபுன் மாலை உண்மை**

**அறிவேன் தோழி அவர்க் காணா ஊங்கே"**[134]

***(குறுந்தொகை, பாடல் எண் 32, அடிகள் 5-6)***

என்றுக் குறிப்பிடுகின்றது. கார்ப்பருவத்து மாலை4லப் பொழுதுத் தனித்துறைவார்க்குப் பெரிதும் துன்பம் செய்யும் இயல்புடையதாதலின் அப்பருவத்தில் மெல்ல மெல்ல மறையும் மாலைப்பொழுதினைச் சிறுமையையுடையப் புல்லிய மாலைப்பொழுது என அகநானூறும் விளக்குகின்றது.

**"அரவு நுங்கு மதியின் ஐயென மறையும்**

**சிறுபுன் மாலையும் உள்ளார் அவரென"[135]**

***(அகநானூறு, பாடல் எண் 114, அடிகள் 5-6)***

மாலைப்பொழுது சிறியப் பொழுதே ஆனாலும், தலைவன் அருகில் இல்லாமையால் அது பெருந்துன்பம் செய்யும் பண்பைப் பெற்றதால்,

**"பெரும்புலம்பின்றே, சிறுபுன் மாலை"[136]**

***(நற்றிணை, பாடல் எண் 54, அடி 5)***

என்று நற்றிணைப் பாடல் தலைவியின் வேட்கையை உணர்த்துகின்றது.

### 2.7.2.9.4. பெரும்புன் மாலை

காதலனைப் பிரிந்துறைவார்க்கு இரவுக்கு முன்னோடியான மாலைப்பொழுது நெடிதாகத் தோன்றுமாதலின், பெரும்புன்மாலை என்றுக் கொள்ளப்படுகிறது. பெரியத் துன்பத்தையுடைய மாலைப்பொழுதில் இடை விடாது எண்ணி எண்ணி தாங்குதற்குரியத் துயரம் கொள்ளுதலை விரும்பாதத் தலைவியின் துன்பம் மிகுதியை ஐங்குறுநூற்றில்,

**"பெரும்புன் மாலை ஆனாது நினைஇ**

**அரும்படர் உழத்தல் யாவது? என்றும்"[137]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 486, அடிகள் 1-2)***

என்று உரைக்கின்றது. பிரிவு நோயினால் துன்புற்றத் தலைவி ஒவ்வொரு மாலைப் பொழுதினையும் வருத்தத்துடன் கழிக்கிறாள். பகல்மெல்ல மெல்ல கழிந்துச் சென்றாலும் இந்த மாலை கழிந்துவிடுவதில்லை. விரைந்துச் செல்லாது பெரிய நீண்டு நின்று வருத்தும் தன்மை பெற்றப் புல்லிய மாலை பெரும்புன் மாலை என்றுக் குறிப்பிடுவதை,

**"எல்லை பைபயக் கழிப்பி, முல்லை**

**அரும்பு வாய் அவிழும் பெரும்புன் மாலை"[138]**

***(நற்றிணை, பாடல் எண் 369, அடிகள் 3-4)***

என்னும் நற்றிணைப் பாடல் உரைக்கின்றது.

**2.7.2.9.5. கையறு மாலை**

கையறுதல் என்பதற்குச் செயலறுதல் என்று அகராதி பொருள் தருகிறது. கையறு மாலை, கையறவுத் தோன்றுவதற்குக் காரணமாகிய மாலை என்றுக் கொள்ளப்படுகிறது. பகல் கழிந்து முல்லை மலராது நிற்கும் மாலைப் பொழுது இரவினை எல்லையாக் கொண்டுச் சிறிதுப் பொழுது நிற்பதாகும். அது செயலற்றுக் கிடக்கும் பொழுதாகக் கழிவதை,

**"எல்லை கழிய முல்லை மலர**
**கதிர்சினம் தணிந்த கையறு மாலை"**[139]

**(குறுந்தொகை, பாடல் எண் 387, அடிகள் 1-2)**

எனும் குறுந்தொகை அடிகள் விளக்குகின்றன.

**2.7.2.9.6. பையுள் மாலை**

பையுள் என்பதற்குத் துன்பம் என்றுப் பொருள். தலைவன் கார்ப்பருவத்தில் வருவதாக உரைத்துப் பிரிந்துச் சென்றான். கார்ப்பருவம் மாலைப்பொழுதும் பிரிந்தார்க்குத் துன்பத்தை மிகுவிப்பன. கணவனைப் பிரிந்தோர் செயலறவு எய்துவதற்குக் காரணமாகியத் துன்பத்தைத் தரும் மாலைப்பொழுதினை,

**"வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்**
**கையற வந்த பையுள் மாலை"**[140]

**(குறுந்தொகை, பாடல் எண் 391, அடிகள் 5-6)**

என்றுக் குறுந்தொகை உரைக்கின்றது.

கதிரவன் வெம்மை குறைந்து மேற்குமலையை அடையும் மாலைப்பொழுது என்னைத் துன்புறுத்துவது ஒன்றையே நோக்கமாகக் கொண்டுத் துன்பத்தைச் சுமந்து வந்தது என்றுத் தலைவித் தன் ஆற்றாமையைக் கூறும் குறுந்தொகைப் பாடல் மாலையை,

**"சுடர்சினம் தணிந்து குன்றம் சேரப்**
**படர்சுமந்து எழுதரு பையுள் மாலை"**[141]

**(குறுந்தொகை, பாடல் எண் 195, அடிகள் 1-2)**

என்றுக் கூறித் தலைவியின் துன்பம் மிகும் தன்மையை விளக்குகின்றது.

**2.7.2.9.7. மையல் மாலை**

தலைவன் முன்பு பரத்தையரோடு சேர்ந்து வந்ததினால் தலைவி ஊடினாள். குருவியின் சேவல் பிற பெடையோடு கூடி வந்ததினை சேவற்குரியப் பேடை எதிர்த்துப் புலந்து பின் இரக்கங்காட்டியது. தலைவன் வினைவயிற் சென்று மீண்டு வருவதால் தலைவி உவந்து ஏற்றுக் கொள்வாள். மையல் என்பதற்கு மயக்கம்

*என்பதுப் பொருள். தலைவி செயலற்றுத் தவிக்கும் மயக்கம் தரும் மாலைப் பொழுது நற்றிணையில் விளக்கம் பெறுகிறது.*

***"துவலையின் நனைந்த புறத்தது அயலது***
***கூரல் இருக்கை அருளி, நெடிது நினைந்து***
***ஈர நெஞ்சின் தன் வயின் விளிப்ப***
***கையற வந்த மையல் மாலை"[142]***

***(நற்றிணை, பாடல் எண் 181, அடிகள் 6-9)***

*எனும் நற்றிணைப் பாடலில் அஃறிணை உயிர்களும் செயலற்றுத் தவிக்கும் மாலைக் காலத் துன்பம் தலைவியின் துன்பத்திற்கு உவமைப் பொருளாகிறது என்பதை உணர்த்துகிறது.*

### ***2.7.2.9.8. புலம்புகொள் மாலை***

*தலைவனை எதிர்நோக்கி இல்லிருந்துக் காத்திருத்தலால் தலைவி துயரெய்திய மாலைக்காலம்,*

***"ஆபூண் தெண்மணி ஐது இயம்பு இன்இசை***
***புலம்புகொள் மாலை கேட்டொறுமத்***
***கலங்கினள் உறைவோன் கையறு நிலையே"[143]***

***(அகநானூறு, பாடல் எண் 64, அடி 15-17)***

*என்று உரைக்கப்பெறுகின்றது. தனிமையுணர்ச்சியை மிகுவிக்கின்ற இந்த மாலைப் பொழுதின்கண் தன் மெல்லிய விரல் மேலே நெற்றியைச் சேர்த்தவண்ணம் தலைவனை எண்ணி வருந்தியிருத்தலை அகநானூறு,*

***"செல்கதிர் மழுகிய புலம்புகொள் மாலை***
***மெல்விரல் சேர்த்திய நுதலள் அல்கிக்"[144]***

***(அகநானூறு, பாடல் எண் 169, அடிகள் 10-11)***

*என்றுக் குறிப்பிடுகின்றது. மாலைக்காலமே காமநோய் மலரும் காலமாதலின், புலம்பு கொள் மாலை என்று உணர்த்தப்பட்டது.*

***"காதலரில்வழி மாலை கொலைக்களத்***
***தேதிலர் போல வரும்"[145]***

***(திருக்குறள், எண் 1224)***

*எனத் திருக்குறளும் உணர்த்துகின்றது.*

### ***2.7.3. மாலைக் கால நிகழ்வு***

*மாலைக்காலத்தில் பல்வகை உயிர்க்கூட்டங்களும், வழக்கமாக இயங்கும் செயல்கள் தலைவன் தலைவியர் வாழ்வோடு இணைத்துக் காட்டப்பெறுகின்றன. மாலையில் ஆநிரை மன்றம் புகுதல், தலைவன் வினை முடிந்து வருதல், தலைவனின்*

*தேர்வருதல், கோவலர்கள் செயல், மகளிரின் மனையுறை மாண்புகள், இல்லற கடமைகள், இயற்கை நிகழ்வுகள், உயிர்கள் இறைதேடல், மாலை நேர மகிழ்வுகள் போன்ற இயற்கை நிகழ்வுகளைக் காணமுடிகிறது.*

*கடற்கரைச் சோலையில் உப்பங்கழியின் பூக்கள் குவிதல், பறவைகள் புன்னை மரத்தைச் சேர்தல், வண்டினங்கள் ஒலித்தல், கடல் பேரொலியுடன் ஒலித்தல் போன்ற இயல்பான நிகழ்வுகள் மாலையில் நிகழ்வதை,*

***"கானல் மாலைக் கழிப் பூக்கூம்ப***
***நீலநிறப் பெருங்கடல் பாடு எழுந்து ஒலிப்ப***
***மீன் ஆர்குருகின்மென் பறைத்தொழுதி***
***குவை இரும் புன்னைக் குடம்பை சேர***
***அசைவண்டு ஆர்க்கும் அல்நறு காலை***
***தாழைத் தளரத் தூங்கி, மாலை"[146]***

***(அகநானூறு, பாடல் எண் 40, அடிகள் 1-6)***

*என்று அகநானூறு உரைக்கின்றது.*

### *2.7.3.1. முரசு முழங்குதல்*

*வினை முடித்தத் தலைவன் காதலி இன்புறவும், அவள் பிரிவுத்துயரம் அகலவும் நம் தேர்க் குதிரைகளை நான் குறிப்பிட்ட காலமாகிய மாலைப்பொழுதிலேயே நாம் அரண்மனையை அடையும்படி விரைந்துத் தேரினைச் செலுத்துமாறு தேர்ப்பாகனைக் கூறுகின்றான். தலைவன் சென்றடையும் பொழுது அரண்மனைக் காவலர் அழகிய மாலை முரசினை முழங்கும் மாலைப்பொழுதாகும் என்பதை,*

***"காலை எயய்தக் கடவுமதி மாலை***
***அந்திக் காவல ரம்பணை யிமிழிசை"[147]***

***(அகநானூறு, பாடல் எண் 124, அடிகள் 13-14)***

*என்னும் அகநானூற்று அடிகள் புலப்படுத்துகின்றன.*

### *2.7.3.2. ஆநிரை மன்றம் புகுதல்*

*இனிய மாலைக்காலத்தில் ஆநிரை மன்றம் புகுதலைப் பல பாடல் காட்சிப் படுத்துகின்றன. ஆநிரையானதுத் தமது கன்றினை அழைக்கும் குரலையுடையனவாய் மன்றம் நிரம்பும்படி வந்துப் புகுகின்ற மாலைப் பொழுதினை,*

***"கன்று பயிர்குரல் மன்றுநிறை புகுதரு***
***மாலையு முள்ளா ராயிற் காலை"[148]***

***(அகநானூறு, பாடல் எண் 14, அடிகள் 11-12)***

*என்றுக் கூறுகின்றது.*

*உயிரினங்கள் எல்லாம் தத்தம் கடமை உணர்வால் தத்தம் இல்லம் சேர்ந்தன. செம்மாப்பை உடைய நல்ல பசுவின் குற்றமற்ற மணியின் ஓசையானது, ஆயர்களின்*

*குழலோசையை ஒத்திருந்தது. ஆநிரைகளுக்கெல்லாம் வீட்டை நினையுமாறு மாலைப்பொழுது வந்தததை,*

**"கொடுங்கோற் கோவலர் குழலோடு ஒன்றி**
**ஐது வந்து இசைக்கும் அருள்இல் மாலை"[149]**

***(நற்றிணை, பாடல் எண் 69, அடிகள் 9-10)***

*என்று நற்றிணை நவில்கின்றது.*

***2.7.3.3. இரை தேடல்***

*சில உயிரினங்கள் தனக்குரிய இரையைத் தேடும் வேளையாக மாலைப் பொழுது உள்ளது. வௌவால் மாலைப்பொழுதில் பறக்கும் இயல்பு உடையது. தன் உணவுக்காக பழங்கள் உள்ள மரங்களை நாடிச்செல்லும் மாலைக்காலத்தை,*

**"தாஅவல் அஞ்சிறை, நொப்பறை வாவல்**
**பழுமரம் படரும் பையுள் மாலை"[150]**

***(குறுந்தொகை, பாடல் எண் 172, அடிகள் 1-2)***

*என்றுக் குறிப்பிடப்பட்டு, இன்று மாலை உணவு கிடைக்குமோ என்று வௌவால் வருந்துவதுப் போல் தலைவன் இன்றுத் தன்னுடையத் தனிமையைத் தீர்க்க வருவாரோ என்றத் தலைவியின் வருத்தத்தையும் கூறிச் செல்வதாயிற்று.*

**"பசைபடு பச்சை நெய்தோய்த்தன்ன**
**சேய்உயர் சினை மாச்சிறைப்பறவை**
**பகல்உறை முதுமரம் புலம்பப் போகி"[151]**

***(அகநானூறு, பாடல் எண் 244, அடிகள் 1-3)***

*என்னும் பாடல் கருமை நிற சிறகுகளையுடைய வாவல் பறவை பகற்பொழுதில் தான் தங்கியிருந்த மிக உயர்ந்தக் கிளைகளை விட்டு மாலைப்பொழுதில் பழங்களை நாடிப் பழுமரம் நோக்கிப் படருந்தன்மையுடையது என்பதை உணர்த்துமாறு அமைகிறது.*

*காட்டுப் பூனை மாலைக்காலத்தில் கோழியைப் பற்றி உண்ணும் இயல்புடையது. குவிந்த அடியினையும் பசியக் கண்களையும் உடைய ஆண் காட்டுப் பூனை, ஊனை விரும்பி இருந்தப் பெண்பூனையின் பசியைப் போக்கக் கோழிச் சேவலைப் பிடிப்பதற்குத் தக்க தருணத்தை எதிர்பார்த்திருக்கும் மாலைக்காலம் என்பதை,*

**"குவிஅடி வெருகின் பைங்கண் ஏற்றை**
**ஊன் நசைப்பிணவின் உயங்கு பசிகளைஇயர்**
**தளிர்புரை கொடிற்றின் செறிமயிர் எறித்தின்**
**கதிர்த்த சென்னி கவிரிப்பூ அன்ன**
**நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்**
**புல்லென் மாலையும், இனிதுமன் றம்ம"[152]**

***(அகநானூறு, பாடல் எண் 367, அடிகள் 8-13)***

*எனும் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன.*

*குட்டிகளை ஈன்று காட்டில் காவல் செய்திருந்தப் பெண்புலியின் பசியைப் போக்க ஆண்புலி மாலைப்பொழுதில் வழியில் செல்வாரைக் கொல்லும் பொருட்டு எதிர்நோக்கியிருக்கும். அத்தகைய வழியில் மயங்கிய மாலைப்பொழுதில் தலைவி தலைவனுடன் செல்வதைக் கூறும் நற்றிணை,*

***"ஈன்று கான்மடிந்த பிணவுப் பசி கூர்ந்தென***
***மான்ற மாலை வழங்குநர்ச் செகீஇய***
***புலிபார்த்து உறையும் புல் அதர்ச்சிறு நெறி"*[153]**

***(நற்றிணை, பாடல் எண் 29, அடிகள் 3-5)***

*என்றுக் கூறுகிறது.*

### *2.7.3.4. பலியுணவு*

*கடவுள் உறைகின்ற ஆலமரத்தில் மாலைப்பொழுதில் பலியுணவை படைக்கும் வழக்கம் இருந்துள்ளது. அதனை காக்கைகள் உண்ணும் செய்தியை நற்றிணைக் குறிப்பிடுகின்றது. கடவுளுறையும் ஆலமரத்தில் கடவுளுக்குப் படைத்து வைத்து பலியுணவை உண்ணும் காக்கைகள் தன் இனம் சேரும் துன்பம் செய்யும் மாலைப்பொழுதினை,*

***"உகுபலி அருந்திய தொகுவிரற் பாக்கை***
***புன்கண் அந்திக் கிளைவயின் செறிய***
***படையொடு வந்த பையுள் மாலை"*[154]**

***(நற்றிணை, பாடல் எண் 343, அடிகள் 5-7)***

*என்று நற்றிணை எடுத்தியம்புகின்றன.*

*மாயோன், முருகன் முதலியத் தெய்வங்களுக்கு உயர்ந்தப் பலிகளைக் கொடுப்பதற்காக அந்திக்காலத்திற்கு முன்னர் விழா எடுக்கப்பட்டதை மதுரைக் காஞ்சி குறிப்பிடுகின்றது.*

***"நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு***
***மாற்று அரு மரபின் உயர்பலி கொடுமார்***
***அந்தி விழவில் தூரியம் கறங்க"*[155]**

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 458-460)***

*எனும் அடிகள் மாலைக்காலத்தில் குறிப்பிட்டத் தெய்வங்களுக்குப் பலியிடும் வழக்கம் இருந்ததைப் பேசுகின்றது.*

### *2.7.3.5. கடல் விளையாட்டு*

*முரசின் ஒலிபோல் ஒலிக்கும் உயர்ந்த அலைகளையுடையக் கடலில் பாய்ந்து மகளிர் மாலைப்பொழுதில் நீராடுவர். அம்மகளிர் சூடிக்கழித்த மலர்களை உண்ட*

பசுவானது மீண்டும் தான் இருக்கும் புலத்துள் புகும் ஆரவாரம் மிக்க மாலைப் பொழுது,

**“வேந்து ஆடுமயக்கத்து முரசு அதிர்ந்தன்ன**
**ஓங்கற் புணரி பாய்ந்து ஆடு மகளிர்**
**அணிந்திடு பல் பூ மரீஇ, ஆர்ந்த**
**ஆ, புலம் புகுதரு பேர் இசை மாலை”[156]**

***(நற்றிணை, பாடல் எண் 395, அடிகள் 5-8)***

என்றுக் குறிக்கப்பட்டு, மாலைப்பொழுதில் மகளிர் கடல்விளையாட்டில் ஈடுபட்டனர் என்பதுப் பெறப்படுகின்றது.

### 2.7.3.6. இரங்கும் பொழுது

பிற உயிரினங்களிடம் இரங்கும் பொழுதாக மாலைப்பொழுது அமைகிறது. வீட்டின் முற்றத்தில் புறாக்களும் இதல் என்னும் பறவையும் உண்ணும்படியாக மாலைப்பொழுதில் சிறுதினைகளைத் தூவுவர். மாலைப்பொழுதில் பறவைகளிடம் இரங்கும் தன்மையை,

**“படலை முன்றில் சிறுதினை உணங்கல்**
**புறவும் இதலும் அறவும் உண்கெனப்**
**பெய்தற்கு எல்லின்று பொழுதே”[157]**

***(புறநானூறு, பாடல் எண் 319, அடிகள் 5-7)***

என்னும் புறநானூற்று அடிகள் புலப்படுத்துகின்றன.

### 2.7.3.7. மகிழ்தற்குரிய பொழுது

கார்கால மாலைப்பொழுது காதலர் உடன் புணர்ந்திருக்கப் பெரிதும் விழையும் காலமாதலின் தலைவனும் தலைவியும் இணைந்திருந்தனர். மாலைப் பொழுதில் வீட்டின் முற்றத்தின் கண் உயரம் குறைந்தக் கால்களை உடையக் கட்டிலில் தலைவன், தலைவியர் தன் புதல்வனுடன் மகிழ்ந்திருக்கும் மாலைப் பொழுதினை,

**“மாலை முன்றில் குறுங்காற் கட்டில்**
**மனையோள் துணைவி ஆக, புதல்வன்”[158]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 401, அடிகள் 1-2)***

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது.

### 2.7.3.8. மாலை வேள்வி

இமயமலையிலும் பொதிய மலையிலும் அந்தணர்கள் மாலைவேளையில் அந்தணர்கள் செய்தவற்குரிய வேள்வியாகியக் கடமையில் ஆவுதி இடுவர். இச்செய்தியைப் புறநானூறு,

**"அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்**
**முத் தீ விளக்கின் துஞ்சும்**
**பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே"[159]**

***(புறநானூறு, பாடல் எண் 2, அடிகள் 22-24)***

என்றுப் பகர்கின்றது.

### 2.7.3.9. முதுமொழி நினைவு கூறல்

அந்தணர்கள் மந்திர மொழியினை நினைவுக் கூறும் பொழுதாக மாலைப் பொழுது அமைகிறது. செக்கர் வானத்தைக் கொண்ட அந்திப்பொழுதின் கண், முக்கோலை உடைய அந்தணர் முதிய மந்திர மொழியினை நினைவுக் கொள்வர் என்பதை,

**"செக்கர்கொள் பொழுதினான் ஒலிநீவி, இனநாரை**
**முக்கோல் கொள் அந்தணர் முதுமொழி நினைவார்போல்"[160]**

***(கலித்தொகை, பாடல் எண் 126, அடிகள் 3-4)***

என்றுக் கலித்தொகை உணர்த்துகின்றது.

### 2.7.3.10. மாலை நேரக்காவல்

மாலைக்காலத்தில் காவற்பணியாளர்கள் தம் கையிற் கொண்ட வெள்ளியத் தடியைத் தரையில் வீச, அவ்வீச்சொலி கேட்டு அஞ்சி நறுமணம் பூக்கள் நிறைந்த முல்லைக்காட்டில் ஒளிந்த முயல்கள் இடம்பெயர்ந்தோடும் என்று ஐங்குறுநூறு கூறுகிறது.

**"மாலை வெண்காழ் காவலர் வீச**
**நறும் பூம்புறவின் ஒடுங்கு முயல்இரியும்"[161]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 421, அடிகள் 1-2)***

என்னும் அடிகள் மூலம் மாலைக்காலத்தில் காவற்பணியாளர்கள் காவற்பணியில் ஈடுபட்டதை அறிந்துகொள்ள முடிகிறது.

### 2.7.3.11. கள்ளுண்டு மகிழ்தல்

பகலும் இரவும் ஒன்றொடொன்று மயங்கும் மாலைப்பொழுதில் பரதவர் கள்ளுண்டு மகிழ்ந்தச் செய்தியை நற்றிணைப் பாடல் உணர்த்துகின்றது.

**"ஞான்ற ஞாயிறு குடமலை மறைய**
**மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்"[162]**

***(நற்றிணை, பாடல் எண் 239, அடிகள் 1-2)***

ஒவ்வொரு உயிர்களும் தங்கள் கடமை முடிந்து தனக்குரிய உள்ளுணர்விற்கேற்ற மகிழ்ச்சியைக் கொண்டாடும் பொழுதாக மாலை அமைகிறது. பரதவர் தாம் கடலில் பெற்றப் பெரிய மீனை விற்று கள்ளுண்டு மகிழ்ந்தச் செய்தி பெறப்படுகின்றது.

### 2.7.3.12. தலைவி ஆற்றியிருத்தல்

மாலைப்பொழுதின் வருத்தமும் தனிமைத் துயரும் தலைவனுக்கும் உள்ளதாய் அமைந்தால் தலைவியின் துயரை எண்ணி வருவான். அவர் சென்ற நாட்டில் மாலையின் தன்மையும் அதனால் ஏற்படும் துன்பமும் இல்லைபோலும் என்றுத் தலைவியின் கூற்றாக,

**"புன்கண் மாலையும் புலம்பும்**
**இன்றுகொல் தோழி அவர்சென்ற நாட்டே"[163]**

***(குறுந்தொகை, பாடல் எண் 330, அடிகள் 6-7)***

என்றுக் குறுந்தொகை நவில்கின்றது.

### 2.7.3.13. தலைவன் வருகை

தலைவனின் தேர்ச்சக்கரங்கள் குளிர்ச்சி பொருந்திய முல்லை நிலத்தைப் பிளந்து செல்லும். பிளந்துச் சென்றச் சக்கரத்தின் சுவட்டில் பெய்த மழையின் நீர் விரைந்து ஊர்ந்துச் செல்லும். அத்தகையச் சூழலில்முல்லை மலரும் மாலைக் காலத்தே பெருந்தகையாகிய நம் தலைவன் தேர் ஊர்ந்துத் தலைவியின் இல்லத்திற்குச் சென்றான் என்றுத் தலைவனின் வருகை மாலைக்காலத்தில் நிகழ்ந்ததை,

**"நிரைசெல் பாம்பின் விரைபு நீர்முடுக**
**செல்லும் நெடுந்தகை தேரே**
**முல்லை மாலை நகர்புகல் ஆய்ந்தே"[164]**

***(குறுந்தொகை, பாடல் எண் 324, அடிகள் 13-15)***

எனும் குறுந்தொகை அடிகள் குறிப்பிடுகிறது. பிரிந்தத் தலைவன் இல்லத்தே புகுதலையுடைய மாலைப்பொழுதானது மாலையின் நிகழ்வோடு விளக்கப்படுகிறது.

தலைவனின் தேர் காற்றைப் போன்ற வேகத்துடன் மாலைக்காலத்தில் தலைவி இருக்கும் இடத்தை அடைவதை,

**"கால்இயல் செலவின் மாலை எய்தி"[165]**

***(குறுந்தொகை, பாடல் எண் 189, அடி 5)***

என்றுக் குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

உரிப்பொருளைச் சிறப்பாகப் புனைந்துரைக்கும் நோக்கத்திலேயே திணைகளின் இடக்கூறுகளையும் கருப்பொருள்களின் விரிவுகளும் விரிவாகப் பாடப் பெறுகின்றன. வர்ணனையும் பொழுதின் இயல்பும் உரிப்பொருளுக்கேற்ற தன்மையோடு இயற்றப்பெறும்.

மாலைப் பொழுதில் தலைவனின் தேர்வரும் மணியின் ஓசையைக் கேட்கும் பொருட்டுத் தலைவி ஆற்றியிருந்தாள். விருந்து மேற்கொள்ளும் பொருட்டுத் தலைவன் தேர்வரும் ஊரை மட்டும் வராதது கண்டுத் தலைவி ஆற்றாமை மிகுவதானது. வினை முடித்த தலைவன் மீண்டும் வரும் நாளில் விருந்தயரும் மரபு இருந்துள்ளது.

மாலைக்காலத்தில் விருந்தை நுகரும் பொருட்டுத் தலைவன் தேர் ஒலித்தபடி வரும் வழிகள் குறுங்காட்டில் உள்ளன.

**“மரம் பயில் இறும்பின் ஆர்ப, சுரன்இழுபு**
**மாலை நனிவிருந்து அயர்மார்**
**தேர்வரும் என்னும் உரைவராதே”[166]**

***(குறுந்தொகை, பாடல் எண் 155, அடிகள் 5-7)***

எனும் குறுந்தொகைப் பாடல் விளக்குகின்றது.

### 2.7.3.14. மாலையில் விளக்கேற்றுதல்

மாலைக்காலத்தில் வீடுகளில் மகளிர் விளக்கேற்றும் மரபு சங்க காலத்தில் இருந்திருப்பதை சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. மாலைப்பொழுதில் வெண்மையானத் திரியினை ஏற்றி விளக்கேற்றப்பட்டதைக் கூறும் அகநானூற்றுப் பாடல்,

**“அகன்சுடர் கல்சேர்பு மறைய மனைவயின்**
**ஒண்தொடி மகளிர் வெள்திரிக்கொளாஅவின்”[167]**

***(அகநானூறு, பாடல் எண் 47, அடிகள் 9-10)***

விரிந்த சுடரையுடைய ஞாயிற்று மண்டிலமத் மேல்திசையின் கண் மலையினை அடைந்து மறைய, ஒள்ளிய வளையலையுடைய மகளிர் தாம் தகளியின் கண் இட்டவெள்ளியத் திரியிடத்தே விளக்கை ஏற்றுவர் என்பதை விளக்குகின்றது.

கயல்மீன் போன்ற அழகிய மையுண்ட கண்களையுடையக் கனத்த குழையணிந்தப் பெண்கள் உலகமே தொழுகின்ற ஒளிப் பொருளாகியத் தெய்வ ஆவின் நெய் ஊற்றி துன்பத்தை மிகுவிக்கும் மாலைப்பொழுதில் விளக்கு ஏற்றியதை,

***"கயல்ஏர் உண்கண் கனங்குழை மகளிர்***
***கையுறை ஆக, நெய்பெய்து மாட்டிய***
***சுடர் துயர் எடுப்பும் புன்கண் மாலை"*** [168]

***(குறுந்தொகை, பாடல் எண் 398, அடிகள் 3-5)***

எனும் குறுந்தொகைப் பாடலில் குறிக்கப்பெறுகின்றது.

தலைவன் பிரிந்தக் காலத்தில் வரும் மாலைப்பொழுது தலைவி தலைவனை எண்ணி வருந்துதற்குரியக் காலம் ஆகும். தலைவன் பொருள் தேடிச் சென்றக் காலத்தில் மாலைப்பொழுது வருவதைக் கண்டுத் தலைவி கருதியத் தொழிலை முடித்து தலைவன் மீண்டும் வரும் காலம் என்பதை அறிவாள். தலைவனின் வரவை எதிர்நோக்கி மாலைப்பொழுதில் தலைமகள் வீட்டில் விளக்கேற்றி வைப்பதை,

***"சுரன்முதல் வந்த உரன் மாய்மாலை***
***உள்ளினென் அல்லெனோ"*** [169]

***(நற்றிணை, பாடல் எண் 3, அடிகள் 6-7)***

என்னும் நற்றிணைப் பாடல் எடுத்தியம்புகிறது.

தலைவன் அருகே இல்லாததால் மாலை தலைவிக்குத் துன்பம் செய்தது. அத்தகையத் துன்பம் செய்யும் மாலையினைத் தம் காதலர் உடனிருப்பதால் அயற் பெண்டிர் வரவேற்றனர். மாலைப்பொழுதினை விளங்கும் வளையணிந்த மகளிர் தத்தம் மாளிகையின்கண் இருந்து மீன் கொழுப்பைச் சேர்த்து உருக்கிய நெய்யினை வார்த்து விளக்கேற்றி எதிர்கொண்டு அழைத்ததை நற்றிணையில்,

***"புலம்பு வந்து இறுத்த புன்கண் மாலை***
***இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர***
***மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண்சுடர்"*** [170]

***(நற்றிணை, பாடல் எண் 215, அடிகள் 3-5)***

என்றுக் குறிப்பிடுகின்றது.

செல்வம் பொருந்திய மனைகளில் பொலிவுப்பெற்ற தொடி அணிந்த மகளிர் விளக்கினை ஏற்றி அந்தியில் செய்யப்படும் செயல்களைப் புரிவர் என்பதை,

***"பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி***
***அந்தி அந்தணர் அயர, கானவர்"*** [171]

***(குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 224-225)***

என்னும் குறிஞ்சிப்பாட்டு அடிகள் மகளிர் மாலைப்பொழுதில் விளக்கேற்றி வழிபடுதலை எடுத்துரைக்கின்றது.

நன்மணம் கருதி, தலைவி கற்பு நெறித் தவழும் முல்லைத் திணைக்குரிய இயல்புடையவளாய் விளங்கியது அத்திணைக்குரியச் சிறுபொழுதான மாலைப் பொழுது என்பதைக் கூறுகின்றது. -

முதற்பொருளின் ஒரு பகுதியாக விளங்கும் காலம் பற்றியக் கற்பனைகள் உரிப்பொருளுக்கு உறுதுணையாக அமைந்துள்ளன. இதில் பொழுதுகளின் வர்ணனை சிறப்பாக அமைவதோடு, கற்பனையழகோடும் இடம்பெறுவதைப் பெற முடிகின்றது. அவ்வகையில் காலம் என்ற ஒன்றே மனித வாழ்வில் அடிப்படைக் கூறாக அமைந்து அவனின் வாழ்க்கை முறையைச் சூழ்நிலைக்கு ஏற்ற மனநிலையாக சுழலச் செய்கின்றது.

மாலைப்பொழுது, மாலைப்பொழுதின் வரவையும், மாலைக்காலத்தில் உயிர்களின் தன்மையையும் அதன் நிகழ்வுகளையும் உணர்த்துகின்றன. மாலையின் வருகை பறவைகள், விலங்குகள், வண்டினங்கள் இவற்றின் ஆரவாரத்தால் உணர்த்தப் படுகின்றது. கதிரவன் தன் கடமையானப் பகலைச் செய்து முடிக்கும் வேளை உயிரினங்களும், தங்கள் கடமையுணர்வால் தத்தம் வாழிடங்களை அடையும் இயல்பானது மாலைக்காலச் சசூழலோடு சங்க இலக்கியங்களில் காட்டப் படுகின்றன.

மாலைக்கால வருகை சில உயிர்களுக்கு இன்பமும் சில உயிரினங்களுக்குத் துன்பமும் கொடுப்பனவாக அமைகிறது. திணை சார்ந்த இட வர்ணனையும் பருவ வர்ணனைகளும் அகத்திணைகளின் ஒழுக்கம் சார்ந்த அக உணர்வுகளை வெளிப்படுத்தும் விதமாகக் காட்டப்படுகின்றன. தலைவன் தலைவியரின் அக ஒழுக்கங்களின் உள்ளுணர்வுப் பாங்கினை எடுத்துரைப்பதற்குக் கருப்பொருள்கள் உதவுகின்றன. உணர்வுப் போராட்டங்களையும் அதனூடே உரிப்பொருள் நயத்தையும் விளக்குவதற்குப் பொழுதுகள் பெரிதும் துணை நிற்கின்றன. எந்த ஒரு நிகழ்வுகளுக்கும் காலக்கூறுகளின் தன்மையே முதன்மைக் கூறுகளாகின்றன. இக்காலச் சிறப்பினை ஒவ்வொரு பருவச் சூழல் வர்ணனையிலும் பெறமுடிகிறது.

### 2.7.4. மலர்கள் மலரும் மாலை

சங்க இலக்கியப் பாடல்களில் இயற்கைப் புனைவுகள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் வழி விளக்கப்படுகின்றன. இது முதற்பொருளுக்குச் சிறப்பு சேர்க்கின்றன. பண்டையத் தமிழர் வாழ்க்கைக்குறித்து,

**“தமிழன் மரபே இயற்கை அவனுடைய**
**வாழ்வே இயற்கையின் திருவுரு”**[172]

***(கதிர்மகாதேவன், ஒப்பிலக்கியநோக்கில் சங்ககாலம், பக்கம் 9)***

என்றக் கருத்து நிலவுகின்றது. உலகின் அனைத்து நாடுகளுக்கும் நாகரிகங்களுக்கும் இலக்கியங்களுக்கும் இயற்கை பொதுவுடைமையானது. ஆயினும் பழந்தமிழர் இயற்கை சார்ந்த வாழ்க்கைக்கு முதன்மை அளித்தனர் என்பதால் இத்தகையக் கருத்து ஏற்றுக்கொள்ளப்படவேண்டியதாகும். அவர்களின் புறவாழ்க்கை

மட்டுமின்றி அகவாழ்வையும் இயற்கையே உருவாக்கியது. புலவனை இயக்கும் கருவியாகவும் இயற்கை அமைந்தது. சங்ககாலம் புலவர்களின் சிந்தனையைத் தூண்ட சுற்றுப்புறமும் பருவகாலச் சூழலும் வேண்டப்பட்டது.

ஐந்நில மக்களின் ஒழுகலாறுகள், உரிப்பொருள் தன்மை போன்றவை அந்தந்த நிலத்திற்கு தக்க மாறுபடும். அடிப்படை ஒழுக்கத்தில் மாற்றம் நிகழவதில்லை.

பண்டைத் தமிழர் தங்கள் ஒழுக்க கூறுபாடுகளை உணர்த்துவதற்குப் பூவை அடையாளம் கொண்டு ஒழுகினர். அகத்திணை மட்டுமல்லாது புறத்திணையிலும் அவற்றின் ஒழுக்கங்களை உணர்த்தப் பூவினை அடையாளப் படுத்தினர்.

பூவின் சிறப்பு கருதியே ஒவ்வொரு திணைக்கும் அந்நிலத்தின் சிறப்பு வாய்ந்த மலரின் பெயரே திணையின் பெயராயிற்று.

ஒவ்வொரு மலருக்கும் மலரும் பொழுது என்று ஒன்று உண்டு. பெரும்பான்மை மலர்கள் மாலையில் மலரும் தன்மை பெற்றன. மாலை வேளையில் கூம்பும் மலர்கள் என்பதுப் பற்றியக் குறிப்பும் காணப்படுகின்றன.

பல்வகைப்பூக்கள் மலரும் அரும்புகள் நெகிழும் மாலைக்காலம்,

**“மனைமனைப்படரும் நனை நகுமாலைத்”**[173]

**(அகநானூறு, பாடல் எண் 54, அடி 12)**

என்றுக் குறிப்பிடப்பட்டு முல்லை, மல்லிகை முதலியவற்றின் மொட்டுக்கள் அலர்தலையுடைய மாலைப்பொழுது என்பதைக் குறிப்பிடுகின்றது.

### 2.7.4.1. முல்லை

மாலையில் மலரும் தன்மை கொண்ட மலராக முல்லை மலர் குறிப்பிடப் படுகின்றது. முல்லை மலர் மலரும் மாலைக்காலத்தைத் துணையோடு கலந்திருப்பவர் வரவேற்பர் என்பதை,

**“சுடர்செல் வானம் சேப்ப, படர்கூர்ந்து**
**எல்லுறு பொழுதின், முல்லை மலரும்**
**மாலை என்மனார் மயங்கியோ ரே”**[174]

**(குறுந்தொகை, பாடல் எண் 234, அடிகள் 1-3)**

எனும் குறுந்தொகைப் பாடல் விளக்குகிறது. தலைவன் முல்லை மலரும் மாலையில் வருவதாக உரைத்தமையால் அவன் வருகைக்காகக் காத்திருக்கும் பொழுதெல்லாம் மாலையாகத் தோன்றியது. துணையோடு கூடிக் கலந்தவர் முல்லையைச் சூடி மகிழ்வதால் முல்லைமலர் இன்பத்தைத் தந்துள்ளதை அறியமுடிகிறது.

உள்ளிடத்தே சிறகை உடைய வண்டின் கூட்டமானது மொய்க்கும் படியாக மென்புலங்களில் முல்லைக்கொடிகள் மாலைப்பொழுதில் மலர்ந்ததை,

***“அஞ்சிறை வண்டின் அரியினம் மொய்ப்ப***
***மென்புல முல்லை மலரும் மாலை”[175]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 489, அடிகள் 1-2)***

*என்று ஐங்குறுநூற்று அடிகள் குறிப்பிடுகின்றன. முல்லையின் நறுமணம் கமழும் மலரை வலியக் கையினை உடைய இடையன் கொய்து வெண்மையானப் பனங்குருத்தின் போதுடன் சேர்த்துத் தொடுத்த மாலையின் மணம் கமழும் மாலைப் பொழுதினை,*

***“மீமிசைக் கவித்த வீநறு முல்லை***
***...........................................***
***வெண் போழ் தைஇய அலங்கல் அம்தொடலை***
***மறுகுடன் கமழும் மாலை”[176]***

***(நற்றிணை, பாடல் எண் 169, அடிகள் 5-9)***

*என்று நற்றிணை எடுத்தியம்புகின்றது.*

*பகற்பொழுது கழிந்தும் முல்லை அரும்புகள் மலராது நிற்கும். இத்தகையப் பொழுது செயலறிவினைத் தோற்றுவிக்கும் மாலைப் பொழுது என்பதை,*

***“எல்லை கழிய முல்லை மலர***
***கதிர்சினம் தணிந்த கையறு மாலை”[177]***

***(குறுந்தொகை, பாடல் எண் 387, அடிகள் 1-2)***

*என்ற அடிகள் அறிவுறுத்துகின்றன.*

*வினைமுற்றி தத்தம் இல்லம் திரும்பும் ஒளி குன்றிய மாலைக் காலத்தில் முல்லை மட்டும் முறுவல் பூத்து நின்றதால், தலைவி வாழ்க என வாழ்த்துவதாகக் குறுந்தொகை விளக்குகிறது.*

***“முல்லை வாழியோ முல்லை - நீ நின்***
***சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை***
***நகுவை போலக் காட்டல்***
***தகுமோ மற்று - இது தமியோர் மாட்டே”[178]***

***(குறுந்தொகை, பாடல் எண் 162, அடிகள் 3-6)***

*எனும் அடிகள் துணையைப் பிரிந்து தனிமையுடையோரைக் கண்டுச் சிரிப்பது போல் முல்லை மலரும் காலம் மாலைக் காலம் என்பதைப் புலப்படுத்துகின்றது.*

*கார்ப்பருவத்தின் வருகையைக் கண்டத் தலைவி, தலைவன் வராததால் வருத்தம் கொண்டாள். முல்லை பூத்தல் மாலையில் நிகழும் முல்லை பெண்கள் தம் கற்பிற்கு அடையாளமாகச் சூடும் மலராகும். முல்லை வெண்மை நிறம் உடையது. அது மாலை நேரச் சூரியனின் செம்மையானக் கதிர்கள் பட்டு அழகு பெற்றதை,*

***“பாசிலை முல்லை ஆசுஇல் வான்பூச்***
***செவ்வான் செவ்வி கொண்டன்று”[179]***

***(குறுந்தொகை, பாடல் எண் 108, அடிகள் 3-4)***

*எனும் குறுந்தொகை அடிகள் உரைக்கின்றது. தனிமையுற்றோர் வருந்தும் பனிபடர் மாலைப் பொழுதின் வருகையை இடையர்களின் மாலையில் உள்ள முல்லையின் முகை அறிவிப்பதாக உள்ளதைக் குறுந்தொகை கூறுகின்றது.*

***"தனியோர் இரங்கும் பனிகூர் மாலைப்***
***பல்ஆன் கோவலர் கண்ணிச்***
***சொல்லுப அன்ன முல்லை வெண்முகையே"***[180]

***(குறுந்தொகை, பாடல் எண் 358, அடிகள் 5-7)***

*மழைக்காலத்திலும் பனிக்காலத்திலும் பொழுதினைப் பல்வேறு நிகழ்வுகளைக் கொண்டு கணித்துள்ளனர். மாலைப்பொழுதின் வருகையை முல்லை மலரைக் கொண்டு அறிந்ததால் அது மாலையில் மலரும் இயல்புடையது என்பதை உணரமுடிகிறது.*

*மாலையில் மலரும் முல்லை மலரின் மணம் வண்டின் கூட்டம் வேறோர் இடத்தை நோக்கி செல்ல விடாது தடுத்து நிறுத்தும் தன்மையுடையது. அத்தகைய முல்லையின் மணங்கமழும் மாலைப் பொழுதினை,*

***"முகைவாய் திறந்த நகைவாய் முல்லை***
***கடிமகள் கதுப்பின் நாறி கொடிமிசை***
***வண்டினம் தவிர்க்கும் தண்பதக் காலை"***[181]

***(அகநானூறு, பாடல் எண் 244, அடிகள் 4-6)***

*என்றுக் கூறுகிறது.*

### *2.7.4.2. காந்தள்*

*மாலைப்பொழுதில் பலவிடங்களிலும் காந்தள் தழைத்து மலர்ந்து நின்றதை விளக்கென ஏந்தி நின்றதாக,*

***"தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உறாஅ"***[182]

***(நற்றிணை, பாடல் எண் 69, அடி 6)***

*என்று நற்றிணை குறிப்பிடுகின்றது.*

### *2.7.4.3. செங்காந்தள், முசுண்டை*

*அழகிய இதழ்களைக் கொண்ட செங்காந்தளின் அரும்புகள் அகல்விளக்கு போல் மலர்ந்த மாலைக் காலத்தில் முசுண்டைச் செடியின் வெண்மையானப் பூக்கள் விண்மீன்களைப் போல பசுமையானப் புதர்களை அழகு செய்ததை,*

***"வாடையோடு நிவந்த ஆய்இதழ் தோன்றி***
***சுடர்கொள் அகலின் சுநங்குபிணி அவிழ***
***சுரிமுகிழ் முசுண்டைப் பொதிஅவிழ் வான்பூ***
***விசும்புஅணி மீனின் பசும்புதல் அணிய"***[183]

***(அகநானூறு, பாடல் எண் 235, அடிகள் 7-10)***

*எனும் அடிகள் நயமுற காட்சிப்படுத்துகின்றன.*

***2.7.4.4. புதல்***

*காதலர் பிரிதற்கு அரியப் பொழுது மாலைப் பொழுதாகும். புதல் எனும் மலர்கள் மலர்ந்து நிறைந்துக் காணப்படும் மாலைப் பொழுதில் பிரியும் தன்மையுடையவர் தலைவன் என்பதை,*

***"புதல் மலர் மாலையும் பிரிவோர்"[184]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 215, அடி 5)***

*எனும் ஐங்குறுநூறு அடி சுட்டுகின்றது.*

***2.7.4.5. பிடவம்***

*கார்காலம் வந்தும், தலைவன் வரவில்லை. வண்டுகள் வாய்திறந்து, தேனுண்ணுமாறு பிடவ மலர்கள் மலரும். பிடவம் மலரும் அந்தி மாலையில் தான் காமநோய் கொள்ளுமாறு கார்ப்பருவம் மழையைப் பெய்தலால் மேகத்தைக் கடிந்துக் கொள்கிறாள் தலைவி,*

***"வண்டு வாய் திறப்ப விண்ட பிடவம்***
***மாலை அந்தி மால் அதர் நண்ணிய"[185]***

***(நற்றிணை, பாடல் எண் 238, அடிகள் 3-4)***

*என்றுக் குறிப்பிடும் நற்றிணை, பிடவம் மாலையில் மலரும் தன்மை கொண்டது என்பதைப் பேசுகின்றது.*

***2.7.4.6. புன்னை, தாழை***

*காதல் துன்பம் பெருகி வருத்தமடையச் செய்யும் கதிரவன் காயும் மாலைப் பொழுதில் புன்னையும் தாழையும் கடற்கரை சோலையிடத்தே நிறைந்து விளங்கியதைக் கூறும்,*

***"வீழ்தாழ் தாழை பூக்கமழ் கானல்***
***படர்வந்து நலியும் சுடர்செல் மாலை"[186]***

***(நற்றிணை, பாடல் எண் 78, அடிகள் 4-5)***

*எனும் நற்றிணைப் பாடல், புன்னையும் தாழையும் மலர்ந்து மணம் வீசும் பொழுது மாலையாகும் என்பதை உரைக்கின்றது.*

***2.7.5. மாலை நேரப் பண்***

*பண் என்பது இசைப்பாட்டு சூழலுக்கு ஏற்பவும் மனநிலைக்கு ஏற்பவும் பொழுதிற்கேற்பவும் இசைக்கப்பட்டுள்ளது.*

***"மாலைப்பொழுதில் பாடப்படும் பண் செவ்வழிப் பண். இது இரங்கற்பண் என்று அழைக்கப் பெறுகிறது. செவ்வழி என்பதற்கு, ஓர் பண், நெய்தல் நிலத்து யாழ்"[187]***

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 465)***

*என்று யாழ்ப்பாண அகராதி பொருள் தருகிறது.*

*செவ்வழிப்பண் என்பதற்கு நல்லவழி என்றுப் பொருள் உண்டு. பேகனைப் பாடும் பாணர்கள் தம் சிறிய யாழில் செவ்வழி என்னும் பண்ணைப் பாடினர்.*

***"அருளாய் ஆகலோ கொடிதே இருள்வர***
***சீறுயாழ் செவ்வழி பண்ணி யாழநின்***
***கார் எதிர் கானம் பாடினோமாக"[188]***

***(புறநானூறு, பாடல் எண் 144, அடிகள் 1-3)***

*வையாவிக் கோப்பெரும் பேகனை பாடிய அரிசில் கிழார், நீ பரிசில் தருவாய் ஆயின் சிறிய யாழில் செவ்வழிப் பண்ணை வாசித்து நின் வலிமை பொருந்திய நிலமாகிய மலைநாட்டைப் பாடுவோம் என்பதை,*

***"சீறியாழ் செவ்வழி பண்ணி நின் வன் புல***
***நம்நாடு பாட என்னை நயந்து***
***பரிசில் நல்குவை ஆயின்"[189]***

***(புறநானூறு, பாடல் எண் 146, அடிகள் 3-5)***

*எனும் புறநானூற்று அடிகள் கூறுகின்றது.*

*காலையில் மருதப்பண்ணும் மாலையில் செவ்வழிப் பண்ணும் மாலையில் செவ்வழிப் பண்ணும் பாடுதல் இசை இயல்பாகும். நள்ளி, பாணர்க்கு வறுமை தோன்றாத வண்ணம் கொடுத்தக் கொடைத்தன்மையால் பாணர்கள் முறையை மறந்தனர் என்பதை,*

***"மாலை மருதம் பண்ணி, காலை***
***கைவழி மருங்கின் செவ்வழி பண்ணி***
***வரவு எமர் மறந்தனர்"[190]***

***(புறநானூறு, பாடல் எண் 149, அடிகள் 2-4)***

*எனும் புறநானூற்றுப் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.*

*செவ்வழி மாலைநேரப் பண். முல்லை நிலப்பண்ணான செவ்வழி, சாதாரி என்று அழைக்கப்படும். சாதாரிப் பண் மாலையில் வாசிக்கப்படுவது. பெரும்பாலும் மாலையில் செவ்வழிப்பண் வாசிக்கப்படுதாகவே சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.*

***"பாணர் முல்லை பாட, சுடர் இழை***
***வாள் நுதல் அரிவை முல்லை மலைய***
***இனிது இருந்தனனே நெடுந்தகை***
***துனிதீர் கொள்கைத் தன் புதல்வனொடு பொலிந்தே"[191]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 408, அடிகள் 1-4)***

*எனும் பாடல் பாணர்கள் முல்லைப் பண்ணை யாழிலிட்டு வாசிக்கத் தலைவி மாலைக் காலத்தில் மலரும் முல்லையைச் சூட தலைவன் தன் புதல்வனோடு மாலையில் பொலிவுற்று இருந்ததை விளக்குகிறது.*

### 2.7.5.1. துன்பம் தரும் மாலைப்பண்

நரம்பின் இனிதானக் கட்டினையுடைய நல்ல யாழ் இசை பிரிந்தார்க்கு வருத்தத்தைக் கொடுக்கக் கூடிய செவ்வழிப் பண்ணை இசைத்ததை,

**"பையுள் நல்யாழ் செவ்வழி பிறப்ப**
**இந்நிலை வாரார் ஆயின் தம்நிலை**
**எவன்கொல்?"[192]**

**(அகநானூறு, பாடல் எண் 314, அடிகள் 12-14)**

எனும் பாடல் அடிகள் கூறியுள்ளன.

துன்பம் தரும் மாலையில் யாழிடம் செவ்வழிப்பண்ணை அமைத்துப் பாடுதலினால் தலைவிக்குத் தனிமைத் துன்பம் மேலோங்கும். தலைவி தனித்திருந்து உயிர்களை வருத்தும் செவ்வழிப் பண்ணின் ஓசையை கேட்கும் மழைக்காலத்து மாலைப்பொழுதினை,

**"பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப**
**ஆருயிர் அணங்கும் தெள்ளிசை**
**மாரி மாலையும் தமியள் கேட்டே?"[193]**

**(அகநானூறு, பாடல் எண் 214, அடிகள் 13-15)**

என்றுக் குறிப்பிடப்படுகின்றது. மாயையில் வாசிக்கப்படும் செவ்வழிப் பண்ணானது பிரிவுத் துன்பத்தை மிகுவிப்பது என்பதைப் பெறப்படுகிறது.

வாழ்வின் அன்றாடத் தொழில்களும், கடமைகளும், செயல்பாடுகளும் ஒரு முடிவுக்கு வரும்பொழுது மாலைப் பொழுதாகும். அப்பொழுது மாந்தர் தம் உள் உணர்வு மேலோங்கும் பொழுதாக அமையும். விலங்குகளின் தாய்ப்பாசமும் இணை இன்பமும் அரங்கேறும் காலச்சூழலை மாலைப்பொழுது காட்டுகின்றது. இயற்கையானது இளமை இன்பம் நுகரும் இனியச் சூழலையும் மனநிலையையும் கொண்டு வருவதாக மாலைக்காலம் அமையும். இணையும் இன்ப வாய்ப்புப் பெற்றவர்கள் மாலையை எண்ணி ஏங்குவதும் தனிமையில் வாடுவோர் மாலைப் பொழுதின் தன்மையை எண்ணி வருந்துவதும் ஆன அகஒழுக்கக்கூறுகளை மாலை நேரக்காட்சிகளும் சூழல்களும் விவரிக்கின்றன. மாலைக்காலச் சூழலைக்கூறி அதன் தன்மையை விளக்கியும் அப்பொழுதின் கண் மக்கள் அடையும் அகவுணர்வுப் போராட்டத்தையும் கூறும்போது மாலைக்காலக் காட்சி செம்மையாக வர்ணிக்கப் படுகின்றன.

### 2.8. யாமம்

யாமம் என்பதற்கு,

**"இராத்திரி, சாமம், மாலைப்பொழுதின் பின் பத்து நாழிகை"[194]**

**(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 392)**

என்று பல பொருள்களை யாழ்ப்பாண அகராதி தருகின்றது.

யாமம்என்பது இரவுப்பொழுதினைக் குறிக்கும் சொல்லாக இலக்கியங்களில் இடம்பெறுகின்றது. யாமம் இரவு 10 மணிமுதல் நள்ளிரவு 2 மணிவரையிலான 10 நாழிகைப் பொழுதாகும். குறிஞ்சி நிலத்திற்குரியச் சிறு பொழுதாக யாம் கருதப் படுகின்றது. தொல்காப்பியம்,

**"குறிஞ்சி, கூதிர் யாமம் என்மனார் புலவர்"[195]**

**(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் நூற்பா 6)**

எனும் நூற்பாவில் தெரிவிக்கிறது.

இரவுக்காலச் சிறுபொழுது பற்றியக் குறிப்புகள் சங்க இலக்கியத்தில் பரந்து உள்ளன. யாமம் சில மலர்கள் மலரும் காலமாகவும் இருள்நிறைந்த மழை செறிந்தப் பொழுதாகவும் சிலருக்குத் துயில் நிறைந்தும் சிலருக்குத் துயில் நீங்கியதுமானச் செயல்களுக்குத் துணைபுரியும் காலமாகக் காட்டப்படுகின்றன.

அச்சம் தரும் விலங்கினங்கள் இயக்கம் பெறும் யாமப்பொழுதானது, மக்களின் அகவுணர்வுப் போராட்டங்களை வெளிப்படுத்தி அது உரிப்பொருளுக்கு ஏற்ற ஒழுக்கத்தைக் கொண்டு விளக்கம் பெறுகிறது.

### 2.8.1. யாமப்பொழுதின் பெயர்கள்

யாமப்பொழுது கங்குல், பானாட்கங்குல், எல், நடுநாள், நடுயாமம், அரை நாள், பானாள், அல்கல், இரவு என இலக்கியங்களில் குறிக்கப்படுகின்றன. யாமப் பொழுதின் தன்மைக்கு ஏற்றவாறு ஒவ்வொரு சூழலிலும் வேறுவேறு பெயர்களில் கையாளப்படுகின்றன.

### 2.8.2. யாமப்பொழுதின் தன்மை

இருள் நிறைந்த பொழுதாகவும் விலங்கினங்கள் திரிதலால் அச்சத்திற்குரியப் பொழுதாக யாமம் விளங்குவதை இலக்கியங்களில் காணமுடிகிறது. ஞாயிறு மறைந்து, மதிஒளி நிறைந்து, பறவையினங்களின் ஆரவாரம் அடங்கிய இரவின் தன்மையை,

**"ஒண்சுடர் கல்சேர, உலகு ஊரும் தகையது**
**தெண்கடல் அழுவத்துத் திரை நீக்கா எழுதரூஉம்**
**தண் கதிர் மதியத்து அணி நிலா நிறைத்தர**
**புள்ளினம் இரைமாந்திப் புகல்சேர, ஒலிஆன்று"[196]**

**(கலித்தொகை, பாடல் எண் 121, அடிகள் 1-4)**

என்றுக் கலித்தொகை குறிப்பிடுகின்றது.

**2.8.2.1. நள் என்னும் யாமம்**

நள் என்றால் இரவு, நடு, உச்சிப்பொழுது என்னும் பொருள் பெறுகிறது. இரவுப்பொழுதின் நடுக்கூறாகிய நடு யாமப்பொழுது நள் என்ற ஓசையை உடையது என்பதை,

**"நள்ளென்றன்றே யாமம், சொல் அவிந்து**

**இனிது அடங்கினரே மாக்கள் முனிவு இன்று"**[197]

**(குறுந்தொகை, பாடல் எண் 6, அடிகள் 1-2)**

யாவரும் துயிலும் நள்ளிரவில் தான்மட்டும் துயில் வராமல் வருந்துவதாக அமைந்த பாடல் இரவின் நள் என்ற ஓசை மக்கள் சொல் அவிந்து அடங்கியமையால் தலைவி கேட்கப்படுவதாயிற்று என்பதைக் குறிப்பிடுகிறது.

ஊரிலுள்ளார் பலரும் துயிலும் இருள் செறிந்த நடுஇரவு நள் என்னும் ஓசையையுடையதாய் இருப்பதை,

**"பல்லோர் துஞ்சும் நள்ளென் யாமத்து"**[198]

**(குறுந்தொகை, பாடல் எண் 244, அடி 1)**

எனும் பாடல் அடிகள் விளக்குகின்றன.

மாந்தர் மட்டுமல்லாது பல்வேறு உயிரினங்களும் உறக்கம் கொள்ளும் பொழுதாக விளங்கும் யாமம் நள்ளென்னும் ஓசையுடையதாக உள்ளது. கடல் மீன்கள் உறங்குகின்ற நள்ளென்னும் ஒலியையுடைய இடையாமம்,

**"கடல் மீன் துஞ்சும் நள்ளென் யாமம்"**[199]

**(அகநானூறு, பாடல் எண் 142, அடி 10)**

என்று அகநானூற்றில் குறிப்பிடப்படுகிறது.

**2.8.2.2. கான் மடி இரவு**

இரவுப்பொழுதில் காட்டில் உள்ள உயிர்கள் தன்செயல்கள் அடங்கியிருக்கும் சூழல் கான்மடி இரவு என்றுக் குறிப்பிடப்படுகின்றது.

**"கனமழை பொழிந்த கான்மடி இரவில்**

**தினைமேய் யானை இனன் இரிந்து ஓட"**[200]

**(அகநானூறு, பாடல் எண் 392, அடிகள் 12-13)**

எனும் அடிகள் காட்டிலுள்ள உயிரினங்கள் யாவும் ஒடுங்கிக் கிடக்கின்ற நள்ளிரவில் தினைப் பயிரை மேய்கின்ற யானைக்கூட்டம் அஞ்சி ஓடும்படி குறவன் கவண் கல்லை எறிந்ததைக் காட்டுகின்றது.

### *2.8.2.3. பானாட் கங்குல்*

*பனி வருத்துகின்ற நள்ளிரவுப் பொழுதில் காதலரைப் பிரிந்துத் தனிமையில் வாழ்வோர் பிரிவுத்துன்பத்தைப் பொறுக்கும் ஆற்றல் இல்லாதவராய் இருத்தலை அகநானூறு கூறுகின்றது.*

**"பனி அடூஉ நின்ற பானாட் கங்குல்**
**தமியோர் மதுகை தூக்காய் தண்ணென**
**முனிய அலைத்தி முரண்இல் காலை "[201]**

***(அகநானூறு, பாடல் எண் 125, அடிகள் 11-13)***

*எனும் பாடலில் பனிவருத்துகின்ற நள்ளிரவுப் பொழுது பானாட்கங்குல் என்றுக் குறிப்பிடப் படுகின்றது.*

### *2.8.2.4. உயிரினம் உறங்கும் யாமம்*

*பலரும் உறங்கும் நள்ளிரவுப் பொழுது என்பதை,*

**"எல்லைச் சேறலின், இருள்பெரிது பட்டன்று**
**பல்லோர் துஞ்சும் பானாள் கங்குல்"[202]**

***(குறுந்தொகை, பாடல் எண் 355, அடிகள் 3-4)***

*என்று குறுந்தொகை விளக்குகின்றது. இரவுக்கு றியின் இடையீடுகளைக் கடந்துத் தலைவன் தன்னைக் காண வந்ததுக் குறித்து மகிழ்ந்தபோதும் இரவின் ஏதங்களை எண்ணி பலரும் தூங்கும் நள்ளிரவுப் பொழுதில் தலைவி தூங்காமல் இருந்ததைக் கூறும் வகையில் இப்பாடல் அமைகிறது.*

*உலகத்தில் உடலோடு நிலைபெற்ற உயிரினமெலலாம் உறங்குகின் றக் கூதிர் பருவத்து நள்ளிரவுப் பொழுது,*

**"மன்னுயிர் மடிந்த பானாட் கங்குல்"[203]**

***(அகநானூறு, பாடல் எண் 58, அடி 2)***

*எனும் அடியில் குறிப்பிடப்படுகின்றது.*

### *2.8.2.5. இரவுப்பெயல்*

*இரவு நேரத்தில் பெய்யும் மழை இரவுப் பெயல் என்றழைக்கப்படுகின்றது. இடியுடன் கூடியப் பெருமழை இரவு முழுவதும் பெய்தலால் உண்டான ஈரமிக்க சேற்றுவழியில் தலைவனைத் தேடிச் செல்வோம் எனத் தோழி கூறுவதாக அமைந்த பாடல் இரவு நேரத்து மழையை இரவுப்பெயல் என்றுக் கூறுவதை,*

**"உரவு உரும் ஏறொடு மயங்கி**
**இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறே"[204]**

***(அகநானூறு, பாடல் எண் 222, அடிகள் 14-15)***

*என்ற அகநானூற்றுப் பாடலடிகள் தெளிவுறுத்துகின்றன.*

***2.8.2.6. பையுள் யாமம்***

*தலைவன் தலைவியின் துன்பத்தைக் கருதாதுப் பொருள் கருதி சென்றான். ஆற்றாதவளாகியளத் தலைவி கண்ணீர்விட்டு அழுகிறாள். பனி மிகப் பெருகியத் துன்பம் செய்யும் நள்ளிரவினை நற்றிணை,*

***"எல்லை போகிய பொழுதின் எல்உற***
***பனிக்கால் கொண்ட பையுள் யாமத்து"[205]***

***(நற்றிணை, பாடல் எண் 241, அடிகள் 9-10)***

*என்னும் அடிகளில் பேசுகின்றது.*

***2.8.2.7. பிரிவுத் துன்பம்***

*இரவுப் பொழுது தலைவியின் துன்பம் மிகும் பொழுதாக உள்ளது. தலைவியின் மனதுத் தலைவன் வருகையை எதிர்பார்ப்பதால் யாமப்பொழுதின் ஓசைகள் தலைவனை நினைவூட்டுவதாகவே அமைந்துள்ளது.*

***"தேர் மணித் தெள் இசைகொல் என***
***ஊர் மடி கங்குலும் துயில் மறந்ததுவே"[206]***

***(நற்றிணை, பாடல் எண் 287, அடிகள் 10-11)***

*எனும் அடிகள் நடுஇரவின் இருளில் கேட்கும் பறவைகளின் ஓசையானது தலைவன் வரும் தேரின் ஒலியைப் போன்றுக் கேட்பதால் உறக்கம் கொள்ளாதுத் தவிக்கும் நிலையை உணர்த்துகின்றது.*

*யாமப்பொழுதின் ஒவ்வொரு ஓசையும் தலைவிக்குத் துன்பம் தருவதை இலக்கியச் சூழல் நிகழ்வோடு தெளிவுப்படுத்தப்படுகின்றது. பனித்துளி தூவும் வாடைக்காற்று வீசும் இரவுப்பொழுதில் தன்பெடையைப் பிரியாதுச் சேர்ந்திருக்கும் அன்றில் பறவையின் குரல் தலைவிக்கு வருத்தத்தை உண்டாக்கியதைக் கூறும்,*

***"பெடை புணர் அன்றில் உயங்கு குரல் அளைஇ***
***கங்குலும் கையறவு தந்தன்று"[207]***

***(நற்றிணை, பாடல் எண் 152, அடிகள் 7-8)***

*எனும் அடிகள் யாமப்பொழுதுத் தலைவிக்குச் செயலொன்றும் இல்லாதவாறு வருத்தத்தை உண்டாக்கியதை உணர்த்துகின்றது.*

***2.8.2.8. குருகு துணையாதல்***

*தலைவியின் துன்பத்திற்குத் தலைவனே காரணம். தலைவன் விட்டுச் சென்றப் பொழுதில் ஒலிக்கின்ற அலைகளும் வீசுகின் ற காற்றும் இதோடு தனிமையால் வாடும் குருகும் இவளுக்குத் துணையாக உள்ளது.*

***"தன் துணைப் பிரிந்து அயாஅம் தனிக்குருகு உசாவுமே"[208]***

***(கலித்தொகை, பாடல் எண் 21, அடி 16)***

*எனும் பாடல் தனிமைத் துன்பம் தலைவியை வருத்தியதைச் சித்தரிக்கிறது.*

***2.8.2.9. தனிமைத் துயர்***

*இயற்கை வனப்புகள் யாவும் கூடினார்க்கு இன்பம் செய்யவல்லது. பிரிந்துறைபவருக்கு இன்பம் தராது. அவர்களதுத் துன்பத்தை மிகுவிப்பன போல் தோன்றுவது. குறிஞ்சிக்குரியச் சிறுபொழுதான யாமப்பொழுதில் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் உரிப்பொருளாகக் கொண்ட அக ஒழுக்கங்கள் இயற்கை சூழலோடு இயைந்துக் கூறப்படுகின்றன. தலைவனை எதிர்நோக்கியத் தலைவியின் தனிமைத்துயரினைக் கூட்டும் யாமப்பொழுது. அப்பொழுதில் நிலவு, கடல், யாழிசை, அன்றில் நாரை போன்றப் பறவைகள் வாடைக்காற்று இவற்றின் இயல்பானச் செயலோடு ஒட்டிய வருத்தம் மிகுதியாக உணரப்பெறுகின்றது.*

***"அன்றிலும் என்புற நரலும் அன்றி***
***விரல் கவர்ந்து உழந்த கவர்வின் நல்யாழ்***
***யளாமம் உய்யாமை நின்றன்று"[209]***

***(நற்றிணை, பாடல் எண் 335, அடிகள் 8-10)***

*அன்றில் பறவை நரலுதலும் யாழிசையும் இரவின் நடுயாமத்தில் தலைவியில் உயிர் பிழைக்காதவாறு இசைத்து நின்றுத் தலைவியின் காமநோயை மிகுவிப்பதை நற்றிணைப் பாடல் இயல்பாக எடுத்துரைக்கிறது.*

*பறவைகளைச் சாட்சியாகவும் தூதாகவும் துணையாகவும் கொண்ட இயற்கை வழிப்பட்ட வாழ்வினைத் தமிழர் மேற்கொண்டுள்ளனர். ஐந்து திணை களின் பகுப்பினைத் தன் வாழ்வியல் ஒழுக்கங்களோடு இணைத்தும் காட்டியுள்ளனர். இரவில் தலைவன் இன்றி கண் துயிலாது தவிக்கும் தலைவி, தன் இயல்பில் பறவையினை துணையாகக் கருதுவதை,*

***"கைதைஅம் படுசினைப் புலம்பொடு வதியும்***
***தண்ணம் துறைவன் தேரே கண்ணின்***
***காணவும் இயைந்தன்று மன்னே, நாணி***
***நள்ளென் யாமத்தும் நகண்படைபெறேஎன்"[210]***

***(நற்றிணை,பாடல் எண் 178, அடிகள் 6-8)***

*எனும் அடிகள் பேசுகின்றன. நாரைக்குத் தன் துணையின் நினைவு மிகுந்ததால் இறையும் கொள்ளாது வருத்தம் மிகுந்திருந்தது. அஃறிணை உயிரான நாரைக்கு இத்தகைய வருத்தம் மிகுமாயின் காதலியின் நிலை என்ன என்பதைத் தலைவனுக்கு உணர்த்துமாறு அமைகிறது.*

*புணர்ச்சிக்காலத்திலும் இரவுக்காலம் மிக நீண்டதாய் தலைவிக்குத் தோன்றுகிறது. தலைவன் வந்தால் பேரின்பம் எய்தும் நிலையை எண்ணியே ஊரிலுள்ள பலரும் தூங்கும் நள்ளிரவிலே நீண்டநேரம் புறத்தே நிற்றல் தலைவிக்கு இன்பம் தருவதை,*

**“பலர்மடி கங்குல் நெடும்புற நிலையே”[211]**

***(அகநானூறு, பாடல் எண் 58, அடி 14)***

*எனும் அடிகள் கூறுகின்றது. புணர்ச்சிக் காலத்தை விடவும் பிரிவுக்காலத்தில் படும் துன்பத்தைத் தலைவனுக்கு உணர்த்துமாறு அமைந்துள்ளது.*

*நள்ளிரவில் எழும் ஓசை கூட தலைவியின் துன்பத்தை மிகுவிக்கிறது. மக்கள் பேச்சொழிந்து அடங்கியமையால் யாமத்தில் கேட்கும் மாட்டின் மணியோசை கூட தலைவிக்குக் கேட்பதாயிற்று.*

**“ஆன்நுளம்பு உலம்புதொறு உளம்பும்**

**நாநவில் கொடுமணி நல்கூர் குரலே”[212]**

***(குறுந்தொகை, பாடல் எண் 86, அடிகள் 5-6)***

*எனும் அடிகள் நள்ளிரவில் பலரும் தூங்கும் வேளை மணியின் மெல்லிய ஓசை கூடத் தலைவிக்குத் துயர் தருவதாக அமைந்தது.*

***2.8.2.10. காமத் துன்பம்***

*தலைவியின் காமநோயானது கடலை விடவும் பெரிதாகத் தோன்றி ஆரவாரம் செய்து தனது எல்லையைக் கடந்துப் போகாமல் நின்றது. இத்தகைய உணர்வைக் கொண்டுவரும் நள்ளிரவானது (நள்ளியாமம்) தன்னைக் கூற்றுப் போன்று கொள்ளவருவதாகத் தலைவி கூறுவதை,*

***“யாமம் கொள்வாரின் கனைஇ, காமம்***

***கடலினும் உரைஇக் கரைபொழியும்மே”[213]***

***(அகநானூறு, பாடல் எண் 128, அடிகள் 3-4)***

*என்று அகநானூறு நவில்கின்றது.*

***2.8.3. யாமப்பொழுதின் நிகழ்வுகள்***

*உயிரினங்கள் ஓசையின்றி ஓய்வெடுத்து ஒடுங்கும் பொழுதாக யாமப் பொழுது வரையறுக்கப்படுகின்றது. இருள் நிறைந்த நள்ளிரவுப் பொழுதிலும், பல்வேறு நிகழ்வுகள் நிகழும் பொழுதாக விளங்குகிறது.*

*இரவுப் பொழுதில் அனைத்து உயிரினங்களும் செயலற்று ஒடுங்கினாலும் இரவு உணவுக்காகவும், இயல்பாகவும் இயங்கும் உயிரினங்களின் செயல்களை யாமப் பொழுதின் நிகழ்வுகளாகக் கொள்ளலாம். யாமத்தில் வேட்டையாடுதல், இரவுக்காவல் மேற்கொள்ளுதல், இரவில் வெளிப்படும் ஓசைகள் போன்றவை யாமத்தின் நிகழ்வுகளாக அமைகின்றன. இவை அன்றையச் சமூக, பண்பாட்டு பழக்கவழக்கங்களை அடியிட்டு காட்டுவதாகின்றன.*

***2.8.3.1. ஆநிரை கவர்தல்***

*மன்னர்கள் தங்கள் வலிமையை நிலைநாட்ட விரும்பி, போர் மேற்கொள்ளும் எண்ணம் கொண்டு, பிறநாட்டின் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வருதல் போர் மரபு. இது வெட்சித்துதிணை ஆகும். இதனைத் தொல்காப்பியம்,*

**"வேந்துவிடு முனைஞர் வேற்றுப் புலக்களவின்**

**ஆதந்து ஓம்பல் மேவற்று ஆகும்"[214]**

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், நூற்பா 2)***

*எனும் நூற்பாவில் விளக்குகிறது. ஆநிரைகளை யாரும் அறியாவண்ணம் நடுயாமப் பொழுதில் கவர்ந்து வருதலை அகநானூறு,*

***"ஆர்இருள் நடுநாள் ஏர்ஆ உய்ய***

***பகைமுனை அறுத்துப் பல்இனம் சாஅய்"[215]***

***(அகநானூறு, பாடல் எண் 253, அடிகள் 10-11)***

*எனும் அடிகள் மூலம் பேசுகின்றது.*

***2.8.3.2. மீன் பிடித்தல்***

*நள்ளிரவிலே மீன்கள் இரைதேடும் வழக்கமுடையன. ஆதலின் மீன் பிடிப்போரும் நள்ளிரவிலே சென்றதை அகநானூறு கூறுகின்றது. பாணர்கள் நள்ளிரவிலே கரிய இருளின் தம் ஓடங்களைச் செலுத்தி வலைவீசிப் பிடித்து வந்த வாளை மீனுக்கு விலையாகச் சிவந்த நெல்லை கேட்டதை,*

***"அறல்வார் நெடுங்கயத்து, அருநிலை கலங்க***

***மால்இருள் நடுநாள் போகி, தன்ஐர்***

***காலைந்தந்தை கணைக்கோட்டு வாளைக்கு"[216]***

***(அகநானூறு, பாடல் எண் 126, அடிகள் 6-8)***

*எனும் அகநானூறு அடிகள் பகர்கின்றன.*

*பரதவர் ஒளி பொருந்திய விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு இரவின் நடுயாமத்தில் மீன் வேட்டைக்குச் செல்வர். அவ்வாறு வேட்டையில் கடலிலிருந்துப் பெற்ற மீனை விடியலில் கொண்டு வருவர் என்பதை நற்றிணையில் எடுத்தியம்புகிறது.*

**"நடுநாள் வேட்டம் போகி, வைகறைக்**

**கடல்மீன் தந்து, கானற் குவைஇ"[217]**

***(நற்றிணை, பாடல் எண் 388, அடிகள் 5-6)***

*நள்ளிரவில் மீன் வேட்டைக்குச் செல்லுதலை நடுநாள்வேட்டம் என்றுக் குறிப்பிடப்படுகிறது.*

*பரதவர் தம் திமிலில் விளக்கை ஏற்றிக்கொண்டு கடலில் இரவில் மீன் வேட்டம் நிகழ்த்தியதை அகநானூறும்,*

***"... .......... ....... நளிகட்***
***திரைச்சுரம் உழந்த திண்திமில் விளக்கில்***
***பல்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய***
***எந்தையும் செல்லுமார் இரவே"[218]***

***(அகநானூறு, பாடல் எண் 240, அடிகள் 4-7)***

*எனும் அடிகளில் குறிப்பிடுகின்றது.*

### *2.8.3.3. தினைப்புனம் காத்தல்*

*தினைப்புனம் காவல் காக்கும் கடமை பகலில் மட்டுமின்றி இரவிலும் நடப்பது உண்டு. பகற்காவலுக்கு மகளிரும் இரவுக்காவலுக்கு ஆடவரும் செல்வது மரபு. இரவில் ஆசினிப்பலவின் மீது பரண் அமைத்து, அதன்மீது நின்று காவல் புரிவர். பயிரை மேய்ந்த யானைகளை நடு இரவுக்காலத்தில் பரணில் ஏறி நின்று கவணையில் கல் வைத்து எறிந்ததை கலித்தொகையில்,*

***"இடிஉமிழ்பு இரங்கிய விரவுபெயல் நடுநாள்***
***கொடிவிடுபு இருளிய மின்னுச் செய் விளக்கத்து***
***பிடியொடு மேயும் புன்செய் யானை***
***அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்***
***நெடுவரை ஆசினிப் பணவை ஏறி***
***கடுவிசைக் கவணையில் கல் கைவிடுதலின்"[219]***

***(கலித்தொகை, பாடல் எண் 41, அடிகள் 5-10)***

*என்று நவில்கின்றது.*

### *2.8.3.4. இரவுக்காவல்*

*தினைப்புனத்தைக் காவல் செய்வது மட்டுமின்றி, ஊரின் பல்வேறு இடங்களிலும் இரவுக்காவல் இருந்தமை குறித்து இலக்கியங்களில் குறிப்புகள் உள்ளது. நள்ளிரவு நேரத்திலும் காவல் காக்கும் பொறுப்பில் சிலர் அமர்த்தப் பட்டனர் எனும் செய்தியும் பெறப்படுகின்றது.*

***"எள்ளி இருக்குவேன் மற்கொலோ? நள்ளிருள்***
***மாந்தர் கடிகொண்ட கங்குல், கனவினான்"[220]***

***(கலித்தொகை, பாடல் எண் 142, அடிகள் 32-33)***

*என்றக் கலித்தொகை அடிகள், தலைவனை எண்ணியிருந்தத் தலைவி நள்ளிரவில் ஊர்க்காவல் மாந்தர் காவல் காத்து திரிகின்ற இருட்டில் தலைவன் தோன்றியதாகக் கனவு காண்கிறாள்.*

*தலைவன் தலைவியை நள்ளிரவில் காவலர் சோர்ந்திருக்கும் பொழுதில் வந்து புணர்ந்ததைக் கூறும் அகநானூற்றுப்பாடல் இரவுக்காவல் இருந்ததை*

***"அருங்கடிக் காப்பின் அகல்நகர் ஒருசிறை***
***எழுதியன்ன திண் நிலைக்கதவம்***
***கழுது வழங்கு அரைநாள் காவலர் மடிந்தென"***[221]

***(அகநானூறு, பாடல் எண் 11, அடிகள் 4-6)***

*என்றும் பேசுகின்றது.*

*ஊர்க்காவல் மட்டுமின்றி, நீர்நிலைகளில் இரவுப்பொழுதில் காவல் இருந்து உள்ளது. நள்ளிரவில் மழைபெய்தலால் மெல்லியக் கரையையுடையக் குளத்தைக் காவல் செய்பவன் அதன் கரை உடையாதபடி காவல் செய்வான். அதேபோல் அன்னை நள்ளிரவிலும் கண் துயிலின்றித் தன்னைக் காவல்செய்கிறாள் என்றுத் தலைவி காவலை உவமையாகக் கூறுவதை,*

**"தொழில் மழை பொழிந்த பானாட் கங்குல்**
**எறிதிரைத் திவலை தூஉம் சிறுகோட்டுப்**
**பெருங்குளம் காவலன் போல்**
**அருங்கடி அன்னையும் துயில் மறந்தனளே"**[222]

***(அகநானூறு, பாடல் எண் 252, அடிகள் 11-14)***

*என்று அகநானூறு விளக்குகிறது.*

*மதிலின் சிறப்பைக் கூறும் புறநானூற்றுப் பாடல் அடிகள் இரவுக்காவலரை யாமம் கொள்பவர் என்றுக் குறிப்பிடுகின்றது.*

***"யாமம் கொள்பவர் சுடர்நிழல் கதூஉம்***
**கடு முரண் முதலைய நெடுநீர் இலஞ்சி"**[223]

**(புறநானூறு, பாடல் எண் *37*, அடிகள் *9-10*)**

*அச்சம் தரும் விலங்குகள் நடமாடும் நள்ளிரவுப் பொழுதில் ஊர்ப்பொதுவிலும், கோட்டை மதில்களிலும் ஊரின் எல்லைப்புறங்களிலும் காவலர்கள் அமர்த்தப்பட்டுள்ளனர். காவலர்கள் காவல் பொறுப்பில் இருந்தாலும் காதல் ஒழுக்கம் அரங்கேற்றம் பெற்றுள்ளது. இரவின் அகஉணர்வுப் போராட்டத் தால் தூக்கம் பெறாத் தலைவி காவலர்கள் துயிலாது விழிப்போடு இருப்பதுபோல் நள்ளிரவிலும் தவிக்கிறாள். யாமப்பொழுது இதுபோன்ற நிகழ்வுகளைக் கொண்டதாக அமைகிறது.*

**2.8.3.5. அல்கு இரை**

அல்கு என்பதற்கு நாள், இராக்காலம் என்று அந்தாதி பொருள் தருகின்றது. இரை என்பது உணவு அல்லது பறவைகளின் உணவினைக் குறிக்கும் சொல்லாகும். பறவையின் இரவுநேர உணவினை அல்குஇரை என்றுக் குறிக்கப்படுகின்து. எருவைச் சேவல் தன் பெடைக்கு இரவு உணவைத் தேட விரும்புவதைக் கூறும்,

**"கொடுவாய்ப் பேடைக்கு அல்குஇரை தரீஇய"[224]**

**(அகநானூறு, பாடல் எண் 3, அடி 4)**

எனும் அகநானூற்று அடிகள் உணர்த்துகின்றது.

இரவுநேரத்து இரையினைப் பெற விரும்பியக் கரடிக்குட்டிகள் புற்றின்கண் புற்றாஞ்சோற்றினை அகழ்ந்தெடுத்ததை,

**"அரில்இவர் புற்றத்து அல்குஇரை நசைஇ**
**வெள்அரா மிளிர வாங்கும்**
**பிள்ளை எண்கின் மலைவயினானே"[225]**

**(அகநானூறு, பாடல் எண் 257, அடிகள் 19-21)**

என்று நவில்கின்றது. கரடிகளின் இரவுநேர உணவினை அல்கு இரை என்றுக் குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

**2.8.3.6. இரவில் விளக்கேற்றுதல்**

மாலைப்பொழுதில் வீடுகள் தோறும் மகளிர் விளக்கேற்றுதல் மரபு. இரவு நேரத்தில் பெரிய மாடங்களிலும் பரதவர் வீடுகளிலும் விளக்கேற்றி வைக்கும் வழக்கம் இருந்திருப்பதை இலக்கியங்கள் வழி அறியப்படுகின்றது.

மீன் பிடிக்கும் இயல்பினை உடையப் பரதவர் இரவில் கடலில் வரும் மரக்கலங்களுக்குத் தெரியுமாறு ஏற்றிய விளக்கு இளங்கதிர் போன்று ஒளிர்ந்து நின்றதை நற்றிணை உரைக்கின்றது.

**"பெருமீன் கொள்ளும் சிறுகுடிப் பரதவர்**
**கங்குல் மாட்டிய கனைகதிர் ஒண்சுடர்**
**முதிரா ஞாயிற்று எதிர் ஒளி கடுக்கும்"[226]**

**(நற்றிணை, பாடல் எண் 219, அடிகள் 6-8)**

என்றுக் கூறுகின்றது.

மரக்கலங்கள் கடற்பரப்பில் திசைதப்பிச் செல்லாதவாறு தடுத்துத் துறைமுகத்திற்கு வழிகாட்ட, உயர்ந்தக் கலங்கரை விளக்கங்கள் அமைக்கப் பட்டிருந்தன. வேயாதச் சாந்துப்பூசப்பட்ட மாடத்திடத்தே இரவுநேரத்தில் ஏற்றப்பட்ட விளக்கு மரக்கலங்களை அழைக்குமாறு ஏற்றப்பட்டதை,

**"விண்பொர நிவந்த வேயா மாடத்து**
**இரவில் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி**
**உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும்"[227]**
***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 348-350)***

எனும் அடிகள் மூலம் பெறமுடிகின்றது.

### *2.8.3.7. உரிப்பொருள் நிகழும் காலம்*

குறிஞ்சிக்குரியச் சிறுபொழுதாக யாமம் கருதப்படுகின்றது. குறிஞ்சித்திணையின் உரிப்பொருள் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகும். இவ்வக ஒழுக்கம் நிகழும் காலமாக யாமம் அமைகிறது. அகஒழுக்க உணர்வுக்கு ஆட்பட்ட மாந்தர்க்கு அருங்கொடுமை இழைக்கும் பொழுதாக யாமம் குறிக்கப்படுகிறது.

**"யாமம் நும்மொடு கழிப்பி நோய்மிகப்**
**பனிவார் கண்ணேம் வைகுறு மினியே"[228]**
***(அகநானூறு, பாடல் எண் 168, அடிகள் 1-2)***

யாமப் பொழுது தலைவனோடு கழிக்க நேருமாயின் அது பேரின்பமுடையதாய் கழிகிறது. குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் நிகழும் பொழுதாக யாமம் அமைவதைப் பேசுகின்றது. நிலம், பொழுது எனும் இரண்டு இயற்கை சக்திகள் மக்கள் வாழ்க்கைக்கும் வாழ்க்கை மாற்றத்திற்கும் காரணமாகின்றன. சங்க இலக்கியத்தின் இரு பண்புகளாக, இயற்கையும் அகவுணர்வும் அமைகின்றன. இயற்கைப் பின்னணியில் அவர்களின் அகவாழ்வு அமைந்திருத்தலை அறியமுடிகிறது.

### *2.8.4. யாமப்பொழுதின் மலர்கள்*

பொழுதினை அளந்துக்கூறும் மக்கள் பண்டையக் காலத்தில் இருந்தனர். காலத்தை இயற்கையைக் கொண்டே அறிந்துள்ளனர். ஒவ்வொரு பொழுதினையும் அறிவிக்கும் விதமாக இயற்கையின் செயல்பாடுகள் அமைந்துள்ளது. யாமக்கோழி கூவுதல், விடியலில் கரையும் காகம், ஆநிரை திரும்பும் மாலைப்பொழுது, இளங்கதிர் தோன்றும் விடியல் போன்றவை நிகழ்கின்றன.

இவை யாவற்றிலும் சிறந்தவையாக மலர்கள் திகழ்கின்றன. ஒவ்வொரு திணையின் பெயரும் மலரின் பெயரால் அமைகிறது. மலர்கள் அதன் தன்மைகேற்ற பொழுதிலே மலர்தலையும் குவிதலையும் உடையன.

இயற்கை வளம் நிறைந்த பூமியானது எப்போதும் பூம்பொழில் நிறைந்த மலர்ச்சியை உடையது. பகலிலே சில மலர்கள் மலர்கின்றன. இரவில் அவை குவிந்து

விட்டால் வேறு பல மலர்கள் மலர்ந்துத் தம் மணத்தைப் பரப்புகின்றன. நிலமகள் எப்போதும் பூச்சூடி மலர்மணம் கமழ்ந்து விளங்குகிறாள் என்பதும் புலப்படுத்துகின்றது.

பொழுதிற்கேற்ப மலரும் தன்மை பெற்றவை மலர்கள் ஆகும். பகற்பொழுதில் வண்ணங்களைக் காணமுடியும். பன்னிற மலர்கள் பகற்பொழுதில் மலர்வன. இரவில் பெரும்பாலும் வெண்மைநிறமான மலர்கள் மலருகின்றன. வண்டுகள் மலரின் நிறம் காணாத மணத்தைக் கண்டு வருவதுண்டு.

**2.8.4.1. அதிரல்**

மலைநெறியில் யாமக்காலத்தில் சில மலர்கள் யாமப்பொழுதின் தன்மைக்கேற்ப மலர்வதுண்டு. அதிரல் என்பது புனலி, மோசி மல்லிகை, காட்டு மல்லிகை என்னும் பெயர்களில் கூறப்படுகிறது.

இரவு நேரத்திலே மலர்ந்த அதிரல் மலரின் பசியக் கொடியானது பதுக்கையில் நிற்கின்றக் கோங்க மரத்தின் மேல் படர்ந்து நின்றதை

**“வில்லிட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின்**
**எல்லி மலர்ந்த பைங்கொடி அதிரல்”**[229]

***(அகநானூறு, பாடல் எண் 157, அடிகள் 5-6)***

என்று உரைக்கின்றது.

**2.8.4.2. முல்லை**

கற்பின் நெறிப்பட்ட வாழ்வின் அடையாளமாக மகளிர் முல்லை மலரைச் சூடுவர். மகளிர் முல்லையை இல்லத்துத் தோட்டத்திலும் நட்டுவைப்பர். மனையின் கண் உள்ள மரத்தில் இரவில்முல்லை மலர்ந்து மணம் வீசியதை,

**“இனைமதி வாழியர் நெஞ்சே, மனைமரத்து**
**எல்லுறும் மௌவல் நாறும்”**[230]

***(குறுந்தொகை, பாடல் எண் 19, அடிகள் 3-4)***

என்றுக் குறுந்தொகை அடிகள் விளக்குகிறது.

**2.8.4.3. முசுண்டை**

முசுண்டைச் செடியானது யாமத்து இருளில் மலரும் தன்மையுடையது. குவிந்த இலையையுடைய முசுண்டையின் மலர்கள் நள்ளிரவின் இருளிலே வானத்தில் மீன் பூத்தாற்போல் மலர்ந்ததை,

**“குவையிலை முசுண்டைம வெண்பூக் குழைய**
**வானெனப் பூத்த பானாட் கங்குல்”**[231]

***(அகநானூறு, பாடல் எண் 94, அடிகள் 2-3)***

எனும் அடிகள் உணர்த்துகின்றன.

### *2.8.4.4. கரிய மலர்*

*ஊரினர் யாவரும் உறங்கும் மழைத்துளிகள் பெய்யும் நடுயாமத்தில் மலரும் மலராகக் கரிய மலர் விளங்கியதை,*

***"தண்புனக் கருவிளைக்கண்போல் மாமலர்***
***ஆடுமயிற் பீலியின் வாடையொடு துயில்வர***
***உறை மயக்குற்ற ஊர்துஞ்சு யாமத்து"[232]***
***(நற்றிணை, பாடல் எண் 262, அடிகள் 1-3)***

*என்றுக் கூறுகின்றது.*

### *2.8.5. யாமப்பொழுதின் இசை*

*முதற்சாமத்தில் வாசித்தலுக்கு உரிய இசையாக யாழிசை கருதப்படுகிறது. யாழின் இசைக்கு நடுவில் அவற்றின் ஓசைக்கு ஏற்ப ஒலிக்கும் முழவோசையால் மகளிர் மனம் மகிழ்ந்ததை,*

***"யாம நல்யாழ் நாப்பண் நின்ற***
***முழவின் மகிழ்ந்தனர் ஆடி"[233]***
***(மதுரைக்காஞ்சி, அடிகள் 584-585)***

*என்று மதுரைக்காஞ்சி கூறுகின்றது.*

*பொதுவாக சங்ககாலத்தில் மக்கள் இசையார்வம் மிக்கவர்களாகவும், இசையறிவு பெற்றவர்களாகவும் விளங்கினர் என்பதற்குச் சங்கப்பாடல்கள் எடுத்துக்காட்டாகும்.*

### *2.8.6. இரவுக்குறி*

*இரவிலே தலைவனும், தலைவியும் சந்திப்பதற்குக் குறிக்கப்பட்ட இடம் இரவுக்குறி எனப்படும். களவுப்புணர்ச்சியில் இரவுக்காலத்தில் சந்திக்க நியமிக்குமிடம் என்றும் பொருள்படும்*

*இரவுக்குறி நிகழும் இடம் குறித்து தொல்காப்பியம்,*

***"இரவுக்குறியே இல்லகத்துள்ளும்***
***மனையோர் கிளவி கேட்கும் வழி யதுவே***
***மனையகம் புகாஅக் காலை யான"[234]***
***(தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், நூற்பா 41)***

*என்கிறது. இரவுக்குறியின் இடமாக இல்லகம், மனையகம், புகாதவிடத்து மனையோர் சொல்கேட்கும் அருகாமையிலேயே அமைவதாகத் தொல்காப்பியம் உரைக்கிறது. இதனையே இறையனார் அகபொருளில்,*

***"இரவுக் குறியே இல்வரை யிகவாது"[235]***
***(இறையனார் அகப்பொருள், நூற்பா 19)***

*என்கிறது. இரவின்கண் குறியிடம் இல்லத்தின் இடத்தை விட்டு நீங்காது என்று உணரப்படுகிறது.*

இரவுக்குறி மனை எல்லைக்குள் இருத்தல் வேண்டும். ஆயின் மனைக்கட்டங்களுக்குள் இருத்தல் கூடாது. அட்டில், கொட்டாகரம், பண்டகசாலை, கூடகாரம், பள்ளி அம்பலம், இளமரக்கா, பூம்பந்தர், விளையாடுமிடம் இவற்றைச் சார்ந்த பிற இடங்களாகவும் அமைய வேண்டும்.

### 2.8.6.1. இரவுக்குறி வகை

இரவுக்குறியாவது தலைவன் தலைவியை இரவின் கண் கண்டு இன்பமுறும் இடம். இது தலைவி இல்லத்திற்கு அருகாமையில் நடைபெறுகிறது. இரவுக் குறியாவது ஒன்பது வகையாகும். நம்பியகப்பொருள்,

**“வேண்டல் மறுத்தல் உடன்படல் கூட்டல்**
**கூடல் பாராட்டல் பாங்கியிற் கூட்டல்**
**உயங்கல் நீங்கலென் றொன்பது வகைத்தே**
**இயம்பிப் போந்த இரவுக் குறியே”[236]**

**(நம்பியகப்பொருள், களவியல், நூற்பா 157)**

என விரிக்கிறது. இரவுக்குறி வேண்டல், இரவுக்குறி இன்பம், இரவுக்குறி இடையீடு, இரவுக்குறி மறுத்தல், இரவுக்குறி ஏதங்கள் எண்ணி வருந்துததல் போன்ற நிலைகளில் சூழல்களுக்கு ஏற்ப இரவுக்குறி அமைவதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

### 2.8.6.2. இரவுக்குறி வேண்டல்

இரவில் தலைவியைக் காண வருவதற்காக கதிரவன் மறையும் மாலையில் யான் வரலாமோ என்றுத் தலைவன் இரவுக்குறி வேண்டுவதை நற்றிணைப் பாடல்,

**“தளிர்சேர் தண்தழை தைஇ நுந்தை**
**குளிர்வாய் வியன்புனத்து எல்பட வருகோ?”[237]**

**(நற்றிணை, பாடல் எண் 204, அடிகள் 1-2)**

எனும் அடிகளில் புலப்படுத்துகின்றது. இதில் எல் பட வருகோ? என்பது இரவுக்குறியினை வேண்டுதல் என்பதை உணர்த்துகின்றது.

தோழியானவள் தலைவனை எங்கள் தந்தையின் இல்லத்தில் எய்துதற்கரியக் காவல் தொழிலையுடையக் காவல் மறவர் தம் காவல் தொழிலினை மறக்கும் வேளையில் வர வேண்டுகிறாள். காவலர் அறியாதபடி தலைவியைக் குறிக்கண், கங்குல் பொழுதில் காண வர வேண்டுவதை,

**“அருங்கடிக் காவலர் சோர்பத னொற்றிக்**
**கங்குல் வருதலு முரியை பைம்புதல்”[238]**

**(அகநானூறு, பாடல் எண் 2, அடிகள் 14-15)**

என்று அகநானூறு கூறுகின்றது.

### *2.8.6.3. இரவுக்குறி இன்பம்*

*இரவுக்குறி நிகழும் இடத்து இன்பம் துய்த்தலும் நிகழாதவிடத்து துன்பப்படுதலும் இயல்பு. இரவுப் பொழுதையெல்லாம் தலைவனுடன் கழிக்க நேருமாயின் இரவுக்குறி இன்பம் பயப்பதாகும். தலைவனுடன் இரவுப்பொழுது முழுதும் இன்பமுடன் கழித்ததை பேரின்பமாகக் கருதும் தலைவி குறித்து அகநானூறு உரைக்கிறது.*

***"யாம நும்மொடு கழிப்பி நோய்மிகப்"[239]***

***(அகநானூறு, பாடல் எண் 168, அடி 1)***

*இரவு முழுதும் தலைவன் தலைவியுடன் இருந்து இன்பம் துய்த்தாலும் குறிநீங்கி தலைவன் பிரியும் போது தலைவியின் துன்பம் மிகுவதை உணரமுடிகிறது.*

### *2.8.6.4. இரவுக்குறி இடையீடு*

*இரவுக்குறிக்கண் இடையீடு தோன்றுவது இருவகையில் என்று நம்பியகப்பொருள் கூறுகின்றது. குறி இல்லாமல் போன போதும் தலைமகனால் இயலாமல் போனதாலும் இடையீடு ஏற்படும். இரவுக்குறி இடையீட்டை நம்பியகப்பொருள்,*

***"அல்லகுறி வருந்தொழிற் கருமை யென்றாங்***
***கெல்லிக்குறி யிடையீ டிருவகைத்தாகும்"[240]***

***(நம்பியகப்பொருள், களவியல், நூற்பா 13)***

*என்று கூறுகின்றது. இருள் நிறைந்த நடுயாமத்தில் இரவுக் குறிக்கண் விலங்குகளினால் ஏற்படும் துன்பங்களினால் இரவுக்குறி இடையீடு ஏற்படுகிறது. நள்ளிரவில் வரும் வழியில் புலியானது வருவோரை எதிர்பார்க்கும் இரவின் துன்பம் கருதி இரவுக்குறி அரிதானது என்பதை,*

***"இருள்மயங்கு யாமத்து இயவுக்கெட விலங்கி***
***வரிவயங்கு இரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்***
***பெருமலை விடரகம் வர அரிது என்னாய்"[241]***

***(அகநானூறு, பாடல் எண் 218, அடிகள் 10-12)***

*எனும் அகநானூற்று அடிகள் உணர்த்துகின்றன. இரவுக்குறியில் விலங்குகளினால் ஏற்படும் இடையீட்டினைக் குறிப்பிடுகின்றது.*

*பகற்குறி அமையாவிடத்து, தலைவியின் அச்சத்தால் இரவுக்குறியும் அரிதானது. இத்தகையச் சூழல் குறிக்கு இடையீடு இழைப்பதுண்டு.*

***"தினை கிளி கடிதலின் பகலும் ஒல்லும்***
***இரவு நீ வருதலின் ஊறும் அஞ்சுவல்"[242]***

***(குறுந்தொகை, பாடல் எண் 217, அடிகள் 1-2)***

எனும் அடிகள் தாய் தங்களைத் திணைப்புனக் காவலில் போக்காமையால் பகற்குறி அரிதாயிற்று. இரவில் நேரும் ஏதங்களை எண்ணி தலைவி அஞ்சுதலால் இரவுக்குறியும் அரிதானதை விளக்குகிறது.

இரவுக்குறியில் தலைவன் வரும் வழியில் இரவில் தினைப்புனம் காப்போர் யானை என்றெண்ணி கவணையும் வில்லையும் கொண்டு ஆர்ப்பரிப்பர்.

**"ஈர்ந்தண் ஆடையை எல்லி மாலையை**
**சோர்ந்து வீழ்கதுப்பினாள் செய்குறி நீவரின்**
**ஒளிதிகழ் ஞெகிழியர் கவணையர் வில்லர்**
**ளிறு என ஆர்ப்பவர் ஏனல் காவலரே"[243]**

***(கலித்தொகை, பாடல் எண் 52, அடிகள் 11-14)***

எனும் கலித்தொகைப் பாடல் இரவுக்குறியின் இடையீடாக இரவுக்காவல் இருப்பதைப் பேசுகின்றது.

நிலவின் ஒளியானதுக் களவிற்கு ஏற்றது அல்ல. இரவுக்குறியில் தலைவியின் இன்பம் நுகர எண்ணிய தலைவன் இரவின் ஏதங்களைக் கடந்து வந்தான். ஆயினும் அதனை விடவும் நிலவின் ஒளி இடையீடாக அமைவதைத தலைவி உணர்த்தகிறாள்.

**"எல்லி வருநர் களவிற்கு**
**நல்லை அல்லை - நெடுவெண் நிலவே"[244]**

***(குறுந்தொகை, பாடல் எண் 47, அடிகள் 3-4)***

பண்டைத் தமிழரின் இயற்கை வழிபட்ட வாழ்விற்கு ஒவ்வொரு இயற்கை அம்சங்களும் துணை நிற்கின்றன. நிலவின் ஒளி களவிற்கு ஏற்றவை அல்ல. கற்பின் வழிப்பட்ட வரைவினைத் தலைவனுக்குத் தலைவி இயற்கை வழி எடுத்துரைக்கிறாள்.

தலைவன் இரவுக்குறியில் வருவதைத் தன்னுடைய இயல்பாக உடையவன். அவன் வரும்போது காவலர் தீவிரக் காவலில் ஈடுபட்டாலும் நாய் கோபத்துடன் குரைத்தாலும் நிலவு வெளிப்பட்டாலும் தலைவியின் தோளினைப் பெறாதுச் செல்வான் என்பதை,

**"காவலர் கடுகினும் கதநாய் குரைப்பினும்**
**நீதுயில் எழினும் நிலவு வெளிப்படினும்**
**வேய்புரை மென்தோள் இன்துயில் என்றும்**
**பெறாஅன்"[245]**

***(குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 240-243)***

எனும் அடிகள் எடுத்துக் கூறுகின்றன.

### *2.8.6.5. இரவுக்குறி மறுத்தல்*

மக்களின் அகஒழுக்கங்களை இயற்கை நிர்ணயிப்பதை குறிப்பிடும் விதமாகத் தலைவன் தலைவியரின் சூழல்கள் பின்னப்படுகின்றன. வரைவு நீட்டித்தத் தலைவனை வரைந்துக்கொள்ள வலியுறுத்தி இரவுக்குறியின் ஏதங்களைக் கூறி தலைவி மறுத்தல் உண்டு.

நள்ளிரவில் வரும் தலைவனுக்குக் காட்டு விலங்குகளினால் ஏற்படும் இன்னல் குறித்து இரவுக்குறி தலைவிக்கு அச்சம் தருவதாயிற்று. நள்ளிரவில் நேரக்கூடியத் துன்பங்களைக் கருத்திற்கொண்டு,

**"நடுநாள் கங்குலும் வருதி**
**கடுமா தாக்கின் அறியேன் யானே"[246]**

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 296, அடிகள் 3-4)***

என்றுத் தலைவியின் அச்சம் ஏதமாகக் கொள்ளப்படுகிறது. இதன்மூலம் வரைவை வலியுறுத்தும் தலைவியின் எண்ணம் வெளிப்படுகிறது.

இரவுக்குறிக்காகத் தலைவன் தனியே வரும் இயல்பினன். ஆதலால், விலங்குகளின் பெருங்குரல் கேட்கும் இரவில் தலைவனை எண்ணித் தலைவி வருந்துவதாக நற்றிணை பாடல் அமைகிறது.

**"பிணவுப் புலி வழங்கும் அணங்கு அருங்கவலை**
**அவிர் அறல் ஒழுகும் விரைசெலல் கான்யாற்றுக்**
. . . . . . . . . . . .
**இரவின் வருதல் அறியாதற்கே"[247]**

***(நற்றிணை, பாடல் எண் 144, அடிகள் 6-10)***

எனும் பாடல் இரவுக்குறி மறுத்துத் தலைவனை வரைந்துக் கொள்ளுமாறு வேண்டுதலைக் குறித்து வந்தது.

### *முடிவுகள்*

சங்ககாலம் இயற்கையோடு மக்கள் இயைந்து வாழ்ந்த காலம் ஆகும். இயற்கையின் காலக் கூறுகளை மழை, பனி, வெயில் என்றுப் பகுத்துள்ளனர். அதேபோன்று அடிப்படை நாள் கூறானது காலை, மாலை, இரவு என்றுப் பிரிக்கப் பட்டது. ஐந்து என நிலங்கள் பகுக்கப்பட்டது. ஐந்து நிலங்களுக்குப் பொழுதுகள் ஆறாகப் பட்டது. ஒரு ஆண்டின் காலக்கூறு பெரும்பொழுதாகவும் ஒரு நாளின் காலக்கூறு சிறுபொழுதாகவும் பகுக்கப்பட்டுள்ளது.

சிறுபொழுதுகள் ஒரு நாளின் செயல்பாடுகளைப் பகுத்துக் கூறுகிறது. சங்க இலக்கியம் அன்பின் ஐந்திணைகளின் நிலக்கூறுகளை அடிப்படையாகக் கொண்டு

இயற்றப்பட்டதாகையால் அன்பு வழிப்பட்ட அகஉணர்வு மிகுதியாகப் பேசப்படுகின்றது. காதல் சொல்லப்பட்ட அளவிற்குப் பிற கூறுகளை மிகுதியாகக் காணமுடியில்லை. காதலர்களின் உணர்வுப் போராட்டத்தில் நிகழும் சூழல்களைக் கொண்டே பிற சமுதாயக் கூறுகள் கூறப்படுகின்றன.

மாலைப்பொழுதே முதலாக வைத்துப் போற்றப்படுகிறது. ஆயினும் நாளின் முதற்கூறு வைகறை ஆகும். வைகறை இருள் புலராதத் தன்மையுடையது. விடியலை முன்னரே அறிவிக்கும் பொழுதாக விளங்குகிறது. உயிரினங்களின் தன்மைக்கேற்ப துயிலெழுப்பல், ஆரவாரித்தல் போன்றவை நிகழும் பொழுதாக அமைகிறது. வைகறையில் சலனமற்று பெய்யும் மழை தயிர்க்கடையும் ஓசை, பாணர் இசைத்தல், வெற்றிச் சிறப்பைக் கொண்டாடுதல், கூடியக் காதலர் பிரிதல் போன்றவற்றை நிகழச்செய்யும் பொழுது எனப் பேசப்பெறுகின்றது. உலக உயிர்கள் விழிப்படையத் தயார்படுத்தும் பொழுதாக அமைகிறது.

இருள் புலர்ந்தப் பொழுது விடியல் ஆகும். கதிரவன் ஒளியை உலகம் வாங்கியபின், உயிரினங்கள் தத்தம் கடமையைச் செய்ய விழையும் பொழுதாக விடியல் அமைகிறது.

கதிரவன் கதிர்கள் மிகுந்த உச்சிப்பொழுது நண்பகலாகும். நண்பகற் பொழுதில் வெம்மையின் மிகுதியான தன்மைக் காட்டப்படுகிறது. மக்களின் தொழில் அனைத்தும் நடைபெறும் காலமாக நண்பகல் பேசப்படுகின்றது. பகலில் காதலுக்குரிய உணர்வினைப் பெற்றவர்கள் குறியிடத்துக் கூடும் நிலைக்களனாகவும் பகல் காட்டப்படுகின்றது.

எற்பாடு கதிரவன் படும் பொழுதாகும். அதாவது கதிரவன் வெப்பம் குறைந்தக் கதிர்களை வீசும் காலம். பகல் ஒழிந்து, உலகம் பொலிவிழந்து, மாலையை கொண்டுவரும் காலமாகப் பேசப்படுகின்றது.

பிற பொழுதுகளை விடவும் மாலை, யாமம் குறித்தச் செய்திகள் மிகுதியாகும். சிவந்த வானம் காட்டும் அழகியத் தோற்றத்தினைக் கொண்டு வரும் மாலை நள், கல் எனும் ஓசையுடையதாகும். அஃறிணை உயிர்களும் இன்பம் பெறும் காலமாகக் கருதப்படுகின்றது. உடனுறைவார்க்கு அன்றி பிரிந்தார்க்குத் துன்பம் தரும் மாலை பல்வேறு சூழல்களில் காதலர்களின் பிரிவுத் துன்பத்தைக்காட்டி நிற்கின்றது.

தலைவன் தலைவியர் மகிழ்ந்திருக்கும் பொழுதாகவும், தலைவனின் வருகையை எண்ணி வரவேற்கும் பொழுதாகவும், மாலையில் பெண்கள் விளக்கேற்றி வழிபடும் பொழுதாகவும் அமைகிறது. பல்வேறு மலர்கள் மலர்வதற்குரிய காலமாக மாலைக்காலம் பொலிவோடு வருவதைக் கூறுகிறது.

மாலையில் தன் உணவினைத் தேடும் உயிர்கள் பற்றியச் செய்தியும் பெறப்படுகிறது.

வேள்விசெய்தல், பலியுணவு படைத்தல் போன்றவை நடக்கும் பொழுதாக அமைகிறது. மாலையில் வாசிக்கப்படும் பண் பிரிந்தார்க்குத் துன்பம் தருவதை விளக்குகிறது.

யாமம் உயிரினம் ஒடுங்கும் பொழுதாக அமைகிறது. நள் என்னும் ஓசையுடைமய யாமம் தனிமைத் துன்பம், காமத்துன்பம் இவற்றைக் கொண்டு வருவதாகக் காட்டுகிறது. இரவுக்காவல் இருந்து வந்துள்ள செய்தியைப் பெற முடிகிறது. யாமப்பொழுதில் மீன்பிடித்தல், தினைப்புனம் காத்தல் போன்றவை நிகழ்ந்த செய்தியும் பெறப்படுகிறது. யாமத்தின் இருளில் மணமிக்க வெண்மை நிற பூக்கள் மலரும் தன்மையும் பெறப்படுகிறது. யாமத்தில் யாழ் வாசிக்கப்படும். இரவில் தலைவன் தலைவியரின் குறியிடம், களவுப்புணர்ச்சி, இன்பம், இடையீடு போன்றவை குறிப்பிடப்படுகிறது.

இவ்வியலில், சிறுபொழுது குறித்த இடமும் சூழலும், மாந்தர்களின் அகவாழ்வைக் காட்டுவதோடு இயற்கைத் தோய்வுடன் அமைவதாய் உள்ளது. பருவப் புனைவுகளும் வாழ்வியல் கூறுகளும் இயைந்தே காட்டப்படுகின்றன. மலை, காடு, கடல் இவற்றால் ஆன நிலக்கூறுகள், ஒருநாளின் காலக்கூறுகளுக்கு உடன்பட்டு அதன்வழி மாந்தர்களின் வாழ்வியல் கூறுகளை நிர்ணயித்து வந்தது புலனாகிறது.

## பொருளடக்கம்

*3.0.* முன்னுரை

*3.1.* காலக்கூறுகள்

*3.2.* காலப்பகுப்பு

*3.3.* காலம் கணிக்கும் முறை

*3.4.* கால அட்டவணை

- *3.4.1.* மாத்திரை
- *3.4.2.* ஓரை
- *3.4.3.* நாழிகை
- *3.4.4.* முகூர்த்தம்
- *3.4.5.* யாமம்

*3.5.* நாள்

- *3.5.1.* எட்டுத்தொகையில் நாள்
  - *3.5.1.1.* தலைநாள்
  - *3.5.1.2.* வழிநாள்
  - *3.5.1.3.* முன்நாள்
  - *3.5.1.4.* அன்றை
  - *3.5.1.5.* இறுதிநாள்
  - *3.5.1.6.* பானாள்
  - *3.5.1.7.* நடுநாள்
  - *3.5.1.8.* எழுநாள்
  - *3.5.1.9.* நன்னாள்
  - *3.5.1.10.* நெருநல்
  - *3.5.1.11.* நாள்இரை
  - *3.5.1.12.* நாள்மலர்

*3.5.1.13.* நாள்மேயல்
*3.5.1.14.* நாள்ஆ
*3.5.1.15.* நாள்கொடி
*3.5.1.16.* நாளதுயர்
*3.5.1.17.* நாளவை
*3.5.1.18.* பெருநாள் வேட்டம்
*3.5.1.19.* வைகலும்
*3.5.1.20.* நாட்கணக்கு
*3.5.2.* பத்துப்பாட்டில் நாள்
*3.6.* திதி
*3.7.* பக்கம்
*3.8.* மாதம்
*3.8.1.* கார்த்திகை
*3.8.2.* தை
*3.8.2.1.* தைந்நீராடல்
*3.8.3.* மாசி
*3.8.4.* பங்குனி
*3.9.* ஆண்டு
*3.10.* ஊழிக்காலம்
*3.10.1.* ஊழியின் இயல்பு
*3.10.2.* ஊழிக்காற்று
*3.10.3.* நால்வகை ஊழிகள்
*3.10.4.* காலக்கணிதர்
*3.11.* வெள்ளம்
*3.12.* ஐந்திரம்
*3.13.* பஞ்சாங்கம்
*3.13.1.* பஞ்சாங்க உறுப்புக்கள்
*3.13.1.1.* நாள்
*3.13.1.2.* நட்சத்திரம்
*3.13.1.3.* யோகம்
*3.13.1.4.* கரணம்
*3.13.1.5.* திதி
முடிவுகள்

### *3.0. முன்னுரை*

காலம் மனித வாழ்வோடு ஒன்றியது. மனிதனின் ஒவ்வொரு வினைக்கும் காலத்தோடு தொடர்பு உள்ளது. அக்காலத்தை நம் முன்னோர்கள் அளந்து அறியும் அறிவு பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். காலக்கூறுகளை அதன் தன்மைக்கேற்ப பிரித்து, அளந்து நுட்பமாகக் கணக்கிட்டனர். இரவு பகல் இணைந்தது ஒருநாள் ஆகும். ஒருநாள் என்னும் சிறுகூறுகளுக்குள் நுணுக்கமாக காலவேறுபாட்டைக் கணக்கிட்டனர். கண்ணிமைக்கும் பொழுதிலிருந்துத் தமிழர்கள் ஒவ்வொரு காலக்கூறுகளையும் அளந்து கூறுபடுத்திய விதம் குறித்து இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

### *3.1. காலக்கூறுகள்*

தொல்காப்பியச் சொல்லதிகாரம் வினைச்சொற்களைப் பற்றிக் கூறும்போது வினை என்பது காலத்தோடு தோன்றும் என்பதை,

**“வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது**
**நினையுங்காலைக் காலமொடு தோன்றும்”**[1]

***(தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், நூற்பா எண் 195)***

என்று குறிப்பிட்டுள்ளது. வினையும் காலமும் தொடர்பு உள்ளவையாகும். வினையில்லாமல் காலத்தை அறிய முடியாது.

காலக்கணக்குத் தொடக்க காலத்தில் வேளாண்மை, பண்டிகைகள், வாணிகம் முதலியப் பல்வேறு சமூக நோக்கங்களுக்காகவும் சோதிடம் வானியல் போன்ற நோக்கங்களுக்காகவும் பின்பற்றப்பட்டது. நமது புவிக்கோள் சுழல்வதும் விண்கோள்கள் இயங்குவதும் கதிரவன் உதிப்பதும் மறைவதும் உலகின் ஒளியின் வீச்சு படர்வதும் இருள் சூழ்வதும் காலவரிசைப்படிதான்.

தொடக்க நிலையில் மனிதன் கதிரவனின் தோற்றத்தையும் மறைதலையும் வைத்து இரவு பகல் பொழுதுகளைக் கணிக்க முயன்றான். நமது முன்னோர்கள் காலத்தை விநாடி, மணி, நாள், மாதம், வருடம் என அவ்வற்றிற்குரிய நிர்ணய விதிகளை எழுதி வைத்தனர்.

### *3.2. காலப்பகுப்பு*

தமிழர்கள் ஒருநாளின் காலக்கூறுகளைச் சுட்டி அறியும் அறிவுடையவர் களாக விளங்கினர். பொழுது, நாள், திங்கள், ஆண்டு என்பவை ஒன்றுக்கொன்று கால அளவின் பெருக்கத்தைக் குறிப்பதாக் கருதினர்.

**"காலம் தானே மூன்றென மொழிப**
**இறப்பில் நிகழ்வில் எதிர்வில் ஒன்றா**
**அம்முக் காலமும்"[2]**

***(தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், நூற்பா எண் 33)***

என்றுத் தொல்காப்பியம் கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என முக்கால வகைகளை வகுத்துக் கூறுகிறது.

காலம் என்பது ஒரு நிகழ்வால் குறிக்கப்படுகிறது. இருநிகழ்வுகளின் இடைவெளியாகவும் கருதப்படுகிறது. நிகழ்வு என்பதை மாறறம் எனலாம். முன்னர் இருந்த நிலை மாறி புதிய நிலையை அடைவது மாற்றம். ஒவ்வொரு சூழலும் பெறும் மாற்றமே தத்துவங்களாக உருப்பெறுகின்றன. மாறறம் இல்லாத நிலையில் காலத்தை உணரமுடியாது. மாற்றத்தில் காரணமாகவே கோடை முடிந்து மழைக்காலம், பனிக்காலம் தோன்றுகின்றன. காலம் சுழற்சிக்குரியது என்பதை உணர முடிகிறது.

நமது புவிக்கோள் சுழல்வதும், விண்கோள்கள் இயங்குவதும் கதிரவன் உதிப்பதும் மறைவதும் உலகின் ஒளியின் வீச்சு படர்வது இருள் சூழ்வது கால வரிசைப்படி தான் நடக்கின்றன.

காலத்தைப் பற்றிய மதிப்பீடு மிகச்சிறிய ஊழிக்கூறாகிய நொடிப்பொழுது முதல் மிகப்பெரிய ஊழிக்காலம் வரையில் செல்கிறது. காலஅளவில் மிகச்சிறியப் பொழுது கண் இமைக்கும் காலமும் கைநொடிக்கும் காலமும் ஆகும்.

**"கண்இமை நொடி என அவ்வே மாத்திரை**
**நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே"[3]**

***(தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நூன்மரபு, நூற்பா எண் 7)***

என்பதுத் தொல்காப்பியம்.

தமிழர்கள் ஒருநாளின் காலக்கூறுகளைச் சுட்டிஅறியும் அறிவுடையவர்களாக விளங்கினர். பொழுது, நாள், திங்கள், பருவம், ஆண்டு என்பவை ஒன்றுக்கொன்று காலஅளவின் பெருக்கத்தைக் குறிப்பதாகக் கருதினர். ஆண்டிற்கு அப்பாற்பட்ட பெருங்கால அளவினை ஊழி, வெள்ளம் எனும் சொற்களால் குறித்துள்ளனர்.

ஒருநாள் திங்களாகவும் அத்திங்களே ஆண்டாகவும் அவ்வாண்டே ஊழியாகவும் அவ்வூழியே வெள்ளமாகவும் சேரனுடைய வழிநாள் பெருகி வளரவேண்டும் என வாழ்த்துவதாக அமைந்தப் பதிற்றுப்பத்துப் பாடல் காலக்கூறுகளின் நீட்சியைத் தமிழர்கள் அறிந்திருந்த உண்மையைப் பகர்கின்றது.

***"நின்நாள் திங்கள் அனை ஆக திங்கள்***
***யாண்டு ஓரனைய யாண்டே***
***ஊழி அனைய ஆக ஊழி***
***வெள்ள வரம்பின் ஆக என உள்ளி***
***காண்கு வந்திசின் யானே"***[4]

***(பதிற்றுப்பத்து, பாடல்எண் 90, அடிகள் 51-55)***

எனும் பாடல் அக்காலத் தமிழர்களின் காலப்பாகுபாட்டினை அறிந்தவிதம் குறித்துக் காட்டுகின்றன.

வெள்ளம் எனபது போன்றே நெய்தல், குவளை, ஆம்பல் சங்கம், கமலம் என்பனவும் காலத்தில் பேரளைவைக் குறிக்கும் பெயர்களாக அக்காலத் தமிழர்கள் குறித்து வந்ததை,

***"நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்***
***மைஇல் கமலமும் வெள்ளமும் நுதலிய***
***செய்குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை"***[5]

***(பரிபாடல், பாடல் எண் 2, அடிகள் 16-18)***

நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் என்பனப் பேரெண்ணுப் பெயர்கள் ஆகும். இவ்வெண்களால் குறிக்கப்படுகின்ற கால எல்லையைக் கடந்தப் பின்னர் உயிர்கள் தோன்றி வாழ்வதற்காக நீரினுள் மூழ்கிய நிலவுலகத்தைப் பன்றியாகித் திருமால் மேலே கொணர்ந்தார். இச்செய்தியைக் கூறும் பரிபாடல் காலஅளவுகளின் எல்லையை வகுத்துக் கூறுகின்றது.

### 3.3. காலம் கணிக்கும் முறை

சங்க காலத்தில் நாழிகை வட்டில் குறுநீர்க்கன்னல் முதலானவற்றைக் கொண்டு பகல் இரவு பொழுதுகளை, அறிந்துள்ளனர். நாழிகைக் கணக்கர் என்ற ஒருவர் அப்பணிக்காகச் செயல்பட்டுள்ளார். அல்லும் பகலும் அறுபது நாழிகை என்பது உலகியல் வழக்கு நாழிகையை அளவிட நாழிகை வட்டில் இருந்தது. நாழிகை அறிந்து கூறுபவர் கடிகையர் என்று அழைக்கப்பட்டுள்ளார். முல்லைப்பாட்டில்,

**"பொழுது அறிந்து அறியும் பொய்யா மாக்கள்**

**தொழுது காண் கையர், தோன்ற வாழ்த்தி**

**எறிந்த வையகம் வெலீஇய சேல்வோய் நிஞ்**

**குறுநீர்க்கன்னல் இணைத்து என்று இசைப்ப"[6]**

***(முல்லைப்பாட்டு, அடிகள் 55-58)***

*என்றுக் கூறப்படுகிறது.*

*நாழிகையை அளந்து அறியும் பொய்த்தலில்லாத நாழிகைக் கணக்கர்கள் மன்னனைக் கையால் தொழுது வாழ்த்தி நாழிகை வட்டிலில் சென்ற நாழிகைக் கணக்கு கூறினர். இருள் நிறைந்த இரவிலும் நன்கு அளந்துப் பொய்த்தலில்லாமல் கூறியதால் அவர்கள் பொய்யா மாக்கள் எனப்பட்டனர்.*

*மணிமேகலையும் பொழுது கணக்கிடுவோரைப் பற்றிக் கூறுகிறது. இரவில் பொழுதுக் கணக்கிடுவோரைப் பற்றிக் கூறுகிறது. இரவில் பொழுது கண்டு உரைக்கும் கணக்கர்களை,*

**"கோமகன் கோயில் குறுநீர்க் கன்னலின்**

***யாமம் கொள்பவர் ஏத்தொலி அரவமும்"[7]***

***(மணிமேகலை, துயிலெழுப்பிய காதை, அடிகள் 64-65)***

*யாமம் கொள்பவர் என்று மணிமேகலை குறிப்பிடுகிறது.*

### *3.4. கால அட்டவணை*

*நொடி, நாழிகை, யாமம், பொழுது, நாள், பாக்கம், திங்கள், பருவம், ஆண்டு எனக் கால நேரத்தைக் கணக்கிட்டு மிகத் துல்லியமாகப் பழந்தமிழர் அறிந்திருந்திருந்தனர்.*

| | | |
|---|---|---|
| *2 கண்ணிமை* | - | *1 நொடி* |
| *2 கைநொடி* | - | *ஒரு மாத்திரை* |
| *2 மாத்திரை* | - | *1 குரு* |
| *2 குரு* | - | *1 உயிர்* |
| *2 உயிர்* | - | *1 சணிகம்* |
| *12 சணிகம்* | - | *1 விநாடி* |
| *60 விநாடி* | - | *ஒரு நாழிகை* |

| | | |
|---|---|---|
| *2 அரை நாழிகை* | - | *1 ஓரை* |
| *3 முக்கால் நாழிகை* | - | *1 முகூர்த்தம் (ஒன்னரை மணி நேரம்)* |
| *2 முகூர்த்தம்* | - | *1 சாமம்* |
| *4 சாமம்* | - | *1 பொழுது* |
| *2 பொழுது* | - | *1 நாள்* |
| *7 நாள்* | - | *1 வாரம்* |
| *15 நாள்* | - | *1 பக்கம்* |
| *2 பக்கம்* | - | *1 மாதம்* |
| *6 மாதம்* | - | *1 அயனம்* |
| *2 அயனம்* | - | *1 ஆண்டு* |

### *3.4.1. மாத்திரை*

*காலத்தைத் தமிழர்கள் மிகநுட்பமாகக் கண்டறிந்து வகுத்தனர். காலம் என்பதை முக்காலம் எனக் கொண்டு கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் எனப் பிரித்து அதன் நுட்பம் கண்டனர். காலநுட்பத்தில் மிகச் சிறியப் பொழுது கண் இமைக்கும் காலம், கையால் நொடிக்கும் கால அளவு ஒரு மாத்திரை எனக் கொள்ளப்பட்டது. தொல்காப்பியர்,*

**"கண்இமை நொடிஎன அவ்வே மாத்திரை**
**நுண்ணியதின் உணர்ந்தோர் கண்டஆறே"[8]**

***(தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நூன்மரபு, நூற்பா எண் 7)***

*என்ற நூற்பாவில் விளக்குகிறார். மாத்திரை என்பது மிக விரைவில் நிகழும் செயலாகும். மாத்திரையினை, நொடி, கணம் எனவும் வழங்குவர்.*

*மாத்திரை என்பதற்கு,*

**"அளவு, அற்பம், காதணி, காலநுட்பம், காலவிரைவு, குளிகை"[9]**

***(யாழ்பாண அகராதி, பக்கம் 343)***

*போன்ற பொருள்களை யாழ்ப்பாண அகராதி தருகின்றது.*

*தலைவி தலைவன் தன்னைத் தழுவியதன் நோக்கமும் அவன் உள்ளத்துச் செய்தியும் அறியாமல் ஒரு கணம் தடுமாறியதை,*

**"கைதோயல் மாத்திரை அல்லது செய்தி"[10]**

***(கலித்தொகை, பாடல் எண் 110, அடி 18)***

என்றுக் கலித்தொகை கூறுகிறது. மாத்திரை அளவு என்றப் பொருளிலும் வந்துள்ளது. தலைவனும் தலைவியும் புணர்ச்சியுள் தழுவுதல் நிறையாத அளவினைக் கூறும் பொருட்டு,

**"புரிவுண்ட புணர்ச்சியுள் புல்ஆரா மாத்திரை"[11]**

***(கலித்தொகை, பாடல் எண் 142, அடி 1)***

எனும் அடியில் இடம்பெறுகிறது.

சிறிதுபொழுது என்பதைக் குறிக்க மாத்திரை எனும் சொல் புறநானூற்றில் குறிக்கப்பட்டுள்ளது. கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் ஒருவரை ஒருவர் சிறிது பொழுதுக் கூட பார்த்ததில்லை. கேள்வி வாயிலாக அறிவர். ஒருவரையொருவர் கண்டதில்லை என்பதைக் கூறும் புறநானூற்றுப் பாடலில் மாத்திரை சிறிய அளவு பொழுதினைக் குறிக்க வந்தது.

**"கேட்டல் மாத்திரை அல்லது யாவதும்**
**காண்டல் இல்லாது யாண்டு பல கழிய"[12]**

***(புறநானூறு, பாடல் எண் 216, அடிகள் 1-2)***

கண்இமைக்கும் பொழுதின் அளவு மாத்திரை என்பதைக் குறிக்கிறது. புறப்பாடல் இமைத்த கண் விழிக்கும் அளவிலே விரைவாக கிழக்குத் திசையில் மதியம் எழுந்து செறிந்த இருளை அகற்றியதைக் குறிப்பிடுகிறது.

**"இமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரென**
**குணக்குஎழு திங்கள் கனைஇருள் அகற்ற"[13]**

***(புறநானூறு, பாடல் எண் 376, அடிகள் 7-8)***

என்ற பாடல் இதனைத் தெளிவுறுத்துகின்றது.

### *3.4.2. ஓரை*

ஓரை என்பதற்கு,

**"இராசிபொது, சமயம், நாழிகை, முகூர்த்தம், மகளிர் விளையாடும் விளையாட்டு"[14]**

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 196)***

என்னும் பொருளை அகராதி தருகின்றது.

ஓரை எனும் சொல் முகூர்த்த காலத்தைக் குறித்தது. ஓரை என்பது நட்சத்திரம் எனும் பொருளில் வழங்கி வரப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தில்,

**"மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்**

**துறந்த ஒழுக்கம் கிழவோற்கு இல்லை"[15]**

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், நூற்பா எண் 44)***

*எனும் நூற்பாவில் உள்ள ஓரை எனும் சொல் முகூர்த்தம் எனும் பொருளில் வந்தது. இளம்பூரணர் களவொழுக்கத்து முகூர்த்தமும் நாளும் துறந்து ஒழுகும் ஒழுக்கம் தலைவற்கு இல்லை என்று உரை தருகின்றார். சங்கஇலக்கியத்தில் ஓரை எனும் சொல் மகளிர் விளையாட்டைக் குறிக்க மட்டுமே கையாளப்பட்டுள்ளது.*

***3.4.3. நாழிகை***

*யாழ்ப்பாண அகராதி,*

**"ஒரு நாழிகை என்பதுவிநாடியறுபது கொண்டதாகும்"[16]**

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 117)***

*என்று விளக்கமளிக்கின்றது. இன்றைக்குப் பொழுதை அளக்கும், காட்டும் கருவிகள் உள்ளன. தொடக்கத்தில் அரசர்களுக்கு நாழிகையை அளவிட்டு உரைக்கும் நாழிகைக் கணக்கர் இருந்தனர். இவர்கள் நாழிகை அளவிடும் கன்னல் எனும் கருவி கொண்டு பொழுதை அறிந்தனர்.*

*காலப்பொழுதைத் தமிழர்கள் கதிரவனின் இயக்கத்தைக் கொண்டு நாழிகைகளாகக் கண்டனர். கன்னல் எனும் பாத்திரத்தில் குறுநீர் பெய்து வைத்து, அதை வடியவிட்டு, காலஅளவுகளைக் கணக்கிட்டு வந்துள்ளனர். அக்கருவி, குறுநீர்க்கன்னல் என்றும் நாழிகையை அளவிடப் பயன்பட்டதால் நாழிகை வட்டில் என்றும் அழைக்கப்பட்டது.*

*நாழிகையே ஒரு நாளின் சிறிய அளவிலான காலக்கூறாகக் கொள்ளப்பட்டது. கண் இமைக்கும் காலஅளவை நொடிப்பொழுது என்றனர். அறுபது நொடி ஒரு நிமிடமாக, அறுபது நிமிடம் ஒரு மணியாகக் கொண்டு காலத்தைக் கணித்தனர். ஒருநாழிகை இருபத்து நான்கு நிமிடம் என்று கணித்து இரண்டரை நாழிகையை ஒரு மணி நேரமாகக் கணக்கிட்டனர். பஞ்சாங்கத்தில் அண்மைக்காலம் வரை நாழிகைக் கணக்கு தான் எழுதப்பட்டு வருகின்றது.*

*நாழிகை எனும் கால அளவை அளவிடும் கருவி குறுநீர்க்கன்னல் எனப்படுகிறது. கன்னல் என்பது நாழிகை வட்டில் என்றும் கூறப்படும். சிறுகலம் ஒன்றின் அடிப்பகுதியில் நுண்ணிய துளை உண்டாக்கி அக்கலத்தில் நீர்பரப்பி, அந்நீர் துளை வழியாக ஒழுகும் போது நாழிகைக்கு ஒன்றாக வரையப்பட்ட*

கோடுகளை எண்ணிட்டு நாழிகையை அறிந்தனர். இந்தக் காலக்கணிதச் செயல் செய்பவர் நாழிகை வட்டிலிடுவார் என்றழைக்கப்பட்டனர். நாழிகை வட்டில் வழி நேரம் அறிந்த செய்தியைச் சங்க இலக்கியங்கள் பல்வேறு சூழல்களில் எடுத்தியம்புகின்றன.

நாழிகை வட்டில் வழி நேரம் அறிந்த தகவல் அகநானூற்றில் இடம்பெற்றுள்ளது. கார்காலத்தில் மழை பொழிந்தது. சிறிய நீரையுடைய நாழிகை வட்டில் கொண்டு நாழிகையை அளந்து கூறுவார் மூலம் பொழுதை அறியமுடியும். பிற வகையில் ஞாயிறு உள்ள இடம் கண்டு பொழுதினை அறியமுடியாமல் போனது. உலகு அச்சம் கொள்ளும்படி மழையானது பரவலாக பொழிந்துக் கார்காலம் வந்தது. இத்தகையக் கார்கால வரவைக் குறிப்பிடும் அகநானூறு நாழிகை வட்டில் பற்றிக் கூறுகிறது.

**"நிலனும் விசும்பும் நீர் இயைந்து என்று**
**குறுநீர்க்கன்னல் எண்ணுநர் அல்லது**
**கதிர் மருங்கும் அறியாது அஞ்சு வரபாஅய்**
**தனிமயங்கின்றே தண்குரல் எழிலி"**[17]

**(அகநானூறு, பாடல் எண் 43, அடிகள் 5-8)**

பகற்பொழுது மட்டுமல்லாது இரவுப் பொழுதிலும் காலத்தைக் கணக்கிட்டு உரைப்போர் இருந்துள்ளனர். ஊர்க்காவலர் இரவில் உறங்காது நாழிகையை எண்ணிக் கொண்டிருப்பர். தலைவியின் நெஞ்சமும் உறங்காது வருந்திக் கொண்டிருந்தது என்பதைக் குறுந்தொகை அடிகள் கூறுகின்றன.

**"துஞ்சாவாழி தோழி காவலர்**
**கணக்கு ஆய் வகையின்வருந்தி என்**
**நெஞ்சு புண் உற்ற விழுமத்தானே"**[18]

**(குறுந்தொகை, பாடல் எண் 261, அடிகள் 6-8)**

நாழிகையை அளந்து அறிவிக்கும் பொய்த்தல் இல்லாத நாழிகைக் கணக்கர்கள் இருந்துள்ளனர். அவர்கள் மன்னனுக்கு நாழிகை வட்டிலிற் உள்ள நாழிகையை எடுத்துக் கூறுவர். இவர்கள் இரவுப் பொழுதிலும் நாழிகையைத் துவ்வியமாக கணக்கிட்டதால் பொயா மாக்கள் எனப்பட்டனர்.

**"பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள்**
**தொழுது காண் கையர் தோன்ற வாழ்த்தி**

***எறிநீர் வையகம் வெரீஇய செல்வோய் நின்***

***குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப"[19]***

***(முல்லைப்பாட்டு, அடிகள் 55-58)***

*மதுரைக்காஞ்சியில் நாழிகையைக் கணக்கிட்டு உரைப்போர் பற்றியக் குறிப்பு வந்துள்ளது.*

***"வேதாளிகரொடு நாழிகை இசைப்ப"[20]***

***(மதுரைக்காஞ்சி, அடி 671)***

*என்ற அடிச் சுட்டுகின்றது.*

### *3.4.4. முகூர்த்தம்*

*யாழ்ப்பாண அகராதி,*

***"முகூர்த்தம் என்பதற்கு இரண்டு நாழிகை கொண்ட நேரம்"[21]***

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 359)***

*என்று அகராதி பொருள் தருகின்றது. முழுமையான நல்ல நேரமாகக் கருதப்படும். முகூர்த்தம் மூன்றே முக்கால் நாழிகை அல்லது ஒன்றரை மணி அளவு கொண்டது என்பதுப் பொதுவாகக் கருதப்படுவது.*

***"இருநில மருங்கின் மன்னர் எல்லாம் நின்***

***திருமலர்த் தாமரைச் சேவடி பணியும்***

***முழுத்தம் ஈங்கு இது"[22]***

***(சிலப்பதிகாரம், கால்கோள் காதை, அடிகள் 28-30)***

*என்று முகூர்த்தம் பற்றிச் சிலம்பு குறிப்பிடுகின்றது.*

### *3.4.5. யாமம்*

*யாழ்ப்பாண அகராதி,*

***"யாமம் என்பதற்கு இராத்திரி, சாமம், மாலைப் பொழுதின்***

***பின்பத்து நாழிகை"[23]***

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 392)***

*என்று அகராதி பொருள் தருகின்றது.*

*இரவுக் கூறுகளைப் பகுத்து யாமம் என்ற ஒரு பொழுது உருவாக்கப் பெறுகிறது. யாமம் நான்கு கூறாக ஒன்றாம் சாமம் (6-9 மணி) இரண்டாம் சாமம் (9-12 மணி) மூன்றாம் சாமம் (12-3 மணி) நான்காம் சாமம் (3-6 மணி) என்று யாமம்*

பிரிக்கப்படுகிறது. கனவு காண்போர் மூன்றாம் சாமத்தில் கண்டால் சமீபத்தில் பலிக்கும் என்றும் நான்காம் சாமத்தில் கண்டால் உடனே பலிக்கும் என்றும் இன்று வரை நம்பப்படுகிறது. இன்றும் கிராம மக்களிடையே யாமம் சாமம் என்று மக்கள் வாழ்வில் இருந்து வருகிறது.

யாமம் என்பது ஒரு இரவின் காற்கூறாக மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. மதுரை மாநகரில் இரவின் ஒவ்வொரு யாமத்திலும் நிகழ்ந்தச் செயல்களை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. முதல் யாமம் முந்தைய யாமம் என்று வழங்கப்படுகிறது. மக்கள் தங்கள் தொழில் முடித்துப் படுக்கைக்கு முதல் யாமத்திற்குப் பின் சென்றதாக,

**“முந்தைய யாமம் சென்ற பின்றை**
**பணிலம் கலி இவிந்து அடங்க காழ் சாய்த்து”**[24]
**(மதுரைக்காஞ்சி, அடிகள் 620-621)**

எனும் அடிகள் விளக்குகின்றன. ஒன்பது மணிக்குள் உறக்கம் போகும் பழக்கம் இருந்துள்ளதைக் குறிக்கிறது. இரண்டாம் யாமத்தில் மக்கள் இனிதாகத் துயில் கொண்டனர்.

**“பாயல் வளர்வோர் கண்இனிது படுப்ப”**[25]
**(மதுரைக்காஞ்சி, அடி 630)**

இரவுப் பொழுதின் மூன்றாம் யாமத்தில் மதுரை மாநகரம் காவலில் சிறந்து நின்றதால் மக்கள் எவ்வித அச்சமும் இன்றி உறக்கம் கொண்டனர். தெய்வங்கள் உலாவும் காலமான இப்பொழுதில் கொலை, களவு இவற்றிற்கு அஞ்சாமல் இரவுக்காவல் புரிந்தனர்.

**“கடவுள் வழங்கும் கையறு கங்குலும்**
**அச்சம் அறியாது ஏமம் ஆகிய**
**மற்றை யாமம் பகல் உறக்கழிப்பி”**[26]
**(மதுரைக்காஞ்சி, அடிகள் 651-653)**

மூன்றாம் சாமம் 12-03 மணி வரை ஆகும். இத்தருணத்தில் ஊர்க்காவலர்கள் விழிப்போடு இருப்பர். தெய்வங்களுக்கும் அணங்குகளுக்கும் உரிய நேரம். இந்தச் சாமத்தில் தான் இரவுப் பாடகன் இராப்பாடி வருவதை அறிந்து சுளகில் நெல்லை வாசலில் இட்டு வைப்பர். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் இப்பழக்கம் கிராமங்களில் இருந்து வந்துள்ளது.

*இடையாமத்து உலாவும் ஊர்க்காப்பாளரை புறநானூறு யாமம் கொள்பவர் என்றுக் குறிப்பிடுகின்றது. சோழ மன்னன் கருவூர் முற்றியிருந்தான் மதிற்காவலைக் கூறும் புறப்பாடல் இரவுக் காவலரை யாமம் கொள்பவர் என்றுக் குறிப்பிடுவதை,*

***"யாமம் கொள்பவர் சுடர்நிழல் கதூஉம்"[27]***

***(புறநானூறு, பாடல் எண் 37, அடி 9)***

*என்றுச் சுட்டுகின்றது.*

### *3. 5. நாள்*

*பகல் (12 மணிக்காலம்), இரவு (12 மணிக்காலம்) சேர்ந்து ஒரு நாளாகின்றது. நாள்தான் கிழமை எனப்பெயர் பெறுகிறது. கோள்களின் பெயரால் பெயர்பெற்று ஏழுகோள்களின் பெயர்கள் சேர்ந்த தொகுப்பு வாரம் என்று பெயர் பெறுகின்றது. 4 வாரங்களின் தொகுப்புக்கு மாதம் என்றுப் பெயர் தந்தனர். 12 மாதங்களின் தொகுதி ஆண்டாகப் பெயர் பெற்றது.*

*நொடி என்ற சிற்றலகு நாழிகையாய் யாமமாய் பகற்கூறுகளாய்அல்லும் பகலும் இணைய நாளாய் திங்களாய் ஆண்டாய் காலங்களும் வளர்ந்து கொண்டே செல்வதை முன்னோர் அறிந்துரைத்துள்ளனர்.*

### *3.5.1. எட்டுத்தொகையில் நாள்*

*ஒரு பகலும் ஓர் இரவும் சேர்ந்தது ஒருநாள் என்றுச் சொல்லப்படுகிறது. பகலும் இரவும் சேர்ந்த காலப்பகுதியை நாள் என்றுக் குறிப்பிடுதலை, நேற்று, இன்று, நாளை, பலநாள் இவற்றைக் குறிக்க நெருநை, வழிநாள், எழுநாள், தலைநாள் என்னும் சொற்கள் வழி கூறப்படுகின்றன. சூழலுக்கு ஏற்றவாறு நாளின் கூறுகள் கையாளப்படுவதைக் காணமுடிகிறது.*

***"நாள்என ஒன்று போல் காட்டி உயிரீரும்***
***வாள துணர்வார் பெறின்"[28]***

***(திருக்குறள், அதிகாரம் 34, குறள் 4)***

***"ஒருநாள் எழுநாள் போல் செல்லும் சேண் சென்றார்***
***வருநாள்வைத் தேங்கு பவர்க்கு"[29]***

***(திருக்குறள், அதிகாரம் 127, குறள் 9)***

*நாள் என்னும் சொல் பெரும்பாலும் சங்கப் பாடல்களில் பயின்று வருதல் இல்லை. நாள் என்னும் சொல்,*

***"நாள்போல் கழியல ஞாயிற்றுப் பகலே"[30]***

***(புறநானூறு, பாடல் எண் 65, அடி 12)***

*எனவரும் புறநானூற்றுச் செய்யுளில் சூரியனைக் கொண்டுள்ளப் பகற்பொழுது முன்புக் கழிந்த நாள் போல கழியாது என்னும் பொருள் தருகிறது.*

***"காணாது கழிந்த வைகல் காணா"*** [31]

***(புறநானூறு, பாடல் எண் 176, அடி 11)***

*நாள் என்னும் சொல் திங்களின் (மாதம்) அங்கமாகவும் உள்ளது. ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சியைப் பாராட்டிப் பேசும் பொழுது, ஒருநாளில் எட்டுத் தேரைச் செய்யும் தச்சன் ஒரு மாதம் கொண்டு செய்தத் தேர்ச்சக்கரத்தை ஒத்த வலிமை உடையான் என்று அவனைப் பாராட்டுகின்றார்.*

***"எம்முளும் உளன் ஒரு பொருநன் வைகல்***
***எண்தேர் செய்யும் தச்சன்***
***திங்கள் வலித்த கால் அன்னோனே"*** [32]

***(புறநானூறு, பாடல் எண் 87, அடிகள் 2-4)***

*நாள் என்பது பகல் என்னும் சொற்களில் பயின்று வருவதைப் பெரியபுராணம் உரைக்கின்றது.*

***"சிலபகல் கழிந்த பின்பு***
***திருமுனைப்பாடி நாடர்"*** [33]

***(பெரியபுராணம், பாடல் எண் 3566)***

*என்ற அடிகள் சுட்டுகின்றன.*

### *3.5.1.1. தலைநாள்*

*நாள் என்னும் கால அளவைப் பகல் தொடங்கி இரவு இறுதி வரை உள்ளபொழுது என்பதனைப் பல இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. தலைநாள் முதல் நாள் என்னும் முறையில் பயின்று வருகிறது.*

***"ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்***
***பலநாள் பயின்று பலரொடு செல்லினும்***
***தலைநாள் போன்ற வரம்பினன் மாதே"*** [34]

***(புறநானூறு, பாடல் எண் 101, அடிகள் 1-3)***

*முதல்நாள், மேல்நாள் என்றும் குறிக்கப்பட்டு வந்துள்ளது. முதல்நாள் நடந்தப் போர் இவளது தந்தை யானையைக் கொன்று தானும் இறந்தனன் என்றுக் கூறும் புறநானூறு வழி முந்தைய நாள் மேல்நாள் என்றுக் கொள்ளப்பட்டதுப் புலனாகிறது.*

**"மேல்நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை**

**யானை எறிந்து களத்து ஒழிந்தனனே"[35]**

***(புறநானூறு, பாடல் எண் 279, அடிகள் 3-4)***

*என்றப் பாடல் சுட்டுகின்றது.*

### *3.5.1.2. வழிநாள்*

*வழிநாள என்பதை மறுநாள் அல்லது பிற்றைநாள் அதாவது பின்னொரு நாள் என்னும் பொருளில் இலக்கியங்கள் பகர்கின்றன. கூத்தாடுவோர் சென்றபின் மறுநாள் பொலிவிழந்துக் காணப்படும் அரங்கினைச் சென்று பார்க்கும் காட்சியை,*

**"இரும்பேர் ஒக்கல் கோடியர் இறந்த**

**புன்தலை மன்றம் காணின் வழிநாள்**

**அழுங்கல் மூதூர்க்கு இன்னாதாகும்"[36]**

***(அகநானூறு, பாடல் எண் 301, அடிகள் 16-25)***

*என்று அகநானூறு கூறுகிறது.*

**"ஒருநாள் உறைந்திசி னோர்க்கும் வழிநாள்**

**தம்பதி மறிக்கும் பண்பின் எம்பதி"[37]**

***(அகநானூறு, பாடல் எண் 200, அடிகள் 5-6)***

*எனும் பாடல் அடிகள் எம் ஊரில் ஒருநாள் தங்கியோர் மறுநாள் தம் ஊரினை மறக்கச் செய்யும் தன்மை உடையதைக் கூறவதாக அமைகின்றது.*

*தலைவன் பெரும்பொருளைப் பெறினும் தான் சென்ற நாட்டில் மறுநாள் தங்க மாட்டான் என்பதை அகநானூறு குறிப்பிடுகின்றது.*

**"நிலம் தினத்துறந்த நிதியத்து அன்ன**

**ஒருநாள் ஒருபகற் பெறினும் வழிநாள்**

**தங்கலர் வாழி தோழி - செங்கோற்"[38]**

***(அகநானூறு, பாடல் எண் 127, அடிகள் 3-5)***

*இரவுக்குறியில் ஏற்படும் துன்பத்தைக் கூறும் பொருட்டு வழிநாள் பின்னாள் என்றுக் கொள்ளப்பட்டது. ஒரு நாள் தலைவன் துன்பம் அடைந்தாலும் மறுநாளே தலைவி உயிர் வாழாது இறந்துபடுவாள் என்பதை,*

**"ஒருநாள் விழுமம் உறினும் வழிநாள்**

**வாழ்குவள் அல்லள் என்தோழி யாவதும்"[39]**

***(அகநானூறு, பாடல் எண் 18, அடிகள் 9-10)***

என்று அகநானூறு கூறுகிறது.

### *3.5.1.3. முன்நாள்*

முந்தைய நாளைக் குறிக்கவும் கடந்துச் சென்ற நாள்களைக் குறிக்கவும் முன்நாள், கழிந்த நாள் என்றுக் குறிப்பிடப்பெறுகிறது. முந்தைய நாளில் மன்னன் செய்தக் கொடையைக் கூறும் புறநானூறு,

**"தொல்குடி மன்னன் மகளே முன்னாள்**

**கூறிவந்த மாமுது வேந்தர்க்கு"[40]**

***(புறநானூறு, பாடல் எண் 353, அடிகள் 10-11)***

என்று முந்தைய நாள்களை முன்னாள் என்றுக் குறிக்கிறது. தலைவியின் தோள்களில் துயின்றுக் கழிந்த நாள்கள் இவ்வுலகில் வாழும் நாள்கள் ஆகும். பிறநாள் பயனற்றவை என்பதைக் குறுந்தொகை,

**"கழிந்த நாள் இவண் வாழும் நாளே"[41]**

***(குறுந்தொகை, பாடல் எண் 323, அடி 7)***

என்றுக் கூறுகிறது.

### *3.5.1.4. அன்றை*

முன்னர் ஏதோ ஒருநாள் நடந்த நிகழ்வைக் கூறுவதற்கு அன்றை என்றுக் கூறுவர். முன்னர் இயற்கைப் புணர்ச்சி நிகடிந்த நாளை அன்றை என்னும் சொல்லால் குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

**"இருவெதிர் நீடுஅமை தயங்கப் பாயும்**

**பெருவரை அடுக்கத்துக் கிழவோன் என்றும்**

**அன்றை அன்ன நட்பின்"[42]**

***(குறுந்தொகை, பாடல் எண் 385, அடிகள் 4-6)***

என்றப் பாடல் புலப்படுத்துகின்றது.

### *3.5.1.5. இறுதிநாள்*

*பிறப்பின் இறப்பு நாளை இறுதிநாள் என்றுப் புறநானூறு குறிப்பிடுகின்றது. இறப்பு வருவதற்கு முன்னரே யாவற்றையும் துறந்து முன்னியத் தவத்தை மேற்கொள்ளும் வீடுபேற்று நெறிமுறையைக் கூறும்போது இறுதிநாளை இன்னா வைகல் என்று உரைக்கிறது.*

***"இன்னா வைகல் வாரா முன்னே***
***செய்நீ முன்னிய வினையே***
***முந்நீர் வரைப்பகம் முழுதுஉடன் துறந்தே"*[43]**

***(புறநானூறு, பாடல் எண் 182, அடிகள் 16-18)***

*என்றப் பாடல் புலப்படுத்துகின்றது.*

### *3.5.1.6. பானாள்*

*ஒரு நாளின் பாதியைப் பானாள் என்றுச் செய்யப்பட்டிருப்பதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது. காமத்தை மிகுவிக்கும் அன்றில் பறவையின் ஒலி நாளின் பகுதியாகிய இராப்பொழுதில் தலைவியின் உறங்காமைக்குக் காரணம் என்பதைக் கூறும் குறுந்தொகைப் பாடல் நாளின் பாதியாகிய இரவுப் பொழுதைப் பானாட் கங்குல் என்று நவில்கின்றது.*

***"கருங்கால் அன்றிற் காமர் கடுஞ்சூல்***
***வயவுப்பெடை அகவும் பானாட் கங்குல்"*[44]**

***(குறுந்தொகை, பாடல் எண் 301, அடிகள் 3-4)***

***"ஆனாத் துயரமொடு வருந்த பானாள்***
***துஞ்சாது உறைநரொடு உசாவத்"*[45]**

***(குறுந்தொகை, பாடல் எண் 145, அடிகள் 3-4)***

*ஒரு நாளின் பாதியாகிய இரவின் கண்ணே ஊர்க்காவல் புரிபவர்கள் உறங்காமலிருப்பர் என்பதை,*

***"பானாள் யாமத்தும் கறங்கும்***
***யாமம் காவலர் அவியா மாறே"*[46]**

***(குறுந்தொகை, பாடல் எண் 375, அடிகள் 5-6)***

*என்றுக் குறுந்தொகை கூறுகிறது. நாள் பாதியாகிப் பகற்பொழுது பானாள் என்னும் சொல்லால் குறிக்கப்படுகின்றது.*

**"யான்கண்டன்றோ இலனே பானாள்"[47]**

***(குறுந்தொகை, பாடல் எண் 311, அடி 4)***

*என்றக் குறுந்தொகை அடியும் சுட்டுகின்றது.*

### *3.5.1.7. நடுநாள்*

*தீயவை நிகழும் இரவுப் பொழுதினை நடுநா என்றும் குறிக்கப்படுகின்றது. அரிய இருளையுடைய நடுயாமம் நடுநாள் என்றச் சொல்லால் குறிக்கப்படுவதைச் சங்கஇலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது.*

**"மையுடை இருத்தலை துமிக்கும் ஏற்றொடு**
**நடுநாள் என்னார் வந்து"[48]**

***(குறுந்தொகை, பாடல் எண் 268, அடிகள் 4-5)***

*என்றும்,*

**"பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கும்**
**ஆர்இருள் நடுநாள் வருதி"[49]**

***(குறுந்தொகை, பாடல் எண் 141, அடிகள் 6-7)***

*என்றும் இரவுக்குறியில் தலைவன் தலைவியைக் காண நடுஇரவில் வருவதால் நள்ளிரவின் துன்பங்களை விளக்கும் வகையில் நடுஇரவு நடுநாள் என்றுக் குறிக்கப்படுகின்றது.*

*இரவுக்குறியில் தலைவள், தலைவியின் மனைக்கு நடுஇரவில் வருவதை நடுநாள் என்றுக் குறிக்கின்றது.*

**"சுனைப்பூங் குவளை சுரும்பு ஆர் கண்ணியன்**
**நடுநாள் வந்து நம் மனைப்பெயரும்"[50]**

***(குறுந்தொகை, பாடல் எண் 321, அடிகள் 2-3)***

*இரவின் நடுப்பகுதியை முல்லைப்பாட்டு நடுநாள் என்றுக் குறித்ததை,*

**"நெடுநா ஒள்மணி நிழத்திய நடுநாள்"[51]**

***(முல்லைப்பாட்டு, அடி 50)***

*என்கிறது. நெடிய நாக்கினையுடைய ஒளி பொருந்திய மணியின் ஒலி குறைந்து அடங்கின. நள்ளிரவு நடுஇரவு நடுநாள் என்றுக் குறிக்கப்படுகிறது.*

### *3.5.1.8. எழுநாள்*

*எழுநாள் என்பது பலநாள்கள் என்னும் பொருளில் இடம்பெறுகிறது.*

***"ஒருநாள் நம்இல் வந்தற்கு எழுநாள்***
***அழுப என்ப அவன் பெண்டிர்"[52]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 32, அடிகள் 2-3)***

*என்று ஐங்குறுநூறு எழுநாள் என்றும்.*

***"ஒருநாள் எழுநாள் போல செல்லும்சேண் சென்றார்***
***வருநாள்வைத் தேங்கு பவர்க்கு"[53] (திருக்குறள், எண் 1269)***

*என்றுத் திருக்குறளும் எத்துனை நாள், அத்தனை நா என்பன எனைநாள், அனைநாள் எனக் குறிக்கப்படுவதை,*

***"எனைநாள் தங்கும் நும் போரே அனைநாள்***
***எறியார் எறிதல் யாவணது? அறிந்தோர்"[54]***

***(புறநானூறு, பாடல் எண் 301, அடிகள் 7-8)***

*என்றுப் புறப்பாடலும் சுட்டுகின்றன.*

### *3.5.1.9. நன்னாள்*

*திருமணம் பேசி உடன்படும் போது நல்ல இடமும் நல்ல நாளும் பார்ப்பது வழக்கம். குறிஞ்சி நில மக்கள் வேங்கை மரத்தின் கீழிருந்துத் திருமண முடிவு செய்வது அவர்தம் மரபாக இருந்து வந்துள்ளது. வேங்கை பூக்கும் காலம் திருமணம் நடத்தற்குரியக் காலமாகக் கருதப்பட்டு வந்துள்ளது.*

***"மன்றல் வேங்கைக் கீழிருந்து***
***மணம் நயந்தனன் அம்மலை கிழவோற்கே"[55]***

***(கலித்தொகை, பாடல் எண் 41, அடிகள் 43-44)***

*என்றும்,*

***"நல்நாள் வேங்கையும் மலர்கமா இனிஎன"[56]***

***(நற்றிணை, பாடல் எண் 206, அடி 7)***

*என்றும்,*

***"அரண்இல் சேய் நாட்டு அதர்இடை மலர்ந்த***
***நல்நாள் வேங்கைப் பொன்மருள் புதுப்பூப்***
***பரந்தன நடக்க யாம் கண்டனம் மாதோ"[57]***

***(நற்றிணை, பாடல் எண் 384, அடிகள் 6-8)***

நன்னாள் என்றுக் குறிப்பிட்டது அறுவடைக்கு உகந்த நாளாகும். வேங்கை மலரும் காலமே தினை முற்றி அறுவடைக்கு உரியதாகும். அந்த நன்னாளில் தலைவன் வந்து தலைவியை மணம் முடிக்க வேண்டும். தினை அறுக்கப்பட்டால் தலைவி தினைப்புனத்திற்கு வரமாட்டாள். களவினை நீக்கி மணம்முடிக்கும் உகந்த நன்னாள் என்பதுப் புலனாகிறது.

### 3.5.1.10. நெருநல்

நேற்றையஆ; பொழுதினைக் குறிக்க நெருநல் என்னும் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**"நெருநல் என்பதற்கு முன்னை நாள்"[58]**

**(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 150)**

என்று அகராதி பொருள் தருகின்றது

**"நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்"[59]**

**(புறநானூறு, பாடல் எண் 279, அடி 5)**

எனும் அடியானது நேற்று நடந்த போரில் இவள் கணவன் பசுக்கூட்டங்களைப் பகைவர் கவரா வண்ணம் தடுத்து நிறுத்தி ஆங்கு பட்டான் எனும் வீரச்செய்தியைக் கூறுகிறது.

முதல்நாள், வாளைப் பணயம் வைத்துப் பொருள் பெற்று விருந்தினரை உண்பித்த வீரன், போரிட்டுத்திரும்பி அவ்வாளை மீட்டான் எனும் செய்தியைக் கூறும் புறப்பாடல் முதல்நாளை நெருநை என்றுக் குறிப்பிடுகின்றது.

**"நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்தன்**
**இரும்புடைப் பழவாள் வைத்தனன்"[60]**

**(புறநானூறு, பாடல் எண் 316, அடிகள் 5-6)**

தலைவியிடம் தோழி நேற்றையப் பொழுதில் உப்பங்கழி சூழ்ந்தச் சோலையில் தாங்கள் விளையாடியதைக் கூறும் சூழலை,

**"நீயும் நானும் நெருநல் பூவின்**
**நுண்தாது உறைக்கும் வண்டினம் ஓப்பி"[61]**

**(நற்றிணை, பாடல் எண் 27, அடிகள் 1-2)**

என்று நவில்கின்றது. நேற்றைய பொழுதை நெருநல் என்று குறிப்பிடுகிறது.

**"அகல்நாட்டு அண்ணல் புகாவே நெருநைப்**
**பகல்இடம் கண்ணிப் பலரொடும் கூடி"[62]**

**(புறநானூறு, பாடல் எண் 249, அடிகள் 7-8)**

என்றும்

**"ஆட்டிக் காணிய வருமே நெருநை**

**உரைசால் சிறப்பின் வேந்தர் முன்னர்"[63]**

***(புறநானூறு, பாடல் எண் 303, அடிகள் 5-6)***

என்றும்

**"பண்ணற்கு விரைதி நீயே நெருநை**

**எம்முற் தம்பியொடு ஓராங்கு"[64]**

***(புறநானூறு, பாடல் எண் 304, அடிகள் 4-5)***

என்றும்

**"சீறூர் மன்னன் நெருநை ஞாங்கர்"[65]**

***(புறநானூறு, பாடல் எண் 319, அடி 12)***

ஆகியப் புறப்பாடல்களில் நேற்றையப் பொழுதினைக் குறிக்க நெருநை எனும் சொல் வந்துள்ளமையைக் காணமுடிகின்றன.

### *3.5.1.11. நாள் இரை*

நாள் இரை என்பது நாட்காலை உணவு என்றுப் பெறப்படுகிறது. பறவை மற்றும் விலங்குகளின் நாள் காலை உணவு நாள் இரை என்னும் சொல்லால் குறிக்கப்படுகின்றது. நற்றிணை,

**"நாள்இரை கவர மாட்டி தன்**

**பேடை நோக்கிய பெருந்தகு நிலையே"[66]**

***(நற்றிணை, பாடல் எண் 21, அடிகள் 11-12)***

என்னும் அடிகளில் கோழியானது நாங்கூழ் புழுவை நாள் காலையில் இரையாகக் கவர்ந்த செய்தியை நற்றிணை நவில்கின்றது.

இறாமீனின் பஞ்சு போன்றத் தலையையுடைய முடங்களைச் சிறிய வெள்ளைக் காக்கை நாட்காலையின் இரையாகப் பெறுவதை,

**"பெருஞ்சேயிறாவின் துய்த்தலை முடங்கல்**

**சிறுவெண் காக்கை நாள் இரை பெறூஉம்"[67]**

***(நற்றிணை, பாடல் எண் 358, அடிகள் 8-9)***

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

நீர்நாய் வாளைமீனை இரையாகப் பெற்றச் செய்தியைப் புறநானூறு பகர்கின்றது.

***"ஒண்செங் குரலித் தண்கயம் கலங்கி***

***வாளை நீர்நாய் நாள்இரை பெறூஉம்"[68]***

***(புறநானூறு, பாடல் எண்  283, அடிகள் 1-2)***

*இச்செய்தியைக் குறுந்தொகையிலும் காணமுடிகிறது.*

***"அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்***

***வாளை நாள்இரை பெறூஉம் ஊரன்"[69]***

***(குறுந்தொகை, பாடல் எண் 364, அடிகள் 1-2)***

*என்றப் பாடல் சுட்டுகின்றது.*

### *3.5.1.12. நாள் மலர்*

*காலை முதல் மாலை வரை உள்ள காலம் நாள் என்னும் சொல்லால் குறிக்கப்படுகின்றது. காலையில் உதிர்ந்த மலர்களை நாள்மலர் என்றுக் குறுந்தொகை குறிக்கிறது.*

***"வெண்குருகு நரலும் தண் கமழ் கானல்***

***பூமலி பொதும்பர் நாள்மலர் மயக்கி"[70]***

***(குறுந்தொகை, பாடல் எண் 381, அடிகள் 4-5)***

*என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.*

### *3.5.1.13. நாள்மேயல்*

*நாள்மேயல் என்பது காலை உணவுக்கான மேயல் என்றுப் பொருள்பட வருகின்றது. எருமைத்தன் அன்றையக் காலை உணவாக நெல்லின் நெடியக் கதிரைக் கொண்டச் செய்தியை ஐங்குறுநூறு,*

***"கருங்கோட்டு எருமை கயிறு பரிந்து அசைஇ***

***நெடுங்கதிர் நெல்லின் நாள்மேயல் ஆரும்"[71]***

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 95,அடிகள் 1-2)***

*என்றுக் கூறுகின்றது.*

### *3.5.1.14. நாள்ஆ*

*ஆனினங்கள், விடியற் பொழுதில் மேய்வதை நாள்ஆ எனக் குறுந்தொகை இயம்புகின்றது.*

**"தாளித் தண்பவர் நாள்ஆ மேயும்"[72]**

***(குறுந்தொகை, பாடல் எண் 104, அடி 3)***

*என்ற அடிச் சுட்டுகின்றது.*

### *3.5.1.15. நாள் கொடி*

*நாள்கொடி என்பது நல்ல நாளில் காலையில் கட்டப்பட்டக் கொடி என்றுக் கொள்ளப்படுகிறது. மதில் மீது அன்றையக் காலைப் பொழுதில் கட்டப்பட்டக் கொடி அசைந்ததை,ப் புறப்பாடல் நாட்கொடி என்று உரைக்கின்றது.*

**"அரைமண் இஞ்சி நாட்கொடி நுடங்கும்"[73]**

***(புறநானூறு, பாடல் எண் 34, அடி 5)***

*என்ற அடித் தெளிவுறுத்துகின்றது.*

### *3.5.1.16. நாள்துயர்*

*தலைவி, தலைவனைப் பிரிந்து நாள்தோறும் படும் துயரம் ஒவ்வொரு நாளும் நீளுவதால் நாள்துயர் என்றுத் தலைவியின் துயரம் குறுப்பிடப்படுகின்றது.*

**"பூச்சேர் அணையின் பெருங்கவின் தொலைத்த நின்**
**நாள்துயர் கெடப்பின் நீடலர் மாதோ"[74]**

***(குறுந்தொகை, பாடல் எண் 253, அடிகள் 3-4)***

*தலைவன் ஒருநாள் தலைவியைத் தழுவிச் சென்றது. தலைவியின் பல்நாள் வருத்தத்திற்குக் காரணமானதைத் தவப்பல் நாள் என்னும் சொல்லால் குறுந்தொகை குறிப்பிடுகிறது.*

**"உற்றது மன்னும் ஒருநாள் மற்று அது**
**தவப்பல் நாள் தோள் மயங்கி"[75]**

***(குறுந்தொகை, பாடல் எண் 271, அடிகள் 3-4)***

*என்ற அடிகள் சுட்டுகின்றன.*

### *3.5.1.17. நாளவை*

*மன்னன் யாவரும் காணும்படியாக அவையில் வீற்றிருப்பான். ஒவ்வொரு நாளும் யாவரும் தன்னைக் காணும் படி அமர்ந்திருக்கும் அவை நாளவை என்றுப் பெறப்படுகிறது. நாள்மகிழ் இருக்கை, நாளோலக்கம் என்னும் சொற்களால் நாளவை குறிக்கப்படுகின்றது.*

காலைப்பொழுதில் கூடும் நாளோலக்கத்தின் கண் சேரமன்னன் வீற்றிருக்கும் செல்வச் சிறப்பைப் பதிற்றுப்பத்து புலப்படுத்துகின்றன.

**"பாணர் புரவல பரிசிலர் வெறுக்கை**

**பூண் அணிந்து விளங்கிய புகழ்சால் மார்ப நின்**

**நாள்மகிழ் இருக்கை இனிது கண்புகுமே"[76]**

***(பதிற்றுப்பத்து, பாடல்எண் 65, அடிகள் 11-13)***

என்னும் அடிகள் மன்னன் அவையில் வீற்றிருக்கும் தன்மையைக் கூறும்பொருட்டு நாளவை நாள் மகிழ் இருக்கை எனக் குறிப்பிடப்படுகிறது.

பரிசில் பெற வரும் இரவலர்களுக்குப் பெருஞ்செல்வமாக மன்னன் நாளவையின் கண் விளங்கினான். சேர மன்னன் பாணர்களைக் கொண்ட நாளோலக்கத்தைக் கொண்டு விளங்கியதைப் பதிற்றுப்பத்து மற்றும் புறநானூறு நாளவை என்றுக் குறிப்பிடுகிறது.

**"பரிசிலர் வெறுக்கை பாணர் நாள்அவை"[77]**

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 38, அடி 9)***

**"பாணர் முற்று நின்நாள் மகிழ் இருக்கை"[78]**

***(புறநானூறு, பாடல் எண் 29, அடி 5)***

ஆஅய் அண்டிரனின் மகிழ்ச்சி நிரம்பிய நாளவையில் இரவலர் தேரினைப் பரிசிலாகப் பெற்றச் செய்தியை நற்றிணை நவில்கின்றது.

**"விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்**

**வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற**

**பண்அமை நெடுந்தேர்ப் பாணியின் ஒலிக்கும்"[79]**

***(நற்றிணை, பாடல் எண் 167, அடிகள் 2-4)***

நாளவையைப் புறநானூறு பாடல்,

**"நாள்கள் உண்டு நாழ்மகிழ் மகிழின்**

**யார்க்கும் எளிதே தேர் ஈதலே"[80]**

***(புறநானூறு, பாடல் எண் 123, அடிகள் 1-2)***

என்றுக் கூறுகிறது. தித்தன் வெளியன் என்பானது நாளோலக்கத்தில் பறையினது ஓசையானது ஆரவரிப்பதை அகநானூறு குறிப்பிடுகிறது.

**"தித்தன் வெளியன் உறந்தை நாள் அவைப்**

**பாடுஇன் தெனகிணைப் பாடு கேட்டு அஞ்ச"**[81]

***(அகநானூறு, பாடல் எண் 226, அடிகள் 14-15)***

### ***3.5.1.18.* பெருநாள் வேட்டம்**

*ஆறலைக் கள்வர்க்கு அவர்கள் சென்ற வேட்டையில் சிறப்பாகப் பொருள் வாய்க்கப்பெற்ற நாள் சிறந்த நாள் ஆகும். அத்தகைய நாளைப் பெருநாள் வேட்டம் என்று அகநானூறு குறிப்பிடுகிறது.*

**"வானம் வேண்டா வில்ஏர் உழவர்**

**பெருநாள் வேட்டம் கிடைஎழ வாய்த்த"**[82]

***(அகநானூறு, பாடல் எண் 193 அடிகள் 2-3)***

*என்று நவில்கின்றது.*

### ***3.5.1.20.* வைகல்**

*வைகல், அல்கல் என்பது நாளைக் குறிக்கும் சொல்லாகும். நாள்தோறும் என்னும் பொருளில் வைகலும் அல்கலும் என்றுப் புறநானூறு, அகநானூறு ஆகிய இலக்கியங்களில் சுட்டப்பட்டுள்ளன.*

*பிட்டங்கொற்றனின் கொடைத்தன்மையைப் புலவர் காரிக்கண்ணனார் கூறுகிறார். இன்று சென்றாலும், சிலநாள் கழித்துச் சென்றாலும், நாள்தோறும் சென்றாலும் பொய்க்காமல் வேண்டியதை அளிப்பான் என்று அவன் கொடை உள்ளத்தைப் போற்றுகிறார். நாள்தோறும் அவன் அளிக்கும் கொடையை,*

**"முன்னே தந்தனென் என்னாது, துன்னி**

**வைகலும் செலினும் பொய்யலன் ஆகி**

**யாம் வேண்டியாங்கு எம் வெறுங்கலம் நிறைப்போன்"**[83]

***(புறநானூறு, பாடல் எண் 171, அடிகள் 3-5)***

*என்றுப் புறநானூறு குறிக்கின்றது.*

### ***3.5.1.20.* நாட்கணக்கு**

*நாட்கணக்குத் தெரிவதற்குச் சுவரில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கோடாக இட்டு அவற்றை எண்ணி வந்துள்ளனர். சுவரில் நாட்கணக்கு எழுதப்படுதலை அகநானூறு,*

**"நாள் இழை நெடுஞ்சுவர்"**[84]

***(அகநானூறு, பாடல் எண் 61, அடி. 4)***

*என்றுச் சுட்டுகிறது. தலைவனைப் பிரிந்துறையும் மகளிர் சுவரில் தாம் இழைத்துக் கோடுகளை எண்ணி, அவன் சென்றக் கால இடையீட்டை நினைந்து வருந்தி நிற்கும் நிலையைக் குறுந்தொகை கூறுகிறது.*

***"வீங்கு இழைநெகிழ, விம்மி ஈங்கே***
***எறிகண் பேதுறல், ஆய்கோடு இட்டுச்***
***சுவர்வாய் மற்றும் நின்படர் சேண்நீங்க***
***வருவேம், என்ற பருவம் உதுக்காண்"***[85]

***(குறுந்தொகை, பாடல் எண் 358, அடிகள் 1-4)***

*இதே செய்தியை அகநானூறும்,*

***"சேண்உறை புலம்பின் நாள்முறை இழைத்த***
***திண்சுவர் நோக்கி நினைந்து கண்பனி***
***நெகிழ்நூல் முகத்தின் முகிழ்முலைத் தெறிப்ப"***[86]

***(அகநானூறு, பாடல் எண் 289, அடிகள் 9-11)***

*என்றுக் குறிப்பிடுகிறது. இவ்வடிகள் மூலம் சுவரில் குறியிட்டு நாள்கணக்குப் பார்த்து வந்த வழக்கத்தைக் காணமுடிகிறது.*

### *3.5.2. பத்துப்பாட்டில் நாள்*

*ஒருநாள் என்பதை வைகல் என்னும் சொல்லால் பொருநராற்றுப்படை கூறுகின்றது.*

***"வைகல் வைகல் கைகவி படூகி"***[87]

***(பொருநராற்றுப்படை, அடி 158)***

*வைகல் என்னும் சொல்லிற்கு தங்குதல், கழிதல் என்பனப் பொருள்களாகும். ஒளியும் இருளும் தங்கிக் கழியும் காலம் ஒருநாள் ஆகும். நாளின் ஒரு பாதி அரைநாள் என்பதைப் பெரும்பாணாற்றுப்படை சொல்லாட்சி ஆக்கியுள்ளது. பாலை நிலக் கானவர் இரவில் பன்றிவேட்டை ஆடுவர். பகலில் முயல்வேட்டை ஆடுவர்.*

***"அரைநாள்வேட்டம் அழுங்கின் பகல்நாள்***
***பகுவாய் ஞமலியொடு பைம்புதல் எருக்கி"***[88]

***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 111-112)***

பகற்பொழுதின் நடுப்பகுதி அரைநாள் என்றுக் குறிக்கப்படுதலை நெடுநல்வாடை கூறுகின்றது.

**"ஒருதிறம் சாரா அரைநாள் அமையத்து"[89]**

***(நெடுநல்வாடை, அடி. 74)***

மதுரைக்காஞ்சியில் சேரனின் நாளோலக்க இருப்பில் கலைவல்லார் யாவரும் கூடித் தருக்கங்களை விரும்பிக் கூறும் நாள் பெருநாளாகும் என்பதை,

**"தண்கடல் நாடன் ஒண் பூங்கோதை**

**பெருநாள் இருக்கை விழுமியோர் குழீஇ"[90]**

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 524-525)***

மதுரைக்காஞ்சி புலப்படுத்துகின்றது. ஓண நல்லாளை ,

**"மாயோன் மேயஓண நல்நாள்**

**கோணம் தின்ற வடுஆழ் முகத்த"[91]**

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 591-592)***

என்று மதுரைக்காஞ்சி விளக்குகின்றது. திருமால் பிறந்த திருவோண நாள் விழாவாக நடத்தப்பெற்ற செய்தி மதுரைக்காஞ்சியில் இடம்பெற்றுள்ளது.

### 3.6. திதி

திதி என்பதற்கு,

**"திவசம், நிலைபேறு, வளர்ச்சி காதல், காசிபர் மனைவி"[92]**

***(ந. சி. கந்தையா அகராதி, பக்கம் 321)***

எனப் பொருள் தருகிறது ந. சி. கந்தையா அகராதி. காசிபன் என்பவன் ஒரு முனிவன். காசிப முனிவருக்குத் திதி என்பவளிடம் அசுரர்கள் தோன்றினர் என்பதுத் தொன்ம வரலாறு.

திருமாலிடம் இருந்து தோன்றிய உலகப்பொருளைக் கூறுகிறது பரிபாடல். அசுரர்கள் திதியின் சிறார்கள் என்கிறது பரிபாடல். திதி என்பதனைக் காசிப முனிவரின் மனைவியாகப் பரிபாடல் குறிப்பிடுவதை,

**"திதியின் சிறாரும்"[93]**

***(பரிபாடல், பாடல் எண். 3. அடி. 6)***

எனும் அடிக் கூறுகிறது.

### *3.7. பக்கம்*

*திங்களின் வளர்ச்சி, தேய்வு இவற்றை பக்கம் என்பர். பரிபாடலில் வளர்பிறையைக் குறிக்க அலர்தரு பக்கம் என்று குறிப்பிடுகிறது. வையையானது மலையில் தோன்றி மலைச்சாரல் முதலாக நிலப்பரப்பு எங்கும் நீரைப்பரப்பி உலகத்திற்கு பயனை விளைத்துக் கொடுத்துப் பாதுகாக்கும் இயல்புடையது. வையையின் இயல்பைக் கூறும் பரிபாடல் அடிகள்,*

***"ஆம்நாள் நிறைமதி அலர்தரு பக்கம் போல்***
***நாளின் நாளின் நளி வரைச்சிலம்பு தொட்டு***
***நிலவுப் பரந்தாங்கு நீர்நிலம் பரப்பி"[94]***

***(பரிபாடல் பாடல்எண் 11, அடிகள் 31-33)***

*என்று பிறைநிலவு தோன்றிய நாள் தொடங்கி நாளுக்கு நாள் வளர்கின்ற வளர்பிறையைப் போல் நாளுக்கு நாள் வையை வளர்வதைக் குறிப்பிடுகிறது.*

### *3.8. மாதம்*

*30 நாட்கள் கொண்டது ஒரு மாதம். சங்க இலக்கியங்களில் தமிழ் மாதங்களின் பெயர்கள் சுட்டப்படுகின்றன. மாதம் என்ற கணக்கைக் கொண்டு புறப்பாடல் ஒன்று அமைகிறது.*

***"அற்றைத் திங்கள் அவ்வெண்நிலவின்***
***எந்தையும் உடையேம் எம் குன்றும்***
***பிறர் கொளார்***
***இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்***
***வென்று எறி முரசின் வேந்தர் எம்***
***குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே"[95]***

***(புறநானூறு, பாடல் எண் 112)***

*எனும் புறப்பாடலில் திங்கள் என்பது மாதத்தைக் குறிக்கவந்தது. வெண்ணிலா காயும் அன்றைய திங்களில் (மாதம்) எம் தந்தையும் எங்களுடன் இருந்தார். எங்கள் மலையும் பிறர் வசம் இல்லை. இன்றைய திங்களில் மாதம் இவ்வெண்ணிலா காலத்தில் வெற்றியைக் கொண்ட முரசினை உடைய வேந்தர் எங்கள் மலையைக் கொண்டனர். எம் தந்தையையும் இழந்தோம்.*

*திங்கள் பற்றி தொல்காப்பியர்,*

***"திங்கள் முன்வரின் இக்கே சாரியை"[96]***

***(தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல் நூற்பா எண்.249)***

*என்கிறார்.*

*திங்களது இயக்கத்தைக் கொண்டே மாதங்களுக்குப் பெயரிட்டனர்.*

***"திங்களின் வளர்ச்சி தேய்வு கொண்டு கணக்கிடும் முறை பழையது. எனவே தான் மாதத்தைத் திங்கள் என்று தமிழர் அழைத்துள்ளனர்."[97]***

***(அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும்பண்பாடும், பக்கம் 168)***

*திங்களின் பிறை வளர்ந்தும் தேய்ந்தும் முப்பது நாள்களைக் கொண்ட திங்களைத் தோற்றுவிப்பதாகக் கருதினர். திங்கள் பன்னிரெண்டு என்பதும் அவற்றுள் தை, மாசி, பங்குனி, கார்த்திகை முதலிய மாதப் பெயர்களைச் சங்க இலக்கியங்கள் குறிப்பதாலும் மாதங்களுக்குப் பெயரிட்ட சங்கத் தமிழர்களின் வழக்கமானது புலனாகிறது.*

***"ஞாயிறு காயா நளிமாரிப் பின்குளத்து***
***மா இருந்திங்கள் மறுநிரை ஆதிரை"[98]***

***(பரிபாடல், பாடல் எண் 11, அடிகள் 76-77)***

***"மழைநீங்கிய மாவிசும்பில்***
***மதிசேர்ந்த மகவெண்மீன்"[99]***

***(பட்டினப்பாலை, அடிகள் 34-35)***

*ஒவ்வொரு திங்களிலும் நிறைமதி நாளில் சந்திரனோடு ஒரு நட்சத்திரம் உடன்சேர்தலும் அதுகொண்டு மாதப்பெயர் வழங்கப்பட்டதும் தெளிவாகின்றது.*

***"அற்றைத்திங்கள் அவ்வெண் நிலவில்***
***எந்தையும் உடையேம் எம்இன்றும் பிறர்கொள்ளார்***
***இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்"[100]***

***(புறநானூறு, பாடல் 113, அடிகள் 1-3)***

*என்றுத் திங்கள் என்றப் பெயர் மாதத்தையும் சந்திரனையும் குறிப்பதைக் காண முடிகிறது.*

***"எண்தேர் செய்யும் தச்சன்***
***திங்கள் வலித்த கால் அன்னோனே"[101]***

***(புறநானூறு, பாடல் 87, அடிகள் 3-4)***

*எனும் பாடல் திங்கள் எனும் காலப்பாகுபாட்டினை உணர்த்துகின்றது.*

***"அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்***
***எந்தையும் உடையேம், எம்குன்றும்***
***பிறர்கொள்ளார்***
***இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்***
***வென்று எறி முரசின் வேந்தர் எம்***
***குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே"[102]***

***(புறநானூறு, பாடல் எண் 112, அடிகள் )***

### *3.8.1. கார்த்திகை*

*கார்த்திகை என்பது நட்சத்திரம் மற்றும் மாதத்தின் பெயராகும். கார்த்திகை மாதம் வீடுகளில் விளக்கேற்றுதல் மரபு. இன்றும் கார்த்திகைத் தீபத் திருவிழா கொண்டாடப் படுகிறது.*

*தலைவன் கடந்து சென்ற காட்டின் தன்மையைக் கூறும் அகப்பாடல் கார்த்திகை மாதம் பற்றிய குறிப்பினைக் கூறுகிறது. காட்டில் மழைபெய்யாது ஒழிந்தமையால் உயர்ந்த மலைச் சிகரங்களில் இருந்து விழும் நீரின் வீழ்ச்சி இல்லாமல் போனது. அருவிகளில் நீரற்றுப் போன சிகரங்களில் இலையே இல்லாமல் பூக்களை மட்டும் கொண்ட இலவ மரங்கள் உள்ளது. இலவம் பூக்கள் கார்த்திகைப் பெருவிழாவில் இடப்படும் விளக்குகள் போன்று தோற்றம் பெற்றதை,*

***"அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்***
***பெருவிழா விளக்கம் போல பலஉடன்***
***இலைஇல மலர்ந்த இலவமொரு***
***நிலைஉயர் பிறங்கள் மலை இறந்தோரே."[103]***

***(அகநானூறு, பாடல் எண் 185, அடிகள் 10-13)***

*என்று அகநானூற்று அடிகள் குறிப்பிடுகின்றன.*

*தைந்நீராடும் வழக்கத்தை பரிபாடல் குறிப்பிடுகின்றது. மதுரை நகர மகளிர் வையை நதிக்குப் பொங்கலிட்டு பூசனை செய்து வழிபடுகின்றனர். நாட்டுக்கு நல்வளம் தரவேண்டும் என வையை நதியை வேண்டுகின்றனர். பின்னர் தங்கள் தாயர் அருகில் நின்று நீராடுகிறார்கள். நீராடும் போதில் வையையை பாடுகின்றனர். இச்செய்தியை,*

***"வையை நினக்கு மடைவாய்த் தன்று***
***மையாடல் ஆடல் மழுபுலவர் மாறு எழுந்து***
***பொய்ஆடல் ஆடும் புணர்ப்பில் அவர் அவர்***
***தீ எரிப்பாலும் செறிதவம் முன்பற்றியோ***
***தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல்***
***நீ உரைத்தி வையை நதி"[104]***

***(பரிபாடல் பாடல் எண் 11, அடிகள் 87-92)***

*எனும் பரிபாடல்குறிப்பிடுகின்றது. மகளிர் வையை வாழ்த்தும்போது தங்கள்*

வேண்டுகோளையும் முன்வைக்கின்றனர். சிறந்த கணவனைப் பெற வேண்டுமென தைந்நீராடும் மகளிரின் வேண்டுகோள் வையையிடம் வேண்டப்படுகிறது.

**“நீ தக்காய் தைந்நீர் நிறம் தெளித்தாய் என்மாரும்**

**கழுத்து அமைகை வாங்காக் காதலர்ப் புல்ல**

**விழுந்தகை பெறுக என வேண்டும் என்மாரும்”[105]**

***(பரிபாடல் பாடல் எண் 11, அடிகள் 115-117)***

கார்த்திகை மாதங்களில் வீடுகள் தோறும் விளக்குகள் ஏற்றுதல் மரபு. இம் மரபு சங்ககாலத்தில் இருந்தமையை உவமைகள் மூலம் அறியமுடிகிறது. கார்த்திகை பெருவிழாவில் இடப்படும் விளக்குகளை இலவ மரங்களில் உள்ள பூக்களுக்கு உவமையாக அகநானூறு கூறுகிறது.

**“பெருவிழா விளக்கம் போல பலஉடன்**

**இலை இல மலர்ந்த இலமொடு”[106]**

***(அகநானூறு, பாடல் எண் 185, அடிகள் 11-12)***

மகளிர் பன்னிரு திங்களும் கருவுற்றிருத்தல் உண்டு. கடல்நீரை முகந்து கொண்ட மேகங்கள் கொண்ட மகளிர் தளர்ச்சியினால் புளியின்மீது கொண்ட வேட்கையோடு சுற்றி வருதலுக்கு உவமையாகக் காட்டப்படுகிறது.

**“முந்நால் திங்கள் நிறைபொறுத்து அசைஇ**

**ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்டைக்**

**கடுஞ்சூல் மகளிர் போல நீர்கொண்டு”[107]**

***(குறுந்தொகை பாடல் எண். 287, அடிகள் 3-5)***

என்றுக் குறுந்தொகை பகர்கின்றது.

### *3.8.2.* தை

தை மாதத்தில் பனியின் தாக்கம் மிகுதியாக இருக்கும். பாரியின் பரம்பு என்னும் மலையிடத்துள்ள சுனையின் நீர் தைத்திங்களில் குளிர்ச்சியுடைய நீராக இருந்ததை,

**“பாரி பறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்**

**தைஇத் திங்கள் தண்ணிய தரினும்”[108]**

***(குறுந்தொகை பாடல் எண் 196, அடிகள் 3-4)***

எனும் குறுந்தொகை அடிகள் புலப்படுத்துகின்றன. பனியின் கடுமை தைத்திங்களில்

அதிகமாக இருக்கும். பிரிந்தார்க்குத் துன்பம் தரும் நிறைந்த மாலைப்பொழுது தலைவிக்குத் துன்பம் தருவதைக் குறுந்தொகைக் கூறுகிறது.

**"நோற்றார் மன்ற தோழி தண்ணெனத்**
**தூற்றும் துவலைப் பனிக்கடுந்திங்கள்"[109]**
***(குறுந்தொகை, பாடல் எண் 344, அடிகள் 1-2)***

### *3.8.2.1. தைந்நீராடல்*

தைந்நீராடல் என்பது பண்டைய வழக்கம் ஆகும். தைத்திங்களில் மகளிர் ஆறு குளங்களில் நீராடுவது வழக்கமாக இருந்து வந்துள்ளது. பின்னாளில் இது மார்கழி நீராட்டாக மாறியிருக்கலாம். தைத்திங்களில் மகளிர் கூட்டமாக நீராடினர் என்பதை,

**"நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்**
**தைஇத் தண்கயம் போலப்**
**பலர்படிந்துண்ணும் நின் பரத்தை மார்பே"[110]**
***(ஐங்குறுநூறு, பாடல் எண் 84, அடிகள் 4-5)***

என்னும் அடிகளும்,

**"தைஇத் திங்கள் தண்கயம் படியும்**
**பெருந்தோட் குறுமகள்"[111]**
***(நற்றிணை, பாடல் எண் 80, அடிகள் 7-8)***

மழைபெய்து ஓய்ந்து போன தைத்திங்களின் இறுதிநாள்களில் அழகிய நெற்றியை உடைய பெண்கள விளையாட்டுக்குரிய பாவையை நீர்த்துறையில் வைத்துக் குரவை கூத்து ஆடியதை,

**"தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்**
**. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .**
**வண்டற் பாவை உண்துறைத் தரீஇ**
**திருநுதல் மகளிர் குரவை அயரும்**
**பெருநீர்க் கானல் தழீஇய இருக்கை"[112]**
***(அகநானூறு, பாடல் எண் 269, அடிகள் 14-20)***

எனும் அகநானூற்றுப்பாடல் அறிவிக்கின்றது.

*தினையை உண்ண வந்த குரங்குகள் தினையை கசக்கி தூய்மை செய்து உண்டன. மழை பெய்தலால் நனைந்த குரங்குகளின் தோற்றம் நோன்பு உடையவர் தைத்திங்களின் போது நீராடி நோன்பு இருந்து பின்பு உண்ணுதல் போலத் தோன்றியது. நீராடி நோன்பிருந்து உண்ணுவார் போல மந்தியின் செயலமைந்ததை,*

**"வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்**

**கைஊன் இருக்கையின் தோன்றும் நாடன்"[113]**

***(நற்றிணை பாடல் எண் 22, அடிகள் 6-7)***

*தான் விரும்பிய கணவனை அடைதற் பொருட்டுத் தைத்திங்களில் நீராடி நோன்பு மேற்கொள்ளுதல் மரபாக இருந்துள்ளது. தைத்திங்களில் குளிர்ந்த நீரிலாடி நோன்பு மேற் கொண்டாள் தலைவி. அந்நோன்பின் பயனாக தலைவனைப் பெற்ற செய்தியை, கலித்தொகையும், நற்றிணையும் குறிப்பிடுகின்றது.*

**"வை எயிற்றவர் வகை அணிப்பொலிந்து நீ**

**தையில் நீர் ஆடிய தவர்தலைப்படு வாயோ?"[114]**

***(கலித்தொகை பாடல்எண் 59, அடிகள் 12-13)***

**"தழையும் தாரும் தந்தனன் இவன்என**

**இழைஅணி ஆயமொடு தகு நாண் தடைஇ"[115]**

***(நற்றிணை, பாடல் எண் 80, அடிகள் 5-9)***

### *3.8.3. மாசி*

*பகல் பொழுது அதிகம் இல்லாமல் இரவுப்பொழுது மிகுந்து விளங்குகின்ற மாசி மாதம் என்று பதிற்றுப்பத்து மாசிமாதப் பெயரைக் குறிப்பிடுகின்றது. மக்கள் உடம்பு குளிரால் வளைந்து நடுங்குகின்ற மாசிமாதம் என்ற செய்தியை* ***மாக்கூர்த் திங்கள்*** *என்று குறிப்பிடுகிறது.*

**"பகல்நீடு ஆகாது இரவுப்பொழுது பெருகி**

**மாசி நின்ற மாகூர்த் திங்கள்"[116]**

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 59, அடிகள் 1-2)***

### *3.8.4. பங்குனி*

*பங்குனித் திங்களில் உத்தரமும் நிறைமதியும் கூடிய நன்னாளில் உறையூரில் பங்குனி உத்திர விழா சிறப்புறக் கொண்டாடப்பட்டதை அகநானூறு கூறுகின்றது. காவிரிப் பேரியாற்றின் பரப்பில் உள்ள சோலையில் பங்குனிப் பெருவிழா நடைபெற்றதைக் கூறு கீழ்வரும் பாடல் பங்குனிமாதப் பெயரைக் குறிப்பிடுகின்றது.*

**"வருபுனல் நெறிதரும் இருகரைப் பேரியாற்று**
**உருவ வெண்மணல் முருகுநாறு தண்பொழிற்**
**பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்"[117]**

***(அகநானூறு, பாடல் எண் 137, அடிகள் 7-9)***

*சங்க இலக்கியத்தில் மாதப்பெயர்கள் அனைத்தும் இடம்பெறவில்லை. தைத்திங்கள் பல இடங்களில் பேசப்படுகின்றது. பதிற்றுப்பத்தில் மாசிமாதம் இடம்பெறுகிறது. இன்றும் பங்குனி மாதத்தில் கொண்டாடப்படும் பங்குனி உத்திர விழா சங்ககாலத்தில் கொண்டாடப் பட்டதைக் காணமுடிகிறது. மாதம் பற்றிய பெயர்க்குறிப்பு இருந்ததைக் காணமுடிகிறது.*

*சங்க இலக்கியத்தில் சில குறிப்பிட்ட தமிழ் மாதங்களே இடம்பெறுகின்றன. புரட்டாசி, பங்குனி போன்ற மாதங்கள் பக்தி இலக்கியங்களில் பின்னாளில் குறிப்பிடப்படுகின்றன. கார்த்திகைத் திருநாளில் இன்றும் நாம் வீட்டில் விளக்கிடுகின்றோம். இம்மரபு அன்றும் இருந்ததை சில உவமைகளோடு சங்க இலக்கியம் உறுதி செய்கின்றது.*

*மார்கழி மாதத்தில் நோன்பு நோற்று இறைவனை வேண்டும் வழக்கம் இன்று உள்ளது. அதனைத் தைந்நீராடல் என்று இலக்கியங்களில் பெறமுடிகிறது. தைமாதம் அறுவடை காலம். பொங்கல் விழா அறுவடை விழாவாகவே கொண்டாடப்பட்டது.*

*பாவை நோன்பு மார்கழி மாதம் கொண்டாடப்படுகிறது. பாவை என்பது மண்ணால் செய்யப்பட்டது. இது பூமியைக் குறித்து வந்து பூமியை மகிழ்விக்க கொண்டாடப் படுகிறது. மார்கழி மாதம் முழுவதும் நோன்பிருந்து பூமியின் செழிப்பிற்கு வேண்டுவர். தைந்நீராடல் என்னும் இலக்கிய மரபின்படி வந்து இறுதியில் மார்கழி நீராடலாக வழங்கப்பட்டு வருகிறது. செல்வச் செழிப்பை வேண்டி பாடப்படுகிறது. அதேபோல் பொங்கல் விழாவும் தை மாதம் பூமிக்கும் சூரியனுக்கும் நன்றி சொல்லி நிலத்தின் செழிப்பை வேண்டுகிறது.*

பதிற்றுப்பத்தில் மன்னனின் உயர்ந்த பண்புகளைக் கூறுமிடத்து, சொன்ன சொல் தவறாதத் தன்மையை நிலவுலகம் தன் கூறுபாடு எல்லாம் நீங்கும் ஊழிக் காலத்தாயினும் நீ சொன்ன சொல்லைப் பொய்த்தலை அறியாய் என்னும் பொருளில் இடம்பெறுகிறது.

**"நிலம் திறம் பெயரும் காலை ஆயினும்**
**கிளந்த சொல் நீ பொய்ப்பு அறியலையே"[118]**

***(பதிற்றுப்பத்து, பாடல் 63, அடிகள் 6-7)***

உலக முடிவாகிய ஊழிக்காலத்தில் நிலமும் நீரும் தம்நிலை தடுமாறி அழியும் என்று நம்பினர்.

**"நிலம் திறர் பெயரும் காலை ஆயினும்"[119]**

***(பதிற்றுப்பத்து, பாடல் 63, அடி.6)***

ஊழிமுடிவில் கோளும் நாளும் நிலைகுலைந்து விடும் என்று நம்பியதை சங்க இலக்கியங்கள் பகர்கின்றன.

**"தீச்செங் கனலியும் கூற்றமும் எமனும்**
**மாசுஇல் ஆயிரம் கதிர்ஞாயிறும் தொகூம்**
**ஊழி ஆழிக்கண்....................."[120]**

***(பரிபாடல், பாடல் 3, அடிகள் 21-23)***

என்று உலகமுடிவினை ஊழிக்காலம் என்று அழைத்தனர். நிலம், நீர், தீ, காற்று எனும் பூதங்களும் ஞாயிறு, திங்கள் முதலிய கோள்களும் நாள்களும் ஊழி என்னும் பெருங்காலப் பாகுபாட்டையும் அறிந்திருந்தனர்.

நிலம் கீழ் மேலாகும் காலம் உயிர்கள் மடிவதற்கு ஏதுவாகியக் காலம் என்பதை அகநானூறு கூறுகின்றது.

ஒருநாள் பிரிந்திருந்தக் காதலரை மீண்டும் கூடுவதற்குரிய வேட்கை உள்ளத்தில் அளவின்றிப் பெருகும். ஆதலின் ஒருபொழுது தடைபடினும் அஃது ஓர் ஊழியினும் நெடிதாகத் தோன்றும் பிரிந்திருக்கும் காதலர்க்கு ஒருநாள் கழிதல் ஒரு ஊழிக்காலம் போன்றது.

**"நாள் இடைச்சேப்பின் ஊழியின் நெடிதே"[121]**

***(ஐங்குறுநூறு, பாடல் 482, அடி 4)***

### *3.9. ஆண்டு*

*வருடத்தின் பெயரினை வருடம், வற்சரம், சமை, ஆண்டு என்று நாமதீப நிகண்டு குறிக்கின்றது. (நாமதீப நிகண்டு, காலவர்க்கம், பக்கம் 166) வருடம் சங்க இலக்கியத்தில் ஆண்டு என்றே குறிக்கப்படுகிறது.*

*சங்க இலக்கியத்தில் ஆண்டு என்பது கால நீட்டத்தினை கணக்கீட்டினைக் குறிக்க வந்துள்ளது. வாழ்நாள், காலங்கள் கடந்து செல்லுதல் போன்ற செய்தியினைக் குறிக்க ஆண்டு பற்றிய கணக்கு குறிப்பிடப்படுகின்றது.*

*தன் யானையை இழந்து கம்பம் வெறுமையாக நிற்கக் கண்டு பகான் கலங்கினான். பல ஆண்டுகள் மிகுதியான சோற்றைத் தந்து பல ஆண்டுகள் பாதுகாத்த யானை தங்கிய கூட்டம் அவனுக்கு வெறுமை அளித்ததை புறநானூறு குறிப்பிடுகின்றது.*

**"பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த**
**பெருங்களிறு இழந்த பைதற் பாகன்**
***அது சேர்ந்து அல்கிய அழுங்கல் ஆலை"*[122]**

***(புறநானூறு, பாடல் எண் 220, அடிகள் 1-3)***

*எனும் அடிகள் ஆண்டுக் கணக்காக பழகிய பாகனின் வருத்தத்தைப் புலப்படுத்துமாறு ஆண்டு என்னும் காலக்கணக்கீடு குறிப்பிடப்படுகின்றது.*

*சேரமன்னனின் வீரத்தைக் கூறும் பதிற்றுப்பத்து அடிகள் ஆண்டுக்கணக்கைக் கூறுகிறது. மன்னன் பகை மன்னன் நாடுகளை அழிக்க விரும்பினால் ஒராண்டுக் காலம் தங்கிப் போர்முனையை அழித்து பகைமன்னனிடம் மதில்களைத் தாண்டி யானைப் படையை செலுத்துவான் என்று கூறுகின்றது.*

***"யாண்டு தலைப் பெயர வேண்டு புலத்துஇறுத்து***
***முனை எரிபரப்பிய துன் அருஞ் சீற்றமொடு***
***மழை தவழ்பு தலைஇய மதில்மரம் முருக்கி***
***நிரைகளிறு ஒழுகிய நிரைய வெள்ளம்"*[123]**

***(பதிற்றுப்பத்து பாடல் எண் 15, அடிகள் 1-3)***

*ஆண்டு என்பது ஒவ்வொருவரின் வாழ்நாள், வயது கணக்கிற்குரிய காலக்கணக்கு. பிறரை வாழ்த்தும் போதும், அவரின் வாழ்நாளை ஆண்டாகக் குறிப்பர். நூறாண்டு காலம் வாழ்க என வாழ்த்துவர். மூவேந்தருடைய நாடு*

*மூன்றையும் தான் ஒருவரே உரிமையுடைய வேந்தராக ஆட்சி புரிந்தாலும் அவருடைய வாழ்நாளும் கழியக்கூடியது. இவ்வுண்மையை உணர்த்தும் விதமாக அமைந்த,*

**"பொதுமை சுட்டிய மூவர் உலகமும்**
**பொதுமை இன்றி ஆண்டிசினோர்க்கும்**
***மாண்ட அன்றே ஆண்டுகள்*"[124]**

***(புறநானூறு, பாடல் எண் 357, அடிகள் )***

*எனும் புறநானூறு பாடலில் ஆண்டு என்பதற்கு வாழ்நாள் குறித்து வந்துள்ளது.*

*ஒவ்வொரு ஆண்டும் கழியும் போது வாழ்நாள் வயது கழியும். மூப்பின் காரணமாக தோன்றும் நரை வாழ்நாள் எண்ணிக்கையை புலப்படுத்தும். பிசிராந்தையாருக்கு வாழ்நாள் ஆண்டுகள் பல சென்றாலும் நரையில்லை. அதன் காரணத்தை பிசிராந்தையார் புறப்பாடலில் ஆண்டு என்ற குறிப்பு வாழ்நாள் குறிக்க வந்தது.*

**"ஆண்டு பலஆக நரை இல ஆகுத"[125]**

***(புறநானூறு, பாடல்எண். 191, அடிகள் )***

*எனும் புறப்பாடல் பிசிராந்தையாருக்கு குணம் நிறைந்த மனைவி, அறிவுபெற்ற புதல்வர், முறையான ஆட்சி செய்யும் அரசன் மற்றும் கல்வி, பணி, ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினையுடைய சான்றோர் பலர் உள்ளார்கள். இத்தனை ஆண்டுகளாயினும் இவர்களாலேயே நரை இலாதவானாயினேன் என்று கூறுவதாக அமைகிறது.*

*ஆண்டு என்பது நீண்டகாலம் கொண்டது. இத்தகைய நீண்ட கால இடைவெளியை குறுந்தொகைப் பாடல் உவமை மூலம் விளக்குகிறது.*

*மகன்றில் பறவையின் இணையைப் போன்றது தலைவன் தலைவியர் புணர்ச்சி. இதனை உவமை மூலம் விளக்க வந்த பாடலில் தமக்கிடையே பூ ஒன்று இடைபுகுந்து ஒன்றை யொன்று காணமுடியாமல் மறைப்பதாயினும் ஓர் யாண்டு கழிந்தது போல நீரில் வாழ்கின்ற மகன்றில் பறவைகளின் சேர்க்கை விளங்குவதாகும் என்று குறிப்பிடப்படுகிறது.*

**"பூ இடைப்படினும் யாண்டு கழிந்தன்ன**
***நீர்உறை மகன்றில் புணர்ச்சி போலப்***
***பிரிவு அரிது ஆகிய தண்டாக் காமமொடு*"[126]**

***(குறுந்தொகை பாடல் எண் 57, அடிகள் 1-3)***

*இதில் ஆண்டு என்பது நீண்டகால இடைவெளியைக் குறிக்க வந்தது.*

### *3. 10. ஊழிக்காலம்*

*ஆண்டுகள் பல கூடி ஒரு ஊழியாகும். ஊழிகள் ஒருவர் வாழ்நாள் குறித்த வாழ்த்தின் போதும் காலத்தின் நீண்ட தன்மையை உணர்த்தும் பொருட்டும் இலக்கியங்களில் காணக் கிடைக்கின்றன. ஒரு யுகத்தின் முடிவுக்காலம் ஒரு ஊழிக் காலம் என்றப் பொருளிலும் ஊழியின் உருவமாக இறைவனைக் காணும் தன்மையையும் பக்தி இலக்கியங்களில் காணமுடிகிறது.*

*நிலஅழிவு நீரால் நெருப்பால் எனில், நீரால் அழிவுப்படக் காற்றுப் புயலாக மாறவேண்டும். காற்றழுத்த மண்டலம் போக்குகளால் மாறிவரும் மழை. அதனால் பயிர், உயிர் அழிவுகள் ஏற்பட்டு வருவதை இன்றும் காணமுடிகிறது.*

### *3.10.1. ஊழியின் இயல்பு*

*ஊழிக்காலத்தில் நிலம்பெயர்தல், வெள்ளம் ஏற்படுதல் போன்ற அபாயம் நிகழும். உலகம் அழிவதற்கு ஏதுவான சூழல் உண்டு என்பதை இலக்கியங்கள் பதிவுச் செய்துள்ளன.*

### *3.10.2. ஊழிக்காற்று*

*நிலவுலகில் ஊழிக்காலத்தில் பெருங்காற்றானது ஒரு கணத்திற்கு ஒரு கணம் மேன்மேல் விசை கொண்டு எழுவதைத் திருமுருகாற்றுப்படை உணர்த்தி நிற்கிறது.*

***"கால் கிளர்ந்தன்ன வேழ மேல் கொண்டு"*** [127]

***(திருமுருகாற்றுப்படை, பாடல் 2, அடி 82)***

*என்றுக் கூறுகிறது.*

### *3.10.3. நால்வகை ஊழிகள்*

*ஊழி என்னும் பெருங்கால அளவில் நான்கு வகையான ஊழிகள் பேசப் பட்டுள்ளன.*

***"நால்வகை ஊழி எண் நவிற்றும் சிறப்பினை"*** [128]

***(பரிபாடல், பாடல் எண் 3, அடி 80)***

*என்பதுப் பரிபாடல் அடி ஆகும். நால்வகை ஊழிகளாவன கிரேதயுகம், திரேதயுகம், துவாபரயுகம், கலியுகங்களாகும். திருமங்கையாழ்வார் பெரியத் திருமொழியில் குறிப்பிடுகின்றார்.*

***"சேயாய் கிரேத திரேத துவாபர***
***கலியுகம் இவை நான்கும் முன்ஆனாய்"*** [129]

***(பெரியதிருமொழி, பாடல் எண் 7, அடிகள் 7-8)***

*ஊழிக்காலம் என்பது வீசுகின்ற அலைகளை உடையப் பெரியக் கடல் முடிவெய்தும் காலம் என்பதைப் புறநானூறு புலப்படுத்துகிறது.*

***"எறிதிரைப் பெருங்கடல் இறுதிக்கண் செலினும்***
***தெறுகதிர்க் கனலி தென்திசைத் தோன்றினும்***
***என்?என்று அஞ்சலம் யாருமே"[130]***

***(புறநானூறு, பாடல் எண் 397, அடிகள் 23-25)***

***"நிலம் புடைபெயர்வது அன்றுகொல் இன்என்***
***மன்உயிர் மடிந்த மழை மாறு அமையத்து"[131]***

***(அகநானூறு, பாடல் எண் 31, அடிகள் 3-4)***

### *3.10.4. காலக் கணிதர் (அறிவர்)*

*உலகப்பகுதி அழிவு நீரால், நெருப்பால், காற்றால் ஏற்படக்கூடும். கடல் நீரால் அழிவது கடல்கோள் ஆகும். உயிர்கள் ஒடுங்கும் ஊழிக்காலம் பற்றியக் குறிப்பு சங்க இலக்கியத்தில் உண்டு. வாழ்த்துவதற்கும் வாழ்க பல ஊழிக்காலம் என்றுக் கூறுவதுண்டு.*

***"ஆயிரவெள்ளம் ஊழி***
***வாழியாத வாழிய பலவே"[132]***

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 63, அடிகள் 20-21)***

*எனச் செல்வக்கடுங்கோ வாழியாதன் நீண்டகாலம் வாழ வாழ்த்தும் போது ஊழி எனும்சொல் கால நீட்சியைக் குறித்து நிற்கிறது.*

***"ஊழி வாழியர் பூமியர் பெருமகன்"[133]***

***(புறநானூறு, பாடல் எண் 387, அடி 28)***

*என நீண்ட கால வாழ்விற்கு ஊழிக்காலத்தைப் பயன்படுத்தியிருப்பதைக் காணமுடிகிறது.*

*ஊழியை யுகம் என்றும் அழைப்பர். நான்கு யுகங்களால் தற்போது கலியுகம் நடப்பதாகப் பஞ்சாங்கம் குறிக்கின்றது. கிருதயுகம் 17, 28,000 ஆண்டுகள். திரோதா யுகம் 32, 32,000 ஆண்டுகள், துவாபரயுகம் 8, 64,000 ஆண்டுகள். கலியுகம் 4,32,000 ஆண்டுகள் என்று வரையறை செய்யப்பட்டிருப்பதைக் காலக்கணிதக் குறிப்பேடானப் பஞ்சாங்கத்தில் காணமுடிகிறது.*

*பூதங்கள், கோள்கள் ஆகியவை காலக்கணிப்பு, காலமாற்றங்களுக்குத் துணை என்பதால் நாள், நட்சத்திரம், திதி, கரணம், யோகம் ஆகிய ஐந்து உறுப்புகளின்*

கால இருப்புகளைக் கணித்துக்கூறும் பஞ்சாங்கம் மக்களின் பண்பாட்டு வாழ்வியலுக்கு வழிகாட்டும் முறையில் அமைந்துள்ளன.

ஐந்திறம் ஐந்துக் கேள்வி போன்ற சொற்களின் வருகையைக் கொண்டு பஞ்சாங்கத் தகவல்களை அறிந்தோர் பழங்காலத்தில் இருந்தனர் என்றுக் கூறுகின்றனர். காலத்தை அறிந்துகூறும் நாழிகைக் கணக்கர் இருந்துள்ளனர். முக்காலம் உணர்வோனை அறிவன் என்றுத் தொல்காப்பியம் அழைக்கின்றது.

**"பார்ப்பார் அறிவர் என்றிவர் கிளவி**
**யார்க்கும் வரையார் யாப்போடு புணர்ந்தே"**[134]
**(தொல்காப்பியம், செய்யுளியல், நூற்பா 498)**

என்ற நூற்பாவிற்கு உரை எழுதியோர் முக்கால உணர்வுடையோர் அறிவர் எனக் கூறியுள்ளனர்.

**"மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்"**[135]
**(தொல்காப்பியம், புறத்திணையியல், நூற்பா 74)**

இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகியவை மூவகைக்காலம். அறிவன் என்போன் எதிர் காலத்தையும் உணர்வோன் ஆகின்றான். ஐங்குறுநூற்றில்,

**"அன்னை தந்தது ஆகுவது அறிவன்"**[136]
**(ஐங்குறுநூறு, பாடல் எண் 247, அடி 1)**

எனும் அடியில் அறிவன் எனும் சொல் முக்காலம் உணர்வோனைக் குறித்ததாகும். மூன்று காலங்களையும் நிகழ்வுகளையும் அறிந்தவரை இன்றுச் சோதிடர் என்கின்றனர். சொல்வழக்கில் இல்லாவிடினும் வருவதை முன்னரே அறியும் ஆற்றல் மிக்கோர் அன்றே இருந்துள்ளனர்.

### 3.11. வெள்ளம்

ஒருவரை வாழ்நாள் குறித்து வாழத்தும் போது அதீத அன்பின் காரணமாக ஆண்டு பல வாழ்க என்பதல்லாமல் பல ஊழிகள் வாழ்க என்று வாழ்த்துதல் மரபாக உள்ளது. பல ஊழிகள் சேர்ந்து வரும் அளிவனாதாகியக் காலங்களை வெள்ளம், பேரெண், ஆம்பல் என்றுக் கூறுவதுண்டு.

வெள்ளம் என்பது பல ஊழிகள் சேர்ந்த பேரெண்ணைக் குறிப்பதாகும். கிளிகள் சின்னாள் வாழக்கூடியவை. தலைவிக்குத் தினைப்புனக் காவலைத் தந்துத் தலைவனுக்குக் கிளிகளை வெள்ளம் என்னும் பேரெண் அளவிலான ஊழிகள் பல கழிந்தப் பின்பும் வாழ்வனாக என்று வாழ்த்துகின்றான்.

***"வெள்ளை வரம்பின் ஊழி போகியும்***
***கிள்ளை வாழிய பலவே"***[137]

***(ஐங்குறுநூறு, பாடல் 281, அடிகள் 1-2)***

*நின் வாழ்நாள்கள் மாதத்தைப் போன்றன ஆகுக. மாதங்கள் ஆண்டைப் போன்று ஒரு தன்மையை ஆக ஆண்டுகள் ஊழி போன்றன ஆகுக. ஊழிகள் வெள்ளம் என்னும் பேரெண்ணின் எல்லையை உடையன ஆகுக. நினைந்து நான் உன்னைக் காணும் பொருட்டு வந்தேன் என்பது இளஞ்சேரல் இரும்பொறையை நோக்கிப் பெருங்குன்றூர்க் கிழார் கூறிய வாக்கு, இங்கே நாள், திங்கள், யாண்டு, ஊழி, வெள்ளம் என்பன முறையே கட்டப்பட்டிருத்தலைக் காணமுடிகிறது.*

***"நின்நாள் திங்கள் அனையஆக திங்கள்***
***யாண்டு ஓரனைய ஆக யாண்டே***
***ஊழி அனைய ஆக ஊழி***
***வெள்ள வரம்பின் ஆக என உவ்விக்***
***காண்டு வந்திசின் யானே"*** [138]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 90, அடிகள் 51-55)***

***"ஐ அம் பல் என வரூஉம் இறுதி***
***அல்பெயர் எண்ணும் ஆயியல் நிலையும்"***[139]

***(தொல்காப்பியம், புள்ளியமங்கியல், நூற்பா 98)***

*இங்கு ஐ, அம், பல் எனவரும் இறுதியானது தாமரை, வெள்ளம், ஆம்பல் என்னும் பேரெண்களாகும். இவை பல நூறு ஆண்டுகளைக் குறிப்பவை. பரிபாடல்,*

***"நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்***
***மை இல் கமலமும் வெள்ளமும் நுதலிய***
***செய்குறி ஈட்டடம் கழிப்பிய வழிமுறை"***[140]

***(பரிபாடல், பாடல் எண் 2, அடிகள் 13-15)***

*என்று எடுத்தியம்புகின்றது.*

### *3.12. ஐந்திரம்*

*பஞ்சாங்கம் என்பது தற்போது வழங்கப்படும் சொல். அதனைத் தமிழர்கள் அக்காலத்தில் ஐந்திரம் என்று வழங்கி வந்துள்ளனர். ஐந்திரம் என்பது ஐந்துறுப்பு எனும்பொருளில் கிழமை (வாரம்), பக்கல் (திதி), விண்மீன், ஓகம், கரணம் என்பவைகளைக் கொண்டு நேரம் குறித்ததை ஐந்திரம் என்றனர்.*

கிழமை அல்லது வாரம் ஏழு நாள்களைக் கொண்டது. பக்கல் (திதி) அமாவாசைக்கு அடுத்து 14 நாள்களும் (சுக்கிலபட்சம்) பௌர்ணமிக்கு அடுத்த 14 நாட்களும் (கிருஷ்ணபட்சம்) கொண்டது. விண்மீன் என்பது ஒவ்வொரு நாளும் நிலவு கடந்து செல்லும் நாள்மீனின் பெயரைக் குறிப்பது. ஓகம் (ஓரை) கோள்கள் சார்ந்திருக்கும் இடம், கரணம் ஒருநாளில் 60 கரணங்களைக் கொண்டது ஆகும்.

ஞாயிறு, நிலவு, விண்மீன்கள், கோள்கள், ஓரைகள் ஆகிய ஐந்தின அடிப்படையில் கணிக்கப் படுகிறது. இந்தக் கணக்கீட்டில் உருவாக்கப்பட்டது தான் ஐந்திரம் பஞ்சாங்கம் ஆகும். ஐந்திரம் என்பது அக்கால நாட்காட்டியாகும்.

இப்பஞ்சாங்கம் சோதிடத்தில் மிகுதியாகப் பயன்பட்டதால் அவர்களுக்கே உரியதாகக் கருதப்படுகிறது.

### 3.13. பஞ்சாங்கம்

பத்தாயிரம் ஆண்டுப் பழமை மிக்க காலக்குறிப்போடு பஞ்சாங்கம் வெளிவந்தது. சப்தரிஷிகள் கூட்டாகத் தயாரித்த கணிதக் கருவூலம் கோள்களின் இயக்கம் கால நேரமாறுதல்கள் குண இயல்புகள், பஞ்சபூதச் செயல்பாடுகள் அவற்றால் விளையும் உயிரின பயிரின வளர்ச்சி தளர்ச்சிகள் காற்று, இடி, மின்னல், மழை, வெள்ளம் பருவ மாறுதல்கள் போன்றவற்றை அறிவிக்கும் கணிப்பான். நாள் (கிழமை), நட்சத்திரம், திதி, கரணம், யோகம் ஆகிய ஐந்து உறுப்புகளைக் கொண்டதால் பஞ்சாங்கம் என்று அழைக்கப்பெறும் நாட்காட்டியாகவும் மக்களுக்கு வழிகாட்டியாகவும் விளங்கும் நூல் பஞ்சாங்கம் ஆகும்.

காலக் கணித நூலாதலின் காலநிலையை இடத்திற்கு ஏற்ப அட்சரேகை ராசிப் பிரமாண மாற்றம் இருப்பதால் பல பஞ்சாங்கங்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. ஆண்டுத்தொடக்கம் சித்திரை மாதம் என்பதால் இவ்வகை நூல் அம்மாதத்திற்கு முன்தான் ஆண்டுதோறும் வெளிவரும். நடப்பில் வாக்கியப் பஞ்சாங்கம், திருக்கணிதப் பஞ்சாங்கம் ஆகிய இரண்டு பஞ்சாங்க நூல்களில் சிறப்பாகக் கொள்ளப்படுகின்றன. நாள் பார்க்க விரும்புவோர் வீடுகளில் இந்நூல் இருக்கும்.

சுத்த வாக்கிய சர்வ முகூர்த்தப் பஞ்சாங்கம் 2015-2016 இல் வெளிவந்துள்ளது. சித்திரை மாதம் வந்தது. கார்த்திகைத் திங்களில் சென்னையில்

வெள்ளம் மிகும் என்ற செய்தி அந்தப் பக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. இதுபோன்று முன்னரே அறிவிக்கும் தகவல் பஞ்சாங்கத்தில் இடம்பெறுவதுண்டு. பஞ்சாங்க உறுப்புகளை ஐந்துகேள்வி என்றச் சொற்களில் சிலப்பதிகாரம் குறித்துள்ளது.

**"ஆறுஇருமதியினும் காருக வடிப்பயின்று**
**ஐந்து கேள்வியும் அமைந்தோன்"[141]**

***(சிலப்பதிகாரம், கால்கோள் காதை, அடிகள் 25-26)***

நாள்கோள்களின் நிலை அறிந்து உணர்ந்து உரைக்க உதவும் நூல் பஞ்சாங்கம். ஒவ்வொரு நாளின் நட்சத்திர அளவு நாழிகையால் குறிக்கப்படுகிறது. நாழிகைக் கணக்கர் பழங்காலத்தில் இருந்தனர். அரசன் போருக்குச் செல்லும் முன் இக் கணக்கரிடம் நல்லநேரம் பார்த்துக்கூறக் கேட்டறிந்தே செல்வான். அதனால் அரச சபையில் கணியர் இருந்தனர். காலத்தைக் கணிப்பவர் என்பதால் காலக் கணிதர் என்றும் சோதிடர் எனறும் அழைக்கப்பெற்றனர்.

ஐந்து உறுப்புகளில் நட்சத்திரம், திதி, கரணம், யோகம் ஆகிய நான்கு உறுப்பின் பின் நாழிகை குறிப்பிடப்பட்டாலும் இப்போது திருநெல்வேலி வாக்கிப் பஞ்சாங்கத்தில் அன்றாட மணிநேரமும் உடன் அருகே இடப்பட்டு வெளிவந்து கொண்டு இருக்கிறது. இதனால் நாழிகைக் கணக்கு அறியாதிருப்பின் நல்ல நேரத்தை அறிய வாய்ப்பாகும். வாக்கியப் பஞ்சாங்கம் முனிவர்கள் வழி வாய்மொழியாக வரப்பெற்று எழுதப்பெற்றதாகும். அந்தந்த இடத்தில் வசிப்போர் அங்காங்கு வந்துள்ள பஞ்சாங்கங்களைப் பயன்படுத்தி வருகின்றனர்.

சாதகம் எனும் சொல்லாட்சி சிற்றிலக்கிய இலக்கணத்தில் உள்ளது. சோதிடர் எனும் சொல்லாட்சி சூளாமணி, பெருங்கதையில் இடம்பெற்றுள்ளது.

### *3.13.1.* பஞ்சாங்க உறுப்புக்கள்

நாள், நட்சத்திரம், திதி, கரணம், யோகம் என்பனப் பஞ்சாங்க உறுப்புகள் ஆகும். பஞ்சாங்கம் என்ற பெயர் அது ஐந்து உறுப்புகளைக் கொண்டிருப்பதைத் தெளிவு படுத்துகிறது. இந்த ஐந்து உறுப்புகளும் மரபுவழிக் கால அளவீடுகளுடன் தொடர்பான அம்சங்களாகும். இவை,

### 3.13.1.1. நாள்

நாள் என்பது,

1. வாரம்,
2. திதி
3. கரணம்
4. நட்சத்திரம்
5. யோகம்

என்பனவாகும். இங்கே வாரம் என்பது ஏழு கிழமைகள் ஆகும். இவை,

1. ஞாயிற்றுக்கிழமை
2. திங்கட்கிழமை
3. செவ்வாய்க்கிழமை
4. புதன்கிழமை
5. வியாழக்கிழமை
6. வெள்ளிக்கிழமை
7. சனிக்கிழமை

என்னும் ஏழுமாகும்.

ஒவ்வொரு நாளும் மேற்குறிப்பிட்ட ஏதாவதொரு பெயரைக் கொண்டிருக்கும். இங்கே காட்டப்பட்ட ஒழுங்கின்படி ஒன்றன்பின் ஒன்றாக வரும் கிழமைப்பெயர்கள் சனிக்கிழமைக்குப் பின் மீண்டும் ஞாயிற்றில் தொடங்கிச் சுழற்சி முறையில் வரும்.

### 3.13.1.2. நட்சத்திரம்

நட்சத்திரங்கள் என்பது ராசிச் சக்கரம் ஒவ்வொன்றும் 13.33 பாகை அளவு கொண்ட 27 பகுதிகளைக் குறிக்கும். சந்திரன் பூமியைச் சுற்றிவரும் போது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் எந்தப் பிரிவில் இருக்கிறதோ அந்தப் பிரிவுக்குரிய நட்சத்திரம் அந்த நேரத்தில் நடப்பதாகச் சொல்லப்படுகிறது. 27 நட்சத்திரங்களும் பின்வருமாறு,

1. அச்சுவினி
2. பரணி
3. கார்த்திகை
4. ரோகிணி
5. மிருகசீரிடம்
6. திருவாதிரை
7. புனர்பூசம்
8. பூசம்

9. ஆயிலியம்
10. மகம்
11. பூரம்
12. உத்தரம்
13. அத்தம்
14. சித்திரை
15. சுவாதி
16. விசாகம்
17. அனு-ம்
18. கேட்டை
19. மூலம்
20. பூராடம்
21. உத்திராடம்
22. திருவோணம்
23. அவிட்டம்
24. சதயம்
25. பூரட்டாதி
26. உத்திரட்டாதி
27. ரேவதி

### 3.13.1.3. யோகம்

சந்திரன் ஒவ்வொரு நட்சத்திரத்தையும் கடக்க எடுக்கும் காலப்பகுதி யோகம் எனப்படும். எனவே 27 நட்சத்திரங்களையும் கடக்கும் காலப்பதிகளுக்கு 27 பெயர்களைக் கொடுத்துள்ளனர். இவற்றை யோகம் என்பர்.

பஞ்சாங்கத்தின் ஐந்தாவது அங்கம் யோகம் ஆகும். அனுகூலகாலம், அதிர்ஷ்டகாலம் ஆகும். இது அமிர்தயோகம், சித்தயோகம், மரணயோகம் என மூன்று வகைப்படும்.

### 3.13.1.4. கரணம்

கிரகச் சுழற்சியில் சூரியச் சந்திரன் இடையே உள்ள தூரம் திதி. அந்தத் திதியின் பாதியே கரணம் ஆகும். ஒரு தினத்தின் ஒரு பகுதியே கரணம் ஆகும். சூரிய உதயம் முதல் 3 நாழிகை வரை ஒரு கரணம். 30 நாழிகைக்கு மேல் வேறு ஒரு கரணம். இந்தக் கணக்கின்படி, 60 கரணம் இருக்க வேண்டும். ஆனால் 11 கரணங்களை மட்டுமே கொண்டு ஓர் ஒழுங்கு முறையில் மாதம் முழுவதும் கரணம் நட்சத்திரம் 27க்கும் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது.

கிரகம் வழக்கமான சுழற்சிவேகத்தில் இருந்து மாறுபட்டு குறைந்த வேகத்தில் பின்னோக்கி நகர்வது வக்ரம் எனப்படும்.

செவ்வாய், வியாழன், சனி இவர்களுக்கு 6இல் சனி வந்தால் வக்ரம் ஆகும். 8இல் வந்தால் வக்ர நிவர்த்தியாகும்.

*குழந்தை பிறந்த நேரம் லக்னம், குழந்தை பிறந்த நட்சத்திரம், ராசி, பஞ்சாங்கத்தின் சுழற்சி என்பது சூரிய உதயம் முதல் மறுநாள் சூரிய உதயம் வரை 1 நாள் சூரிய உதயத்திலிருந்து எவ்வளவு நேரம் கழித்துக் குழந்தை பிறக்கிறதோ அதுவே லக்ன காலமாகும்.*

**"திதியே வாரநாள் யோகம் கரணமெனப்**
**பகரும் சோதிடம் பஞ்சாங்கமாகும்"[142]**

***(திவாகரநிகண்டு, பல்பொருள்பெயர்த்தொகுதி, பக்கம் 160)***

*என்பதுத் திவாகர நிகண்டு. பிங்கல நிகண்டும் இதனையே வழிமொழிகின்றது.*

### *3.13.1.5.திதி*

*சந்திரன் வழிக் காலக்கணிப்பைத் துல்லியமாக்க முதலில் திதி பகுக்கப் பட்டது. சந்திரன் பூமியைச் சுற்றும்போது சுற்றுப்பாதையின் 30 சமகோணப் பிரிவுகள் ஒவ்வொன்றையும் சந்திரன் கடக்க எடுக்கும் காலத்திற்குத் திதி என்றுப் பெயர் தந்தனர்.*

*நிலவு தேய்வது 15 சமகோண சுற்றிலும் அமைவதற்குத் தக்கனின் பெண் மக்கள் இருபத்தேழ்வரைச் சந்திரன் மணந்து ரோகிணியிடம் அதிகப் பற்றுக் கொண்டதால் மாமன் தக்கனின் சாபம் பெற்றுத் தேய்ந்தே தேய்பிறை என்றப் புராணக்கதையை உருவாக்கினர். தேய்பிறை ஒவ்வொரு நாளுக்கும் வடமொழியில் பெயர் தந்தனர். எண்நாள் திங்கள் என்றுத் தமிழ் இலக்கியத்தில் நல்ல தமிழில் இருப்பதை அட்டமி என்று வடசொல்லில் வழங்கி வருகின்றனர்.*

*பிறை காண்பது அதுவும் வளர்பிறையில் மூன்றாம் நாள் பிறைகண் தொழும் பழக்கம் இருந்துள்ளது. ஆயிரம் பிறை கண்டவர்கள் முத்துவிழா எடுப்பார்கள். பிறையின் எண்ணிக்கை ஒன்று, இரண்டு, மூன்று என்பதைப் பிரதமை, துவிதை, த்ரிதியை என்று பெயரிட அதுவே பஞ்சாங்கத்தில் இடம்பெற்றது. ஒரு மாதத்திற்குரிய முப்பது நாளுக்கும் 15 திதிப் பெயர்களே இருப்பதால் வளர்பிறையில் உள்ள பெயர்களே திருப்பவும் தேய்பிறை 15 நாட்களுக்கும் அப்பெயர்கள் அமைந்தன.*

*எட்டாம் நாள் நிலவு அட்டமி. கண்ணனுக்கு ஏற்றத்தாய்ப் போற்றப்பட்டு கோகுலாஷ்டமி என அவனது பிறந்தநாளை வைணவர் போற்றி மகிழ்கின்றனர். நவமி என்ற ஒன்பதாம் நாளும் இராமன் பிறப்புடன் இணைத்து ராமநவமி*

கொண்டாடுகின்றனர். இந்து திருமணங்களில் வளர்பிறை பஞ்சமி, தசமித் திதிகளுக்குத் தனிச்சிறப்பு அளிக்கின்றனர். அந்த நாட்களைச் சுபகாரியங்களுக்கு ஏற்றத்தாகக் கருதுவர். விரதம் மேற்கொள்வோர், ஏகாதிசி நாளைத் தேர்ந்தெடுப்பர். வளர்பிறைத் திதிகள் சிறப்பானதாக ஏற்பவர்களே அதிகம். தேய்பிறையிலும் வளர்பிறையிலும் அட்டமி நவமி ஆகியத் தினங்களில் தொட்டது விளங்காது எனக் கூறி ஒதுக்கிவிடுவர். பிறந்தநாள் கொண்டாடுவோர் நட்சத்திரம் கூறி அர்ச்சனை செய்வர். திதியை நீத்தார் நினைவு நாள் காரியங்களை நிகழ்த்தப் பயன்படுத்துவர்.

வளர்பிறை திதியை வடமொழியில் குறிப்பிட சுக்லபட்சதிதி என்னும் தேய்பிறை திதிகளை கிருஷ்ணபட்ச திதி என்றும் கூறுகூர். பிறை நிலவின் வளர்ச்சி ஒளியை வெண்ணிற வெளிச்சத்தை நோக்கியதால் சுக்கிரன் என்னும் வெண்மீன் பெயரால் அமைத்தனர். கிருஷ்ண என்றச் சொல் கறுப்பு, இருட்டு என வழங்கலால் தேய்பிறை பக்கம் 15 நாள் திதி, கிருஷ்ணபட்சதிதி என்று அழைத்தனர். பிறையின் மெலிவாலும் வலுவாலும் மக்களின் வாழ்வில் மாற்றங்கள் ஏற்படும் என்ற நம்பிக்கை அடிப்படையில் பழக்கவழக்கங்களை மேற்கொள்வதால் வண்ணில் உள்ள கோள்களுக்கும் மண்ணில் வரும் மக்களுக்கும் தொடர்பு இருப்பதை அறியமுடிகிறது.

பூமி நிழலில் சந்திரன் கடந்து செல்லும்போது நிலவு ஒளி குன்றும். இதுவே சந்திரன் கிரணம் ஆகும். புறநிழல் பகுதி மட்டும் மறையும்போது சந்திரன் பெரிய அளவில் ஒளியை இழக்காது பூமியின் முழுநிழல் பகுதியும் மறையும்போது முழு சந்திரகிரணம் நிகழும். சந்திரன் மறைந்து வெளிப்படுவதைப் பாம்பு (இராகு) சந்திரனை விழுங்கி வெளியிட்டதாகக் கருதி மக்கள் இராகு என்னும் பாம்பு சந்திரனை விழுங்கி வெளியிட்டதாகக் கதை கூறுகின்றனர்.

**முடிவுகள்**

சகுனம், நிமித்தம், விரிச்சி ஆகிய சொற்கள் நிகழப்போவதை முன்னரே உணர்த்தும் பொருளில் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன.

சோதிடத்தின் ஆரம்பநிலை சகுனம் பார்த்தல் ஆகும்.

எதிர்கால நிகழ்வுகளை நன்மை தீமைகளை அறிந்துகொள்ள விரும்பும் மக்களால் சோதிடக்கலை வளர்ந்து வந்துள்ளது.

நவகோள்களின் இயக்கங்ள் சோதிடக் காலக் கணிதங்களுக்குத் துணை நின்றுள்ளன.

பஞ்சாங்கம் காலக் கணிதக் குறிப்பேடாய் விளங்கிவருகிறது. வாரம், நட்சத்திரம், திதி, கரணம், யோகம் ஆகிய ஐந்து உறுப்புகளைக் கொண்டதே பஞ்சாங்கம்.

அட்ச, தீர்க்க ரேகைகளுக்கு ஏற்பப் பஞ்சாங்கங்கள் வேறு வேறு இடங்களில் கணிக்கப்படுவதால் பல பஞ்சாங்கங்கள் இருப்பினும் வாக்கிய, திருக்கணிதப் பஞ்சாங்கங்களே பெருவழக்காய் உள்ளன.

அறுபது ஆண்டுக்காலம் ஒரு கல்ப காலம். ஒரு வியாழ வட்டம் என்றும் கூறப்பெறும் சுழற்சி முறையில் பிரபவ முதல் அட்சய வரை அறுபது பெயர்களும் மாறிமாறி வரும்.

சோதிட முறைப்படி ஆண்டின் தொடக்கம் சித்திரை மாதமேயாகும். பன்னிரு மாதங்களைக் கொண்டது ஓராண்டு. எனினும் எண்வழி அழைக்க கொல்ல வரு-ம் 1191 ஆம் ஆண்டினைப் பஞ்சாங்கத்தில் குறித்துள்ளனர். இதற்கு இணையாக ஆங்கில ஆண்டு 2015 என்றும் குறிப்பிடப்பட்டுள்ளதால் ஆங்கில ஆண்டின் வழக்கே பின்பற்றப்பட்டு வருகிறது.

வாரம் என்பது கிழமை சூரியன் முதலான ஏழு கோள்களின் பெயர்களே கிழமைகளுக்கு அமைந்தன. நிழல் கிரகங்களின் பெயர்கள் வழங்கப்படவில்லை.

நட்சத்திரங்கள் இருபத்தேழும் மாதங்களின் முப்பது நாள்களிலும் தொடர்ச்சியாக இருந்து வருகிறது. 27வது நாள் அசுபதி முதல் ரேவதி வரை முடிந்தவுடன் மீண்டும் அசுபதி தொடங்கும்.

60 நாழிகைகள் கொண்ட ஒரு நட்சத்திரத்தின் முதற்கூறான 30 நாழிகை ஒரு கரணம் பிற்கூறு 30 நாழிகை மற்றொரு கரணம் எனக் காலம் பகுப்பு செய்யப்

பெற்றுள்ளது. பதினொரு கரணங்களை ஓர் ஒழுக்கமுறையில் இருபத்தேழு நட்சத்திரத்திற்கும் பகுத்து வழங்கப்படுகிறது. யோகம் என்பது காலத்தின் நுட்ப பிரிவே கரணமும் யோகமும் சாதகக் கணிப்பில் இடம்பெறுவன.

மக்கள் வழக்கில் நட்சத்திரம் பிறப்புக்கும் திதி நீத்தார் நினைவுக்கும் பதிவுச் செய்யப்படுகின்றன.

ஊழி, ஆண்டு, மாதம், நட்சத்திரம் ஆகியன தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

பரிபாடலில் சாதகக் கணிப்பு தரப்பட்டு வையை வெள்ளம் வந்த காலத்தைப் புலப்படுத்தப்பெற்றுள்ளது.

சாதகம் என்ற ஓர் இலக்கிய வகை நூல் இருந்ததாக இலக்கண நூல்கள் கூறுகின்றன. ஒரு நாளின் சிறுபொழுதாக அதிகாலை, காலை, முற்பகல், பிற்பகல், மாலை, இரவு, நள்ளிரவு என்றே சோதிடத்தில் குறிக்கப்பெறுகின்றன.

நாழிகைக் கணக்கர் என்ற காலக்கணிதர்கள் சங்க காலத்தில் இருந்துள்ளனர்.

அரச சபையில் அங்கம் வகிக்கும் கணிதர் மன்னன் போருக்குச் செல்லும் நல்ல நாளைக் கூறியுள்ளார். தீய விண்மீன்களான எரிநட்சத்திரம் எரிந்து வீழ்ந்தாலோ வால்மீன் தோன்றினாலோ மன்னனுக்கு மரணம் ஏற்படும் என்றுக் கணித்துள்ளனர்.

புறநானூற்றில் கூடலூர்க்கிழார் சேரன் இறக்கும் செய்தியை முன்னரே கூறியதைக் குறிப்பிட்டுள்ளார்.

பிறைதொழில் தைநீராடல் மார்கழி நீராட்டு ஆகியவற்றிற்குச் சந்திரனை முன்னிறுத்தியுள்ளனர். சந்திரமானமே பெரிதும் பின்பற்றப்பட்டுள்ளது.

மக்களின் பண்பாட்டுச் செயல்கள் நாள், நட்சத்திரம், திதிகளுடன் இணைந்தே காணப்படுகின்றன. கரணம், யோகம் போல்வன பிறப்பேடுகளில் (பிறப்பு சாதகங்களில்) காணப்படுகின்றன.

# பொருளடக்கம்

*4.0.* முன்னுரை

*4.1.* ஐம்பூதங்களின் பெயர்கள்

*4.2.* உயிர் பகுப்பில் ஐம்பூதங்கள்

*4.3.* ஐம்பூதங்களின் இயல்பு

*4.4.* ஐம்பூதக் கோயில்கள்

*4.5.* ஐம்பூதச் சுழற்சி

*4.6.* எட்டுத்தொகையில் ஐம்பூதங்கள்

*4.6.1.* புறநானூற்றில் ஐம்பூதங்கள்

*4.6.2.* பரிபாடலில் ஐம்பூதங்கள்

*4.7.* பத்துப்பாட்டில் ஐம்பூதங்கள்

*4.7.1.* மதுரைக்காஞ்சியில் ஐம்பூதங்கள்

*4.8.* பக்தி இலக்கியத்தில் ஐம்பூதங்கள்

*4.9.* தகவல் பரிமாற்றத்தில் ஐம்பூதங்கள்

முடிவுகள்

## *4.0. முன்னுரை*

*அணு முதல் அண்டம் வரையிலான அறிவியல் செய்திகளைப் பழந்தமிழர் அறிந்திருந்தனர். விண்ணும் மண்ணும் நீரும் நெருப்பும் காற்றும் ஆகிய ஐம்பூதங்களின் சேர்க்கையே உலகம் என்பதை உணர்ந்திருந்தனர். பூதவியல் எனும் இயற்பியல், வேளாண்மை அறிவியல், வேதியல் அறிவியல் போன்றவற்றையும் சங்ககாலத் தமிழர் அறிந்திருந்ததைச் சங்ககாலத் தமிழ்ப் புலவர்கள் வழி காணலாம். இயற்கையான இறையாகக் கருதப்பட்ட ஐம்பூதங்கள் மக்கள் வாழ்வோடு கொண்டிருந்த தொர்பை இவ்வியல் ஆராய்கிறது.*

## *4.1. ஐம்பூதங்களின் பெயர்கள்*

*ஐம்பூதங்களே உலகத் தோற்றத்திற்குக் காரணிகள் ஆகும். பூதம் எனும் சொல் இயற்பியலைக் குறித்து நிற்கின்றது.*

***"வளி எனவரூஉம் பூதக்கிளவியும்***
***அவ்வியல் நிலையல் செவ்விதென்ப"***[1]

***(தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், நூற்பா 242)***

*என்பது தொல்காப்பியம். இதற்கு ஐம்பூதங்களில் ஒன்றான காற்று என்ற பொருளுடைய வளி என்ற சொல்லும் அத்து, இன் சாரியைகளை ஏற்கும். வளியத்துக் கொண்டான், வளியிற் கொண்டான் என்று தெளிவுப்படுத்தியுள்ளார்.*

*பூதம் என்ற சொல் தொல்காப்பியத்தில் இடம்பெற்றாலும் ஐம்பூதங்கள் என்றத் தொகைச் சொல் திருக்குறளில் முதலில் இடம்பெற்றுள்ளது. ஒரு நீர்மைத்தான சொல்லாக வராது பூதங்கள் ஐந்தும் என இரு சொற்களாய் திருக்குறள் அறத்துப்பால் துறவியலில்,*

***"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்***
***ஐந்தும் அகத்தே நகும்"***[2]

***(திருக்குறள், எண் 271)***

*என வந்துள்ளது. ஐந்து எவை எவை என்பதைப் பரிபாடலில்,*

***"தீவளி விசும்பு நிலன் நீர் ஐந்தும்"***[3]

***(பரிபாடல், பாடல் எண் 3, அடி 4)***

*என விரித்துக் கூறுகிறது.*

இன்று அறிவியலில் வளி மண்டலம் என்றும், காற்றழுத்த மண்டலம் எனறும் எழுத்திலும் சொல்லிலும் வழங்கி வருவதைக் காணமுடிகின்றது. கால மாற்றத்தை ஏற்படுத்துவது காற்று என்பதால் கால் என்றும் வளி என்றும் அழைக்கப்பெறுகிறது. வடமொழியில் வாயு என்பர். உயிரிகளுக்கு ஊட்டம் தருவது வளி. உயிரின் இயக்கமே காற்றுப் பூதத்திடம் தான் உள்ளது.

உயிர் தோன்றும் முன் உலகத்தோற்றத்திற்கு நிலப்பூதமே முதற்காரணி என்பதை நிலை நிறுத்த தொல்காப்பியர்,

**“நிலம் தீ நீர் வளி விசும்போடு ஐந்தும்**
**கலந்த மயக்கம் உலகம் ஆதலின்**
**இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்**
**திரிவுஇல் சொல்லொடு தழாஅல் வேண்டு”** [4]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், நூற்பா 90)***

என நிரல்படுத்திக் கூறியுள்ளார். விண் மண்ணாவதும் மண்ணிலிருந்து நீர் கிடைப்பதும் நெருப்பு எனும் வெப்பம் மிகுதியால் கடல்நீர் ஆவியாகி மழை பொழிவதுமாக ஒன்றுக்கொன்று கலந்த நிலையில் தான் ஐம்பூதங்களும் பின்னிப் பிணைந்து உள்ளன. அதனால் தொல்காப்பியர் கலந்த என்றச் சொல்லை அமைத்து அறிவியல் உண்மையைப் புலப்படுத்தியுள்ளார். காற்றுக்கும் நீருக்கும் தொடர்பு இருப்பதால் காற்று மழையைக் கொண்டுபோய்விட்டது என்று மக்கள் நடைமுறையில் கூறுவர். வானியல் ஆய்வு மைய அறிவிப்புகளும் காற்றழுத்தம் வழிதான் மழை அளவை உறுதிசெய்கின்றனர். உலகத்தோற்றத்தில் ஐம்பூதங்களும் கலந்து மயங்கிக் கிடக்கின்றன. திணை மயக்கம் போன்றுப் பூதங்கள் ஐந்தும் ஒன்றுக் கொன்றுத் தொடர்புடையவையே ஆகும்.

மண் எனும் பூமி பூதம் போன்று விண் எனும் ஆகாயப் பூதம் விசும்பு என்றே சங்க இலக்கியங்களில் பரவலாகக் கூறப்பட்டுள்ளது.

**“விண் என வரூஉம் காயப்பெயர் வயின்”** [5]

***(தொல்காப்பியம், எழுத்ததிகாரம், புள்ளிமயங்கியல், நூற்பா 306)***

எனத் தொல்காப்பியம் விண்ணை ஆகாயம் எனக் குறிப்பிடுகின்றது. இன்று ஆகாயம் என்று அழைக்கப்பெறும் விண்பூதம் அன்று, விசும்பு என்றே அழைக்கப்பெற்றது.

**“நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய”** [6]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 453-454)***

எனப் பத்துப்பாட்டுள் ஒன்றான மதுரைக்காஞ்சியில் குறிப்பு வந்துள்ளது.

***"நீர்நிலம் தீவளி விசும்போடு ஐந்தும்***
***அளந்து கடைஅறியினும் அளப்பருங்குரையே"*** [7]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 24, அடிகள் 15-16)***

*என எட்டுத்தொகை நூலான பதிற்றுப்பத்துக் கூறுகின்றது. திருக்குறளில் வான் நின்று உலகம், விண்நின்று பொய்ப்பின் என வான், விண் என்பவற்றுடன் விசும்பு என்பதையும் தொடர்வதைக் காணமுடிகின்றது.*

***"விசும்பின் துளிவீழின் அல்லால் மற்றாங்கே***
***பசும்புல் தலை காண்பு அரிது"*** [8]

***(திருக்குறள், எண் 16)***

*பக்தி இலக்கியத்தில் வான் என்ற சொல் வந்திருப்பினும் விசும்பு எனும் சொல்லையும் விட்டுவிடவில்லை. ஐம்பூதங்களும் இறைவனிலிருந்து தோன்றியவை என்று கூறும் பெரிய திருமொழியில்,*

***"கார் மண்ணு நீள்விசும்பும் கடலும் சுடரும் நிலனும்***
***மலையும் - நள் உந்தித்***
***தார் மன்னு தாமரைக் கண்ணன்"*** [9]

***(பெரிய திருமொழி, பாடல் எண் 1129)***

*என வந்துள்ளது. மக்களிடையே வழங்கும் ஆகாசம் என்றச் சொல்லும் இத்திரு மொழியில் காணப்படுகிறது.*

***"மண்ஆய் நீர் எரி கால் மஞ்சுஉலாவும் ஆகாசமும் ஆம்"*** [10]

***(பெரிய திருமொழி, பாடல் எண் 1033)***

*சங்க காலத்தில் மட்டுமே விசும்பு என்னும் பெயர் பெருவழக்காய் இருந்தது என்பதும் பின்னர் வந்த இலக்கியங்களில் விசும்பு அரிதாகவே கையாளப்பட்டிருந்ததையும் பார்க்க முடிகிறது.*

***"காண்கின்ற நிலமெல்லாம் யானே என்றும்***
***காண்கின்ற விசும்பு எல்லாம் யானே என்றும்"*** [11]

***(திருவாய்மொழி, பாடல் எண் 3174)***

*நெருப்பு, காற்று, நீரெல்லாம் இறைவனே எனத் திருமாலைச் சுட்டும் பாடலில் ஆகாயம் விசும்பு என்னும் சொல்லால் குறிப்பிடப்படுகின்றது. இன்று வானம் என்பதே பெருவழக்காக உள்ளது. ஐம்பூதப் பெயர்களில் நீரும் நிலமும் தீயும் முன்னர் உள்ளபடியே அழைக்கப்பெறுகின்றன. ஆகாயப் பூதத்தை அன்று விசும்பு என்றும் காற்றை வளி என்றும் அன்று பரவலாகவும் இன்று அரிதாகவும் வழங்கப் படுவதைக் காணமுடிகின்றது. வளி, காற்று என்றப் பெயரிலும் விசும்பு வானம் என்றப் பெயரிலும் வந்துள்ளன.*

### *4.2. உயிர் பகுப்பில் ஐம்பூதங்கள்*

*மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை எனும் ஐம்புலன்களும் உயிர்ப்பகுப்போடு இணைந்த நிலையைத் தொல்காப்பியர், உயிர்ப்பகுப்பைக் கூறியதில் ஐம்பூதங்கள் உள்ளுக்குள் நிலை பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.*

***"சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமென்று ஐந்தின்***
***வகை தெரிவான் கட்டே உலகு"[12]***

***(திருக்குறள், எண் 27)***

*ஐந்தறிவு உயிர்கள் யாவும் ஐம்புலன்களையும் அனுபவிக்கும் ஆற்றல் பெற்றவை. குறிப்பாக யானைக்கு ஐம்புலன்கள் வழி ஐம்பூத அறிவு உண்டு. ஐந்தறிவுகள் வாயிலாக ஐம்புலனால் பெறுபவை அறியப்படுகின்றன. ஐம்புலன்களும் ஐம்பொறி களுக்கு உரியவை. ஐம்பொறிகளும் ஐம்பூதங்களுடன் தனித்தனியே தொடர்பு உடையவை. அவ்வகையில் தொல்காப்பியரின் உயிர்பகுப்பை அணுகினால் உள்ளுறுத்துக் கூறப்பட்டிருக்கும் கருத்துருவைப் பார்க்க முடிகிறது.*

***"ஒன்று அறிவதுவே உற்று அறிவதுவே***
***இரண்டு அறிவதுவே அதனொடு நாவே***
***மூன்று அறிவதுவே அவற்றொடு மூக்கே***
***நான்கு அறிவதுவே அவற்றொடு கண்ணே***
***ஐந்து அறிவதுவே அவற்றொடு செவியே***
***ஆறு அறிவதுவே அவற்றொடு மனனே***
***நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே" [13]***

***(தொல்காப்பியம், பொருளதிகாரம்,மரபியல், நூற்பா 27)***

*உடம்பால் மட்டும் அறிவன ஓர் அறிவு உயிர்கள். ஐம்பொறிகளில் மெய்யைக் குறித்தது. உற்று அறிய மண் இடம் தருவதால் மண் பூதத்தை இவ்வடி உணர்த்து கின்றது. தொட்டறியும் மண்ணில் இருந்து தோன்றும் ஓர் அறிவுடைய உயிர் ஓர் அறிவு உயிராகும். உடம்புடன் நாக்காகிய சுவை அறிகருவியும் தோன்றும் உயிர்கட்கு ஈரறிவு மட்டுமன்று, நாவில் ஊறும் நீரால் சுவையறியும் அறிவைப் பெறவதால், நீர் பூதத்தை நினைவுக்குக் கொண்டு வருகிறது. இரண்டு அறிவு உயிர். உடம்பு நாக்குடன் மூக்கு வாசனை அறியும் நிலையில் தோன்றும் உயிர்க்கு மூன்றறிவுக் கூறுகள் அமைகின்றன. வாசனையைக் காற்று மூலம் நுகர்வதால் காற்றுப் பூதம் அமைந்து விடுகிறது. உடம்பு, நாக்கு, மூக்குடன் கண்பெறும் உயிர்க்கு நான்கு அறிவு. கண் இருப்பின் ஒளிவீசும் ஒளி பெறுவதால் பொருள்கள் புலப்படும். ஒளி நெருப்பின் தன்மைக்குச் சமம் என்பதால் நெருப்புப் பூதம் உள்ளுக்குள் உணர்த்தப்படுகிறது.*

உடம்பு, நாக்கு, மூக்கு, கண்ணுடன் செவி சேர்ந்தால் ஐந்தறிவு பெறும் உயிர்கள் ஆகின்றன. செவியில் ஓசைபட காற்றுத் தேவை. அக்காற்று ஆகாயத்தை அளாவுகிறது. ஐந்தறிவு உயிர்கள் ஐம்பூதங்களின் சேர்க்கைக்கு ஏற்பவும் படைக்கப் பட்டுள்ளவை. தொல்காப்பியரின் வானியல் அறிவை வெளிப்படுத்துவதாகும். ஐந்தறிவுடைய யானை, ஐம்பூதச் சேர்க்கை உள்ளதாக இருப்பதால் ஐம்பூதச் சேர்க்கையே உலகம் என்பதால் விநாயகராக, மனஅறிவு பெற்ற மனிதன் வழிபட்டு வருகின்றான்.

### *4.3. ஐம்பூதங்களின் இயல்பு*

தொல்காப்பியர் பூதப்பெயர்களின் இயல்பைக் கூறும்போது,

***"பால் பிரிந்திசையா உயர்திணை மேன"*** [14]

***(தொல்காப்பியம்,செய்யுளியல், நூற்பா 192)***

என்றே குறித்துள்ளார். உற்றறியும் தன்மையை உடையது மண்ணென்னும் பூதமாகும். காற்றுடன் வரும் விண் உயர்ச்சியை உடையது. நீர் அழிக்கும் ஆற்றல் உடையது. அதுபோன்றே தீயும் ஆற்றலில் காற்றைப் போலத் திகழ்கின்றது.

***"மண் திணிந்த நிலனும்***
***நிலன் ஏந்திய விசும்பும்***
***விசும்பு தை வரு வளியும்***
***வளித் தலைஇய தீயும்***
***தீ முரணிய நீரும் என்றாங்கு***
***ஐம்பெரும் பூதத்து இயற்கை போல"*** [15]

***(புறநானூறு, பாடல் எண் 2, அடிகள் 1-6)***

எனவரும் உவமையில் இச்செய்தி இடம்பெறுகிறது. மண்ணால் ஆன பூமியில், பூமிக்கு மேலே பரந்த வானமும் மாறுபட்ட நீரும் ஆகிய ஐம்பெரும் பூதத்தைப் போல சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் பகைவர் பிழை செய்தால் அதைப் பொறுத்துக்கொள்வதில் பூமியாக இருக்கின்றான். பகைவர் செய்யும் பிழை கூடுதலானால் அவரை எதிர்கொள்ளும் ஆற்றலில் வல்லவனாக இருக்கின்றான். பகைவரை அழிக்கும் மனவலியும் மனவலிமை மிகுதியால் பகைவரை அழித்தலில் காற்றாகத் தீயாக இருக்கின்றான். பகைவர் வணங்கினால் அவர்களுக்கு அருள் காட்டுபவன் என்று மன்னன் பெருமையை முரஞ்சியூர் முடிநாகராயர் ஐம்பூதங்களை உவமையாக்கி விளக்கியுள்ளார்.

*மார்கழி மாதம் மதி நிறைந்த நன்னாளில் திருவாதிரை நாள்மீன் அன்று ஆகமங்களை உணர்ந்து பூசகர் தெய்வத்திற்குத் திருவிழாவைத் தொடங்க, மகளிர் விடியற்காலத்தில் நீராடி நோன்பு நோற்பர். நீராடல், தைந்நீராடல் எனச் சங்க கால நூலான பரிபாடலில் விரிவாகப் பேசப்பெறினும், சிவனுக்குரிய மார்கழி நீராடலே திருவெம்பாவையில் குறிக்கப்பெறுகின்றது. ஐம்பூதங்களில் ஒன்றான நீர் பண்பாட்டுடன் இணைக்கப்பட்டிருப்பது போலத் தீ வழிபாடும் அன்றும் இன்றும் நடைபெற்று வருகிறது. அறிவியலும் ஆன்மீகமும் ஐம்பூதங்களுடன் இயைந்தே செல்கின்றன. திருப்பாவையில் ஆண்டாளும், மழை பெய்து நாடு செழிக்கவும் கண்ணனைக் கணவனாகப் பெறவும் மார்கழியில் நீராடும் நோன்புக் குறித்துப் பாடியுள்ளார்.*

*இந்து சமயத்தாரிடையே திருமணச் சடங்குகளில் நீர்ப்பதமும் நெருப்புப் பதமும் இடம்பெறுகிறது. மணமேடையில் தீ வளர்ப்பதும் மணமகளின் பெற்றோர் மணமகனின் பெற்றோர்க்குப் பெண்ணைத் தாரை வார்த்துக் கொடுக்கும் சடங்கில் நீர்ப்பூதம் இடம்பெறும். நீர்வார்த்துக் கொடுக்கும் வழக்கம் சங்ககாலத்தில் கொடை கொடுப்போர், கொடை பெறுவோர்க்குமிடையே இருந்தது, பல யாகங்கள் செய்து, செய்தோரிடையே தீ வழிபாடும் இருந்தது. அரசன் அந்தணர்க்குத் தானம் அளிக்கும் போது நீர் வார்த்துத் தந்தச் செய்திக் குறுந்தொகையில் உண்டு. அரசர்களின் பெயர்களுக்கு முன்வரும் அடைமொழிகளில் பல்யாகசாலை என்று வருதலில் வேள்வி இயற்றியச் செய்தி அமைந்துள்ளது. நீர்ப்பூதம் தெய்வ வழிபாட்டில் தொடர்ந்து இருந்து வருகின்றது. நீரின்றி அமையாது இவ்வுலகு எனும் கூற்றிற்கிணங்க நீர்ப்பூதம் வாழ்வில் இன்றியமையாத இடத்தில் உள்ளது.*

### *4. 4. ஐம்பூதக் கோயில்கள்*

*ஐந்து பூதங்களின் பெயர்களால் ஆன ஐம்பூதக் கோயில்களில் நான்கினைக் கொண்டது தமிழ்நாடு. ஆந்திராவில் மற்றொன்றும் உளது. நிலத்திற்கு பிருதிவிக்கு அதிபதியான தியாகேசர் எழுந்தருளியுள்ளது திருவாரூர். நீருக்கு அதிபதி சம்புகேசுவரக் கோயில் திருச்சி அருகே உள்ள திருவானைக்கா என்றத் தலத்தில் உள்ளது. நெருப்புக்கு (தேயு) அதிபதி அருணாச்சலேசுவரர் கோயில் திருவண்ணா மலையும் சிறப்பித்துக் கூறப்படுகிறது.*

*எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனாம் சிவபெருமான் திருவாரூர் நில வடிவிலும் திருவானைக்காவில் நீர் வடிவிலும், திருவண்ணாமலையில் தீ வடிவிலும் திருக்காளத்தியில் காற்று வடிவிலும் தில்லையில் ஆகாய வடிவிலும் காட்சித் தருகிறார்.*

உருவ வழிபாட்டின் மூலம் மனிதன் கடவுளோடு மனிதனால் தொடர்பு கொள்கிறான். சிவனின் திருவுரு இலிங்க வடிவில் கோயில்களில் உள்ளது. சிதம்பரம் நடராசர் கோயிலில் சிதம்பர ரகசியமாக அருவத் திருமேனியில் நடராசர் அருகே மேற்குப் பக்கத்தில் இருக்கும் இடமே ஆகாய வடிவாகும் உருவாமாக படிக லிங்கமும் உள்ளது. உருவம், அருவம், அருவுருவம் என மூன்று நிலைகளில் சிதம்பரத்தில் சிவபெருமான் காட்சித் தருகிறார். திருமுறை பன்னிரண்டில் ஒன்று திருத்தொண்டர் புராணம். சேக்கிழார் இயற்றிய இப்புராணத்தின் முதலிரண்டுப் பாடல்கள் தில்லைச் சிற்றம்பலத்தைப் போற்றிப் பாடியவை. இறைவன் ஆனந்தத் திருகளத்து ஆடிய உருவத் திருமேனிக் கையிலைக்குச் சிறப்பு என்பதற்கு ஏற்ப ஐம்பூதங்களில் ஒன்றான ஆகாய வழிபாட்டினைக் கொண்ட பெருங்கோயில் அமைந்த ஊர் சிதம்பரம். நிலப்பரப்புக்கு ஏற்ப இருவேறு கோயில் நிலவடிவிற்கு கூறுவர். காஞ்சிபுரம் ஏகாம்பரஈஸ்வரர் கோயிலையும் திருவாரூர் தியாகராச பெருமான் கோயிலையும் நிலத்துக்குக் குறிப்பிடுவர்.

ஆந்திராவில் உள்ள திருக்காளஹஸ்தி இன்று இராகு கேது பரிகார தலமாகப் போற்றப்பட்டு வருகிறது. ஜாதகத்தில் இராகுதோ-ம் உடையவர்கள் இங்குள்ள சிவலிங்கத்திற்கு அருகே உள்ள இராகு கிரகத்திற்கு வழிபாடு வேண்டும் எனக் கூட்டம் கூட்டமாக மக்கள் போய் வருகின்றனர். நிழல் கிரகமான இராகு கேதுகளுக்குத் தனிக்கோயில்கள் தமிழ்நாட்டில் இருப்பினும் காளஹஸ்திதான் பரிகாரத் தலமாக விளங்கிவருகிறது. ஐம்பூதங்களில் காற்று வடிவில் லிங்க வடிவில் நடத்தப்பெறுகிறது.

பஞ்ச பூத வழிபாடுகளுள் ஒன்றான தீயின் கூறுபாடாகிய ஒளியைப் போற்றிப் புகழ்ந்து உலகம் எங்கும் நல்லொளி பரவச் செய்தவர் வள்ளலார் ஆவார்.

### 4.5. ஐம்பூதச் சுழற்சி

உலகம் ஐம்பூதங்களினால் ஆக்கப்பட்டு, இயக்கப்பட்டு வருகிறது. வெட்ட வெளியும் அதனுள் அடங்கியிருக்கும் அண்டங்கள் யாவும் சேர்ந்ததுதான் அகிலம் ஆகும். வானில் எண்ணற்ற நட்சத்திரங்கள், சூரிய மண்டலம், சந்திரமண்டலம் எனப்பல மண்டிலங்கள், வால்நட்சத்திரங்கள், எரிநட்சத்திரம் எனப் பல உள்ளன. மாணிக்கவாசகர்,

**"அண்டப் பகுதியில் அண்டைப் பிறக்கம்**
**அளப்பருந்தன்மைக்கு வளப்பெருங்காட்சி**

***ஒன்றனுக்கொன்று கன்றெழில் பகரின்***

***நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன”*** [17]

***(திருவாசகம், திருக்கண் பகுதி, பாடல் எண் 3, அடிகள் 1-4)***

*என்றுக் குறிப்பிடுகின்றார்.*

*சிவனிடமிருந்துச் சடசக்தி வந்தது. சடசக்தி ஐம்பூதங்களலாகியது. அதனின்று பல கண்டங்கள் தோன்றின. அவையே சிவனின் உடல். அண்டம் என்பது உலகம். அது உருண்டை அல்லது முட்டை வடிவமானது. சிவன் ஐம்பூதங்களால் ஆனவன் என்பது போல் நாராயணன் என்ற சொல்லிலும் ஐம்பூதங்கள் அடக்கமே. நாரா + அயனன். தன்னிடத்திலிருந்து தோன்றும் பஞ்ச பூதங்களுக்கும் அவற்றின் காரணமாகிய சகத்துக்கும் அயனன் (தங்குமிடமாக இருப்பவன்) இறைவனுடையப் பெயர்களையும் பூதங்கள் ஐந்தும் உள்ளடங்குமாறு அமைத்துள்ளனர் மெய்ஞானிகள்.*

*ஐம்பூதங்களின் பெரியது, பரந்துவிரிந்தது ஆகாயம். அதனுள் தான் ஏனைய பூதங்கள் அடங்கியுள்ளன.*

***“சாட்டி நிற்கும் அண்டமெல்லாம்***

***சாட்டையிலாப் பம்பரம்போல்***

***ஆட்டுவிக்கும் குற்றாலத்து அண்ணலார்”*** [18]

***(திருக்குற்றாலக் குறவஞ்சி, பாடல் எண் 91, அடிகள் 1-4)***

*என்றுத் திரிகூடராசப்பக் கவிராயர் ஆண்டவனின் விளையாட்டைக் காட்சிப் படுத்தியுள்ளார். விண்வெளியில் வெவ்வேறு வேகத்தில் கோள்கள் சுழல அண்ணலாரே காரணம் என்கிறார் கவிராயர். கோள்களின் சுழற்சி நிகழிடம் வான பூதத்தில் தான். காற்றின் சுழற்சியே நீரைக் கொண்டு தருகிறது. நெருப்பே நீரை ஆவியாக்கும் வேதியல் நிகழ்வைச் செய்கிறது. ஐம்பூதங்கள் கலந்த மயக்கத்தால் மானிட வாழ்வில் சிறப்பிடம் பெறுகின்றன ஐம்பூதங்கள்.*

***“தீ எனும் பூதம் ஓரெழுத்து ஒருமொழியாய் சங்கப்பாடல்கள் இடம்பெற்றுப் பண்பாட்டை உணர்த்தப் புலவர்களுக்குப் பயன்பட்டுள்ளது. உலகத்தில் தமிழில் தனிச்சொல்லாய் ஒற்றைச் சொல் வந்தது தமிழில் தோன்றியத் தீ என்பதாகும். தமிழில் தோன்றிய தீ என்னும் ஒற்றைச் சொல்லே உலகின் முதல் தனிச்சொல்லாகும் எனவும் கருத இடமுண்டு”*** [19]

***(நெல்லை. சு. முத்து, உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாட்டு சிறப்பு மலர், 2010, கோவை, பக்கம் 573)***

*என்று நெல்லை சு. முத்து கூறுகிறார்.*

*ஆதிதிராவிட மரபு தீ வழிபாடாகும். இம்மரபை மலையுச்சி நெருப்பு பிழம்பாகத் தோன்றும் கார்த்திகை விண்மீன் குறித்தச் சொல் என்றுக் கூறப்பட்டு இருப்பதற்கேற்ப ஐம்பூதங்களின் ஊர்கள் வரிசையில் திருவண்ணாமலை அக்னி தலம் என்றுப் போற்றப்படுகிறது. கார்த்திகைத் திங்களில் தீபம் ஏற்றப்படுகிறது. இந்தியாவின் ஏவுகணை மனிதர் என்றுப் போற்றப்படுபவர் இராமேசுவரத்தில் தோன்றிய ஏ. பி. ஜே. அப்துல் கலாம் ஆவார். அக்னி ஏவுகணையை விண்ணில் செலுத்தி வெற்றிக் கண்டவர். விண்வெளி ஆய்விற்கும் ஐம்பூதங்களால் ஒன்றுப் பயன்பட்டுள்ளது என்பதுப் புலனாகிறது.*

*நிலப்பரப்பால் 80 விழுக்காடு நீரினால் சூழப்பட்டுள்ளது. கடல் பரப்பு அதிகம். ஏரி, குளம் ஆறு, நிலத்தடி நீர் 2.7. சதவீதம் எனில், கடல்நீர் 97.3 சதவீதம். மனிதன் உயிர் வாழும்முறை இயற்கைவளங்களைச் சார்ந்துள்ளது. இயற்கைச் சூழலை சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாக்க நீர், நிலம், காற்று பேணிக் காக்கப்பட வேண்டும்.*

*சுற்றுப்புறச்சூழல் வளிமண்டலம், நிலம், நீர் மற்றும் அண்டவெளி ஆகியவற்றால் உருவாக்கப்பட்டுள்ளது. சங்ககால மக்கள் இயற்கை வளங்களைப் போற்றி இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்ந்தனர். மலை, காடு, வயல், கடல் பகுதிகளில் வாழ்ந்தவர்கள் குறிஞ்சி, முல்லை, மருத நிலங்களில் உள்ள மரஞ்செடி கொடிகளைப் பாதுகாத்தனர். மழை பெய்யாது வறண்ட பாலையில் புவி வெப்பமாகி இயற்கை வளம் குன்றி காணப்பட்டது.*

*மலைசார்ந்த இடம் குறிஞ்சி அங்கு அருவி நீர் உண்டு. மலை வனக் காடுகளால் மாரி குன்றாது. வளம் தர மக்கள் நலமுடன் வாழ்ந்தனர். இன்று காடு கொன்று நாடாக்கியதாலும் மக்கள் பெருக்கத்தாலும் காற்று மாசுபட்டு வாழ்வுச் சிக்கலாக உள்ளது. வளி மண்டலத்தில் திடக்கழிவுகளின் அளவு உயரக் காற்று மாசடைகிறது. வளிமண்டலம் தூயதாக இருந்தால்தான் மழை பொழிய வாய்ப்பு ஏற்படும். மனிதன் சுவாசிப்பதற்கும் காற்று எனும் பூதம் அவசியம்.*

> **“தூயக்காற்றாக இருப்பின் நீண்ட நாள் வாழவழி உண்டு. அறிவியல் கண்டுபிடிப்புகளின் வரவால் காற்று மாசுபட்டுக் கொண்டு தானிருக்கிறது. உலகளாவியக் காலநிலை என்பது சூரியனிலிருந்து பூமி பெறும் கதிர் வீச்சின் அளவு மற்றும் பூமியிலிருந்து வெளியேறும் கதிர்வீச்சின் அளவுகளுக்கு இடையேயான ஆற்றல் சமநிலை என்பது ஆற்றலின் வரவு. வளிமண்டலத்தின் ஈரப்பதம், நிறை, இயங்குவிசை ஆகியவற்றின் மூலம் சீரமைக்கப்படுகிறது.”** [20]
>
> ***(நா. ராம்ஜி, காலநிலை மாற்றம் கற்பனை அல்ல, பக்கம் 6)***

மண் என்னும் பெரும்பூதம் இயற்பியல் அடிப்படையில் நான்கு நிலங்களாகப் பகுக்கப்பட்டு, அம்மண்ணில் வாழும் மக்கள் அவ்வவ் நிலங்களுக்கு ஏற்ப பயிரினங்களைப் பயிரிட்டமை வேளாண் அறிவியலை வெளிக்காட்டும் வகையில் அமைந்துள்ளது. நிலத்தையும் பொழுதையும் முதற்பொருளாய் கூறியத் தொல்காப்பியர் கருப்பொருளை,

**"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருஎன மொழிப"** [21]

**(தொல்காப்பியம், அகத்திணையியல், நூற்பா 964)**

என்கிறார். தெய்வம், உணவு, விலங்குகள், மரம், செடி கொடிகள், பறவை, தோற் கருவிகள், தொழில், யாழ் போன்ற நரம்புக்கருவிகள், ஊர், நீர், பூ போன்றனவும், கருப்பொருள் என்றுக் கூறுவர்

சமவெளி பிரதேசத்தை வளம் செறிந்த நிலப்பரப்பாய் ஆக்குவதற்கு நீர்ப்பூதம் தேவைப்பட்டது. தொல்காப்பியர் தீம்புனல் உலகம் என்றே அழைக்கிறார்.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"** [22]

**(தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா 95)**

தீம்புனல் என்பது வயலும் வயல்சார்ந்த இடத்தைக் குறிக்கும் மருத நிலப் பகுதியாகும். உழவர் பெருங்குடி மக்கள் பயிர் இன வளர்ச்சிக்குப் பாடுபடும் நிலம் தீம்புனல் உலகமாகும். பூதத்தின் பெயராலே தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். நிலங்களின் தன்மைக்கு ஏற்ப செடி கொடி மரம் நீர்நிலை ஆகியனத் திணைப் பாடல்களின் இடம்பெற்றுள்ளன. மரம் நடுவதற்குக் காரணம் மழையை நோக்கியே ஆகும். மழைநீர் ஆதாரத்தைத் தர காற்று தட்பவெப்ப நிலையை உருவாக்கும். நிலம் நீர் காற்று ஆகிய மூன்று பூதங்களும் மக்களின் வாழ்வியலை நிர்ணயம் செய்யும் மக்கள் பொழுது போக்குக்குக் குறிஞ்சியில் அருவியாடிள்ளனர். நெய்தலில் கடலாடியுள்ளனர். சமவெளியில் ஆறுகளிலும் குளங்களிலும் கயம் குடைந்தாடி உள்ளனர். நீரில்லாப் பகுதியை வறட்சியானப் பாலை என்றுக் கூறி அங்கு வாழும் மக்களின் வாழ்க்கையைக் கடினப்படுத்திக் கூறப்பட்டுள்ளது.

இப்பாலை நிலங்கள் தான் புவிவெப்பம் அடைவதற்குக் காரணமாய் அமைகின்றன. முல்லை நில வளமும் குறிஞ்சி நிலவளமும் தன்னிலை திரிய வெப்பமே காரணமாகும். அவ்வெப்பமே பூமியைச் சூடாக மாற்றிப் பாலை என வறட்சியான நிலப்பரப்பை உண்டாக்கிறது. அது அக்னி பூதத்தின் செயலாகும்.

### 4. 6. எட்டுத்தொகையில் ஐம்பூதங்கள்

பரந்து விரிந்தது நிலப்பரப்பு. உயர்ந்து சிறந்தது வானம். ஆழம் காண முடியாதது கடல். இவைகளைக் காட்டிலும் நினைத்தாலே இனிக்கும் தன்மையுடையது. தலைவனது நட்பு என்பதை புலவர் ஐம்பூதங்களில் மூன்று பூதங்களை இணைத்துப் பெருங்காதல் கொண்டுள்ள ஒரு பெண்ணின் மன உணர்வை வெளிப்படுத்தியுள்ளார் புலவர்.

***"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று***
***நீரினும் ஆர்அளவின்றே - சாரல்***
***கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு***
***பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"*** [23]

***(குறுந்தொகை, பாடல் எண் 3, அடிகள் 1-4)***

நற்றிணையில் நெய்தல் நிலவாழ்வு கடல் நீரோடு, நீர்வாழ் இனத்தோடு தொடர்புடையச் செய்தி பேசப்பெறுகின்றது.

***"நீல நிறம் பெருங்கடல் கலங்க உள்புக்கு***
***மீன் எறி பரதவர் மகளே"*** [24]

***(நற்றிணை, பாடல் எண் 45, அடிகள் 2-3)***

***"பெருநீர் வினையுள்ள எம்சிறுநல் வாழ்க்கை"*** [25]

***(நற்றிணை, பாடல் எண் 45, அடி 9)***

கடல் கலங்கும்படி மீன்பிடிக்கும் பரதகுல மங்கை கடல்நீரை விளை வயலாகக் கொண்ட வாழ்க்கை எனவரும் செய்தியில் நீர்ப்பூதம் இடம்பெற்றுள்ளது.

பெண்ணின் எல்லை மீறிய ஆற்றாமை உணர்ச்சியை விளக்கக் காற்றுப் பூத ஆற்றலை ஒப்புமை கூறுவதை நற்றிணையில் வெள்ளிவீதியார் பாடலில் காணலாம்.

***"திங்களும் திகழ்வான ஏர்தரும் இமிழ்நீர்ப்***
***பொங்குதிரைப் புணரியும் பாடு ஓவாதே***
***.......................................................***
***யாமம் உய்யாமை நின்றது***
***காமம் பெரிதே களைஞரோ இலரே"*** [26]

***(நற்றிணை, பாடல் எண் 335, அடிகள் 1-2, 10-11)***

*காற்றின் வலிமையை விட அதிக வலிமை கொண்டது காமம் என்றுக் கூறுவதில் காற்றுப் பூதம் இடம்பெற்றுள்ளது. மானிட உள்ளத்தின் உணர்வை அதாவது காம மிகுதியைக் காட்டக் குறுந்தொகையில்,*

***வான்பூங் கரும்பின் ஓங்கு மணல் சிறுசிறை***
***தீம்புனல் நெரிதர வீந்து உக்காங்கு அங்கு***
***"தாங்கும் அளவை தாங்கி***
***காமம் நெரிதரக் கைந்நில்லாதே"*** [27]

***(குறுந்தொகை, பாடல் எண் 149, அடிகள் 3-6)***

*என்று வந்துள்ளது. பெண்ணிற்கு எனத் தொல்காப்பியர் வகுத்த விதியை மீறி நாணத்தைச் சிதைத்து உணர்வை வெளிப்படுத்தும் தலைவியின் உணர்வு வெளிப்பாட்டிற்கு உவமையாக நீரின் பாய்ச்சலை வெள்ளிவீதியார் பதிவுச் செய்துள்ளார். நீர், தண்ணியது என்பது அதன் இயல்பு. அவ்வியல்பைக் கபிலர் பாரியின் பண்போடிணைத்துக் கூறுகிறார்.*

***"நீரினும் இனிய சாயல்***
***பாரிவேள் பாற்படினை செலினே"*** [28]

***(புறநானூறு, பாடல் எண் 105, அடிகள் 7-8)***

வேள்பாரி நீரினும் மிக இனிமை உடையவன் எனப் பாராட்ட நீர்ப் பூதத்தைப் பயன்படுத்தியுள்ளார் கபிலர்.

*ஆழமான நீர்நிலையில் ஆண் சங்கும் பெண்சங்கும் மணம் கொள்ளும் அது போலத் தலைவன் பரத்தையுடன் புலனாடினான் என்றுப் பரணர்,*

***"பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றாய்***
***கதிர்மூக்கு ஆரல் கள்வனாக***
***நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்"*** [29]

***(அகநானூறு, பாடல் எண் 246, அடிகள் 1-3)***

*என்று அகநானூற்றில் கூறியுள்ளார்.*

***"எவ்வழி நல்லவர் ஆடவர்***
***அவ்வழி நல்லை வாழிய நிலனே"*** [30]

***(புறநானூறு, பாடல் எண் 187, அடிகள் 3-4)***

*என்ற ஔவையார் பாடலில் நிலத்தின் இயல்பு கூறப்பட்டுள்ளது. குறுந்தொகையில்,*

***"செம்புலப் பெயல்நீர் போல்"*** [31]

***(குறுந்தொகை, பாடல் எண் 40, அடி 4)***

*என்னும் அடிகளில் உவமையாக நீர்பட்ட இடம் நிலத்தின் தன்மையைப் பெறும் எனும் அறிவியல் உண்மை கூறப்பட்டுள்ளது. நிலமே அடிப்படை நிலத்தின் மண்*

நிறம் வழிச் செவ்வல், கரிசல் எனக் குறிப்பிடுவதுண்டு. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பன பூக்களால் பெயர் பெற்றன. எனினும் விளக்கம் கொடுக்கும் போது மலை மலைசார்ந்த இடம் குறிஞ்சி நிலம், காடும் காடுசார்ந்த இடம் முல்லை நிலம், வயலும் வயல்சார்ந்த இடம் மருதநிலம், கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் நிலம் என்றே மண்ணின் தன்மை அறிந்து கூறியுள்ளனர். பருவ நிலைக்கு ஏற்ப நிலப்பயிர்களும் பயிரிடப்படுகின்றன. நன்செய், புன்செய் என்பதை நஞ்சை, புஞ்சை இருக்கிறதா என மக்கள் பேச்சு வழக்கில் வினவுவர்.

சிறு தானியங்கள் விளையும் இடம் விளை என்னும் புன்செய் நிலங்களே. நெல், கரும்பு, வாழை போன்ற நீர்மிகுதியால் விளையும் புலங்கள் நன்செய் நிலங் களாகும். நிலமிருக்கும் இடத்தில் நின்று சூரிய உதயத்தைக் கணக்கிட்டுத் திசையைக் கூறி வடக்கே இருந்து வீசும் காற்று வாடை. தெற்கே இருந்து வீசும் காற்று தென்றல் எனப் பெயர் தந்துள்ளனர். உதயம் கிழக்கு எனும் குணக்கு, மறையும் திசை மேற்கு எனும் குடக்கு எனப் பெயரிட்டுள்ளனர்.

எத்திசையிலிருந்து வீசும் காற்றால் மழை உண்டு என அறிந்திருந்தனர். அதற்கேற்ப நிலங்களில் பயிரிட்டு வேளாண்மைத் தொழில் புரிந்து வருகின்றனர். ஐம்பூதங்கள் தொழிலை மேம்படுத்த, வாழ்வை வளப்படுத்த துணையாக உள்ளன. கோடை மழை பற்றி நற்றிணையில்,

**"முழங்கு கடல் முகந்த கமஞ்சூல் மாமழை**
**மாதிரம் நனந்தலை புதையப் பாஅய்**
**ஓங்கு வரை மிளிர ஆட்டி பாம்பு எறிபு"** [32]

***(நற்றிணை, பாடல் எண் 347, அடிகள் 1-3)***

எனக் கூறுகிறது. இது காலமழையாகும். கடல்நீர் ஆவியாகி மழைபொழியும் அறிவியலை உணர்ந்தே கடல் முகந்த எனுஞ்சொல் பாடலில் அமைக்கப்பட்டுள்ளது.

### *4.6.1.* புறநானூற்றில் ஐம்பூதங்கள்

புறநானூறு தமிழர்களின் வரலாறு, பண்பாடு இவற்றை விளக்கும் நூல். புறநானூற்றில் பல உயர்ந்த உண்மைகளைக் கூறும் பாடல்கள் உள்ளன. அந்தணர்க்கு ஊர்களை வழங்கும்போது நீர்வார்த்துக் கொடுத்தல், அரசர்கள் வேள்விச் செய்யச் செய்தல் போன்றப் பூதங்கள் பற்றியச் செய்திகள் உணர்த்தப் படுகின்றன.

புறநானூற்றில் நீரின் விசையைக் கணித்து அதனை உவமையாக்கி விதியின் போக்கை உணர்த்துகின்றார் கணியன் பூங்குன்றனார்.

**“வானம் தண்துளி தலைஇ ஆனாது**
**கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று**
**நீர்வழிப் படூஉம் புணைபோல”** [33]

***(புறநானூறு, பாடல் எண் 192, அடிகள் 7-9)***

*மழை பெய்து பெருகியோடும் பெரிய ஆற்றில் நீர் வழியே செல்லும் தெப்பம் போல உயிர்கள் ஊழ்வினைப்படி அவற்றுக்கு ஏற்ற நிலையை அடையும் என்றக் கருத்தைக் கூறுவதற்கு இரண்டு பூதங்களை உவமையாக்கி விளக்கியுள்ளார் புலவர் கணியன் பூங்குன்றனார்.*

*தமிழ்நாட்டின் தட்பவெப்பநிலையை விளக்க நீர்ப்பூதம், வானபூதம் ஆகியன பயன்பட்டுள்ளன. வெள்ளக்குடி நாகனார் என்றப் புலவர் நாட்டின் வளமையை,*

**“நளியிரு முந்நீர் ஏணி யாக**
**வளியிடை வழங்கா வானம் சூடிய**
**மண்திணி கிடக்கைத் தண்டமிழர்க் கிழவர்”** [34]

***(புறநானூறு, பாடல் எண் 35, அடிகள் 1-3)***

*எனக் கூறும் பாடலடிகளில் வானபூதம், காற்றுப்பூதம், மண்தினி கிடக்கையால் நிலப் பூதம் ஆகியவற்றைப் பதிவுச் செய்துள்ளார். ஆவூர் மூலங்கிழார் என்றப் புலவர். சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளி வளவனைப் பாராட்டும்போது,*

**“செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்**
**வெண் திங்களுள் வெயில் வேண்டினும்**
**வேண்டியது விளைக்கும் ஆற்றலை ஆகலின்”** [35]

***(புறநானூறு, பாடல் எண் 38, அடிகள் 7-9)***

*என்றுக் கூறுகிறார். வெயில் நிலவா, நிலவில் வெயிலா என்று இயல்புக்கு முரண் பட்டதாக உள்ளதே என எண்ணும் பகைவர்க்கு அதனைச் செய்யும் ஆற்றல் படைத்தவன் என்கிறார் புலவர். விண்ணில் கிடைப்பது மண்ணில் தரவல்லான் என்றுக் கூறுதற்கு விண்ணும் மண்ணும் ஆகிய இரு பூதங்களைச் சோழநாட்டின் வளத்தை நீர்நிலம் ஆகியவற்றை விளக்கிக் காட்சிப்படுத்துகிறார்.*

*சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் கொடைத்திறத்தைக் கோவூர்கிழார் பாராட்டும் போது நீரை உவமையாக்கியுள்ளார். தீயை ஒப்புமை யாக்கிப் பகைபுலம் கெடுவதைச் சுட்டினார்.*

**“தைத்திங்கள் தண்கயம் போலக்**
**கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்**

**அடுதீ அல்லது சுடுதீ அறியாது**

**இருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்" [36]**

***(புறநானூறு, பாடல் எண் 70, அடிகள் 6-10)***

*தைமாதம் குளிர்ந்த குளம் போலக் கொடுக்கக் கொடுக்கக் குறையாத சோறு நிறைந்த நாடு. அந்நாட்டின் தலைவனின் பகைவன் புலம் பாழாகும். அத்தகைய மன்னனது கொடைத் தப்பாது எனக்கூறிப் பாகனை ஆற்றுப்படுத்துகிறார். கயம் என்னும் நீர்நிலை உவமையாகக் கையாளப்பட்டுள்ளது. அடுப்புத் தீ மட்டும் காணும் அவ்வூரில் பகைவரால் சூடப்படும் தீ கிடையாது என நெருப்புப் பூதம் பயன்படுமாற்றை விளக்குகிறார்.*

*கபிலர் காட்டும் பாரியின் பறம்பு மலையில் உள்ள மரங்கள் காலமில்லாக் காலத்திலும்கூட காய்த்துக் கனி கொடுக்கும் என்பது உயர்வு நவிற்சி ஆகும். இன்ன காலத்தில் இன்ன இடத்தில் காய்கனி கிடைக்கும் என்பதற்குப் பருவகாலம் பதில் கூறும். நிலத்தின் நீர்வளம் கூறவே முரண் அமைத்து நீர்ப்பூதத்தை விளக்கியுள்ளார் கபிலர்.*

**"பயில்இருஞ் சிலம்பிற் கலைபாய்ந்து உகளவும்**

**கலையும் கொள்ளா வாகப் பலவும்**

**காலம் அன்றியும் பரம்பயம் பகரும்**

**யாணர் அராஅ வியன்மலை அற்றே" [37]**

***(புறநானூறு, பாடல் எண் 116, அடிகள் 11-14)***

*ஐயாதிச் சிறுவெண் தேரையார் என்றப் புலவர் பாடலிலும் நிலம், நீர்ப் பூதங்கள் இடம்பெற்று பொருள் விளக்கம் தருகின்றன.*

**"இருங்கடல் உடுத்தஇப் பெருங்கண் மாநிலம்**

**உடைஇலை நடுவணது இடைபிறர்க்கு இன்றித்**

**தாமே ஆண்ட ஏமம் காவலர்**

**இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்" [38]**

***(புறநானூறு, பாடல் எண் 363, அடிகள் 1-4)***

*கடல், நீர்ப்பூத கொள்கலன் ஆகும். மணல் மேடாகும், பூமி நிலப்பூதமாகும். தேரையார் இவ்விரு பூதங்களையும் பாடலில் கையாண்டுக் கூறவந்த பொருளை விளக்கியுள்ளார்.*

### ***1.6.2. பரிபாடலில் ஐம்பூதங்கள்***

*திருமாலைப் பற்றி இடம்பெற்றுள்ள பரிபாடலில் ஐந்து பூதங்களையும் தொகுத்துக் கூறப்பட்டிருப்பதைக் காண முடிகிறது.*

**"தீ வளி விசும்பு நிலநீர் ஐந்து**
**ஞாயிறும் திங்களும் அறனும் ஐவரும்"** [39]

***(பரிபாடல், பாடல் எண் 3, அடிகள் 4-5)***

*என உலகத் தோற்றம் திருமாலால் நிகழ்ந்தது என்னும் பொருள்பட அமைந்துள்ளது. உலகில் தோன்றியது மண்தான் என்று உறுதிப்படுத்தும் வகையில் பரிபாடல் அடிகள் விளக்குகின்றன. அம்மண் பூதத்திற்கும் ஆதிகாரணமாக இருந்தவர் திருமாலே என்றுப் பெருமை கூற முதன்மைப்படுத்தப்படுகிறார்.*

**"மாநிலம் இயலா முதன்முறை அமையத்து**
**நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய**
**வாய்மொழி மகனொடு மலர்ந்த**
**தாமரைப் பொருட்டு நின் நேமி நிழலே"** [40]

***(பரிபாடல், திருமால், பாடல் எண் 3, அடிகள் 91-94)***

*என்பது பரிபாடல் ஆகும்.*

*கல்தோன்றி மண்தோன்றாக் காலத்து மூத்தக்குடியினராய் வாழ்ந்த இனம் தமிழ் இனம். இவ்வாசகத்திலும் நிலப்பூதமே முன்னிற்கிறது.*

*திருமாலின் புகழ்பாடும் போது நிலப்பூதமும் நீர்ப்பூதமும் இடம்பெறுவதை,*

**"நின்னது திகழொழி சிறப்பிருள் திருமணி**
**கண்ணே புகழ்சால் தாமரை அலரினைப் பிணையல்**
**வாய்மை வயங்கிய வைகல் சிறந்த**
**நோன்மை நாடின் இருநிலம் யாவர்க்கும்**
**சாயல் நினது வானிறை யென்னும்**
**நாவல் அந்தணர் அருமறைப் பொருளே**
**அவ்வும் பிறவும் எத்தனை உவ்வும்**
**எவ்வயி னோயும் நீயே உயர்கொடியோயே"** [41]

***(பரிபாடல், திருமால், பாடல் எண் 2, அடிகள் 51-59)***

*எனப் பரிபாடல் கூறுகிறது.*

*பெருமைக்கு நிலம், அருளுக்கு நீர் எனத் திருமாலின் குணத்தைப் பகுத்துக் கூற அருள் நீர்நிறைந்த மேகத்தைப் போன்றவன் திருமால் என்கிறது இப்பாடல். நிலம் தோன்றும் முன் நீர் தோன்றவேண்டும். நீர் தோன்றினால் தான் உயிர் தோன்ற முடியும். பரவை மீது பாம்பணையில் படுத்திருக்கும் பரந்தாமன் நீரின் மீதுதான் இருப்பை மேற்கொண்டுள்ளான். இது நீர்ப்பூதத்தின் தேவையை உணர்த்துகின்றது.*

**"திருவின் கணவ பெருவிறல் மள்ள**
**மாநிலம் இயலா முதன்முறை அமையத்து**
**நாம வெள்ளத்து நடுவண் தோன்றிய"** [42]

***(பரிபாடல், திருமால், பாடல் உண் 3, அடிகள் 90-92)***

*என்றப் பரிபாடல் அடிகளில் நிலம் நீர் பூதங்கள் இணைவதைக் காணமுடிகிறது. நீர்ப்பெருக்கே உயிர்த்தோன்றி உய்வதற்கு வழிவகுத்தது எனப் பரிபாடல் நீரின் இயல்பைக் கூறுகிறது.*

**"திரையிருப் பனிப்பௌவம் செவ்விதா அறமுகந்து**
**உரவுரும் உடன்று ஆர்ப்ப ஊர்பொறை கொள்ளாது,**
**கரையுடைக் குளமெனக் கழன்று வான்வயிறு அழிபு**
**வரைவரை தொடுத்த வயங்கு வெள்ளருவி**
**இரவிருள் பகலாக இடம் அரிது செல வென்னாது**
**வலன் இரங்கு முரசின் தென்னவர் உள்ளிய**
**நிலனுற நிமிர்தானை நெடுநிரை நிவப்பன்ன**
**பெயலாற் பொலிந்து பெரும்புனல் பல நந்த**
**நலனந்த நாடணி நந்த புலனந்த**
**வந்தன்று வையைப் புனல்"** [43]

***(பரிபாடல், பாடல் எண் 7, அடிகள் 1-10)***

*என்பதில் நீர்ப்பூதம் தான் உயிர்த்தோற்றத்திற்கு அடிப்படை எனும் கருத்து வலுப் பெறுகிறது.*

*கோபத்தின் குறியீடாய் நெருப்புப் பூதம் இடம்பெறுவதைப் பரிபாடலில் காணமுடிகிறது. நெருப்புப் பூதம் போன்ற முகப்படாம் அணிந்த யானை அணியும் முக அணியை விளக்க நெருப்பை அடைமொழியாக்கிக் காட்டுகிறது. ஒளிவீசும் தன்மை நெருப்பிற்கு உண்டு. முருகனின் ஊர்தி யானை எனத் திருமுருகாற்றுப் படையிலும் பரிபாடலும் குறிக்கப்படுகிறது. செவ்வேள் பற்றியப் பாடலில்,*

**"ஊர்ந்ததை எரிபுரை யோடை இடையிமைக்கும் சென்னிப்**
**பொரு சமங்கடந்த புகழ்சால்வேழம்"** [44]

***(பரிபாடல்,பாடல் எண் 21, அடிகள் 1-2)***

*என்றுக் குறிப்பிடப்படுகின்றது. எரி என்பது அக்னிப் பூதம் ஆகும். திருப்பரங்குன்ற மலையின் உயர்ச்சியைக் கூற ஆகாயம் பயன்பட்டுள்ளது.*

**"தரைவிசும் புகழ்த் தண் பரங்குன்றம்"** [45]

***(பரிபாடல், பாடல் எண் 21, அடி 15)***

*என்ற அடியில் விசும்பு ஆகாயப் பூதத்தைக் குறிக்கிறது. திருப்பரங்குன்றம் சித்திர சாலையில் சூரியன் முதலியக் கிரங்கங்களின் சஞ்சாரப் போக்கினை ஓவியங்களில் சிற்பங்களில் சித்திரிக்கப்பட்டிருப்பதைக் கண்டு மகிழ்ந்துள்ளனர் என்றுக் கூறப்பட்டிருப்பதால் பண்பாட்டுச் செய்திகளைக் கூற வான் மண்டலம் உதவி இருக்கிறது.*

ஐம்புலன் உணர்வுகளான ஓசை, ஊறு, ஒளி, சுவை, மணம் என்பனவற்றால் உணரப்படும் இறைவன் திருமால் என்பதை,

**"முந்தி யாம் கூறிய ஐந்தனுள்ளும் ஒன்றினில் போற்றிய**
**விசும்பு நீயே இரண்டின் உணரும் வளியும் நீயே, மூன்றின்**
**உணரும் தீயும் நீயே, நான்கின் உணரும் நீரும் நீயே,**
**ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே"** [46]

***(பரிபாடல், பாடல் எண் 13, அடிகள் 17-22)***

என்றுத் திருமாலின் பெருமையைப் பேசும் போது நிலமும் நீயே, ஆகாயமும் நீயே, காற்றும் நீயே, கனலும் நீயே, உலகத்து உயிர்கள் அனைத்திலும் நீயே எனக் கூறுவதில் திருமால் உறைந்துள்ளான் என்றச் செய்தி விளக்கப்பெறுகின்றது.

### *4.7.* பத்துப்பாட்டில் ஐம்பூதங்கள்

தமிழகத்தில் இரண்டு கடல்கோள்கள் ஏற்பட்டதாக வரலாறு கூறுகின்றது. பூமி கடலால் நீர்ப் பூதத்தால் அழிவதையே இது காட்டுகிறது. அதிகப் பரப்பளவு உள்ள நிலப்பரப்பு கடல்நீரால் உண்ணப்படும் போது சிறிதாக மாறி சுருங்கி விடுகின்றது.

தமிழ் நிலத்தில் கன்னியாகுமரிக்குத் தெற்கே குமரி மலையும் பஃறுளி ஆறும் இருந்ததாகக் கூறுவர் சதாசிவ பண்டாரத்தார். காவிரிப்பூம்பட்டினம் என்னும் நூலில் அந்நகரம் ஏறக்குறைய முப்பது மைல்கள் பரப்பளவு உடையதாக இருந்திருக்க வேண்டும். கடல்கோளால் கொள்ளப்பட்ட பின் இன்றைக்குச் சிறுநகரமாக விளங்குகிறது என்றுக் குறிப்பிடுவர். சில நூற்றாண்டுகளுகு முன்பு நடந்த இந்தக் கடல்கோள் நிகழ்வு தமிழகத்தின் முக்கிய கடலோர நகரங்களையும் தமிழ் வழங்கியத் தென்னக நாடுகள் பலவற்றையும் காவுகொண்டது என்பது உண்மை. நீண்ட காலத்திற்கு முன்பே தோன்றிச் செம்மைப்பட்டு இலக்கண வளமும் இலக்கிய வளமும் நிறைந்த மொழியாய்ச் சங்க காலத்திலேயே தமிழ்மொழி விளங்கியிருக்கிறது. உலக நாடுகள் பலவும் நாகரிகத்தின் தொடக்கத்தில் இருந்த காலத்தில் தமிழ்மக்கள் உயர்ந்த நாகரித்துடன் வாழ்ந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன.

மண்ணை நீர் கொள்ளும் என்றச் செய்தியினை விளக்கும் பாடல்கள் உண்டு. சிறுபாணாற்றுப்படையில் உவமையாகப் பூதங்கள் பயன்பட்டுள்ளன.

**"வாணிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த**
**இளங்கதிர் ஞாயிறெள்ளுந் தோற்றத்து"** [47]

***(சிறுபாணாற்றுப்படை, அடிகள் 243-244)***

*எனும் பாடலில் வானமும் நெருப்புமாகிய இரண்டு பூதங்கள் இடம்பெற்றுள்ளன.*

***"பருவவானத்துப் பாற்கதிர் பரப்பி***

***உருவ வான்மதி ஊர்கொண் டாங்கே"*** [48]

***(சிறுபாணாற்றுப்படை, அடிகள் 450-451)***

*என்றுச் சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது. நெடுநல்வாடையில் நீரும் ஆகாயமும் பூதங்களாய் இடம்பெற்றுள்ளன.*

***"கயல றல் எதிரக் கடும்புனற் சாஅய்ப்***

**பெயலுலந் தெழுந்த பொங்கல் வெண்மழை**

***அகலிரு விசும்பில் துவலை கற்ப"*** [49]

***(நெடுநல்வாடை, அடிகள் 18-20)***

*புனலும் மணலு கலந்து வருவதையும் நெடுநல்வாடையில் காணமுடிகிறது.*

***"வானுற நிவந்த மேனிலை மருங்கின்"*** [50]

***(நெடுநல்வாடை, அடி 60)***

*என்று வான பூதத்தின் உயரத்தைக் கூறுகிறார். உயரம் என்ற கருத்தை விளக்குவதற்கும் ஆகாயம் பயன்படுவதை எடுத்து இயம்புகின்றது. பட்டினப்பாலையில்,*

***"வான்முகந்த நீர் மழைப் பொழியவும்***

***மழைப் பொழிந்த நீர் கடற்பரப்பவும்***

***மாரிபெய்யும் பருவம் போல***

***நீரினின்று நிலந் தேற்றவும்***

***நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்***

***அளந்தறியாப் பலபண்டம்"*** [51]

***(பட்டினப்பாலை, அடிகள் 126-131)***

*எனும் பகுதியில்,*

*கடல்நீர் வான நீராக மாறும் என்பது விளக்கப்படுகிறது. நீரும் வானமும் ஆகியப் பூதங்கள் உப்பு நீரை தண்ணீர் ஆக்கும் விஞ்ஞானத்தை விளக்குகிறது. காலையில் எழும் கதிரவன் தன் கதிர்களைக் கடல் மீது பரப்புகின்றான். கடல் தங்கத் தகடாக ஒளிருகிறது. அழகின் சிரிப்பில் பாரதிதாசன் இவ்வழகைச் சுவைத்துப் பாடிப் பரிதியை வாழ்த்துகிறார்.*

புதுவை மாநிலம் கடல் கரையோரம் அமைந்ததால் நாள்தோறும் இக்காட்சியைக் கண்டு தங்கத் தகடு எனும் கற்பனையைக் கவிதையில் அமைத்துள்ளார். பொருநராற்றுப் படையில் முடத்தாமக் கண்ணியாரும் இக்காட்சியை அன்றே கண்டார்.

**"பவ்வ மீமிசைப் பாற்கதிர் பரப்பி**
**வெவ்வெஞ் செல்வன் விசும்பு டர்ந்தாங்கு"** [52]
***(பொருநராற்றுப்படை, அடிகள் 135-136)***

கவிதைக்கு உணர்ச்சி வடிவம், கற்பனை போல்வன தேவைப்படுகின்றன. அவற்றுள் கற்பனை படிப்பவர்க்குக் கவிஞன் தான் எண்ணியதைக் காட்சிப்படுத்த உதவுகிறது. சூரியனின் கதிர்கள் காலைநேரத்தில் எழும்போது கடற்பரப்பில் அழகைத் தோற்றுவித்தத்தாகக் கூறுவது இயற்கையாகும்.

வானமும் அக்கினியும் இணையும் காட்சியைக் கவிஞர் காட்டுகிறார். பூதங்கள் கவிஞனின் கற்பனைக்குத் துணையாகின்றன. கவிஞனின் கற்பனைக்கு ஊற்றாய்த் திகழ்வது உதயசூரியன். உதயத்து எழு சுடர் கடல் மேற்பரப்பில் தங்கமாக ஒளிர்கிறது என்றுப் பொருநராற்றுப்படையில் கூறுகிறது.

பெரும்பாணாற்றுப்படையிலும் மழைக்கால வானத்தில் பரவி இருக்கும் மேகம் உவமையாக கையாளப்பட்டிருக்கிறது.

**"பருவ வானத்துப் பாமழை கடுப்பக்**
**கருவே வேய்ந்த கவின் குடிச்சீறூர்"** [53]
***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 190-191)***

முல்லைநில மக்களின் வாழ்வியலை விளக்க வந்த புலவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் குடியிருப்புப் பற்றிக் கூறும்போது மழைக்கால வானத்தில் பரவியிருக்கும் மேகங்களைப் போல வரகு வைக்கோலில் வேயப்பட்ட குடியிருப்புகளில் வாழும் சிறிய ஊர் எனக் கூற வந்தவர் வானையும் நீரையும் உவமையாகப் பயன்படுத்தியுள்ளார்.

### *4.7.1. மதுரைக்காஞ்சியில் ஐம்பூதங்கள்*

கடல் அலைவீசும் நீர்த்துளிகளில் மணல்மேடான நிலப்பகுதியில் மோதும் இயற்கைக் காட்சியை மதுரைக்காஞ்சியில்,

**"சலம்புகன்று சுறவுக் கலித்த**
**புலவுநீர் வியன் பௌத்து**

***நிலவுக் கானல் முழவுத் தாழைக்***

***குளிர்ப் பொதும்பர் நளித்தூவ***

***நிரைத்திமில் வேட்டுவர் கரைசேர் கம்பலை***

***இருங்கழிச் செறுவின் வெள்ளுப்புப் பகர்நரொடு***

***ஒலியோவாக் கலியாணர்***

***முதுவெள்ளிலை மீக்கூறும்"*** [55]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 112-119)***

*என நீரும் வானுமான இரு பூதங்கள் வழி இயற்கை வளத்தைக் காட்டுகிறார் மாங்குடி மருதனார்.*

*பெண்கள் ஆற்றில் நீராடும் ஓசை வானில் வாழ்வோர்க்கு இனிதாக உரைக்கும் என்பதில் நீர், வான் ஆகிய இரு பூதங்கள் இடம்பெற்று இயற்கை நிலையை விளக்குகின்றன. நீர்வளத்தை,*

***"ததைந்த கோதை தாரொடு பொலியப்***

***புணர்ந்துட னாடும் இசையே யனைத்தும்***

***அகலிந வானத் திமிழ்ந்தினி திசைப்பக்"*** [56]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 265-267)***

*என்று மதுரைக்காஞ்சி கூறி விளக்குகின்றார்.*

***"முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்***

***பன்மீன் நடுவண் திங்கள் போலவும்"*** [57]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 268-269)***

*கடல்நீர் நடுவே தோன்றும் சூரியன் போன்றும் பல நட்சத்திரங்களுக்கு நடுவே காணலாகும் சந்திரன் போன்றும், பாட்டுடைத் தலைவன் பாராட்டப் பட்டுள்ளான். கடலிலிருந்து நீரை மேகம் முகந்து கொண்டு ஆகாயம் செல்கிறது. அது சூரியனால் அமைகிறது. ஆகாயத்தில் மீன்கள், மீன்களின் நடுவே சந்திரன் இருப்பது என வேறு நிலைகளை விளக்குகிறார். இங்கும் இரு பூதங்கள் கோள்களின் செயல்வழி விளக்கப்பட்டுள்ளன.*

*காற்றழுத்த மண்டலம் பற்றி வானிலை ஆராய்ச்சி மைய அறிவிப்புகள் ஊடகங்களில் அறிவிக்கப்படும் இன்றைய நிகழ்வுகள் அறிவியல் சார்ந்தவையாகும். ஆகாயத்தில் காற்றுவலமாகச் சுழன்றடிக்கிறது. வலமாகக் காற்றுச் சுழல்வதால் மழை பொழிகின்றது. வடகிழக்குப் பருவக்காற்று தான் இது என்பதை,*

**“மலைநாறிய வியன்ஞாலத்து**

**வல மாதிரத்தான் வளி கொட்ப”** [58]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 45-46)***

*என மதுரைக்காஞ்சி சுட்டுகிறது. ஐம்பூதங்களை வரிசைப்படுத்தும்போது மாங்குடி மருதனார்,*

**“நீர் நிலனும் தீயும் வளியும்**

**மாக விசும்போடு ஐந்தும்”** [59]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 453-454)***

*என்று கூறுகிறார். ஐம்பூதங்கள் இவை எனச் சங்க நூல்கள் சுட்டியிருக்க, பக்திக்காலக் கவிஞர்களோ இறைவனைக் கண்டால் போதும் ஐம்பூதங்களும் அவனுள் அடங்கி இருப்பதைக் காணலாம் என்பர் திருஞானசம்பந்தர்.*

*ஆகாயப்பூதம் மழையை பொழிவிக்கு இயல்பை முல்லைப்பாட்டு,*

**“நனந்தலை உலகம் வளைஇ நேமியோம்**

**வலம்புரி பொறித்த மாதாங்கி தமக்கை”** [60]

***(முல்லைப்பாட்டு, அடிகள் 1-2)***

*வானத்து மேகச்சொல் கடல்நீரைக் குடித்த மேகம் வலமாக எடுத்து மலையில் தங்கி மலையில் மழையைப் பொழிவிக்கிறது என்று நெடுநல்வாடை,*

**“வையகம் பணிப்ப வலன்ஏர்பு வளைஇ**

**பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தன”** [61]

***(நெடுநல்வாடை, அடிகள் 1-2)***

*என்றும் திருமுருகாற்றுப்படை,*

**“உலகம் உவப்ப வலனோர்பு திருதரு**

**பலர்புகழ்ஞாயிறு கடல் காண்டிங்கு”** [62]

***(திருமுருகாற்றுப்படை, அடிகள் 1-2)***

*என்றும்*

**“வளிவலம் கொட்டும் மாதிறம்”** [63]

***(திருமுருகாற்றுப்படை, 12.91)***

*வானத்து மேகம் வலமாக எழும்செய்தி இடம்பெற்றுள்ளது. பூமியின் சுழற்சி வலப்பக்கமாக இயங்குவதை இப்பாடல் அடிகள் சுட்டுகின்றன.*

*வான மண்டலத்தில் பல்வேறு கோள்கள் விண்மீன்கள் விளங்கியுள்ளன என்பதைச் சங்கப் புலவர்கள் அறிந்திருந்தனர். சூரியன், பூமி, வியாழன், புதன், வெள்ளி, சனி போன்றவைப் பற்றியும் துணைக்கோளானத் திங்கள் கோள் பற்றியச்*

செய்திகளும் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன. பற்பல விண்மீன்களைப் பற்றியச் செய்திகளும் சங்க இலக்கியங்களில் பதிவாக்கம் பெற்றுள்ளன. வானத்தில் இயங்குபவனவற்றைக் கோள்கள் என்றும், விண்மீன்கள் என்றும் பகுக்கலாம். இவ்விரு பிரிவுகளைப் பட்டினப்பாலை அடிகள் தெளிவுப்படுத்துகின்றன.

**"நீல்நிற விசும்பில் வான்ஏர்பு திரிதரும்**
**நாள்மீன் விராஅய கோள்மீன் போல"** [64]

***(பட்டினப்பாலை, அடிகள் 67-68)***

என்றப் பாடல்கள் வானத்தில் உள்ளவற்றை நாள்மீன் என விண்மீனையும் கோள்மீன் எனக் கோள்களையும் பிரித்தறிகின்றது. விண்ஊர்பு எனப் பட்டினப்பாலை உரைப்பதும் வானமண்டலம் இருப்பதை உறுதி செய்கிறது.

### *1.8.* பக்தி இலக்கியத்தில் ஐம்பூதங்கள்

தேவாரப் பாடல்களிலும் நாலாயிரத் திவ்வியபிரபந்தப் பாடல்களிலும் ஐம்பூதங்கள் தெய்வநிலையில் தெய்வங்களுக்கு அடைமொழிகளாகக் குறிக்கப் பட்டிருப்பதைக் காணமுடிகிறது. திருஞான சம்பந்தர் தேவாரத்தில் சிவபெருமானின் குணங்களை விளக்கும்போது ஐம்பூதங்கள் அடைமொழிகளாய் அமைந்திருப்பதை,

***"மண்ணர் நீரார் ஆழ லார்மலி காலினார்***
***விண்ணர் தம்விரித்து ஓதுவார் மெய்ப்பொருள்***
***பண்ணார் பாடல் உடையார் ஒரு பாகமும்***
***பெண்ணர் கோயில் அர தைப்பெரும் பாழியே"*** [65]

***(திருஞானசம்பந்தர் தேவாரம், திருஅரதைப் பெரும்பாழி பதிகம், பாடல் எண் 1444)***

என்ற அடிகளில் மண், நீர், நெருப்பு, காற்று, விண் ஆகிய ஐம்பூதங்களும் வரிசையாக உள்ளதை அறிந்துகொள்ளலாம். ஐம்பூதங்களாக விளங்குபவர், வேதங்களை விரித்து ஓதுபவர், மெய்பொருளாகியவர், பண் அமைந்த பாடலில் உள்ளவர், உமையை ஒரு பாகத்தில் உடையவர், பெரும்கோயில்களில் உறைபவர். இதுபோன்ற பல பாடல்களில் சிவனுக்கு அடைமொழியாக ஐம்பூதங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

***"நிலந்த ணீரோடு அனல்கால் விசும்பின் நீர்மையான்***
***சிலந்தி செங்கட் சோழனாகச் செய்தான் ஊர்***
***அலந்த அடியான் அற்றைக்கு அன்றோர் காசுஎய்திப்***
***புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே"*** [66]

***(திருஞானசம்பந்தர் தேவாரம், திருஅரிசிற்கரைப்புத்தூர் பதிகம், பாடல் எண் 1534)***

நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் ஆகிய ஐம்பூதத்தின் தன்மையை உடைய சிவன் புத்தூரில் எழுந்தருளியுள்ளான்.

வைணவ இலக்கியம் பெரிய திருமொழியில் திருமாலின் பெருமைகளாக விரித்துரைக்கும் போது ஐம்பூதங்களின் வரிசை இடம் பெற்றுள்ளது.

**"அண்டமும் எண்திசையும் நிலனும்**
**அனல் நீரோடு வான் எரிகால் முதலா**
**உண்டவன் எந்தை பிரானது இடம்"** [67]

***(பெரியதிருமொழி, பாடல் எண் 1131)***

ஐம்பூதம் இறைவனுள் அடக்கம் எனும் கருத்தில் எடுத்தாளப்பட்டுள்ளது. அண்டங்களையும் எட்டுத் திசைகளையும் உலகையும் கடல்களையும் வானத்தையும் நெருப்பையும் காற்றையும் மற்றும் பல பொருள்களையும் உண்டாக்கியவனாகிய என் குலத்தலைவனுடைய இருப்பிடம் காஞ்சி நகரில் உள்ளது என்று பெரியாழ்வார் கூறும்போது ஐம்பூதங்களையும் எடுத்தாழ்கிறார்.

**"தீதுஅறு நிலத்தோடு எரி காலினொடு**
**நீர்கெழு விசும்பும் அவையாம்**
**மாசுஅறு மனத்தினோடு உறக்கலமொடு"** [68]

***(பெரியதிருமொழி, பாடல் எண் 1438)***

குற்றமற்ற சிறந்த பூமியும் நெருப்பும் காற்றும் நீரும் சிறந்த வானமும் ஆகிய பஞ்ச பூதங்களுக்கு அந்தராத்மாவாய் இருப்பவனும் குற்றமற்ற மனமும் உறக்கமும் மரணமும் ஆகியவற்றிற்குத் தலைவன் திருமால் என்னும் போது ஐம்பூதங்கள் வரிசைப்படுத்தப் பெற்றள்ளன.

சைவப் பேரிலக்கியமான பெரியபுராணத்தில் சிவன் பெருமை கூறும்போது சேக்கிழார் ஐம்பூதங்களைப் பகுத்துக் கூறாது தொகுத்துக் கூறுகிறார்.

**"நீடுதேவர் நிலைகளும் வேண்டின்**
**நாடும் ஐம்பெரும் பூதமும் நாட்டுவ**
**கோடி கோடி குறள் சிறுபூதங்கள்**
**பாடி ஆடும் மறப்பது பாங்கு எனர்"** [69]

***(பெரியபுராணம், திருமலைச் சருக்கம், பாடல் எண் 6)***

பெருமைமிகு தோழர்களின் பதங்களை வேண்டினால் உலக காரணமாக நாடும் ஐம்பெரும் பூதங்களையும் தாம் எண்ணியபடி நிலைநாட்டிட வல்லோனாகிய ஜோடி ஜோடியாக அநேக சிறு வடிவங்கொண்ட சிவ தலங்கள் பாடி ஆடிக்கொண்டும் பரந்த விளங்கும் மலை கையிலை மலையாகும்.

*சிவன் தமர் கயிலை மலையைச் சிறப்பிக்க நீர், நெருப்பு, காற்று, விண், மண் ஆகியவற்றைத் தாம் நினைத்தவாறு மாற்றம் வல்லரிடம் படைத்தவன் சிவன் எனக் கூறுகிறார் சேக்கிழார். மூன்றாம் அடியில் வரும் பூதம் சிவ கணங்களைக் குறித்தது.*

*இறைவன் அடிஎடுத்துக் கொடுத்த முதற் பாடலிலேயே ஐம்பூதங்கள் இடம்பெற்றுள்ளன.*

***"உலகெலாம் உணர்ந்தோதற்கு அரியன்***
***நிலழலா நீர்மலி வேணியன்***
***அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்***
***மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவோம்"*** [70]

***(பெரியபுராணம், திருமலைச் சருக்கம், பாடல் எண் 1)***

*என்று உலக உயிர்கள் எல்லாம் வாழ்த்தும் நாயகன் சிவன் என்கிறார் சேக்கிழார். ஆழ்வார் பாடலில் ஆகாசம் எனும் பெயர் வந்தது போலவே சிவனடியார் பாடலிலும் ஆகாசம் என்றச் சொல் இடம்பெற்றுள்ளது. தொல்காப்பியர் காயப்பெயர் என்று முதற்குறை அமைத்து ஆகாயத்தைக் காயப்பெயர் என்றுக் கூறியுள்ளார்.*

*சங்ககால இலக்கியங்களில் ஆகாயம் விண், வான், விசும்பு ஆகிய பெயர்களில் இடம்பெற்றுள்ளன. உயரம், உசரம் ஆவது போலப் பேச்சுவழக்கில் ஆகாயம், ஆகாசமாக மாறும் என்பதை அறிந்த சிவனடியார்களும் ஆழ்வார்களும் தங்களது பாடல்களில் ஐம்பூதங்களில் பரந்து விரிந்த உயர்வானத்தை ஆகாசம் எனும் பெயரிலேயே பதிவுச் செய்துள்ளனர். விண், வான் என்பனவும் பக்தி இலக்கியத்தில் பயின்று வந்துள்ளன.*

***"மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளுங்***
***கண்ணுளும் மெய்யுளும் காணலு மாயே"*** [71]

***(திருமந்திரம், பாடல் எண் 8)***

*என்றுத் திருமூலர் சிவப்பெருமை பேசுகிறார்.*

*சிவன் அட்டமூர்த்தியாகவும் ஐம்பூதமாகவும் விளங்குவதைத் திருமூலர் காட்சிப்படுத்துகிறார்.*

***"மண்ணாக விளங்குதலை ஆறிடங்களிலும் நீராக ஐந்திடங்களிலும் தீயாக விளங்குதலைப் பதினைந்து இடங்களிலும் வளியாக விளங்குதலை ஒன்பது இடங்களிலும் வானாக விளங்குதலை ஏழிடங்களிலும் உயிராக விளங்குதலை மூன்றிடங்களிலும் குறிப்பிடுகிறார்"*** [72] ***(இரா.இலட்சாராமன், திருமுறையில் இயற்கையும் இறைமையும், பக்கம் 146)***

*உலகின் இயக்கம், உயிர்களின் இயக்கம், இவற்றைத் தீர்மானிக்கும் ஐம்பூதங்களாக நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் திகழ்வதை இலக்கியங்கள் மொழிகின்றன. ஐம்பூதங்களும் ஐம்புலன்களின் இயக்கங்களும் தொடர்புள்ளவை என்பதை தத்துவார்த்த அடிப்படையில் எடுத்தியம்புகின்றன.*

***"நிலனே நீர் வளி தீ நெடுவானகம் ஆகி நின்ற"*** [73]

***(சுந்தரர் தேவாரம், திருகற்குவி பதிகம், பாடல் எண் 296)***

*என்றும்*

***"வான்ஆகி நிலன்ஆகி அனலும் ஆகி***
***மாருதம் ஆய் இருசுடராய் நீரும் ஆகி"*** [74]

***(பெரியபுராணம், பாடல் எண் 2466)***

*என்றும் திருஞானசம்பந்தர்,*

***"நீருளான் தீயுளான் அந்தரத்துள்ளான***
***சுழியுளாரெனவும் கடலுளாரெனவும்"*** [75]

***(திருஞானசம்பந்தர், தேவாரம், பாடல் எண் 826 )***

*என்றும் இயற்கைப் பின்புலத்தில் அகம், புறம் போன்ற பொருள்களை விளக்க ஐம்பூதங்களைச் சங்கப் புலவர்கள் கையாள, பக்திக் கவிஞர்களோ ஐம்பூதங்களை அவற்றின் சேர்க்கையை இறைவனாகவே கண்டு போற்றினர்.*

***நீர்ஆய் நிலனாய் தீயாய் கால்ஆய் நெடுவான்*** [76]

***(திருவாசம், பாடல் எண் 33, அடி 5)***

*என்னும் அடிகள் இறைவன் ஐம்பூத வடிவங்களாக நின்றதைக் குறிப்பிடுகின்றன.*

*எண்வகை சிவ வடிவங்கள் அட்டமூழுத்தம் என்று வழங்கப்படுகிறது. அட்டமூழுத்தம் என்பதை மண், நீர், அனல், காற்று, ஆகாயம் என்று சொல்லப் பெறும் ஐம்பெரும் பூதவடிவங்களுடன் சூரியன், சந்திரன், உயிர் என மூன்றும் சேர்ந்த எண்வகை இயற்கைப் பொருள் வடிவங்களிலும் சிவவடிவங்கள் நிகழ்வதைக் குறிக்கின்றன.*

## ***4.9. தகவல் பரிமாற்றத்தில் பூதங்கள்***

*ஐம்பூதங்கள் ஒன்றுக்கொன்றுத் தகவல் பரிமாற்ற நிலையில் செயல்புரிவதைக் காணும் போது தகவல் பரிமாற்ற அறிவியல் உலகத் தோற்றத்தின் போதே உருவாகிவிட்டது என்றுக் கூறலாம். மண்ணில் வாழ்வார்க்கே ஆகாயத்தில் உள்ள கோள்களின் இயக்கம் பருவ மாறுதல்களைத் தெரிவிப்பது என்றால் அது தகவல் அறியும் அறிவியல் செய்தியாகும்.*

*அனுப்புநர், செய்தி, பெறுநர் என்ற சூழற்சி தகவல் பரிமாற்றத்திற்கு உரிய நிலைகளாகும். அவ்வகையில் அனுப்புநர் சூரியன் எனில் வெப்பம் செய்தியாகும்.*

பெறுவது கடல், தருவது மழை, கிடைப்பது விளைச்சல். அதனால் மக்கள் மகிழ்வு. மழையின்றேல் வறட்சி. அதனால் பஞ்சம் இச்சூழற்சி முறைகளைக் காணும் போது மண், நீர், காற்று, வானம் ஆகிய நான்கும் தகவல் பரிமாற்றத்திற்கு உதவும் கருவிகளாய் விளங்குகின்றன. பூதுங்களின் செயல்களே பூகோள மக்களை வாழவைக்கிறது.

### 4.10. ஐம்பூதத்தொடர்பு

சூரியனைச் சுற்றியுள்ள ஒன்பது கிரகங்கள், சூரியனிடமிருச்து ஒளியையும் உடலையும் பெறுகின்ற ஊழிகளை ஆண்டு வரும் ஐம்பூதங்களும் அண்டங்களிலும் கிரகங்களிலும் ஊடுருவி உள்ளன. நிலம் ஐம்பூதத் தொடர்புடையது. வளி, தீ, காற்று, மண் எனும் நான்கு பூதங்கள் வாழ்வதற்கு இடமளிக்கும் வானின்று கணிக்கப் பெறுவதே பொழுதாகும். இவ்வகையில் பொழுதுகள் ஐம்பூதத் தொடர்புடையது. அகவாழ்வும் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலத் தொடர்புடையது. ஆகையினால் அகத்துறைக்கு முதற்பொருளைப் பகுத்தனர். ஐம்புலன்களும் ஐம்பூதத் தொடர்புடையது. ஐம்பூதம் என்பது மண் முதலியன. ஐம்பூதம் இன்றேல் மண் என்னும் இவ்வுலகமோ, மக்களோ, புலனோ இல்லை. புலன்வழிப்பட்ட இன்பமும் அகவொழுக்கமும் இல்லை. நிலத்தில் இத்தகைய உணர்வுகள், ஒழுக்கங்கள் நிலைபெற பொழுதுகள் முக்கியக் காரணியாகும்.

### முடிவுகள்

ஐம்பூதங்களின் சேர்க்கையை உலகம் ஆகும்.

வளி என வரூஉம் பூதக்கிளவி என்று தொல்காப்பியர் கூறுவதால் பூதம் எனுஞ் சொல்லாட்சி தொன்மையானதே ஆகும்.

ஐம்பூதங்கள் எனும் தொகை குறளில் தான் அறிமுகம் ஆகியுள்ளது.

பூதங்களை வரிசைப்படுத்தும் போது தொல்காப்பியர் நிலம், தீ, நீர், வளி, விசும்பு என வகுத்துள்ளார்.

பத்துப்பாட்டுள் ஒன்றான மதுரைக்காஞ்சி நீர் நிலனும் தீயும் வளி விசும்போடைந்தும் என வகுத்தும் தொகுத்தும் பாடலடிகளில் விளக்கம் தருகிறது.

எட்டுத்தொகையுள் ஒன்றான பரிபாடல் தீ, வளி, விசும்பு, நிலநீர் ஐந்து என்று வரிசைப்படுத்துகிறது.

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நிலப்பகுப்பு மண்பூத அடிப்படையில் பகுக்கப்பட்டுள்ளது.

கருப்பொருள் பட்டியலில் முதற்கண் அமைந்த தெய்வத்தை வழிபாட்டிற்கு ஏற்ப இன்று ஐம்பூதங்களையும் வழிபாடு செய்ய மக்கள் அமைத்துக் கொண்ட சிவன் கோயில் ஐந்தும் பாரத பூமியில் உள்ளன. நான்கு தமிழ்நாட்டிலும் ஒன்று ஆந்திராவிலும் உள்ளன.

தீ வழிபாடு விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையே ஓர் உருவமாய் நின்ற சிவன் அருணாச்சலேசுவரர் திருக்கோயிலான திருவண்ணாமலையில் இன்றும் கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நாளில் நினைவுபடுதுதும் வகையில் நடைபெற்று வருகிறது. மண் வடிவிலான வழிபாட்டிற்குத் திருவாரூர் தியாகேசர் திருக்கோயிலும் காஞ்சிபுரம் ஏகாம்பரேசுவர் திருக்கோயிலும் ஒதுக்கப்பட்டுள்ளன. விண் எனும் ஆகாய வடிவிற்குச் சிதம்பரம் நடராசர் திருக்கோயிலும், காஞ்சிபுரம் ஏகாம்பரேசுவரர் திருக்கோயிலும் ஒதுக்கப்பட்டுள்ளன. விண் எனும் ஆகாய வடிவிற்குச் சிதம்பரம் நடராசர் திருக்கோயிலும் நீர்வடிவிற்குத் திருவானைக்காவும் ஆந்திரப்பிரதேச எல்லையில் உள்ள திருக்காளத்தி, காற்றுப் பூதத்திற்கு அமைந்த கோயிலுமாக ஐம்பூதக் கோயில்கள் உள்ளன.

சங்க இலக்கியத்தில் ஐம்பூத ங்கள் புலவர்களின் கற்பனை ஆற்றலுக்கு ஏற்பப் பாடல்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளன. கூறவந்த பொருளுக்கு அழுத்தம் தர உவமையாகப் பயன்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

விசும்பு என்றே வானம் எனும் ஆகாயம் பல இடங்களில் குறிக்கப்படுகின்றது.

காற்றுப் பூதம் வளி என்றே அழைக்கப்பெறுகின்றது. கடல்நீர் ஆவியாகி மழைதரும் அறிவியல் செய்தியும் ஐம்பூதச் செயல்களைக் கூறும் விதமாக செய்யுளில் இடம்பெறுகின்றது.

ஐம்பூதங்களும் தகவல் தொடர்பியலில் பங்கு பெறுகின்றது.

நிலமே முதல் தோற்றம் எனக் கருதித் தொல்காப்பியர் ஐம்பூதங்களை வரிசைப்படுத்தும் போது நிலத்தை முதற்கண் கூறியுள்ளார்.

விண், காயம் (ஆகாயம்) என்னும் பெயர்களும் தொல்காப்பியம் கூறினாலும் காயப்பெயராகிய ஆகாயப் பெயர் பக்தி இலக்கியக் காலத்தில் தான் பயின்று வந்துள்ளது.

# பொருளடக்கம்


*5.0.* முன்னுரை

*5.1.* வானுலகு பற்றிய நம்பிக்கை

*5.2.* நாளும் கோளும்

*5.3.* நவகோள்கள்

*5.4.* கிரகச்சுழற்சி

*5.5.* ஞாயிறு

*5.5.1.* ஞாயிற்றின் பல பெயர்கள்

*5.5.1.1.* ஆதி

*5.5.1.2.* என்றூழ்

*5.5.1.3.* எல்லை

*5.5.1.4.* கனலி

*5.5.1.5.* சுடர்

*5.5.1.6.* பருதியஞ் செல்வன்

*5.5.1.7.* வெங்கதிர்ச் செல்வன்

*5.5.2.* தோற்றமும் மறைவும்

*5.5.3.* ஞாயிற்றின் தோற்றம்

*5.5.4.* ஞாயிற்றின் இயல்பு

*5.5.5.* ஞாயிறு வழிபாடு

*5.5.6.* வான்கண்

*5.5.7.* ஞாயிற்றை வேண்டுதல்

*5.5.8.* ஞாயிற்றின் வெம்மை

*5.5.9.* ஞாயிறு பற்றிய உவமை

5.5.9.1. நெருஞ்சிப்பூ

5.5.9.2. தலைவனின் பண்பு

5.5.9.3. அகம் சார்ந்த உவமை

5.5.9.4. புறம் சார்ந்த உவமை

5.5.10. ஞாயிறு பற்றிய நம்பிக்கை

5.6. திங்கள்

5.6.1. மாதப்பெயர்

5.6.2. திங்களின் இயல்பு

5.6.3. திருமணத்திற்கு உகந்த நாள்

5.6.4. பிறை தொழுதல்

5.6.5. தேய்தல் உண்மை

5.6.6. அரவுப் பற்றுதல்

5.6.7. திங்கள் பற்றிய உவமை

5.6.8. உவாமதி

5.7. செவ்வாய்

5.8. புதன்

5.9. வியாழன்

5.10. வெள்ளி (மழைக்கோள்)

5.11. சனி

5.11.1. சனி மீன் பற்றிய நம்பிக்கை

5.12. இராகு

5.13. கேது

5.13.1. இராகு கேது பற்றிய கதை

5.14. கிரகங்கள்

5.15. இராசிகள்

5.16. நாள்மீன்

5.17. சங்க இலக்கியத்தில் நாள்மீன்கள்

5.17.1. கார்த்திகை

5.17.2. திருவாதிரை

5.17.3. உரோகிணி

5.17.4. உத்தரம்

5.17.5. மகம்

5.17.6. பரணி

5.17.7. திருவோணம்

5.17.8. வடமீன் (அருந்ததி)

5.18. பக்தி இலக்கியங்களில் நட்சத்திரங்கள்

5.19 சோதிடம்

5.20. சோதிடத் தகவல்

5.21. தூமகேது

5.22. விண்எரிகற்கள்

5.23. சங்க இலக்கியத்தில் சோதிடக் கூறுகள்

5.24. நவகோள்களின் கோயில்கள்

முடிவுகள்

## 5.0. முன்னுரை

நற்செயல் தொடங்க நாளும் கோளும் பார்க்கும் பழக்கம் தமிழரிடம் உண்டு. காலத்தைப் பொன் போல் போற்றியத் தமிழர் வேளாண்மை நாகரிகம் பரவியக் காலத்தில் விதை விதைக்க, அறுவடை செய்யக் கோள்களின் இயக்க வழியில் கண்ட நாள்களைத் துணைக் கொண்டனர். வேளாண் நாகரிகம் தோன்றிய நாள் தொட்டு கோள்களையும் அவற்றின் இயக்கங்களையும் கண்டு உணர்ந்து செயல்படுத்திய மக்களின் வாழ்வியலை வடித்துக் காட்டியது சங்க இலக்கியம் சங்க கால புலவர் பெருமக்கள் தந்த இலக்கியங்களில் கோள்கள் பதிவு செய்யப்பட்டுள்ள பாங்கினை ஆராயும் போக்கில் இவ்வியல் அமைகிறது. சூரியக் குடும்பத்திலுள்ள சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி ஆகிய கோள்கள் குறித்தும் நிழற்கிரகங்களான இராகு கேதுக்கள் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்ட நிலை பற்றியும் கோள்களின் இயக்கம், கோள்களின் இயக்கங்களைஅடிப்படையாகக் கொண்டு ராசிகள்,நட்சத்திரம் குறித்தும் மக்கள் வாழ்வியலில் இடம்பெறும் நிலை பற்றியும் சோதிடக் கூறுகள் சங்க இலக்யியங்களில் இடம்பெறும் நிலைகுறித்தும் இவ்வியல் ஆராய்கிறது.

## 5.1. வானுலகு பற்றிய நம்பிக்கை

சங்ககாலத்தில் வானுலகு பற்றிய எண்ணமும் சிந்தனையும் மிகுதியாக இருந்தன. இடைவிடாப் போர்களால் அக்கால வீரர்கள் இன்பம் காண முடியவில்லை. தாங்கள் செய்யும் தியாகங்களுக்குப் பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கை கொண்ட மக்கள் வானுலகில் புகழ் கிடைக்கும் என்பதை நம்பினர். அவர்கள் இழக்கத் துணிந்த இளமை, காதல் மேலுலகில் வானுலக மக்களால் ஈடுகட்டப்படும் என்ற நம்பிக்கை, நாட்டம் வீரர்களுக்கு இருந்தமையால் வானியல் பற்றிய ஈர்ப்பு வந்தது.

**"உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்**
**ஒழித்த தாயம் அவர்க்கு உரித்து அன்றே"** [1]

***(புறநானூறு, பாடல் எண் 213, அடிகள் 10-11)***

**"மேலோர் உலகம் எய்தினன் எனாஅ**
**பொத்த அறையுள் போழ்வாய்க் கூகை"** [2]

***(புறநானூறு, பாடல் எண் 240, அடிகள் 6-7)***

போன்றப் பாடலடிகள் பழங்காலத் தமிழர்களின் வானுலகு பற்றிய நம்பிக்கையைக் குறிப்பிடுகிறது.

### 5.2. நாளும் கோளும்

சங்கத்தமிழர்கள் நாட்கள் மீது நம்பிக்கைக் கொண்டவர்களாக விளங்கினர். நல்ல நாளில் ஆரம்பிக்கப்படும் செயல்கள் நலமாக முடியும் என்று நம்பினர். எச்செயலாக இருந்தாலும் அச்செயலுக்கு நல்ல நாள் பார்த்து அச்செயலில் ஈடுபட்டனர். நல்ல நாள் பார்த்தனர், நிமித்தம் பார்த்தனர். தாங்கள் மேற்கொண்ட செயல்கள் வெற்றியோடு முடிய வேண்டுமெனில் நல்ல நாளிலும் நல்ல வேளையிலும் அச்செயல்கள் நடைபெற வேண்டும் என எண்ணினர். நல்ல நாள் பார்க்கும் வழக்கம் அக்காலத்தில் எல்லா மக்களிடமும் இருந்து வந்தது. நல்லநாள் கெட்ட நாள் பார்க்கும் வழக்கம் சமுதாயத்தில் இருந்த முறைமையைப் புறநானூறு குறிப்பிடுகிறது.

**"நாளன்று போகிப் புள்ளிடைத் தட்பப்**
**பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்**
**வறிது பெயர்குநர் அல்லர்"** [3]

***(புறநானூறு, பாடல் எண் 124, அடிகள் 1-3)***

மலையமான் திருமுடிக்காரியைக் காண விரும்பியோர் கெட்ட நாளில் சென்றாலும் தீய புள் எதிர்ப்பட்டிருந்தாலும் கூட வறிதே பெயரார் என்றுப் பாராட்டுகிறார் கபிலர். நாளும் கோளும் கணித்து மன்னனிடம் சென்றுப் பரிசில் பெற்ற நிலையை உணர முடிகிறது.

***"பண்டையத் தமிழ் மக்கள் நாளில் சிலவற்றை நல்ல நாளென்றும் சிலவற்றைக கெட்ட நாள்களென்றும் கொண்டிருந்தனர். விண்மீன்களும் கோள்களும் நிற்கும் நிலை கொண்டே இதனைக் கணித்தனர்"*** [4]

***(சுசீலா கோபால கிருட்டிணன்,***
***சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், பக்கம் 9)***

என்பார் சுசீலா கோபாலகிருட்டிணன்.

நல்ல நேரத்தில் பிறந்தவன் வெற்றி வேந்தனாய் விளங்கிப் பல்லாண்டு வாழ்வான் என்னும் குறிப்பு பொருநராற்றுப்படையில் காணப்படுகிறது.

**"பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி**
**வெவ்வஞ் செல்வன் விசும்பு படர்ந்தாங்குப்**
**பிறந்து தவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தநன்**
**னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப"** [5]

***(பொருநராற்றப்படை, அடிகள் 135-138)***

எனச் சோழன் கரிகாற் பெருவளத்தானின் பிறந்த நாள் குறித்து முடத்தாமக் கண்ணியர் பாடுகின்றார். தான் பிறக்கின்ற காலத்துப் பிறவாதே நல்ல முகூர்த்தம்

*வருமளவும் தாயுடைய வயிற்றிலேயிருந்து பிறந்ததினாலே அரசுரிமைப் பெற்றுப் பிறந்தான் என உரையாசிரியர் விளக்கம் தருகின்றார்.*

*களவுமணம் நிகழும் காலத்தில், கெட்ட ராசியிலும் கெட்ட நாளிலும் காதலியுடன் சேரும் ஒழுக்கம் தலைவனிடம் இல்லை என்பதைத் தொல்காப்பியர்,*

***“மறைந்த ஒழுக்கத் தோரையும் நாளுந்***

***துறந்த ஒழுக்கம் கிழவற் கில்லை”*** [6]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், நூற்பா எண் 133)***

*என்றுக் கூறுகிறார்.*

*நாட்கள் மீது நம்பிக்கைக் கொண்ட சங்ககால மக்கள் நிலங்களில் விதைப்பதற்கும் விதைத்ததை முளைப்பதற்கும் அந்த விளைவை உண்பதற்கும் நல்ல நாள் பார்த்துள்ளனர்.*

***“கடுங்கண் கேழல் உழுத பூழ***

***நன்னாள் வருபதம் நோக்கி குறவர்***

***உழாஅது வித்திய பரூஉக் குரற் சிறுதிணை***

***முந்துவினை யாணர் நாள்புதிது உண்மார்”*** [7]

***(புறநானூறு, பாடல் எண் 168, அடிகள் 4-7)***

*பன்றி உழுத புழுதியில் குறவர்கள் நல்ல நாள் பார்த்து உழாமலே திணையை விதைத்தனர் என்னும் செய்தியின் மூலம் அவர்கள் விதைப்பதற்கு நல்லநாள் பார்த்து வந்தது விளக்கம் பெறுகிறது.*

*தீயகோள்கள் நீங்கிய நல்ல நாள் வளமைக்குரிய நாளாகக் கருதப் பட்டுள்ளது. நாளும் கோளும் நாள் தவறாமல் நொடி தவறாமல் தத்தம் வீதியிலே விண்ணிலே இயங்கி வருவதினால் உலகம் ஒரு நிலையில் நிற்பதாகச் சங்கத் தமிழர்கள் கருதியுள்ளனர். இவற்றுள் ஏதேனும் ஒன்றின் நிலை தவறுமாயின் உலகிற்குக் கேடு உண்டாகும் என்ற நம்பிக்கையும் உடையவர்களாக இருந்துள்ளனர். தங்களது வாழ்க்கையில் நாள் கோள்களின் நிலையிலேயே நற்காரியம் தொடங்குதல் வேண்டும் என்றும் கருதியுள்ளனர் என்பதுத் தெரிகிறது.*

*ஞாயிறு வேறுபடத் தோன்றுதல், எரிநட்சத்திரம் கீழே விழுதல் கெட்ட நாளிற்கு அறிகுறி என்ற நம்பினர். எரிநட்சத்திரம் ஒன்று கிழக்கும் வடக்கும் செல்லாமல் வானத்திலிருந்துப் பேரொளியாய் கீழே விழுந்தது. அந்த நட்சத்திரம்*

விழுந்ததன் பயனாக அந்நாள் அரசனுக்குத் தீங்கு வந்து அவன் உயிர் சென்ற நாளாக மாறியது என்பதை,

**"கனைஎரி பரப்பு கால்எதிர்ப்பு பொங்கி**
**ஒருமீன் வீழ்ந்தன்றால் விசும்பினானே"** [8]

***(புறநானூறு, பாடல் எண் 229, அடிகள் 11-12)***

எனும் பாடல் வழி அறியமுடிகிறது. எரிநட்சத்திரம் கீழே வீழ்தல் நாட்டிற்குத் தீங்கு விளைவிக்கும் என்பதை நம்பி வந்துள்ளனர்.

### *5.3. நவகோள்கள்*

வானமண்டலத்தில் சூரியன் தலைமை கோளாக விளங்குகிறது. உலகிற்கு ஒளி தோன்றும் காலையில் சூரியன் கதிர்பரப்பி எழுகிறான். கதிரவன் பகலவன், ஞாயிறு எனப் பல பெயர் கொண்டு அழைக்கப்பட்டாலும் ஞாயிறு எனும் சொல்லாட்சியே பழந்தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. செந்நிறக் கதிரோடு காலையில் தோன்றி பகல் எல்லாம் வானில் ஊர்ந்து மாலையில் மறைகிறான். அவன் செல்லும் ஒளிப்பாதை ஞாயிற்று மண்டிலம் எனப் பெயர் பெறும்.

**"செஞ்ஞாயிற்றுச் செலவும்  அஞ்ஞாயிற்றுப்**
**பரிப்பும் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்"** [9]

***(புறநானூறு, பாடல் எண் 30, அடிகள் 1-2)***

எனும் அடிகள் சூரிய மண்டிலம் ஒளியினைக் கொண்டு விளங்குவதாகக் கூறுகிறது. இதனைக் கோள் என அறிவியல் பாகுபடுத்தியுள்ளது. திங்கள் என்றச் சந்திரனுக்கு சூரியனிடமிருந்து ஒளியைக் கொள்வதால் கோள் என்றப் பெயர் வந்துள்ளது. சூரியனிடமிருந்து ஒளியைக் கொள்ளும் துணைக்கோள் சந்திரன் ஆவான். கோளைக் கிரகம் எனும் சொல்லால் சோதிடம் குறிக்கிறது. கிரகம் எனும் சொல்லிற்கு அலைந்து திரிவது என்பதுப் பொருளாகும். நவகோள்கள் யாவும் வானில் நகர்ந்துத் திரிவதால் வடசொல்லில் கிரகம் என்றே அழைத்தமை பொருத்தமுடையதாகும். சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி ஆகிய ஏழுடன் நிழற் கிரகங்களான இராகு, கேது இரண்டும் சேர்ந்து கிரகங்கள் ஒன்பது ஆகின்றன. அவற்றை நவக்கிரகங்கள் என்று அழைப்பர். நவம் என்றால் ஒன்பது ஆகும். நவமி என்ற திதி, சந்திரன் வளர்ச்சியில் ஒன்பதாம் நாளாகும். தேய்விலும் ஒன்பதாம் நாள் நவமி என்று அழைக்கப்படுகிறது.

*வடமொழியில் நவம் என்றச் சொல்லுடன் கோள்கள் சேர்ந்து நவகோள்கள் என்று அழைக்கப்பெறுகின்றன. சிவன் கோயில்களில் நவக்கிரகங்கள் வடகிழக்குப் பகுதியில் அமைக்கப்பட்டிருக்கும். திருச்சுற்றில் அக்கோள்களை வழிபடும் நிலையை நோக்க நவகோள்கள் தெய்வ நிலையில் மதிக்கப்படும் போற்றுதலுக்குரியவையாக இருக்கின்றன.*

*வானத்தில் சூரியனும் சந்திரனும் எவரும் காணும் நிலையில் உள்ளதால் மண்டல கிரகங்கள் என அவை கூறப்படுகின்றன. வானில் இரவில் காணும் விண்மீன்களின் கூட்டங்களை இணைத்து வடிவம் கண்டு நட்சத்திர அடிப்படையில் அழைக்கப் பெறும் கோள்களான செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி ஆகிய ஐந்தும் தாரா கிரகங்களாகும். தாரா என்றால் நட்சத்திரம் என்று பொருள்.சூரிய சந்திரச் சுற்றுப் பாதைகளில் ஏறுபடும் இடைவெளியில் உள்ள நிழல் பகுதிக்கு இராகு கேது என உருவகப் பெயர் தந்துள்ளனர். சாயாக் கிரகம் அல்லது நிழல்கிரகம் எனவும் அவற்றுள் இராகு கரும்பாம்பு என்றும் கேது செம்பாம்பு என்றும் அழைக்கப்பட்டுள்ளன.*

### *5.4. கிரகச்சுழற்சி*

*பூமி உட்பட கிரகங்கள் அனைத்தும் சூரியனைச் சுற்றும். இராகு, கேது தவிர ஏனையவை வலப்பக்கமாகவே சுற்றி வரும்.*

***"உலகம் உவப்ப வலனேர்பு திரிதர"*** [10]

***(திருமுருகாற்றுப்படை, அடி 1)***

*என்று திருமுருகாற்றுப்படையில் பூமி வலமாகச் சுற்றும் நிலை குறிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு கோளும் தனது அச்சில் தானே சுழலுவதற்குக் கிரகச்சுழற்சி (*Spinning*) என்றுப் பெயர். கிரகங்கள் தமக்குரிய நீள்வட்டப் பாதையில் (*Ellipricalorpit*) சூரியனைச் சுற்றி வருகின்றன. நீள்வட்டப் பாதையில் இடம்பெயர்வதை 360 டிகிரி பாகை எனக் கணக்கிட்டுள்ளனர். இந்த 360 டிகிரியே சோதிட ராசிக் கட்டத்திலும் உள்ளது.*

*சோதிடத்தில் இராசிக்கட்டம் பன்னிரெண்டும் மாதங்களாகும். ஒவ்வொரு மாதமும் ஒரு கட்டம். சூரியன் ஒரு கட்டத்தைக் கடக்க ஒரு மாதம் ஆகும். சந்திரன் கடக்க இரண்டே கால் நாள்கள் ஆகும். செவ்வாய் ஒன்றரை மாதம், புதன் ஒரு மாதம், வியாழன் ஓர் ஆண்டு, சுக்கிரன் ஒரு மாதம், சனி இரண்டரை ஆண்டுகள், இராகு ஒன்றரை, கேது ஒன்றரை ஆண்டுகள் எனக் காலக் கணிதர்கள் கணக்கிட்டுள்ளனர்.*

இன்றைய விஞ்ஞானிகளும் இக்குறிப்பை ஒட்டியே காலக்கணிப்பைக் குறிப்பிட்டுள்ளனர். விண்வெளி (Space) முட்டை வடிவமானது.

**"அண்டமெனும் பெயர் முட்டையும் விசும்புமாம்"** [12]

***(பரிபாடல், பாடல் எண் 1, அடி 2)***

எனும் பரிபாடல் அடிகளும் அதனை உணர்த்தி நிற்கின்றன. வானவெளியில் நட்சத்திரங்கள் தோன்றுவதை,

**"வானம் மீன் பல பூப்பின்**
**ஒருவழிக் கருவழிஇன்றிப்"** [14]

***(புறநானூறு, பாடல் எண் 129, அடிகள் 7-8)***

எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது. விண்மீன்கள் நாள்மீன் என்றும் கோள்மீன் என்றும் இருவகைப்படும். கோள்மீன் பற்றியக் குறிப்புகள் புறநானூற்றில் காணப்படுகின்றன. கபிலர் பாடியப் பாடலில் பறம்பு மலையில் சுனைகளும் நீர்நிலைகளும் வானத்தில் உள்ள விண்மீன்களைப் போன்று அதிக எண்ணிக்கையில் இருந்ததை,

**"வான்கண் அற்று அதன் மலையே ஆங்கு**
**மீன்கண் அற்று அதன் சுனையே"** [15]

***(புறநானூறு, பாடல் எண் 109, அடிகள் 9-10)***

எனும் அடிகள் விளக்குகின்றன. விண்மீன்கள் பல ஒளி செய்யும் வானம் வரை முழங்கும் முரசு என்பதை,

**"பன்மீன் இமைக்கும் மாக விசும்பின்"** [16]

***(புறநானூறு, பாடல் எண் 270, அடி 1)***

எனும் அடி குறிப்பிடுகின்றது.

**"மாரி வானத்து மீன் நாப்பண்"** [17]

***(புறநானூறு, பாடல் எண் 396, அடி 26)***

எனும் அடிகளில் மழை முகில் நிலவும் விசும்பின் கண் தோன்றும் விண்மீன்களைக் குறித்து வந்துள்ளது. பதிற்றுப்பத்தில் குமட்டூர் கண்ணனார்,

**"திங்கள் ஞாயிறு கனையழல்**
**ஐந்தொருங்கு புணர்ந்த விளக்கந் தனையை"** [18]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 14, அடிகள் 3-4)***

என்றப் பாடல் கோள்மீன் ஏழு என்பதைக் குறித்துள்ளது.

சூரியனின் நகர்வு வழி பகற்பொழுதைக் காலை, மதியம், மாலை எனப் பகுத்துக் காலங்களை அறிந்துள்ளனர். உதிக்கும் இடம் கிழக்கு, மறையுமிடம் மேற்கு எனத் திசையைக் கணக்கிட்டுள்ளனர். சூரியன் மறைவு முதல் அடுத்த மறைவு தோன்றும் வரை ஒரு நாள் என வரையறை செய்துள்ளனர். ஒரு நாளைக் குறிப்பிட சூரிய இயக்கமே துணை நின்றது. மேனாட்டார் நள்ளிரவு முதல் மறு நள்ளிரவு வரை ஒருநாள் என்பர். தமிழர்களோ சூரியனின் பயணம் அதிகாலையில் தொடங்கி மறுநாள் அதிகாலை வரை உள்ளதாகக் கணக்கிட்டுக் காலத்தை வரையறை செய்தனர். உதயம் முதல் உதயம் வரை ஒருநாள் என்றே தமிழ்க்கணியர்கள் கூறுவர்.

உதய காலம் உழைப்பாளர் பணி தொடங்கும் காலம். வேளாண்மையில் ஈடுபட்டோர் பகலில்தான் பணிபுரிவர். பகல் நேரம் குறைந்து இரவு நேரம் கூடும் மாதங்கள் உண்டு. கார்த்திகை மாதம் கலம் கழுவப் பொழுதில்லை என உழுவோர் பேசுவதைக் கிராமங்களில் கேட்கலாம். பகல்நேரம் குறைவதையே இம்முதுமொழி சுட்டுகிறது.

> **“வருடத்தில் இரண்டு நாட்கள் மட்டுமே பூமியின் எல்லாப் பாகங்களிலும் சமமான இரவும், சமமான பகலும் இருக்கும்”[19]**
>
> ***(விஞ்ஞானக் கட்டுரை நாளிதழ், தினத்தந்தி, 07.01.2015, பக்கம் 3)***
>
> **“சூரியப் பயணம் சூரியப்பாதையில் 24 டிகிரி சாய்வைக் கொண்டது. இந்தச் சாய்ந்த கோணம் (Obiliquity) எனப்பட்ட அளவே ஞாயிற்றின் பல்வேறு நிகழ்வுகளை அறிந்து கொள்ளக் காரணம் ஆயிற்று” [20]**
>
> ***(ம. சோ. விக்டர், வானியலும் தமிழரும், பக்கம் 50)***

சூரியனின் உச்சிப்பொழுதுக்குச் செந்தூக்கு எனப்பெயர் தந்துள்ளார் தொல்காப்பியர்.

> **“மண்டிலம் குட்டம் என்றிவை இரண்டும்**
> **செந்தூக்கு இயல என்மனார் புலவர்” [21]**
>
> ***(தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா எண் 1374)***

தொல்காப்பியருக்கு முன்னரே இவ்வழக்கு இருந்ததை **என்மனார் புலவர்** எனும் தொடர் காட்டுகின்றது.

இலக்கியத்தில் மாலைநேரம் பிரிந்துரைக் காதலர்க்குக் கையற்ற நிலையாகும் என்பதைக் கதிரவனோடு இணைத்துக் கூறுகிறது குறுந்தொகை.

***“எல்லை கழிய முல்லை மலரக்***

***கதிர் சினம் தணிந்த கையறு மாலை”*** [22]

***(குறுந்தொகை, பாடல் எண் 387, அடிகள் 1-2)***

*வெப்பக்கிரகமானச் சூரியனின் வெயில் பட்ட தாமரையின் தோற்றத்தை,*

***“வாங்கு கதிர் தொகுப்பக் கூம்பி, ஐயென***

***அலங்கு வெயிற் பொதிந்த தாமரை”*** [23]

***(குறுந்தொகை, பாடல் எண் 376, அடிகள் 4-5)***

*எனக் கூறுவதால், புலவனின் கற்பனைக்குத் துணையாகக் கதிரவன் விளங்குகிறான்.*

***“பூமியிலிருந்து சுமார் 15 கோடி கிலோமீட்டர்க்கு அப்பால் அமைந்துள்ள சூரியன் தான் மிக அருகே அமைந்துள்ள விண்மீனாகும். சூரியக் குடும்பத்தின் தலைவனாக அமைந்த சூரியன் தனது ஈர்ப்பு ஆற்றலால் எட்டுக் கோள்களையும் அவற்றின் துணைக் கோள்களையும், குறுங்கோள்களையும், வால் நட்சத்திரங்களையும் அவற்றின் கற்களையும் கட்டுப்படுத்தி இயங்கச் செய்கிறது.”*** [24]

***(ப. ஐயம்பெருமாள், தமிழக வானவியல் சிந்தனைகள், பக்கம் 48)***

*சூரியன் மே-ம் முதல் 12 ராசிகளிலும் ஒவ்வொரு மாதமும் நிற்பான். நெடுநல் வாடையில்,*

***“திண்நிலை மருப்பின் ஆடுதலையாக***

***விண்ஊர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து”*** [25]

***(நெடுநல்வாடை, அடிகள் 161-162)***

*எனக் கூறுகிறது. ஆடு என்பது மே-த்தைக் குறிக்கும்.*

*கண்கெட்டபின் சூரிய நமஸ்காரமா என்ற வினாவும் மாலை வெயில் மாமருந்து என்ற முதுசொல்லும் சூரிய ஒளியின் மருத்துவப் பயனை விளக்குகின்றது.*

*சோவியத் அறிஞர் விதாலி பூர்ணிகா பிறப்பு முதல் இறப்பு வரை என்னும் நூலில்,*

***“சமயத்தில் நம்பிக்கை கொண்டவர்களுடையக் கூற்று ஒருபுறம் இருக்க, மருத்துவ வல்லுநர்களும் சூரியஒளியில் மனித உடல் தேவையான சக்தியைப் பெற்றுக் கொள்வதை உறுதிசெய்கின்றனர்”*** [26]

***(டாக்டர் அ. சிவபெருமாள், இலக்கியங்களில் வானியல், பக்கம் 87)***

என்று அ.சிவபெருமாள் கூறுகிறார்.

**கோள்கள்**

தொல்காப்பியத்தில் ஞாயிறு, திங்கள் ஆகிய இரண்டு கோள்கள் மட்டுமே குறிக்கப்பட்டுள்ளன.

***“காலம் உலக முயிரே யுடம்பே***
***பால்வரை தெய்வம் வினையே பூதம்***
***ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்***
***ஆயீ ரைந்தொடு பிறவு மன்ன***
***ஆவியின் வரூஉம் கிளிவியெல்லாம்***
***பால்பிரிந் திசையா யுயர்திணை மேன”*** [28]

***(தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், நூற்பா எண் 58)***

கிளவியாக்கத்தில் காலம் என்று தொடங்கும் நூற்பாவில் ஞாயிறு திங்கள் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

காலம், உலகம், உயிர், உடம்பு, தெய்வம், வினை, பூதம், ஞாயிறு, திங்கள், சொல் இவற்றோடு பிறவும் என்பதற்கு வெள்ளி, செவ்வாய் என்றுஆ; பொருள் கொள்ளப்படுகிறது.

***“ஞாயிறு திங்கள் அறிவே நாணே***
***கடலே கானல் விலங்கே மரனே***
***புலம்புறு பொழுதே புள்ளே நெஞ்சே***
***அவையல பிறவு நுதலிய நெறியாற்***
***சொல்லுந போலவுங் கேட்டுந போலவுஞ்***
***சொல்லியங் கமையும் என்மனார் புலவர்”*** [29]

***(தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூற்பா 192)***

எனும் நூற்பாவிலும் ஞாயிறு, திங்கள் ஆகிய இரண்டு கோள்கள் மட்டுமே குறிக்கப்பட்டுள்ளன.

வானில் விண்மீன்கள் நகர்ந்துஷெ; செல்வதைக் காணலாம். இவற்றையே நமது முன்னோர்கள் கோள்கள் என அழைத்துள்ளனர்.

**"நாள் மீன் விராஅய கோள்மீன் போல"** [30]

***(பட்டினப்பாலை, அடி 68)***

**"நாள் கோள் திங்கள் ஞாயிறு கனைஅழல்"** [31]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 11, அடி 36)***

ஆகியச் சங்க இலக்கிய அடிகள் நாள்மீனையும் கோள்மீனையும் குறிப்பிடுகின்றன. கோள் என்பதற்கு,

**"கிரகம், கொள்ளல், நாள்"** [32]

***(யாழ்ப்பாண அகராதி, பக்கம் 353)***

என்னும் பொருள்களை யாழ்ப்பாண அகராதி தருகிறது.

பழந்தமிழர் ஐம்பூதங்களான இயற்கை மீது அச்சம் கொண்டனர். இருப்பினும் கோள்களின் இயக்கம் மனிதவாழ்வியலில் மாற்றம் செய்யும் என்று உணர்ந்தனர். கோள்களின் இயக்கம் நன்மையும் தீமையும் கொண்டு வருவதை நம்பினர்.

கோள்களின் இயக்கங்களால், மனிதன் வாழ்வில் நன்மைகள், தீமைகள் உண்டாவதாக இன்றும் மக்கள் நம்புகின்றனர். கோள்களின் மாற்றத்தால் ஏற்படும் விளைவுகளைத் தமிழ் கணியர்கள் அக்காலத்தே கணித்துள்ளதைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

**"செஞ்ஞாயிற்றுச் செலவும்**
**அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்**
**பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்**
**வளி திரிதரு திசையும்**
**வறிது நிலைஇய காயமும் என்றுஇவை**
**சென்று அளந்து அறிந்தோர்போல என்றும்**
**இணைந்து என்போரும் உளரே, அனைத்தும்"** [34]

***(புறநானூறு, பாடல் எண் 30, அடிகள் 1-7)***

என்றப் பாடல் ஞாயிற்று மண்டலம், ஞாயிற்றைச் சுற்றியிருக்கும் கோள்களின் வரிசையைக் குறிப்பதாக உள்ளது. பரிப்பு சூழ்ந்த மண்டிலம் என்பது சூரியக் குடும்பத்தைக் குறிப்பதாகும். ஆகாயத்துக்குச் சென்று அறிந்தவர் போல ஞாயிற்றின்

பாதை, அதன் இயக்கம், அது செல்லும் இடப்பரப்பு ஆகியவற்றையும் ஆகாயத்தின் தன்மையையும் தம் கருத்தளவையால் நுட்பமுடன் அறிந்து கூறும் வானியல் அறிவு வாய்க்கப் பெற்றவர் இருந்துள்ளனர் என்பதைக் கூறும் வகையில் இப்பாடல் அமைந்துள்ளது.

ஆகாயம், சூரியன், சூரியனைச் சுற்றிவரும் கோள்களின் இயக்கங்கள் இவற்றைப் பழந்தமிழர் அறிந்துள்ளனர். அதனைத் தங்கள் வாழ்வியல் சூழலோடு ஒப்பிட்டும் பார்த்துள்ளனர் என்பதை,

**"வாள்நிற விசும்பின் கோள்மீன் சுமந்த**
**இளங்கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து"** [36]
***(சிறுபாணாற்றுப்படை, அடிகள் 242-243)***

எனும் பாடலும் உறுதிச் செய்கிறது.

### 5.5.ஞாயிறு

ஞாயிறு உலகின் முழுமுதற் பொருளாகும். சூரியப் பிரபஞ்சமே முதன்மையானது.

> ***"உலக உயிர்கள் வாழ்விற்குத் தேவையான வெப்பத்தையும் ஒளியையும் தருகிறது. ஞாயிற்று மண்டிலத்தின் மையத்தில் உள்ள ஞாயிறு உலகின் ஆதாரமான விண்மீனாகும். ஞாயிற்றை மையமாகக் கொண்டு விண்ணிலுள்ள விண்கற்கள், தூசிகள், வால்வெள்ளிகள் போன்றவை சுற்றி வருகின்றன. சூரியக் குடும்பத்தில் மையமாக விளங்குவது சூரியன். தன்னொளியின் தன்மையுடன் ஒரு பந்து போன்ற வடிவமுடையது. அதன் விட்டம் ஏறக்குறைய 1,395,000 கி.மீ ஆகும். புவியைவிட, ஏறத்தாழ 14,96,00,000 கி.மீ தொலைவில் உள்ளது. நொடிக்கு 2,99,792 கி.மீ வேகத்தில் செல்லும் ஒளி சூரியனிலிருந்து புவியை அடைய ஏறக்குறைய 8.5 நிமிடங்களாகின்றன"*** [37]
>
> ***(அறிவியல் களஞ்சியம், தொகுதி 10, பக்கம் 627)***

என்று அறிவியல் களஞ்சியம் கூறுகிறது.

### 5.5.1. ஞாயிற்றின் பல பெயர்கள்

ஞாயிறு இலக்கியங்களில் அதன் வெம்மையும் ஒளியும் கொண்ட தன்மையால் பல பெயர்களால் அழைக்கப்பெறுகின்றது. சங்க இலக்கியத்தில் என்றூழ், எல்லை, கனலி, ஆதி, பருதியஞ்செல்வன் மண்டிலம், பல்கதிர்செல்வன், வெங்கதிர்செல்வன், கதிரோன், சுடர், பகன் என்னும் பெயர்களில் ஞாயிறு குறிப்பிடப்படுகிறது.

### *5.5.2. ஆதி*

*உலகம் முழுமைக்கும் ஞாயிற்று மண்டிலமே பிரதானமாக அமைவதால், ஆதி என்னும் பெயர் பெற்றுள்ளது. சூரிய இயக்கம், சூரியப் பிரபஞ்சவெளியின் மாற்றங்கள், இவையே உலகத்தின் இயற்கை மாற்றங்களுக்குக் காரணமாகின்றன. அதனை நன்கு உணர்ந்திருந்த தமிழர்கள் ஞாயிற்றை ஆதி உருவமாகக் கண்டனர். இதனை,*

**"*மலர்வாய் மண்டிலத்து அன்ன நாளும்*"** [38]

***(புறநானூறு, பாடல் எண் 175, அடி 9)***

*எனப் புறநானூறு கூறுகிறது.*

### *5.5.3. என்றூழ்*

*ஞாயிற்றினை என்றூழ் என்று அழைப்பர். தலைவன் சூரியன் மறையும் மாலைப் பொழுதின்கண் வருவான். தலைவியின் ஆற்றாமை நீங்கும் என்றுத் தோழி கூறுவதாக,*

**"*படரும் பைபயப் பெயரும், சுடரும்*<br>*என்றூழ் மாமலை மறையும் இன்று அவர்*<br>*வருவர்கொல் வாழி தோழி*"** [40]

***(குறுந்தொகை, பாடல் எண் 215, அடிகள் 1-3)***

*என்று அமைந்த குறுந்தொகைப் பாடல் சூரியனை என்றூழ் என்றுக் குறிப்பிடுகிறது. என்றூழ் ஞாயிற்றையும் வெயிலையும் குறிக்க வந்து 25 இடங்களில் இடம்பெறுகிறது.*

### *5.5.4. எல்லை*

*எல்லை என்பதற்குச் சூரியன், நாள்முடிவு, பகற்பொழுது என்னும் பொருளாகும்.*

*அகராதி பல உயிர்களும் மாட்சிமைப் படுவதற்குக் காரணமாகியக் கதிரவன் மிகுதியாகக் கதிர்களைப் பரப்புதலைக் கூறும் பொருநராற்றுப்படை,*

**"*எல்லைத் தருநன் பல்கதிர் பரப்பி*"** [41]

***(பொருநராற்றுப்படை, அடி 233)***

*என்றுக் கதிரவனை, எல்லை என்றுக் குறிப்பிடுகிறது.*

குறுந்தொகை, மேல்திசையில் மறையும் கதிரவனை,

***"எல்லை சேரலின் இருள் பெரிது பட்டன்று"*** [42]

***(குறுந்தொகை, பாடல் எண் 355, அடி 3)***

என்ற அடியில் எல்லை என்றுக் குறிப்பிட்டுள்ளது.

### *5.5.5. கனலி*

நெருப்புப்போன்று விளங்கும் சூரியன் கனலி என்று நெருப்பு விளங்கும் ஞாயிற்றின் கொடிய வெம்மைத் தன்மையை,

***"நெருப்பு அவிர் கனலில் உருப்புச் சினம் தணியக்"*** [43]

***(ஐங்குறுநூறு, பாடல் எண் 388, அடி1)***

என்றுச் சூரியனைக் கனலி என்றுக் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. இதே செய்தியைப் புறநானூறு சுடர்விளங்கும் கதிர்களையுடைய ஞாயிற்றினை கனலி என்றுக் குறித்துள்ளது.

***"அலங்குகதிர்க் கனலி"*** [44]

***(புறநானூறு, பாடல் எண் 35, அடி 6)***

ஞாயிறும், திங்களும் வலம் வருகின்றக் கடல்சூழ் உலகினைக் குறிப்பிடும் பெரும்பாணாற்றுப்படை அடிகளும் சூரியனை வெம்மை மிகுந்த கனலி என்னும் சொல்லால் குறிப்பிடுவதை,

***"வெந்தெறற் கனலியொடு மதிவலம் திரிதரும்***
***தண்கடல் வரைப்பில்"*** [45]

***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 16-17)***

எனக் குறிப்பிடுகின்றது.

### *5.5.6. சுடர்*

உலகின் இரு சுடராக ஞாயிறும், திங்களும் விளங்குகின்றன. சூரியன் சுடர் என்றும் குறிக்கப் பெற்றுள்ளதை,

***"ஏர்தரு சுடரின் எதிர்கொண்டாங்கு"*** [46]

***(புறநானூறு, பாடல் எண் 155, அடி 5)***

என்றுப் புறநானூறு சுட்டுகின்றது.

எழுகின்ற ஞாயிற்றினை ஏர்தரு சுடர் என்றுக் குறிப்பிடுகின்றது. கடலின் வண்ணம் ஓங்கி எழுகின்ற, சுடுகின்றக் கதிரையுடைய ஒளிபொருந்திய ஞாயிறு சுடர் என்றுச் சுட்டப்பெறுவதை,

**"இலங்கு சுடர் மண்டிலம் புலம்தலைப்பெயர்ந்து"** [47]

***(அகநானூறு, பாடல் எண் 367, அடி 1)***

என்று அகநானூறு கூறுகின்றது. கனலி என்னும் சொல் சங்கஇலக்கியத்தில் 11 இடங்களில் இடம்பெற்றுள்ளது.

### 5.5.7. பருதியஞ்செல்வன்

கதிரவன் பருதியஞ்செல்வன் என்று குறிக்கப்பெறுகின்றது. இரவில் மறைந்த பகற்பொழுதினை உலகத்திற்குத் தோற்றுவிக்கும் வண்ணம் பலகிரணங்களை உடைய ஞாயிறு என்பதை,

**"பகல்செய் பல்கதிரப் பருதிஅம் செல்வன்**
**அகல்வாய் வானத்து ஆழி போழ்ந்தென"** [48]

***(அகநானூறு, பாடல் எண் 229, அடிகள் 1-2)***

என்று அகநானூறு நவில்கின்றது.

**"ஒரு கால் ஊர்திப் பருதிஅம் செல்வன்"** [49]

***(அகநானூறு, பாடல் எண் 360, அடி 2)***

எனும் அடிகள் சூரியனைப் பருதியம் செல்வன் என்றுக் கூறுவதைப் பெறமுடிகிறது. பரிதி என்னும் சொல்லால் குறிக்கப்பட்டு 14 இடங்களில் கூறப்படுகிறது.

### 5.5.8. வெங்கதிர்ச்செல்வன்

பரந்து விரிந்த இடமுடைய அழகிய விண்ணில் செறிந்துள்ள இருளை அகற்றும் வெம்மையான கதிர்களையுடைய ஞாயிற்றுக் கடவுள் என்றுச் சூரியன் குறிப்பிடப்படுவதை,

**"வெங்கதிர்ச் செல்வன் போலவும்"** [51]

***(புறநானூறு, பாடல் எண் 56, அடி 22)***

எனும் புறப்பாடல் சூரியனை வெங்கதிர்ச் செல்வன் என்றுப் பேசுகின்றது.

### *5.5.9. தோற்றமும் மறைவும்*

*ஞாயிற்றின் தோற்றமும் மறைவும் ஒரு நாளினை உருவாக்கி, உலக உயிர்களின் வாழ்க்கை முறையை ஒழுங்கான சுழற்சியாகக் கொண்டு வருகிறது. இரவு பகல் அமைந்து துயிலெழுதல் முதல் ஓய்வெடுத்தல் வரையிலான அன்றாட வாழ்வினைச் சீராக பகுத்துணரச் செய்கிறது. அத்தகைய ஞாயிற்றின் தோற்றமும் மறைவும் மக்களின் வாழ்க்கைச் சூழலோடு பொருந்தி வருவதைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. இயற்கையான நிகழ்வைத் தன் வாழ்வியல் சூழலோடு இணைத்துக் கொண்டு இயற்கையோடு இயைந்த வாழ்வைப் பழந்தமிழர் வாழ்ந்துள்ளனர்.*

### *5.5.10. ஞாயிற்றின் தோற்றம்*

*ஞாயிற்று மண்டிலம் ஒளியை உலகுக்கு கொடுத்த பின்னரே உலக உயிர்கள் புத்துயிர் பெறுகின்றன. ஒவ்வொரு நாளின் ஞாயிற்றின் உதயமும் மனித மனத்திற்குப் புத்துணர்ச்சியை அளிக்கிறது. விரிந்துவரும் கதிர்களைக் கொண்ட இள ஞாயிற்றின் கிரணங்கள் பட்டுப் பாறைகள் ஒளிவீசிக் கொண்டிருப்பதை கலித்தொகையில்,*

***"கதிர்விரி கனைசுடர்க் கவின்கொண் நனஞ்சாரல்***
***எதிர்எதிர் ஓங்கிய மால்வரை அடுக்கத்து"*** [52]

***(கலித்தொகை, பாடல் எண் 44, அடிகள் 1-2)***

*எனும் அடிகளில் புலப்படுத்துகிறது.*

*காலையில் ஞாயிறு தோற்றம் பெறும் திசையில் அதன்காட்சி இனியது. ஞாயிறு தோன்றும் கீழ்த்திசை வானம் காலை வானம் என்று அகநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.*

***"காலை வனாத்துக் கடுங்குரற் கொண்மூ"*** [53]

***(அகநானூறு, பாடல் எண் 174, அடி 7)***

*என்ற அடி விளக்கி நிற்கிறது.*

### *5.5.11. ஞாயிற்றின் இயல்புகள்*

*பகற்பொழுதில் ஒளி தருவது ஞாயிறு. பகல்செய் மண்டிலம், மலர்வாய் மண்டிலம், சுடர் மண்டிலம், மைஅறு மண்டிலம் என்றெல்லாம் சூரியனாகிய ஞாயிற்றின் மண்டலத்தினை இலக்கியங்கள் சுட்டுகின்றன.*

ஞாயிற்றின்று எழுகின்ற கதிர் ஒளியின் விளக்கம் வெம்மை முதலிய இயல்புகளைக் குறித்தும் பல செய்திகள் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

**"விரிகதிர் ஞாயிறு விசும்பு இவர்ந்தன்ன"** [54]

***(புறநானூறு, பாடல் எண் 228, அடி 8)***

**"தெறு கதிர்க் கனலி"** [55]

***(புறநானூறு, பாடல் எண் 302, அடி 24)***

**"அழல் போல் வெங்கதிர்"** [56]

***(அகநானூறு, பாடல் எண் 1, அடி 10)***

போன்றத் தொடர்கள் ஞாயிற்றின் இயல்புகளை விளக்குகின்றது. பல கிரணங்களை உடையக் காரணத்தால்,

**"விளங்கு பகல் உதவி பல்கதிர் ஞாயிறு"** [57]

***(அகநானூறு, பாடல் எண் 99, அடி )***

என ஞாயிறு சிறப்பிக்கப்பட்டுள்ளன.

கிழக்குத் திசையிலே உலகைக் கவ்வியுள்ள இருளைத் தன் கதிர்களாகிய கைகளினால் விரட்டி உலகம் உவப்பக் கடலினின்றும் செந்நிற வண்ணம் எங்கும் பரவ விடியற்காலத்தே காட்சித் தருவது ஞாயிறு. இதன் இயல்பினை உணர்ந்த அக்கால மக்கள், தங்கள் வாழ்வியல் சூழலோடு ஞாயிற்றின் செயல்பாட்டை இணைத்துப் பார்த்திருக்கின்றனர்.

**"புல்இருள் விடிய புலம்புசேண்அகல**
**பாய்இருள் நீங்க கல்கதிர் பரப்பி**
**ஞாயிறு குணமுதல் தோன்றியா அங்கு"** [58]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 59, அடிகள் 4-6)***

பசிய இருளானது நிறைந்த இராப்பொழுது நீங்கி, உலகத்து உயிர்களுடைய வருத்தம் ஞாயிற்றின் தோற்றத்தால் அகன்று சென்றது. உலகெங்கும் பரவிய இருள் நீங்கும் படி பல கிரணங்களைப் பரப்பி, சூரியன் கீழ்த்திசையில் தோன்றியதைக் கூறுகிறது.

**"பொய்தீர் உலகம் எடுத்த கொடிமி**
**மைஅறு மண்டிலம் வேட்டனள்"** [59]

***(கலித்தொகை, பாடல் எண் 141, அடிகள் 11-12)***

என்னும் கலித்தொகை அடிகள் ஞாயிற்றினை மாசற்ற பொருளாகக் கூறுகிறது. பொய்யற்ற, மாசற்ற ஞாயிற்று மண்டிலம் நன்மக்கள் உயர்த்திப் புகழ்ந்து கூறும் வண்ணம் தோன்றியதை விளக்குகிறது.

**"மாக்கடல் நிவந்து எழுதரும்**

**செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ"** [60]

***(புறநானூறு, பாடல் எண் 4, அடிகள் 15-16)***

என ஞாயிற்றின் ஒளிச்சிறப்பினையும் விடியற் காலத்தே அஞ்ஞாயிறானதுத் தோன்றும் பாங்கினையும் சுட்டுகின்றது.

**"குடதிசை மாய்ந்து குணமுதல் தோன்றி**

**பாய்இருள் அகற்றும் பயம்கெழு பண்பின்**

**ஞாயிறு கோடா நண்பகல் அமையத்து"** [61]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 22, அடிகள் 32-34)***

ஞாயிறானது நண்பகலில் உச்சியை அடையும் போது ஒருபக்கமும் சாய்தல் இன்றி நடுவுநிலையில் நிற்கும் போக்கு இப்பாடலில் சுட்டப்படுகிறது. அக்கால மக்கள் கீழ்த்திசைக் கண் தோன்றி ஒளிசிந்தும் ஞாயிற்றை உலகிற்கு இன்னருள் புரியும் தன்மை வாய்ந்ததாகக் கருதியுள்ளனர்.

### 5.5.12. ஞாயிறு வழிபாடு

ஞாயிறு உலகின் முழுமுதல் ஆதாரமாய் திகழ்வதால் அதன் வழிபாடு சிறப்பானதாகும். ஞாயிறு வழிபாடு உலகம் முழுவதும் உள்ளது. தமிழ்நாட்டில் சூரியனார் கோயிலும் வடநாட்டில் கோனார்க் கோயிலும் சூரியனின் சிறப்பு மிக்க பழைமை வாய்ந்தவைகளாகும். கிரேக்கத்தில் சூரியக் கடவுளை என அழைக்கின்றனர். சூலைல் () என்று அழைக்கப்படும் ரோமானிய சூரியன் பண்டைய யவனரின் முதல் தெய்வமாக இருந்துள்ளது.

தமிழர் ஞாயிறு வழிபாடு கண்டனர். அதன் தோற்றமே மக்களின் அன்றாட விடியலாக அமைந்துள்ளது. ஞாயிறு வழிபாடு சங்க காலத்தில் நிலவி வந்ததை,

**"முந்நீர் மீமிசை பலர் தொழத் தோன்றி**

**ஏமுற விளங்கிய சுடர்"** [62]

***(நற்றிணை, பாடல் எண் 283, அடிகள் 6-7)***

**"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு**

**பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு"** [63]

***(திருமுருகாற்றுப்படை, அடிகள் 1-2)***

**"தயங்குதிரைப் பெருங்கடல் உலகுதொதுத் தோன்றி**

**வயங்குகதிர் விரிந்த உருகெழு மண்டிலம்"** [64]

***(அகநானூறு, பாடல் எண் 263, அடிகள் 1-2)***

எனும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

சூரியன் பூமிக்கு மிக அருகில் உள்ள நட்சத்திரம் ஆகும். தாமே ஒளிரும் தன்மையை உடையது. உயிரினங்கள் வாழத் தேவையான வெப்பத்தையும் ஒளியையும் தருகின்றது. நீர் உயிரின் வாழ்வாதாரம் எனில் நீரினை உலக உயிர்கள் பயன்படுத்துவதற்கான செயலைச் சூரியன் செய்கிறது. சூரிய வெப்பத்தால் தான் கடல்நீர் ஆவியாகி நிலத்துக்கு மழை தருகிறது. நிலத்தில் நீர்ப்பரப்பை உருவாக்கி உயிர்களை வாழ வைப்பதால் அதனைக் கடவுளாகக் கருதினர். சூரிய வெப்பம் மிகுந்தாலும் உயிர் வாழ முடியாது. சூரியன் இல்லையென்றாலும் வாழ முடியாது.

ஞாயிறு தவறாது தோன்றுதலினால் அது வாய்மையுடையதாயிற்று. அது பலர் தொழுமாறு விளங்குகிறது. களவில் ஒழுகி வரும் தலைவனை ஞாயிற்றுக்கு ஒப்பிட்டு அவன் வாய்மை உடையவனாக இருக்க வேண்டும் என விரும்புகிறாள் தலைவி.

**"வல்லோர் ஆய்ந்த தொல்கவின் தொலைய**

**இன்னை ஆகுதல் தகுமோ - ஓங்கு திரை**

**முந்நீர் மீமிசைப் பலர் தொழத் தோன்றி**

**ஏமுற விளங்கிய சுடரினும்**

**வாய்மை சான்ற நின் சொல் நயந்தோர்க்கே"** [65]

***(நற்றிணை, பாடல் எண் 283, அடிகள் 4-8)***

எனும் நற்றிணை அடிகள் ஒளிவீசுகின்ற அலைகளையுடையக் கடலின் மீது பலதொழுமாறு ஞாயிறு தோன்றுவதையும் யாவரும் போற்றும் படியாக விளங்குவதையும் கூறுகிறது. ஞாயிற்றைக் காட்டிலும் வாய்மை மிக்க தலைவன் சொல்லை விரும்பிய தலைவி தலைவனின் வாய்மையை ஞாயிற்றின் வாய்மைக்கு ஒப்பிட்டுக் கூறி வரைவினை வற்புறுத்துகிறாள். வழிபாட்டிற்குரியதாகவும் போற்றுதலுக்குரியதாகவும் ஞாயிறு விளங்கியதை இப்பாடல் உரைக்கின்றது.

*சூரியனைக் கடவுளாக வழிபடுகிறோம் அவர் ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட ஒற்றைச் சக்கரம் கொண்டு விளங்குவதைப் புராணங்கள் கூறுகின்றன. தமிழர்கள், ஞாயிறு குறித்து,*

***"வான்உரி உறையுள் வயங்கியோர் அவாவும்***
***பூமலி சோலை அப்பகல் கழிப்பி***
***எல்லை செல்ல, ஏழ் ஊர்பு இறைஞ்சி"*** [66]

***(குறிஞ்சிப்பாட்டு, அடிகள் 214-216)***

*எனும் அடிகளில் குறிப்பிடுகிறது. பலகதிர்களை உடைய ஞாயிறு தன்னுடைய ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட தேரில் ஏறிப் பகற்பொழுது நீங்குமாறு தாழ்ந்து மேற்கு மலையில் மறைந்ததைக் கூறுமாறு அமைகிறது.*

### ***5.5.13. வான்கண்***

*வானத்தின் கண்ணாக சூரியன் போற்றப்படுகிறது. உலகிற்குக் கண் போன்று ஒளியைப் கொடுப்பதால் சூரியனை வான் கண் என அகநானூறு குறிப்பிடுகின்றது.*

***"வான்கண் வானத்து என்றூழ் நீள்இடை"*** [67]

***(அகநானூறு, பாடல் எண் 325, அடி 18)***

*என்ற அடி இயம்புகின்றது.*

### ***5.5.14. ஞாயிற்றை வேண்டுதல்***

*இயற்கையை இறைவனாகக் கொண்டு வாழ்வை மேற்கொண்ட பழந்தமிழர் அதனைத் துணையாகவும் தூதாகவும் சாட்சியாகவும் கொண்டு தன் உணர்வுகளைப் பகிர்ந்து வாழ்ந்துள்ளனர்.*

*பிரிந்த தலைவன் வரக் காலம் தாழத்தியதால் பிரிவை ஆற்றாத தலைவி நாணம் கடந்து உள்ளம் கலங்கினாள். மறைந்து போன தலைவனை ஞாயிற்றைக் கொண்டே காண்பேன் என்றுக் கூறி, ஒளிக்கதிர்களைப் பிறருக்குப் பகுத்துக் கொடாத ஞாயிறே நீ மேலை மலையை அடைவாய் ஆயின் அவரை என் கண் முன்னே கொண்டு வருவாயாக என ஞாயிற்றை வேண்டுவதாக,*

***"கதிர் பகா ஞாயிறே கல் சேர்தி ஆயின்***
***அவரை நினைத்து நிறுத்து என்கை நீட்டித்***
***தருகுவை ஆயின் தவிரும் - என் நெஞ்சத்து"*** [68]

***(கலித்தொகை, பாடல் எண் 142, அடிகள் 37-39)***

*எனும் கலித்தொகை அடிகள் எடுத்துரைக்கின்றன.*

### *5.5.15. ஞாயிற்றின் வெம்மை*

*உலகம் ஒளியுடன் விளங்குவதற்குக் காரணமான பகற்பொழுதினைக் கொண்டு வருவது சூரியன். அது நெருப்புக் கோளமாதலால் கனலி எனப்படுகிறது. சூரியனிடமிருந்து வரும் வெப்ப ஒளியானது பகலின் ஒவ்வொரு பொழுதிலும் வெவ்வேறு தன்மையில் உள்ளது. அதிகாலை இளம் சூரியன் இளம் வெயிலைக் கொடுத்து மனித உடலின் தோலுக்கு உகந்ததாக அமைகிறது. உச்சிப் பொழுதில் அதன் வெப்பம் பூமியை அழுத்தமாகத் தாக்குகிறது.*

*பருவ காலங்களில் சூரியனின் வெம்மை மாற்றம் பெறுகிறது. மழைக் காலங்களில் அதன் ஒளியும் வெப்பமும் குன்றுவதும் பனிக்காலங்களில் வெம்மை குறைந்துக் காணப்படுவதுமான மாற்றங்களைக் காணமுடிகிறது. கோடைக் காலத்தில் சூரியனின் வெப்பம் மிகுந்து உயிரினங்கள் நீருக்கும் உணவிற்கும் போராடும் காலமாக உள்ளது. சங்க இலக்கியங்களில் ஞாயிற்றின் வெம்மை சுட்டெரிப்பதைச் சூழலுக்கு ஏற்றவாறு பேசப்பெறுகின்றது.*

*ஞாயிறு தன் கதிர்களையே கைகளாகக் கொண்டு ஈரத்தினைக் கவர்ந்துப் பசுமை அற்றுப் போகும்படிக் காய்தலால் காடு வளங்குன்றி தன் அழகு மாறுபட்டுக் காணப்பட்டதை அகநானூறு கூறுகிறது.*

***“கதிர் கையாக வாங்கி ஞாயிறு***
***பைது அறத் தெறுதலின் பயம் கரந்து மாறி”*** [69]

***(அகநானூறு, பாடல் எண் 164, அடிகள் 1-2)***

*ஞாயிறானது உலகம் ஒளியுடன் விளங்குமாறு பகற்பொழுதினைத் தந்து உதவியது பல கதிர்களையுடைய ஞாயிறு வளம் பொருந்தியப் பெரிய மலையின் பயன் கெட்டழியுமாறு சுட்டெரித்ததை,*

***“விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு***
***வளம்கெழு மாமலை பயம் கெடத் தெறுதலின்”*** [70]

***(அகநானூறு, பாடல் எண் 91, அடிகள் 1-2)***

*எனும் அடிகள் உணர்த்துகின்றன. சுடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது வெப்பத்தால் ஈரம் காய்ந்து போனதால் அகன்ற இடமெல்லாம் நீர் அற்று போன நிலையை,*

***"----------- தெறுகதிர்***

***ஈரம் நைத்த நீர்அறு நனந்தலை"*** [71]

***(அகநானூறு, பாடல் எண் 395, அடிகள் 5-6)***

*ஞாயிற்றின் கதிர்கள் சூழ்ந்து காய்ந்தமையால் அதன் வெம்மையைப் பொறுக்க இயலாத மரங்கள் யாவும் கரிந்து போனதை,*

***"மரம்தலை கரிந்து நிலம்பயம் வாட***

***அலங்குகதிர் வேய்ந்த அழல்திகழ் நனந்தலை"*** [72]

***(அகநானூறு, பாடல் எண் 169, அடிகள் 1-2)***

*எனும் அடிகள் புலப்படுத்துகின்றன. கதிரவன் கதிர்கள் சுடுதலினால் சினைகள் மட்டுமின்றி மரங்கள் வேரொடு வெம்பி நின்றதை,*

***"வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலின்"*** [73]

***(கலித்தொகை, பாடல் எண் 10, அடிகள் 2-4)***

*எனும் அடிகள் கூறுகின்றது.*

*மழை பொழியாமல் நீர் வறண்ட பாலை நிலத்தில் செங்கதிர்களையுடையச் சூரியன் காய்தலால் நிலம் பிளவுபடு அளவு வெம்மை உலகை வருத்தியதை நற்றிணை நயம்பட விளக்குகின்றது.*

***"செங்கதிர்ச் செல்வன் தெறுதலின் மண்பக***

***உலகு மிக வருந்தி உயாவுறு காலைச்"*** [74]

***(நற்றிணை, பாடல் எண் 164, அடிகள் 2-3)***

*பல உயிர்களும் மாட்சிமைப்படுவதற்குக் காரணமாகியக் கதிரவன் மிகுதியாகக் கதிர்களைப் பரப்புதலால் கஞ்சங்குல்லை தீய்ந்துப் போனதை,*

***"எல்லை தருநன் பல்கதிர் பரப்பி***

***குல்லை கரியவும் கோளரி நைப்பவும்"*** [75]

***(பொருநராற்றுப்படை, அடிகள் 233-234)***

*எனும் பொருநராற்றுப்படை அடிகள் குறிப்பிடுகின்றன. குல்லை என்பது கஞ்சங்குல்லை (கஞ்சாச்செடி) என்னும் செடியைக் குறிப்பதாகும். இது கொடிய வெயிலையும் தாங்கும் நீர்மையுடையது. அது தீய்ந்தது என்றதால் பிற புல் பூண்டுகளும் அழிந்தன என்று ஞாயிற்றின் வெம்மையைப் புலப்படுத்துகின்றன.*

### *5.5.16. ஞாயிறு பற்றிய உவமை*

*இயற்கை என்றும் மாறாதது. இயற்கை வழி வந்த மக்கள் தங்கள் வாழ்வின் நிகழ்வுகளுக்கு இயற்கைப் பொருளை உவமையாகக் கூறுவர். இருசுடர் இரவு பகலைத் தந்து மக்களின் அன்றாட வாழ்வினை ஒழுங்கமைக்கிறது. ஞாயிறு உலகில் முழுமுதற் பொருளாய் விளங்கியத் தன்மையால் அதனைப் பற்றிய உவமைகள் சிறப்புற அமைகின்றன.*

### *5.5.16.1. நெருஞ்சிப்பூ*

*நெருஞ்சி மலர் ஞாயிற்றையே நோக்கி நிற்கும் இயல்புடையது. அது போலத் தலைவியின் தோள்களும் தலைவனையே நோக்கி நிற்பன. தலைவன் தன்னை விட்டுப் பிரிந்து தூரத்தில் இருந்தாலும் நெருஞ்சிப் பூ தொலைவில் தோன்றும் கதிரவனை நோக்கி இருத்தல் போல இருப்பதாக உரைப்பதை,*

***"ஞாயிறு அனையன் - தோழி***
***நெருஞ்சி அனைய என் பெரும் பணைத்தோளே"*** [76]

***(குறுந்தொகை, பாடல் எண் 315, அடிகள் 3-4)***

*எனும் அடிகள் குறிப்பிடுகின்றன.*

***"முழவுஇமிழ் துணங்கை தூங்கும் விழவின்***
***யான் அவண் வாராமாறே வரினே வானிடைச்***
***சுடரொடு திரிதரும் நெருஞ்சி போல"*** [77]

***(அகநானூறு, பாடல் எண் 336, அடிகள் 16-18)***

*எனும் அகநானூற்று அடிகள் தலைவியை ஞாயிறாகவும் தலைவனை நெருஞ்சிப் பூவாகவும் உவமிக்கின்றன.*

*முழவு ஒலிக்க குரவை ஆடும் விழாக் காலத்தே நான் என் அழகு நலம் காட்டி அவ்விடத்துச் செல்வேனேயானால் ஞாயிறு செல்லும் திசை நோக்கியே செல்லும் நெருஞ்சிப் பூ போல யான் செல்லும் இடமெல்லாம் என்னையே சுற்றிச் சுழலுமாறு தலைவனைச் செய்திடுவேன் என்றுத் தலைவி கூறுவதாக அமைகிறது.*

ஞாயிற்றைக்கண்டு நெருஞ்சிப்பூ மலரும். அதைப் போலவே கொண்பெருங் கானாங்கிழானது மலர்ந்த மாலையணிந்த மார்பை நோக்கி வறுமை தீர்த்த பாணரின் முகம் மலர்ந்தது. எழுஞாயிறு அரசனுக்கும், நெருஞ்சிப்பூ வறுமையால் வாடிய பாணர்க்கும் ஒப்புமையாக்கப்பட்டதைப் புறநானூறு,

**"பாழ் ஊர் நெருஞ்சிப் பசலை வான்பூ**
**ஏர்தரு சுடரின் எதிர் கொண்டாஅங்கு**
**இலம்படு புலவர் மண்டை விளங்கு புகழ்க்**
**கொண்டுபருங் கானத்துக் கிழவன்**
**தண்தார் அகலம் நோக்கின, மலர்ந்தே"** [78]

***(புறநானூறு, பாடல் எண் 155, அடிகள் 4-8)***

என்றுக் கூறுகின்றது.

### 5.5.16.2. தலைவனின் பண்பு

தலைவன் நம்மை கைவிடுபவன் அல்ல. அத்தகைய கொடிய நிகழ்வு தோன்றுமாயின் அது ஆகாயத்தில் இயங்கும் சூரியனிடத்தே இருள் தோன்றிய தன்மையது ஆகும் என்றுத் தோழி கூறுவதாக கலித்தொகை பாடல் அமைந்துள்ளது. ஞாயிற்றைத் தலைவனின் உயர்ந்தப் பண்பிற்கு உவமையாக்குவதை,

**"தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன்**
**தொடர்புள் இணையவை தோன்றின், விசும்பில்**
**சுடருள் இருள் தோன்றிற்று"** [79]

***(கலித்தொகை, பாடல் எண் 41, அடிகள் 36-38)***

என்றுக் கூறுகிறது.

### 5.5.16.3. அகம் சார்ந்த உவமை

தலைவனைக் காணாமையால் தலைவி தனித்திருந்தாள். காலம், இடம், பிறவும் தலைவன் வர ஏற்புடையதாயிருந்தும் தலைவன் வராமையால் ஆகாயம் ஞாயிறு நீங்கியமையால் பொலிவிழந்தது போல தானும் பொலிவிழந்திருந்ததைத் தலைவி கூறுவதாக அமைந்த குறுந்தொகைப் பாடல்,

**"நம்மே போலும் மம்மர்த்து ஆகி**

**எல்லை கழியப் புல்லென்றே"** [80]

***(குறுந்தொகை, பாடல் எண் 315, அடிகள் 3-4)***

*என்றுக் கூறி உலகின் பொலிவிற்கு ஞாயிறு காரணமாக அமைவதை விளக்குகிறது. தலைவியைத் தலைவன் சேர்தலால் அவள் மேனியின் பசப்பு ஞாயிற்றின் முன் இருள் போல, கெட்டு மறைந்தது என்பதைக் கலித்தொகையில்,*

**"ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்தது என்**

**ஆய் இழை மேனிப் பசப்பு"** [81]

***(கலித்தொகை, பாடல் எண் 42, அடிகள் 31-32)***

*என்று ஞாயிறு பற்றிய உவமையாக வந்துள்ளது.*

### *5.5.16.4.* **புறம் சார்ந்த உவமை**

*உலகுக்கு முதல்வனான ஞாயிறு எப்போது உயிர்களுக்கு நன்மையைக் கொடுக்கும் வகையில் இயங்கிவருகிறது. குடிமக்களைக் காக்கும் அரசனும் நாட்டின் முதல்வனாக இருந்து நாட்டை நல்ல வழியில் கொண்டு செல்ல இயங்குகிறான். அரசனுக்கு ஒப்பாக ஞாயிற்றை உவமையாக்கியுள்ளனர்.*

### *5.5.17.* **ஞாயிறு பற்றிய நம்பிக்கை**

*ஞாயிற்றின் தோற்றம் பற்றிய தமிழரின் நம்பிக்கை இயற்கையை உற்று நோக்கியதை உணர்த்துகிறது. கதிரவன் திசை நான்கிலும் தோன்றுதல் மழை பொழியாது வறண்டு போகச் செய்வன எனப் பழந்தமிழர் நம்பி வந்துள்ளனர். இச்செய்தியைப் புறநானூறு பதிவுச் செய்துள்ளது.*

**"அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்**

**இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்**

**அம் தண் காவிரி வந்து கவர்பு ஊட்ட"** [82]

***(புறநானூறு, பாடல் எண் 35, அடிகள் 6-8)***

*எனும் அடிகள் சுடர் விடுகின்றக் கதிர்களையுடைய ஞாயிறு நான்கு திசைகளிலும் தோன்றினாலும் அழகியக் குளிர்ந்த காவிரி கால்வாய் பலவாகப் பிரிந்து வளமூட்டி வரும் என்பதை உணர்த்துகின்றது.*

மன்னன் பகையை வீரத்தாலும் ஒழுக்கத்தாலும் வெல்லும் புகழை உடையவன். நெறிமுறைப்படி தன் மக்களை பேணிப்பாதுகாத்தபின் தான் செய்த பழவினையின் பயனைத் துய்ப்பதற்காகச் சுவர்க்கத்தை விரும்பிச் சென்றான். அதுபோல ஞாயிறானது இருளைப் போக்கி, பகற்பொழுதில் தான் ஆற்ற வேண்டியக் கடமைகளைச் செய்து முடித்து மலையிடத்தே சென்று மறைந்தது.

**“வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்**

**நல்ஆறஅறின் உயிர்காத்து, நடுக்கற்ற தான்செய்த**

**தொல்வினைப் பயன்துய்ப்ப துறக்கம் வேட்டு எழுந்தாற்போல்**

**பல்கதிர் ஞாயிறு பகல்ஆற்றி மலைசேர”** [83]

***(கலித்தொகை, பாடல் எண் 118, அடிகள் 1-4)***

எனும் பாடல் மன்னனின் கடமைக்கு ஞாயிற்றின் கடமையை உவமை காட்டுகிறது.

ஞாயிற்றோடு உவமித்துப் பாடப்பெறுல் பூவைநிலை எனும் துறையாகும். ஆய்அண்டிரனின் வள்ளல் தன்மைக்கு ஒப்பாக ஞாயிற்றின் ஒளிபரவி நிற்பதை,

**“கழல் தொடிஆஅய் அண்டிரன் போல**

**வண்மையும் உடையையோ? - ஞாயிறு**

**கொன்விளங்குதியால் விசும்பினானே”** [84]

***(புறநானூறு, பாடல் எண் 374, அடிகள் 16-18)***

என்றுக் கூறுகிறது.

செஞ்ஞாயிற்றுக் கவினுடன் சேட்சென்னி உவமிக்கப் பெறுவதைப் புறநானூறு கூறுகிறது. பொன்னலானத் தேர்மீது மன்னன் பொலிவுடன் தோற்றம் கொண்டு விளங்கியதைக் கடல் நடுவே உயர்ந்து எழும் சிவந்த ஞாயி,று போல அழகுடன் தோன்றும் ஞாயிற்றுக்கு உவமை கூறுகின்றது. இவ்வுவமையை,

**“மாக்கடல் நிவந்து எழுதரும்**

**செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ”** [85]

***(புறநானூறு, பாடல் எண். 4, அடிகள் 15-16)***

என்று நவில்வதைக் காணமுடிகின்றது.

*சூரியனின் வடக்கு, தெற்குப் பயணங்களை உத்தராயணம், தட்சிணாயனம் என்பர். தைத்திங்கள் முதல் ஆனித்திங்கள் வரையிலுள்ள ஆறு திங்கள் வரையிலுள்ள ஆறு திங்கள் உத்தரயண காலம் ஆகும். ஆடித்திங்கள் முதல் மார்கழி திங்கள் வரையில் உள்ள ஆறுத்திங்கள் தட்சிணாயனக்காலம் ஆகும். தமிழர்கள் புண்ணிய செயல்களையும், மங்கல நிகழ்வுகளையும் உத்தராயண காலத்தில் செய்ய விரும்புவர். கல்வி கூட உத்தராயண காலத்தில் தொடங்க வேண்டும் என்பர். தற்கால கல்வியாண்டின் தொடக்கம் கூட உத்திராயணக் காலத்தில் தொடங்குவதும் சிந்திக்கத் தக்கது.*

*உத்திராயண காலத்தில் உயிர்விடுதல் நல்லது என்பதை பகவத்கீதை கூறுகிறது. பாரதக் கதையில் பீஷ்மர் தட்சிணாயனக் காலம் (மார்கழி) முடியும்வரை உயிரை நிறுத்தி உத்தராயணக் காலம் (தை) தொடங்கியவுடன் உயிர் விட்டதாகவும் கூறப்பட்டுள்ளது. நல்வினைகள் நடத்துவதற்கேற்ற புண்ணியக்காலம் உத்திராயணம் என்பதை பெறமுடிகிறது.*

### *5.6. திங்கள்*

*ஞாயிற்றுக்கு அடுத்தபடியாக பெரியதாகத் தோற்றமளிப்பது சந்திரன். சூரியக் குடும்பத்தில் சூரியனிடமிருந்து ஒளியைப் பெற்று வானில் வளர்ந்தும் தேய்ந்தும் ஒளிதரும் இரவு அரசி சந்திரன் எனும் கோளாகும். மாதம் என்ற காலக் கணக்கீட்டிற்குக் கருவியாக விளங்குவது சந்திரன்.*

***"மாதம் என்கிற சொல் மதி என்கின்ற சொல்லி லிருந்து பிறந்துள்ளது"*** [86]

***(சு. சிவபெருமான், இலக்கியங்களில் வானியல், பக்கம் 10)***

*தேய்பிறை, வளர்பிறை, மறைதல், உதயகாலம் எனச் சந்திரனின் நான்கு நிலைகளைப் புறநானூறு,*

***"தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்***
***மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்***
***அறியாதோரையும் அறியக்காட்டித்***
***திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து"*** [87]

***(புறநானூறு, பாடல் எண் 2, அடிகள் 11-14)***

*எனக்கூறுகிறது. வளர்பிறை 15 நாட்களும் சுக்கிலப்பட்சம் என்றும், தேய்பிறை 15 நாட்களும் கிருஷ்ணபட்சம் என்றும் மாதத் தை இரு பிரிவாகப் பக்கம் அடிப்படையில் பிரித்து திதியைக் குறிப்பிடுவர். அமாவாசையை அடுத்துவரும் நாள் பிரதமை எனப் பெயர் பெறும். அதிலிருந்து பதினைந்தாம் நாள் முழுநிலவாகும். அதனைப் பவுணர்மி என்பர். நிறைமதியான பௌர்ணமி எந்த நட்சத்திரத்தில் வருகிறதோ, அதுவே அம்மாதத்தின் பெயராகும்.*

> ***"ஒவ்வொரு மாதத்தும் நிறைமதி நாளில் சந்திரனுடன் சேரும் நட்சத்திரம் பெயரைக் கொண்டு மாதப்பெயர்கள் அமைந்திருந்தால் கவனிக்கத்தக்கது. சங்கப்பாடல்களிலும் பிற இலக்கியங்களிலும் பயின்று வரும் சில குறிப்புகள் இவ்வுண்மையைத் தெளிவுப்படுத்துகின்றன."*** [88]
>
> ***(மு.சண்முகம் பிள்ளை, தமிழ்நூல்களில் காலக் கணிப்பு, பக்கம் 25)***

*என்று பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை கூறுகிறார். தமிழ்நாட்டில் பின்பற்றப்பெறும் சோதிடமுறையில் சந்திரகோள்களே தலையாய இடம்பெறுகிறது. விதிகெட்டால் மதியைப் பார், மதி கெட்டால் கதியைப் பார் எனும் வழக்கு நடுவண் அமைவது மதி வழி அறிவது ஆகும்.*

*மதிதான் அறிவு மனம் உடல் பற்றிய அறிய உதவும் கோள். சூரியன் ஆண் ஆன்மா எனில், சந்திரன் பெண் உடல் ஆகும். ஆதியில் ஒரு கிரகமான சூரியன் வழி தான் பருவகாலம் அறியப்பட்டது. பின்னர் சந்திரன் சேர இரு கோள்களுடன் வாழ்வியல் பேசப்பட்டுள்ளது. அதன்பின் ஐந்துகோள் அறியப்பட்டபின் ஏழு கோள்களானது நிழற்கிரகங்கள் சேர்ந்து நவகோள்கள் ஆயின.*

*பூமியிலிருந்து சந்திரன் சுமார் 3,84,000 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. சந்திரன் தன்னைத் தானே ஒருமுறை சுற்ற 27 நாள் 7 மணி 43 1/2 நிமிடங்கள் ஆகின்றன. சந்திரன் பூமியை ஒருமுறை சுற்றவும் அதே கால அளவே ஆகிறது. மாதந்தோறும் நட்சத்திரங்களைக் கடக்கின்றான் சந்திரன் என்பது இங்கு எண்ணத் தக்கது. சந்திரன் சூரியனிடம் இருந்து ஒளி பெற்றே ஒளிர்கின்றது. முழுநிலாவான பவுணர்மியன்று அதன் அரைக்கோளம் முழுதும் முழுவட்டமாகக் காட்சி தருகின்றது. அமாவாசையன்று இவ்அரைக்கோணத்தில் சூரியஒளி அதன்மீது விழுவதில்லை. பவுணர்மி, அமாவாசைக்கு இடையேயான காலத்தில் தான்*

சந்திரனின் மேற்பரப்பில்விழும் சூரிய ஒளிப்பகுதியைப் பொறுத்து அதன் பல அளவிலான பிறை வடிவங்கள் தோன்றுகின்றன. அவ்வடிவங்களை எண்ணுவதற்கு எண் அடிப்படையில் வடமொழியில் அமைந்த சொற்களே பிரதமை, துவிதை, திரிதியை, சதுர்த்தி, பஞ்சமி, சஷ்டி, சப்தமி, அட்டமி, நவமி, தசமி எனப் பஞ்சாங்கத்தில் குறிக்கப்படுகின்றன.

சூரியன் பூமி சந்திரன் இவை மூன்றும் சுழலும்போது ஒரே நேர்க்கோட்டில் வந்தால் அதுவே கிரகணம் எனப் பெயர் பெறுகின்றது. சூரியனிடமிருந்து ஒளிபெறும் சந்திரன் குளிர்ச்சியைத் தரக் காரணம் சூரிய வெப்பத்தை உள்வாங்கிக் கொள்வதால்தான்.

1969 சூன் திங்கள் அமெரிக்கர் மூவர் சந்திரனில் இறங்கி மீண்டனர். இவ்வாறு ஐந்து முறை சென்றுவந்துள்ளனர். அங்குள்ள கல்லும் மண்ணும் எடுத்து வந்து ஆய்வு செய்துள்ளனர்.

நிறைமதி நாளில் கடல் பொங்கும் என்ற அறிவியல் செய்தியை நற்றிணையில் குறிப்பிடுகின்றனர்.

**“இரவுத்தலை மண்டிலம் பெயர்ந்தென் உரவுத்திரை**
**எறிவகை போல வரூஉம்”** [89]

***(நற்றிணை, பாடல் எண் 375, அடிகள் 7-8)***

பவுணர்மியன்று பரதவர் மீன்பிடிக்கச் செல்லார் என்பதைப் பட்டினப்பாலை விளக்குகிறது.

**“பாயிரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது**
**உவவு மடிந்து உண்டாடியும்”** [90]

***(பட்டினப்பாலை, அடிகள் 92-93)***

முழுமதி நாளன்று புவி மீதுள்ள நீரை திங்கள் அதிகம் ஈர்க்கிறது. அதன் விளைவாக பெரிய அலைகள் கிளம்புகின்றன. அதனால் பரதவர்கள் அந்நாளில் கடலுக்குள் செல்வதில்லை. இவ்வறிவியல் உண்மையை அறிந்துள்ளனர்.

காமநோயின் பெருக்கம் வளர்பிறைபோன்றது எனப் பெருகல் நிலையை உடைய சந்திரன் உவமையில் இடம்பெறுவதை முல்லைத் திணையில் பெருங்கண்ணன் என்ற புலவரின் குறுந்தொகைப் பாடலில் காணமுடிகிறது. துன்பத்தைத் தரும் காமநோய் வளர்பிறை மதிபோல் வளர்கிறது என உணர்ந்து உரைக்கிறார். குறுந்தொகை,

***"வளர்பிறை போல வழிவழிப் பெருகி"*** [91]

***(குறுந்தொகை, பாடல் எண் 289, அடி 9)***

என்றுக் கூறுகிறது.

### *5.6.1. மாதப்பெயர்*

*திங்களது இயக்கத்தைக் கொண்டே மாதங்களுக்குப் பெயரிட்டனர். மாதத்திற்கு திங்கள் எனப் பெயரிட்டனர்.*

***"திங்களின் வளர்ச்சி தேய்வு கொண்டு கணக்கிடும்முறை பழையது. எனவே தான், மாதத்தைத் திங்கள் என்று தமிழர் அழைத்தனர்"*** [92]

***(அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், பக்கம் 180)***

*திங்களின் பிறை வளர்ந்தும், தேய்ந்தும் முப்பது நாள்களைக் கொண்ட திங்களைத் தோற்றுவிப்பதாகக் கருதினர். திங்கள் பன்னிரண்டு என்பதும், அவற்றுள் தை, மாசி, பங்குனி, கார்த்திகை முதலிய மாதப் பெயர்களைச் சங்க இலக்கியங்கள் குறிப்பதாலும் மாதங்களுக்குப் பெயரிட்ட சங்கத்தமிழர்களின் வழக்கமானது புலனாகிறது.*

***"ஞாயிறுகாயா நளி மாரிப் பின்குளத்து***
***மாஇருந் திங்கள் மறுநிரை ஆநிரை"*** [93]

***(பரிபாடல், பாடல் எண் 11, அடிகள் 76-77)***

*கார்த்திகை மாதத்தில் பவுணர்மி நிலவுடன் கார்த்திகை (அறுமீன்) சேர்ந்து வரும் என்பதை அகநானூறு,*

***"குறுமுயல் மறுநிறம் நிறைமதி நிறைந்து***
***அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள்"*** [94]

***(அகநானூறு, பாடல் எண் 41, அடிகள் 7-8)***

*என்கிறது. நிறைமதி நாளுடன் விண்மீன் சேரும் நாளைச் சில புலவர்கள் உன்னிப்பாகப் பார்த்து மாதப்பெயரை ஆராய்ந்திருப்பதால் அவர்களின் வானியல் அறிவு பெற்றது புலப்படுகிறது.*

*மாகம் அல்லது மாசி என்று மாதத்தின் பெயர் பவுர்ணமி நிலவு மகம் என்ற நட்சத்திரத்துடன் சேரும் திங்களே மாசி என்பதைப் பட்டினப்பாலை,*

***"மழை நீங்கிய மா விசும்பில்***
***மதிசேர்ந்த மகவெண்மீன்"*** [95]

***(பட்டினப்பாலை, அடிகள் 34-35)***

*எனக் கூறுகிறது.*

*மாசி மாதத்தில் பகல்பொழுது அதிகம் ஆகாமல் இரவுப் பொழுது மிகுந்து விளங்கும் என்பதை பதிற்றுப்பத்து கூறுகின்றது.*

**"பகல்நீடு ஆகாது இரவுப்பொழுது பெருகி**

***மாசி நின்ற மாகூர் திங்கள்"*** [96]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 59, அடிகள் 1-2)***

### *5.6.2. திங்களின் இயல்பு*

*ஞாயிற்றுக்கு அடுத்தபடியாகப் பெரியதாகக் காட்சியளிப்பது திங்கள், வெள்ளி, வியாழன் முதலான கோள்கள் திங்களைவிட பல மடங்கு பெரியது. திங்கள் நமக்கு மிக அருகில் ஏறுத்தாழ 3 லட்சத்து 15 ஆயிரம் கி.மீ தொலைவில் உள்ளது. ஞாயிற்றுக்கு அடுத்தபடியாக வானில் விண்மீன்களுக்கு நடுவில் திங்கள் ஒளிவிட்டு நிற்பதை,*

**"முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்**

**பல்மீன் நடுவண் திங்கள் போலவும்"** [97]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 768-769)***

*எனும் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. கண்இமைக்கும் நேரத்தில் கீழ்த்திசையில் நிலவு உதித்துச் செறிந்திருந்த இருளைப் போக்கியது என்றுப் புறப்பாடல் கூறுகிறது.*

**"இமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்**

**குணக்கெழு திங்கள் கணையிரு ளகற்ற"** [98]

***(புறநானூறு, பாடல் எண் 376, அடிகள் 7-8)***

*கூதிர் பருவத்தில் நிலவு மிகுந்த ஒளியுடன் விளங்கித் தோன்றும். அப்போது நிலவில் களங்கம் தோன்றுவதாகவும் அது குறுமுயல் போன்றத் தோற்றத்தினை கொடுப்பதாகவும் அகநானூறு குறிப்பிடுகிறது.*

*இல்லங்களில் நிலா முற்றத்தில் அமர்ந்து நிலவொளியின் அழகையும் தன்மையையும் பண்டையத் தமிழர் துய்த்தனர் என்பதை,*

**"நிலவுப் பயன் கொள்ளும் வெடுவெண் முற்றத்து"** [99]

**(நெடுநல்வாடை, அடி 95)**

என்றும்

**"வெண்ணிலவின் பயன் துய்த்து"** [100]

**(பட்டினப்பாலை, அடி 114)**

என்றும் நவில்கின்றன.

### 5.6.3. திருமணத்திற்கு உகந்த நாள்

சங்கஇலக்கியங்கள் அகத்திணையின் காதல் வாழ்க்கையைக் களவு, கற்பு என இருவகையாகப் பிரித்தன. ஊரறியாத வகையிர் தலைமக்கள் மறைந்து ஒழுகும் ஒழுக்கம் களவு எனப்பட்டது. தமரறிய, ஊரறியத் திருமணம் செய்து கொண்டு வாழும் வாழ்வு கற்பு எனப்பட்டது. திருமணம் என்பது மனிதனுக்காக மனிதனால் நடத்தப்படும் ஒருவகைச் சடங்கு மனித வாழ்வில் நிகழும் ஒரு மங்கல நிகழ்ச்சி திருமணம் ஆகும். திருமணச் சடங்கின் தோற்றம் பற்றித் தொல்காப்பியர்,

**"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப"** [101]

**(தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூற்பா எண் 143)**

என மொழிகின்றார்.

நன்னாளில் மணமுடிக்கப் பெற்ற தலைவனும் தலைவியும் எக்காரணத்தைக் கொண்டும் பிரிந்து விடாதபடி நாள்மீன் தடுத்து வைக்கும் என்னும் கருத்தைக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

**"ஆள்வினை கழிந்தோர் போற வல்லதைக்**
**கேள்பெருந் தகையோ டெவன்பல மொழிகுவம்**
**நாளுங் கோண்மீன் தகைத்தலுந் தகைமே"** [102]

**(கலித்தொகை, பாடல் எண் 5, அடிகள் 7-9)**

என்று நவில்கின்றது.

அன்புடைய நெஞ்சங்கள் கலந்தின்புறும் திருமண விழாவினைச் சங்ககாலத் தமிழர்கள் கொண்டாடிய முறை அவர் தம் பண்பாட்டுச் சிறப்பினைப் பறை சாற்றுவதாக உள்ளது. உரோகிணியைத் திங்கள் கூடும் நாளை திருமணத்திற்கு உரியச் சிறந்த நாளாகச் சங்ககால மக்கள் கொண்டிருந்துள்ளனர்.

வெள்ளிய வளைந்த திங்களானது தீயகோள்களான இராகு, கேது தொடர்பு நீங்கப் பெற்று குற்றமில்லாத சிறந்த புகழை உடைய உரோகிணியை அடைந்த நாளைத் திருமணத்திற்கு உகந்த நல்ல நாளாகக் கருதியதனை,

**"கனைஇருள் அகன்ற கவின்பெறு காலைக்**

**கோள் கால் நீங்கிய கொடுவெண் திங்கள்**

**கேடுஇல் விழுப்புகழ் நாள் தலை வந்தென"** [103]

***(அகநானூறு, பாடல் எண் 86, அடிகள் 5-7)***

*என்றுக் கூறுகிறது. அக்காலத் திருமணங்கள் திங்கள் ரோகிணியைக் கூடும் நன்னாளில் நல்ல நேரம் பார்த்து நடைபெற்றது. மக்களின் வாழ்வியல் சூழலோடு அவர்களின் ஒவ்வொரு செயல்பாட்டோடு நாளும் கோளும் ஒரு சிறப்பான இடத்தைக் கொண்டுள்ளது.*

*சந்திரனும் உரோகிணியும் இணைந்திருந்த ஓவியத்தை நோக்கி இதுபோல் நாம் இணைந்திருக்க முடியவில்லையே எனத் தலைவனைப் பிரிந்த தலைவி வருத்தம் அடைவதாக உள்ள நிலை விளக்கப்படுகிறது. திருமண முகூர்த்த நாள் தேர்ந்தெடுக்கும் போது வானூர் மதியம் உரோகிணியை அடையும் நாளைத் தேர்ந்தெடுத்துள்ளனர்.*

**"அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்**

**சகட மண்டிய துகள்தீர் கூட்டத்தாள்**

**கடிநகர் ............................"** [104]

***(அகநானூறு, பாடல் எண் 136, அடிகள் 4-6)***

*என்ற பாடல் அடிகளில் சந்திரனை உரோகிணி கூடிய நன்னாள் என்றும் இவ்வடிகளில் அமைந்தச் செய்தியில் திங்கள் எனச் சந்திரகோளையும் குறிக்கப்பட்டுள்ளது.*

*நம் கண்ணெதிரே திங்கள் வளர்வதும் தேய்வதும் நடந்து வருகிறது. தேய்தலும் வளர்தலும் குறித்த கால அளவில் தவறாமல் நிகழ்வதால் திங்களையே பல்வேறு நிகழ்வுகளின் கால அளவையாகக் கொண்டனர். வளர்பிறையும் தேய்பிறையும் கொண்ட திங்கள் மக்கள் வாழ்வில் காலக்கணிப்பின் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றுத் திகழ்கிறது.*

### *5.6.4. பிறை தொழுதல்*

*ஆயிரம் பிறை கண்டார் சதாபிஷேக விழா நடத்துவதும் சந்திரத் தோற்ற தொழுதல் அடிப்படையில் அமைந்ததே. ஆகும். இந்து சமய மக்களின் நோன்புகள்*

பல சந்திரனின் இருப்பு அடிப்படையில் வந்ததே ஆகும். மக்களின் வாழ்வியலுடன் நெருக்கமாக உள்ள கிரகம் சந்திரனே ஆகும். சந்திரன் இயக்கத்தால் நாள்கள் திதி எனும் கால அளவையும் பெறுகின்றன. மகளிர் நிலவை வழிபடுவதை அகநானூறு,

**"ஒள்ளிழை மகளிர் வளர்பிறை தொழூஉம்**
**புல்லென் மாலை"** [105]

***(அகநானூறு, பாடல் எண் 239, அடிகள் 9-10)***

என்றும் மதுரைக்காஞ்சி,

**"குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறையின்"** [106]

***(மதுரைக்காஞ்சி, அடி 193)***

என்றும் வழிபாட்டிற்குரியக் கோளாகச் சந்திரன் விளங்குவது குறிப்பிடப்பட்டுள்ளது.

திங்களானது தேய்ந்து பின்நாள் தொடங்கிப் பிறையாகி வளர்ந்து வருகிறது. மூன்றாம் நாளில் தோன்றும் பிறையைத் தொழுது வணங்கும் மரபு அக்காலத்தில் இருந்து வந்தது.

**"தொழுகாண் பிறையின் தோன்றி யாம்நுமக்கு**
**அரியம் ஆகிய காலை"** [107]

***(குறுந்தொகை, பாடல் எண் 178, அடிகள் 5-6)***

என்றுக் கூறுகின்றது.

### 5.6.5. தேய்தல் உண்மை

வானில் உலாவருவது திங்களாகும். இத்திங்களானது உலகில் உள்ள உயிர்களுக்குத் தேய்தலும் பெருகலும் மாய்தலும் பிறத்தலும் உண்டு என்பதைச் சுட்டுவது போல வானில் ஒளித் தன்மையுடன் விளங்கியதாகக் கருதியதை,

**"தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்**
**மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்**
**அறியா தோரையும் அறியக் காட்டித்**
**திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து"** [108]

***(புறநானூறு, பாடல் எண் 27, அடிகள் 11-14)***

என்று எடுத்துரைக்கின்றது.

### 5.6.6. அரவு பற்றுதல்

வானத்து உச்சியில் தோன்றும் நிறைமதி அரவினால் பற்றப்படுதலும் உண்டு .பாம்பினால் பற்றப்படும் கிரண காலச் சந்திரனை,

**"அரவு நுங்கு இவணோர் போலக்**

**களையா ஆயினும் கண் இனிது படீஇயர்"** [109]

***(குறுந்தொகை, பாடல் எண் 395, அடிகள் 4-5)***

**"அரவு நுங்கு மதியின் நுதலொளி கரப்பத்"** [110]

***(அகநானூறு, பாடல் எண் 313, அடி 7)***

**"அகல் இரு விசும்பின் அரவும் குறைப்படுத்த**

**பசுங்கதிர் மதியத்து அகல் நிலாப் போல"** [111]

***(நற்றிணை, பாடல் எண் 377, அடிகள் 6-7)***

**"பாம்பு ஊர்மதியின் நுதல்ஒளி கரப்பவும்"** [112]

***(நற்றிணை, பாடல் எண் 196, அடி 2)***

**"பாம்பு சேர்மதி பசப்பு ஊர்ந்து தொலைந்தக் கால்"** [113]

***(கலித்தொகை, பாடல் எண் 14, அடி 17)***

எனும் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை ஆகிய இலக்கியங்களின் அடிகள் தலைவியின் நெற்றியானது நிலவைப் போன்று ஒளிபொருந்தியது. தலைவனை நீங்கியதால் ஏற்பட்ட பசப்பின் காரணமாக நெற்றி ஒளியிழந்து காணப்படுதலை பாம்பால் பற்றப்பட்ட திங்களுக்கு ஒப்புமை காட்டும் பொருட்டு பேசப்பட்டுள்ளன.

### 5.6.7. திங்கள் பற்றிய உவமை

வளர் பிறையும் முழுமதியும் உவமைகளாய் இடம்பெற்றுள்ளன. வானத்து விண்மீன் நடுவே தோன்றிய நிலாவைப் போல நல்லியக்கோடன் சான்றோர் நடுவே வீற்றிருந்தான். இனிமை, மகிழ்ச்சி ஆகியவற்றின் குறியீடாய் நட்சத்திரக் கூட்டங்களுக்கிடையே சிறுபாணாற்றப்படை பாட்டுடைத் தலைவன் வீற்றிருந்த நிலையை விளக்கும் உவமையில் சந்திரன் இடம்பெற்றுள்ளான்.

**"பன்மீன் நடுவண் பால்மதி போல்"** [114]

***(சிறுபாணாற்றுப்படை, அடி 219)***

*குளிர்காலத்தில் வானில் ஒளிதரும் நிலவு விரிந்தது போலப் பரிசுப் பொருள் பல தருவோன் என்று சிறுபாணாற்றுப்படையில் சந்திரன் குறித்த செய்தியினை,*

***"பருவவானத்துப் பாற்கதிர் பரப்பி***
***உருவ வான் மதியூர் கொண்டாங்கு"*** [115]

***(சிறுபாணாற்றுப்படை, அடிகள் 250-251)***

*என வந்துள்ளது. பொன்றாப் புகழுடன் வழ்க என மன்னனை தன்மைக்குச் சந்திரன் உவமையாக்கப்பட்டுள்ளான்.*

***"பன்மீன் நடுவண் திங்கள் போலவும்"*** [116]

***(மதுரைக்காஞ்சி, அடி 769)***

*என்று உரைக்கின்றது.*

### *5.6.8. உவாமதி*

*திங்களாகிய கோள்மீன் ஞாயிற்றோடு சேர்வதும் பிரிந்து எதிர்பள்ளம் சேர்வதும் நிகழ்கையில் அதன் ஒளி நாளுக்கு நாள் வளர்ந்து முழுவட்டமாகும். ஒளி பொருந்திய முழுப்பக்கமும் தெரியும் மதி உவாமதியாகும். அந்நாளில் ஞாயிறும் திங்களும் எதிரெதிராக நிற்கும்.*

***"உவவுத் தலை வந்த பொருநன் அமையத்து***
***இருசுடர் தம்முள் நோக்கி யொருசுடர்***
***புன்கண் மாலை மலைமறைந்தாங்கு"*** [117]

***(புறநானூறு, பாடல் எண் 65, அடிகள் 6-8)***

*உவாமதி நாளை நல்ல காரியங்கள் செய்வதற்கு ஏற்ற நல்ல நாளாகக் கருதினர்.*

### *5.7. செவ்வாய் (செம்மீன்)*

*செந்நிறப்பரப்பைக் கொண்டதால் செம்மீன் எனப் புறநானூறு கூறும். செவ்வாய் மீனானது வான் நடுவே தோன்றும் காட்சியானது கடல்நடுவே தோன்றும் படகின் கண் இடப்பட்ட விளக்குப் போல விளங்கியது என்பதை,*

***"முந்நீர் நாப்பண் திமில் இமர் போல***
***செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்***
***உச்சி நின்ற உவவுமதி கண்டு"*** [118]

***(புறநானூறு, பாடல் எண் 40, அடிகள் 1-3)***

*எனும் பாடல் உணர்த்துகிறது. இன்று விஞ்ஞானிகள் கூறுவதை அன்றே புலவர்கள் கண்டறிந்து சிவந்த நிறமுடையக் கோள் செவ்வாய் என்றனர். செவ்வாய் செல்லும் பாதையில் சுக்கிரன் செல்லாது என்பதைப் பதிற்றுப்பத்து,*

***"அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது"*** [119]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 131, அடி 25)***

*என்கின்றது. இங்கு செவ்வாய்க் கோள் அழல் என்றுக் குறிப்பிடப்படுகிறது.*

*பரிபாடல் செவ்வாயைப் படிமகன் எனக் குறிக்கின்றது. நிலத்தோடு இணைத்துப் பேசப் பெறுவதால் செவ்வாய் பூமிக்காரகன் எனச் சோதிடத்தில் அழைக்கப்பெறுகின்றான். பெண்ணின் திருமணத்துடன் இணைத்துப் பேசப் பெறுவதால் மங்களகாரகன் என்ற பெயரும் உண்டு. விண்வெளி ஆய்வில் செவ்வாய் கிரகத்திற்கு அனுப்பப்பட்ட ஏவுகணை மங்கள்யான் என்றப் பெயரைக் கொண்டது என்பது இங்கு நினைக்கத்தக்கது. வடமொழியில் மங்களவாரம் என்றுச் செவ்வாய்க் கிழமை அழைக்கப்பெறுகிறது.*

*செவ்வாயில் முன்பொரு காலத்தில் தண்ணீர் இருந்திருக்கலாம் என்று நம்பப் படுகிறது. செவ்வாயில் இருந்த தண்ணீரில் கணிசமானப் பகுதி அதன் வடதுருவப் பகுதியில் பனிக்கட்யடியாக உள்ளது. இன்னொரு பகுதி நிலத்தின் அடியில் உறைந்து உள்ளது. அதன் சிவந்த பகுதிகள் வாயுக்களாக இருக்கலாம் என இன்றும் அதன் மீது ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுவருகிறது.*

*பண்டைத்தமிழர்கள் இச்செவ்வாய்க்கோள் சிவந்த நிறமுடையது என்றும், பௌணர்மி அன்று கிழக்கில் தோன்றும் என்பதையும் நுணுகி ஆராய்ந்ததை,*

***"முந்நீர் நாப்பண் திமில்சுடர் போலச்***
***செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்***
***உச்சி நின்ற உவவுமதி கண்டு"*** [120]

***(புறநானூறு, பாடல் எண் 60, அடிகள் 1-3)***

*எனும் பாடல் வெளிப்படுத்துக்கின்றன.*

### *5.8. புதன் (அறிவன்)*

*சூரியனுக்கு அருகே உள்ள கோள் புதன். அறிவு, புத்தி என்னும் பொருளைக் கொண்ட அறிவன் என்பதும் புதனே. காலக்கணிகர்களைக் கணியர் என்பர்.*

*இவர்களை அறிவர் எனக் கூறுவது மரபு. புதன் கோளை எளிதில் பார்க்க இயலாது என்பதைக் கூறும் முதுசொல் பொன் கிடைத்தாலும், புதன் கிடைக்காது என்பதாகும். கணக்கன், புலவன், சௌமியன், மதிமான், மேதை, தூதுவன் எனப் பல பெயர்களால் புதன் அழைக்கப்படுகிறது. சந்திரனின் மகன் புதன் என்பதே மதிமகன் ஆகும்.*

***"சூரியனும் புதனும் ஒருராசியில் விலகி நிற்க மாட்டார். ஒரு குறிப்பிட்ட பாகைக்குள் தான் இயங்குவார்கள்"*** [121]

***( சு. சிவபெருமான், இலக்கியங்களில் வானியல், பக்கம் 125)***

*புதனுக்குப் புத்தி என்றப் பெயரைத் தந்துள்ளது பரிபாடல்,*

**"புத்தி மிதுனம் பொருந்த புலவர் விடியல்"** [122]

***(பரிபாடல், பாடல் எண் 11, அடி 6)***

*என்று நவில்கின்றது.*

*அறிவு எனும் பொருள்படும் புத்தி எனும் சமஸ்கிருத சொல்லில் இருந்தே புதன் என்னும் சொல் அறிவன் கோளைத் தெரிவதில்லை. பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது என்பது தமிழ்ப்பழமொழி. புதன்கோளை எளிதில் பார்க்க முடியாது என்பதைக் கொண்டே இப்பழமொழி உருவாகியிருக்கலாம்.*

*புதனின் பெயர்களை நோக்கினால் புதனுக்கும் கல்விக்கும் ஒருவகை உறவு இருப்பதை அறியலாம். ஒருவர் பிறந்த நாட்குறிப்பில் (ஜாதகம்) புதனின் வலிமையைக் கொண்டு அவரின் கல்வித் திறமையை அளவிட இயலும் எனச் சோதிடர்கள் கூறுவர். ஆதலால் தான் புதனை சோதிடர்கள் விதயாகாரகன் என்று அழைக்கின்றனர்.*

### *5.9. வியாழன்* (Jupitor)

***"சூரியக்குடும்பத்தில் மிகப்பெரிய கோளாக வியாழன் என்ற கோள் விளங்குகிறது. இராசிக் கூட்டத்தில் ஓராண்டு ஒரு இராசியில் தங்கிச் செல்வதால் 12 ஆண்டுகளைக் குறிக்க ஒரு வியாழ வட்டம் என்பர். வியாழன் ஒருமுறை சூரியனைச் சுற்றிவர எடுத்துக்கொள்ளும் காலஅளவு 11 வருடங்கள் 10 மாதங்கள் 10 நாட்கள், அதாவது வியாழ ஆண்டு என்பது கிட்டத்தட்ட 12 புவிஆண்டுகளுக்குச் சமம் என்றாகிறது"*** [123]

***(விஞ்ஞானி நெல்லை சு. முத்து, வானவியலும் சங்கத்தமிழும், பக்கம் 101)***

*வியாழனை அந்தணன் என்று பரிபாடல் குறிப்பிடுகிறது. அந்தணன் தனித்து நிற்கில் அவதிகள் மெத்த உண்டு என்பது சோதிடப் பழமொழியாகும். குருப் பெயர்ச்சியும் வியாழன் நோக்கும் குறித்து இந்து நூல்கள் பெருமளவு பேசுகின்றன. ஒளிரும் தந்தை என்ற பொருளைத் தரும். ஜூபிடர் என்றச் சொல் வியாழனைக் குறிக்கும். உரோமானியரே ஜூபிடர் என்றனர்.*

> ***"வியாழனுக்கும் சூரியனுக்கும் இடையே உள்ள தொலைவு 773 கோடி கிலோ மீட்டர். இதன் விட்டம் 1,39,200 கிலோமீட்டர். இது தன்னைத் தானே 9 முறை 50 நிமிடங்களில் சுற்றுகிறது. இதற்கு பன்னிரண்டு துணைக்கோள்கள் இருப்பதாக இப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது"[124]***
>
> ***(எஸ். எஸ். இராவசாமி, வான மண்டலம், பக்கம் 36)***

*வியாழன் கோளை 39 நிலவுகள் சுற்றுவதாக விஞ்ஞானிகள் கூறுவர். வியாழன் கதிர்வீச்சு பூமியில் மிகுதியும் படுமிடம் திருச்சீரலைவாயாகும். நள்ளிரவில் ஒளிவிடும் இதனை வாழக்கோள் என்றும் அழைப்பர். சூரிய மண்டலத்தில் ராட்சத கிரகங்கள் விழாயன், சனி, யுரேனஸ், நெப்டியூன் ஆகும். தமிழ்ஆண்டு அறுபது என்ற எண்ணிக்கை வியாழன் 5 முறை சூரியனைச் சுற்றுவது கண்டு கூறியதாகும்.*

*ஞாயிற்றிலிருந்து ஐந்தாவதாக அமைந்துள்ள கோள் வியாழன் ஆகும். வியாழன் ஞாயிற்றுக் குடும்பத்திலேயே மிகப் பெரியதும், விரிந்தும் உள்ள கோளாகும்.*

> ***"அங்கி யுயர் நிற்ப அந்தணன்"[125]***
>
> ***(பரிபாடல், பாடல் எண் 11, அடி 7)***

*எனும் பாடலடியில் கோள்களின் அரசன் வியாழன் என்னும் பொருளில் அந்தணன் என்னும் சொல்லால் குறிக்கப்படுகிறது.*

*வியாழனுக்கும் பலப்பல பெரிய துணைக்கோள்கள் உள்ளன. மேலும் பல சிறிய துணைக்கோள்கள் இருக்கலாம் என்பதற்கும் சான்றுகள் உள்ளன. இதற்குத் தான் மிகவும் அதிகமான துணைக்கோள்கள் உள்ளன. வியாழனுக்கு 63 துணைக் கோள்கள் இருப்பதாக கண்டறியப்படுகிறது. வியாழன் பொன்னிறமானது.*

> **"தேட் கடுப்பு அன்ன நாட்படு தேறல்**
> **கோள் மீன் அன்ன பொலங்கலத்து அளைஇ"[126]**
>
> ***(புறநானூறு, பாடல் எண் 392, அடிகள் 16-17)***

*எனும் பாடலில் கள் பொற்கிண்ணத்தில் இருப்பதை வியாழன் கோளைக் கொண்டு உவமையாகக் குறிப்பிடப்படுகிறது.*

*5.10.* ***வெள்ளி (மழைக்கோள்)***

*சூரிய உதயத்திற்கு முன் வானில் தோன்றி ஒளிரும் வெண்ணிற மீன் வெள்ளி. சூரிய மறைவிற்குப் பின்னும் ஒளிதரும். நள்ளிரவில் காணஇயலாது. ஞாயிறு தோன்றும் முன்னும், மறைவிற்குப் பின்னும் தோன்றும். மழையை அறிவிக்கும் கோள். புதனுக்கும் பூமிக்கும் இமைடயே உள்ளது. வெள்ளிக்கோள் வெள்ளி வட திசை நோக்கி இயக்கம் பெற்றால் மழைபெய்ரும் என்றுக்ஷ௵; கண்டனர் தமிழர்.*

*வெள்ளிக்கோள் தென்திசை ஏகினால் மழைபெய்யாது. பட்டினப்பாலை ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் காவிரியாற்றில் நீர் எப்போதும் ஓடும் என்ற வளமைகூற வந்தவர் வெள்ளி தெற்கே போனாலும் வான்பொய்யாது என்றுக்ஷ௵; குறிப்பிடுகிறார்.*

***"வசையில் புகழ் வயங்கு வெண்மீன்***
***திசை திரிந்து தெற்கே கினும்***
***வான் பொய்ப்பினும் தான் பொய்யா***
***மலைத்தலைய கடற் காவிரி"*** [127]

***(பட்டினப்பாலை, அடிகள் 1-4)***

*இதே செய்தியைப் புறநானூறும் குறிப்பிடுகிறது.*

**"மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்**
**தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்"** [128]

***(புறநானூறு, பாடல் எண் 117, அடிகள் 1-2)***

*எனும் அடிகள் சனியாகிய விண்மீன் புகைகளோடு கூடிப் புகையினும், எல்லாத் திசைகளிலும் புகை தோன்றினாலும் தென்திசைக் கண்ணே வெள்ளிமீன் தோன்றினும், மழை பிழைப்பறியாது என்றுஆ; பாரிநாட்டை கபிலர் பாடுவதாக அமைந்துள்ளது.*

*கதிரவன் திசை நான்கிலும் தோன்றுதல், வெள்ளியாகிய மழைக்கோள் தென் திசையில் இயங்குதல் ஆகியன மழை பொழியாது. வறண்டு போகச் செய்வன எனப் பழந்தமிழர் நம்பினார்.*

*சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடிய வெள்ளைக்குடி நாகனார் காவிரியின் வளமையைப் பாடுகிறார். சுடர்விளங்கும் கதிர்களையுடைய ஞாயிறு நான்கு திசைகளிலும் தோன்றினாலும் ஒளியுடைய வெள்ளி மீன் தென்*

திசைக்குச் சென்றாலு, அழகிய குளிர்ந்த காவிரிக்கால்வாய் பலவாகப் பிரிந்து வளமூட்டி வரும் என்பதை,

**"அலங்கு கதிர்க்கனலி நால்வயின் தோன்றினும்**
**இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்"**[129]

***(புறநானூறு, பாடல் எண் 35, அடிகள் 6-7)***

எனும் பாடலடிகள் விளக்குகின்றன.

வைகறைப் பொழுதில் நிகழ்வுகளைக் கூறும் புறப்பாடல் வெள்ளியாகிய மீன் வானில் தோற்றம் பெற்றதைக் கூறுகிறது.

**"வெள்ளியும் இருவிசும்பேர் தரும்"** [130]

***(புறநானூறு, பாடல் எண் 397, அடி 1)***

வெள்ளிக்கோள் தென்திசையில் நிற்க, மழையின்றி விளைவயல்களும் நீர் நிலைகளும் வற்றிப் பயனற்றுப் போகும் என்பதை,

**"வெள்ளி தென்புலத்துறைய விளைவயல்**
**பள்ளம் வாடி பயிரில் காலை"**[131]

***(புறநானூறு, பாடல் எண் 388, அடிகள் 1-2)***

என்னும் அடிகள் குறிப்பிடுகின்றன.

ஆறுமாத காலம் காலையிலும் ஆறு மாத காலம் மாலையிலும் தோன்றும் தன்மையுடையது வெள்ளி. காலையில் விடிவெள்ளி தோன்றியதும் பறவையினங்கள் ஒலிக்கின்றன.

**"வெள்ளி தோன்ற புள்ளுக்குரல் இயம்ப"**[132]

***(புறநானூறு, பாடல் எண் 388, அடிகள் 1-2)***

வெண்மை நிறமுடையக் கோள் வெள்ளி எனக் காரணப் பெயராக அமைந்தது. இது மழைக்கோள். வடக்கு நோக்கிப் பெயராது. இக்கோள் தெற்கு நோக்கிப் பயணம் செய்தால் மழை வரும். அது வறட்சிக்கு அறிகுறியாகும் என்றுப் பழந்தமிழர் கணக்கிட்டு அறிந்துள்ளனர்.

பதிற்றுப்பத்திலும் இச்செய்தி உள்ளது. மழை வரும் காலத்தைத் தருவது சுக்கிரன் (வெள்ளி) என்பதாகிறது. வேளாண்மைத் தொழில் புரிவார்க்கு உதவும் கோள் வெள்ளிக் கோளாகும். இது வெண்மை நிறமுடையது. இது மாலை அல்லது காலையில் மட்டுமே வானில் தெரியும். பதிற்றுப்பத்து சுக்கிரன் வடக்கில் தான் இருக்கும் என்றுக் கூறுகிறது.

***“வறிதுடைக் கிறைஞ்சிய சீர் வில் வெள்ளி***

***பயன்கெழு பொழுதுதொடு ஆகியம் நிற்ப”[133]***

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 69, அடிகள் 13-14)***

*என்ற அடிகள் மூலம் பெற முடிகிறது. பூமகள் வளம் கொழிக்கவும் கதிரவன் வெம்மை தனியவும் ஆகிய செயல்களை முன்னே அறிவிப்பதால் பயன்கெழு வெள்ளி என்று அடைமொழி தந்துள்ளார் கபிலர். பொதுவாக விண்மீன்கள் தத்தம் நிலையில் இருக்கும் போது மழை தவறாது தரும்.*

***“மீன் வயின் நிற்ப வானம் வாய்ப்ப”[134]***

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 90, அடி 9)***

*எனவும்,*

***“வியனாண் மீனெறி யொழுக”[135]***

***(மதுரைக்காஞ்சி, அடி 8)***

*எனவும்,*

***“விரிகதிர் மதியமொடு வியன்விசும்பு புணர்ப்ப”[136]***

***(பரிபாடல், பாடல் எண் 11, அடி 1)***

*எனவும் இலக்கியங்களில் வந்திருப்பதால் கோள்களின் இருக்கை பற்றியக் குறிப்புகள் காாணப்படுகின்றன.*

***“தென்திசை மருங்கின் வெள்ளியோடினும்”[137]***

***(புறநானூறு, பாடல் எண் 117, அடி 2)***

***“இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்***

***அந்தண் காவிரி வந்துகவர் பூட்ட”[138]***

***(புறநானூறு, பாடல் எண் 35, அடிகள் 7-8)***

*ஆகியப் பாடல்களின் அடிகளிலும் வெள்ளியின் தெற்குத் திசைப் பயணம் பஞ்சத்தை விளைவிக்கும் என்றச் செய்தி இடம் பெற்றுள்ளது.*

*சுக்கிரன் என்ற வெள்ளிக்கோள் வானில் எழும்போது பறவைகள் ஒலிக்கின்றன. வெள்ளிமீன் காலை அல்லது மாலையில் சூரியன் தோன்றும் முன்னும் மறைந்த பின்னரும் காட்சி தரும். அந்த நேரத்திற்கும் பறவைகளுக்கும் தொடர்பு இருக்கும் பகுதி புறநானூற்றில் உள்ளது.*

**"வெள்ளியும் இருவிசும்பு ஏர்தரும் புள்ளும்**

**உயர்சினைக் குடம்பைக்கு குரல் தோற்றினவே"[139]**

***(புறநானூறு, பாடல் எண் 397, அடிகள் 1-2)***

இதே கருத்தினை,

**"வெள்ளி தோன்ற புள்ளுக்குரல் இயம்ப"[140]**

***(புறநானூறு, பாடல் எண் 385, அடி 1)***

என்னும் பாடல் குறிப்பிடுகின்றது. கிரகத்தோற்றமும் பறவை உணர்வும் இணைத்துப் பேசப்பெறுகின்றது.

சுக்கிரன் எங்கு பெயர்ந்தாலும் புலவர்களுக்கு உணவுப் பஞ்சம் வராது.

**"யாண்டு நிற்க வெள்ளி மாண்ட**

**உண்ட நன்கலம் பெய்தும் நுடக்கவும்**

**நின்ற நண்பகல் ஊன் தோண்டவும்**

**வந்த வைகல் அல்லது**

**சென்ற எல்லைச் செலவு அறியனே"[141]**

***(புறநானூறு, பாடல் எண் 834, அடிகள் 20-26)***

சுக்கிரன் தென்திசை ஏகினால் பஞ்சம் ஏற்படும் என்றச் சோதிடக்குறிப்பு உள்ளூறுத்தப்பட்டதைக் கூறுகிறது.

**"வடதிசை நின்று தென்வயின் செலினும்"[142]**

***(புறநானூறு, பாடல் எண் 386, அடி 20)***

புலவர்களின் வறுமையைப் போக்கிடும் புரவலர் புகழ்பாடும் புறநானூற்றில் சுக்கிரன் தென்திசைச் செல்வதால் ஏற்படும் மழையின்மை சுட்டப்படுகின்றது.

**"ஏலா வெண்பொன் போருறு காலை"[143]**

***(புறநானூறு, பாடல் எண் 389, அடி 5)***

என்பதில் வெண்பொன் என்பது வெள்ளிக்கோளைக் குறிக்கும். வெள்ளி பிறழ்ந்தால் நாட்டில் வளம் குன்றும் என்பதை,

**"அறான் அவன் பரிகோ வெள்ளியது நிலையே"[144]**

***(புறநானூறு, பாடல் எண் 383, அடி 24)***

என்னும் அடி உணர்த்துகிறது.

சுக்கிரன் வடக்கே சிறிது சாய்ந்துள்ளது என்பதால் மழை பெய்யும் வாய்ப்பை உணர்த்துகிறது. வெள்ளிக்கோளின் வடதிசைப் பயணம் வளத்தை நல்கும் எனும் செய்தி பதிற்றுப்பத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**"வறிது வடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி**
**பயங்கெழு பொழுதொடு அறியம் நிற்ப"[145]**

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 24, அடிகள் 23-24)***

வெள்ளி மீன் விடியலில் தோன்றுவதுபோல ஆம்பல் அதிகாலையில் மலரும் என்னும் பயிரின அறிவியல் செய்தி நற்றிணையில் இடம்பெற்றுள்ளது.

**"கணைக்கால் ஆம்பல் அமிழ்து நாறுதண்போது**
**குணக்குத் தோன்று வெள்ளியின் இருள்கெட விரியும்**
**கயற்கணம் கலத்த பொய்கை ஊர"[146]**

***(நற்றிணை, பாடல் எண் 230, அடிகள் 3-5)***

என்று நற்றிணைக் கூறுகின்றது.

விடியற்காலத்தில் திங்களின் ஒளியானது மறையும்போது வெள்ளி விளக்கமாய்த் தோன்றும் எனக் கண்டனர்.

**"மதிநிலாக் கரப்ப வெள்ளி ஏர்தர**
**வகைமாண் நல்லில்"[147]**

***(புறநானூறு, பாடல் எண் 398, அடிகள் 1-2)***

இன்றும் விடியல் பொழுதில் இவ்வெள்ளிக் கோளைக் காணமுடிகின்றது.

## 5.11. சனி

இக்கோளின் நிறம் கரிய நிறம். கரிய நிறம் என்பதால் காரி என்றும், மைம்மீன் என்றும் அழைப்பர். வாயுக்கோளான இதன் கதிர்வீச்சு மிகுதியும் பூமியில் படுமிடம் திருநள்ளாறு.

இக்கோள் சூரியனுக்கு ஆறாவது வட்டத்தில் உள்ளது. சனிக்கு வழங்கும் பிற பெயர்கள் அந்தகன், கரியவன், காரி, சௌரி, நீலன், மந்தன், முடவன், முதுமகன் என்பதாகும்.

வெறுங்கண்ணால் பார்க்க முடிந்த கோள்களில் சனியும் ஒன்றாகும். இது ஞாயிற்றுக் குடும்பத்திலுள்ள கோள்களில் தனிச்சிறப்பு வாய்ந்தது. சனிக்கோளிற்குக்

*கண்களைக் கவரும் வளையல்கள் உள்ளன. இக்கோளைச் சுற்றியுள்ள வளையங்களே இதன் சிறப்பிற்குக் காரணம்.*

*16ஆம் நூற்றாண்டில் தொலைநோக்கி கண்டுபிடிக்கப்பட்ட பின்னர்தான் சனிக்கோளுக்கு வளையம் உள்ளது என்று அறியப்பட்டது. ஆனால் அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் இலக்கியங்கள் சனிக்கோள் புகைந்து வளையம் போல அமைய அப்புகை அதனைச் சூழ்ந்து காணப்படுவதாக எழுதியுள்ளனர். நாடுகாண் காதையில் இளங்கோவடிகள் கூறுகிறார்.*

*சனிக்கோளை காரி எனவும், கரியவன் எனவும், மைம்மீன் எனவும் இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றது. பரிபாடல் சனிக்கோளை இறையமன் என்றுக் குறிப்பிடுகின்றது.*

**“இறையமன் வில்லன் கடைமரம் மேவ”[148]**

***(பரிபாடல், பாடல் எண் 11, அடி 8)***

*சாதகலங்காரம் என்னும் தமிழ்ச்சோதிட நூலின் பாடல் சனிக்கோளை அதன் மெதுவான இயக்கம் காரணமாக மந்தன் எனக் குறிப்பிடுகின்றது.*

### *5.11.1. சனிமீன் பற்றிய நம்பிக்கை*

*சங்கத்தமிழர்களின் நிமித்தம் பார்க்கும் முறையில் சனிமீன் முக்கிய இடம் பிடித்திருந்தது. சனிமீன் கருமை நிறம் உடையது. சனி தனக்குப் பகைவீடான சிம்மராசியில் தோன்றினால் பெருந்தீங்கு உண்டாகும் என்பதை அறிந்து அதனை தீயச்சகுனமாகக் கருதினர்.*

**“மைம்மீன் புகையளினம் தூமம் தோன்றினும்**
**தென்திசை மருங்கின் வெள்ளி யோடினும்”[149]**

***(புறநானூறு, பாடல் எண் 117, அடிகள் 1-2)***

***“சங்ககாலத்தில் சனிமீன் மைம்மீன், கரியவன் எனும் பெயர்களால் சுட்டப் பட்டது. வெள்ளை ஒளி நிறைந்த கோளை வெள்ளி என்றழைத்த பழந்தமிழர் கருமைபடர்ந்து ஒளி மங்கிய காரணம் பற்றிச் சனிமீனை மைம்மீன் என்றனர் போலும். சனிமீன் புகைகளோடு கூடிப் புகைதலாவது இடபம், சிங்கம், மிதுனம் இவற்றோடு மாறுபடுதலாம் ”[150]***

***(சுசிலா கோபாலகிருட்டிணன், சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், பக்கம் 12)***

## *5.12. இராகு*

*இராகுவின் தந்தை விப்பிரசித்தியாவார். தாயார் ஸிம்ஹிகை ஆவார். இராகு கஸ்யபமுனிவரின் பேரன் ஆவார். கேது இவரது தம்பியாகும். தவம் செய்து கரும்பாம்பு உருவமுடையவர் ஆனார். இராகுவிற்கு பாம்பு, கரும்பாம்பு, நஞ்சு, மதிப்பகை எனும் பிற பெயர்கள் உண்டு. இராகுவின் தலமாக காளஹஸ்தி (திருநாகேஸ்வரம்) என்பதாகிறது.*

## *5.13. கேது*

*கேதுவின் தந்தை விப்பாசித்தியாவார். தாய் ஸிம்ஹிகை ஆவார். இராகு இவரது அண்ணன் ஆவார். தவம்செய்து செம்பாம்பு உருவமுடையவர் ஆனார். கேதுவின் பிறபெயர்கள் பாம்பு, செம்பாம்பு, கதிர்பகை, சிசி, ஞானி என்பவனாகும்.*

*இராகு கேது பற்றியக் குறிப்புகள் யாவும் நிறைமதி அரவினால் பற்றப்படுதல் என்றவாறு அமைகிறது.*

***"பாம்பு ஊர்மதியின் நுதல் ஒளி கரப்பவும்"[151]***

***(நற்றிணை, பாடல் எண் 196, அடி 2)***

***"பாம்பு சேர்மதி பசப்பு ஊர்ந்து தொலைந்தக்கால்"[152]***

***(கலித்தொகை, பாடல் எண் 14, அடி 17)***

***"அகல் இரு விசும்பின் அரவும் குறைப்படுத்த***
***பசுங்கதிர் மதியத்து அகல் நிலாப்போல***
***அளகம் சேர்ந்து திருநுதல்"[153]***

***(நற்றிணை, பாடல் எண் 317, அடிகள் 6-7)***

*எனும் நற்றிணை அடிகள் அகன்ற கரிய வானிடத்தே அரவு விழுங்குதலால் குறைவுபட்ட பசிய கதிரை உடைய திங்களின் பலவாகிய ஒளியைப்போல ஒளிவீசும் கூந்தல் சேர்ந்த நெற்றியை உடையவள் என்றுத் தலைவியின் அழகுநலனைக் கூறுகிறது.*

***"அரவு நுங்கு இவனோர் போலக்***
***களையர் ஆயினும் கண்இனிது படீஇயர்"[154]***

***(குறுந்தொகை, பாடல் எண் 395, அடிகள் 4-5)***

*என்னும் குறுந்தொகைப் பாடலும்,*

**"அரவுநுங்கு மதியின் நுதலொளி கரப்பத்"[155]**

***(அகநானூறு, பாடல் எண் 313, அடி 7)***

*எனும் அகப்பாடலும் தலைவனைப்பிரிந்தத் தலைவியின் பசப்பால் அவள் அழகு நலம் குறைந்த தன்மையைப் பாம்பால் கொள்ளப்பட்ட திங்களின் ஒளி குறைந்தத் தன்மைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.*

> **"மேலை நாட்டவர்கள் இராகு, கேது என்னும் நிழல் கிரகங்களைப் பற்றி அறியவில்லை. எனவே, அதற்குப் பதிலாக மற்றும் என்ற புதிய இரண்டு கிரகங்களையும் அந்த இடத்தில் வைத்துப் பலன்களை ஆராய்ந்தனர். ஆயினும் பிற்காலத்தில், நமது இந்துக்களின் கதையை அப்படியே ஏற்றுக்கொண்டு இராகுவை (பாம்பு அரக்கனின் தலை) என்றும் கேதுவை (பாம்பு அரக்கனின் வால்) என்றும் அழைத்தனர்"[156]**
>
> ***(அழகர் விஜய், பெயர் ஒலி சோதிடம், பக்கங்கள் 102-103)***

### *5.13.1. இராகு கேது பற்றிய கதை*

*இராகு கரும்பாம்பு என்றும், கேது செம்பாம்பு என்றும் வழங்கப்படுகிறது. இதற்கான ஒரு புராணகதை அபிதான சிந்தாமணியில் இடம்பெறுகிறது. விஷ்ணு மூர்த்தி சகன்மோகினி உருக்கொண்டு தேவர்களுக்கு அமுது பகுந்தளித்த காலத்தில் இராகு தேவவுருக் கொண்டு சூரிய சந்திரர் இருவருக்கும் இடையிலிருந்து வாங்கிப் புசித்தான். இவ்விருவரும் இராகுவை விஷ்ணு இராகுவை விஷ்ணு மூர்த்திக்கு குறிப்பித்தனர். மோகினி உருக்கொண்ட விஷ்ணு, இராகுவைத் தலையில் சட்டுவத்தால் அடித்தார். பிரிந்த சிரம் இராகுவென்றும், மற்ற தேகம் கேதுவென்றும் பெயருற்றுச் சூரிய சந்திரர் தங்களைக் குறிப்பித்த காரணத்தால், அவர்கள் மேல் பகைமை கொண்டு தவ வலிமையால் மறைப்பர் என்பர். இவர்கள் தவத்தால் கிரகபதம் அடைந்தனர். இவர்கள் விஷ்ணுவை எண்ணி தவமியற்றிக் கரும்பாம்பு, செம்பாம்பு என உருவாயினர். (அபிதான சிந்தாமணி, பக்கம்.177)*

### *5.14. கிரகங்கள்*

*சூரியன் ஒரு விண்மீன். தான் இயங்குவதால் (சஞ்சரிப்பதால்) கிரகம் எனப் பெயர் பெறுகின்றது. சூரியனிடமிருந்து ஒளியைப் பெறுபவன் சந்திரன்.*

சஞ்சரிப்பதால் சந்திரனும் துணைக்கோள் எனக் கூறுவதைவிட, ஒரு கிரகமாகவேக் கருதப்பட்டு வருகிறது. சூரியன் தலைமைக்கிரகம். ஏனைய கிரகங்களான சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, யுரேனஸ், நெப்டியூன், புளூட்டோ என்னும் கிரகங்கள் அனைத்தும் தனக்குரிய வகுக்கப்பட்டப் பாதையில் சூரியனைச் சுற்றி வருகின்றன.

நவக்கிரகங்கள் ஒன்பது எனினும் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டவையோடு சேர, பன்னிருகோள்கள் ஆகின்றன. ஏழு கோள்களின் பெயர்களும் ஏழு கிரகங்களின் பெயர்களே. இவற்றுடன் கரும்பாம்பு இராகு, செம்பாம்பு கேது சேர ஒன்பது. இவையே தமிழ்நாட்டில் பின்பற்றப்படும் சோதிடக் கிரகங்கள்.

மேலைநாட்டார்தான் புளூட்டோ, நெப்டியூன், யுரேனஸ் வழிச் சோதிடம் கூறுகின்றனர்.

இராகு, கேதுக்கள் நிழல் கிரகங்களே. சூரியன், சந்திரன் சுழற்சியின் போது ஏற்படும் ஒரு நிழற் பகுதியில் தோன்றும் கிரகங்களே நிழற்கிரகங்கள். இவை தங்களது சுற்றுப்பாதையை இடப்புறமாக கொண்டதால், இடதுசாரிக் கிரகங்கள் ஆகும். ஏனையவை வலமாகச் சுற்றும் வலதுசாரிக் கிரகங்களாகும்.

பன்னிரு மாதங்களும் இராசிகள் எனச் சோதிடத்தில் அழைக்கப்பெறுகின்றது. அப்பெயர்கள் வடமொழியில் வழங்கி வருவதால் புதுமையாக உள்ளன. சூரியன் ஒரு ராசியில் ஒரு மாதம் தங்கிச் செல்லும். வியாழன் ஒரு ராசிக்கட்டத்தில் ஓராண்டும், சனி 2 1/2 ஆண்டுகளும் தங்கும். இவ்வாறு தங்கும் காலம் நீட்டிக்குமானால், அந்த நிலைக்குத் தம்பணம் என்று பெயர். வழக்கத்திற்கு மாறாக வேகமாக நகர ஆரம்பித்தால் அதற்கு அதிசார ஓட்டம் என்றுப்பெயர்.

சந்திரன் 2 1/4 நாள்தான் ஒரு ராசியில் தங்கும். 2 1/4 எனப் பின்னத்தில் உள்ளது. சந்திரனைத் திங்கள் என்று மாற்றுப்பெயராலும் அழைப்பர். அதுவே மாதத்தின் பெயரைக் குறிக்கும் சொல்லாகவும் உள்ளது. ஒரு நட்சத்திரத்தைச் சந்திரன் கடக்க ஒரு நாள் வீதம் 2 1/4 நட்சத்திரம் கடந்தால் ராசி மாறும்.

திங்கள் என்பது மாதமே என்ற தமிழர்களின் வழக்கினைப் பாடி,

**“திங்களும் நாளும் முந்து கிளந்தன”**[157]

***(தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், நூற்பா 287)***

எனத் தொல்காப்பியர் இகர ஐகார ஈற்றுப் புணர்ச்சி விதி கூறும்போது திங்கள் ஆண்டுகணக்கை நினைவுப் படுத்தும் வகையில் திங்களை அமைத்துள்ளார்.

## *5.15. இராசிகள்*

*வானத்தில் 27 நட்சத்திரக் கூட்டங்கள் ஒரு மண்டலமாக அமைந்துள்ளன. 27 நட்சத்திரங்களையும் 2 1/4 நட்சத்திரமாகப் பகுத்துப் பன்னிரு பாகமாய்ப் பகுத்து ஒவ்வொரு மாதத்தையும் ஒரு ராசி எனப் பெயரிட்டனர். ராசியை வீடு என்றும், இருக்கை, இல், இல்லம், இடம், பாவம் என்றும் வழங்குவர். அசுபதி ஒரு நட்சத்திரம். அதை 4ஆகப் பகுப்பர். 60 நாழிகை ஒரு நட்சத்திரம். 1 பாகத்திற்கு 15 நாழிகை வீதம் 4 பாகங்களாகிறது அசுபதி. இவ்வாறு நட்சத்திரமானது ஒரு ராசியில் இருக்கும். இந்த வீட்டில் கிரகங்களான சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது ஆகிய நவக்கோள்கள் சஞ்சரிக்கும். அவ்வாறு சஞ்சரிக்கும் காலம் ஒவ்வொன்றுக்கும் வேறு வேறாக அமையும்.*

*பன்னிரண்டு ராசிக்கும் முறையே மே-ம், ரி-பம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருட்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என்று பெயர்கள் இடப்பட்டுள்ளன. இவற்றைத் தமிழில் ஆடு, காளை, இரட்டை, நண்டு, அரிமா, நங்கை, துலை, தேள், வில், சுறா, குடம், மீன் என்று பெயர் சூட்டுவர். ராசி குறித்த தகவல் எட்டுத்தொகையுள் ஒன்றான, பரிபாடலில் இடம்பெற்றுள்ளது.*

***"விரிகதிர் மதியமொடு வியல் விசும்பு புணர்ப்ப***
***எரிசடை எழில்வேழம் தலை எனக்கீழிருந்து***
***தெருவிடைப் படுத்து மூன்று ஒன்பதிற்று இருக்கையுள்"***[158]

***(பரிபாடல், பாடல் எண் 11, அடிகள் 1-3)***

*ஆகாயத்தில் எரிசடை வேழம் என்ற மூன்று வீதிகளான நட்சத்திர மண்டலம் தலை என மேலே இருக்க, சந்திரன் கீழே இருந்து ஒவ்வொரு ராசியிலும் இருந்து செல்கிறான். சந்திரன் அவ்வாறு இருந்தபோது 12 ராசிகளில் எந்தந்த கிரகங்கள் இருந்தன என்பதை,*

***"உருகெழு வெள்ளி வந்து எற்றியல் சேர***
***வருமெனப் படிமநன் வாய்ப்பப் பொருள்தெரி***
***புந்தி மிதுனம் பொருந்தப் புலர்விடியல்***
***அங்கி உயர்நிற்ப அந்தணன் பங்குவின்***

**இல்லத் துணைக்கப்பால் எய்த இறையமன்**

**வில்லில் கடை மகரம் மேவப் பாம்பு புல்லை**

**மதியம் மறைய வருநாளில்"[159]**

***(பரிபாடல், பாடல் எண் 11, அடிகள் 4-10)***

*என்றுப் பரிபாடல் குறிக்கின்றது.*

*சுக்கிரன் ரி-ப ராசியில் உள்ளான். படிமகன் என்றச் செவ்வாய் மே-ராசியில் தங்கியுள்ளான். புதன் மிதுன ராசியல் உள்ளான் என்பதை இவ்வடிகள் குறிக்கின்றன. புலர்விடியல் அங்கு உயர்நிற்ப என்பதுச் சூரியன் சிம்மராசியில் உள்ளதாகப் பரிமேலழகர் உரை கூறியுள்ளார். அங்கி என்பதைக் கார்த்திகை எனக் கொண்டு, அதிகாலை அந்த நட்சத்திரம் தலைக்கு நேரே உச்சியில் இருப்பதாகவும் கூறுவர். அந்தணன் என்ற குரு மீன ராசியில் இருக்கிறார் என்றுப் பரிபாடல் கூறுகிறது. இளையவன் சனியானவான், அவர் மகர ராசியில் தங்கியதை இவ்வாறு குறிப்பிட்டனர். சந்திரனும் இராகுவும் மகரத்திலும்கேது கடகத்திலும் இருந்ததாகப் பரிமேலழகர் கூறுகிறார். சூரியன் சிம்மராசியில் என்பதால் அது ஆவணி மாதமாகிறது. பெருமழை பெய்ய ஏற்ற கிரக அமைப்புப் பரிபாடலில் வந்துள்ளது.அ வையையில் வெள்ளம் வந்தது குறிக்கப்படுகிறது.*

### *5.16. நாள்மீன்*

*ஒருவர் பிறந்த நாளில் திங்களை அடுத்து எந்த மீன் நிற்கின்றதோ அதுவே அவரது நாள்மீன் எனப்படும். அதற்கேற்பவே அவர்களது வாழ்வில் நல்லவை, கெட்டவை விளையும் என்பதுச் சோதிடக் கொள்கை ஆகும்.*

**"மதிசேர் நாண்மீன் போல"[160]**

***(புறநானூறு, பாடல் எண் 160, அடி 8)***

*பாண்டியன் தலையானங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியன் வாழ்த்தும் இடத்து மாங்குடிகிழார்,*

**"நின்று நிலைஇயர் நின் னாண்மீ னில்லாது**

**புடாஅச் செல்இயற்றநின் பகைவர் மீனே"[161]**

***(புறநானூறு, பாடல் எண் 24, அடிகள் 24-25)***

*என்று அவனுடைய நாள்மீனைக் குறிப்பிடுகிறார்.*

### *5.17. சங்க இலக்கியத்தில் நட்சத்திரங்கள்*

*எட்டுத்தொகையிலும் பத்துப்பாட்டிலும் நட்சத்திரங்களின் பெயர்களின் பெயர்கள் சில இடம்பெற்றுள்ளன. எட்டுத்தொகையுள் கலித்தொகை, நற்றிணை, அகநானூறு, புறநானூறு ஆகிய நூல்களின் நட்சத்திரம் குறித்த தகவல் உள்ளன.*

*வானில் நிகழ்ந்த கோள்களின் நிகழ்ச்சியை அடிப்படையாக வைத்து, அந்நாட்டு அரசனுக்குத் தீங்கு வருமென்று கடலூர்க்கிழார் வருந்திய செய்தியைக் காட்டுகின்றது. இப்பாடலின் விளக்கத்தினை மேச ராசிக்குள்ள கார்த்திகை நட்சத்திரத்தின் முதற்கால் நடந்து கொண்டிருக்கும் வேளையில் சந்திரன் இல்லாத பாதி இரவில் பங்குனி மாதத்தினுடைய முதற்பாதி நாளில் அனுசத்தின் வேர் நட்சத்திரமான கேட்டையும் புனர்பூசத்தின் கடை நட்சத்திரமான திருவாதிரையும் வானில் விளங்கிக் கொண்டிருக்கும் போது தலைநாண் மீனாகிய உத்தரம் உச்சத்திலிருந்து கீழே இறங்க, நிலை நாண் மீனாகியத் திருவாதிரை ஏற தொன்நாண் மீனாகிய கேட்டை கடலுள் படிய என்று வானில் நிகழ்ந்த கோளின் நிகழ்ச்சியைக் கொண்டு ஒரு அரசனுக்கு வரப்போகின்ற தீமையைக் குறித்து வந்த பாடல் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது.*

***“ஆடுஇயல் அழல் குட்டத்து***
***ஆர்இருள் அரை இரவில்***
***முடப்பணையத்து வேர்முதலாக்***
***கடைக்குளத்துக் கயம் காபப்***
***பங்குனி உயர் அழுவத்துத்***
***தலைநாள் மீன் நிலை திரிய***
***நிலை நாள்மீன் துறை யாடிய***
***அஞ்சினம் எழுநாள் வந்தன்று இன்றே”*[162]**

***(புறநானூறு, பாடல் எண் 229, அடிகள் 1-7)***

*என்ற பாடல் விளக்குகின்றது.*

#### *5.17.1. கார்த்திகை (அறுமீன்)*

*தலைவி மலர்மாலையைத் தன் தலையில் சூடி இருந்தாள். அது கார்த்திகை நட்சத்திரம் போல விளங்கியது என்று கலித்தொகை குறிஞ்சிக் கலியில் இடம்பெற்றுள்ளது.*

**"விரிநுண்ணுல் சுற்றிய ஈரிதழ் அலரி**
**அரவுக்கண் அணியுழை ஆரல்மீன் நகையொப்ப"**[163]

***(கலித்தொகை, பாடல் எண் 28, அடிகள் 3-4)***

கார்த்திகை நட்சத்திரம் நற்றிணையில் அறுமீன் எனும் பெயரால் அழைக்கப்படுகிறது.

**"அறுமீன் பயந்த அறம்செய் திங்கள்**
**செல்சுடர் நெடுங் கொடிபோல**
**பல்பூசல் கோங்கம் அணிந்த காடே"**[164]

***(நற்றிணை, பாடல் எண் 202, அடி 9-11)***

என்னும் நற்றிணைப் பாடல் கார்த்திகை நட்சத்திரத்தின் பெயரால் அமைந்த அறம் செய்வதற்குரிய திங்கள் என்று ஆறுநாள் மீனாக விளங்கும் கார்த்திகை நட்சத்திரம் குறிப்பிடுகிறது.

கார்த்திகை விண்மீன் அறுமீன் என்று வழங்கினார்கள். சங்ககாலத் தமிழர்கள் கொண்டாடிய சமய விழாக்களில் கார்த்திகைத் திருநாளில் வீதியிலும் வீட்டிலும் விளக்குகளை ஏற்றித் தொழுதனர்.

கார்த்திகைத் திங்களில் நீராடி விளக்கேற்றி வைத்துப் பார்ப்பனருக்கு அளித்தல் அறம் எனப்பட்டது. கார்த்திகைத் திங்களை அறம் செய் திங்கள் என்றழைத்துள்ளனர்.

**"அறுமீன் பயந்த அறஞ்செய் திங்கள்**
**செல்சுடர் செடுங்கொட் போலப்**
**பல்பூங் கோங்கம் அணிந்த காடே"**[165]

***(நற்றிணை, பாடல் எண் 202, அடிகள் 9-11)***

தலைவியை உடன்கொண்டு போகும் தலைவன் அவளின் வருத்தம் நீங்குமாறு கார்த்திகை நாளின் பெயராலே பெற்ற அறஞ்செய்வதற்குரியத் திங்களின் எடுக்கப்பட்ட விசும்பிலே செய்கின்ற ஒளியையுடைய நீண்ட விளக்கங்களின் வரிசைபோல, பல்பூக்கள் நிரம்பின நின் தந்தைக்குரியக் காட்டினைக் காண்பாயாக என்றான். கார்த்திகைத் திருநாளில் வீடுகளும் தெருக்களும் விளக்குகளால் அழகுறுத்தப்பட்டன.

முழுநிலவு கூடும் கார்த்திகை மாதத்தில் விளக்குகள் ஏற்றி வழிபடல் மரபு. அவ்விளக்குகள் போல கோங்க மரங்களின் மலர்கள் மலர்ந்திருந்ததைக் கூறும் நற்றிணைப் பாடல் கார்த்திகை பற்றிப் பேசுகின்றது.

***"மது நிறைந்து அறுமீனாகிய கார்த்திகையுடன் சேரும் கார்த்திகைத் திங்கள் நிறை மதிநாளில் எடுக்கப் பெறுவது இவ்விழா. இக்காலத்தில் உழுதொழில் முடிந்து, மழையும் பெய்தலை ஒழிந்து நீங்குகிறது"[166]***

***(மு.சண்முகம் பிள்ளை, சங்கத்தமிழரின் வழிபாடுகளும் சடங்குகளும், பக்கம் 230)***

*என்னும் கூற்றின் மூலும் கார்த்திகை நட்சத்திரம் மக்களின் வாழ்வில் பெறும் இடம் புலப்படுகிறது.*

*மலைபடுகடாமில் பூவிற்கு உவமையாக கார்த்திகை நட்சத்திரம் குறிக்கப்படுகிறது.*

***"அகலிரும் விசும்பின் ஆகல் போல்***
***வானதின் விரிந்த புன்கொடி முசுண்டை"[167]***

***(மலைபடுகடாம், அடிகள் 100-101)***

*என வரும் அடிகளில் அகல் என்பது கார்த்திகை நட்சத்திரத்தைக் கறிக்கும். முசுண்டை என்னும் பயிரின் பூவானது கார்த்திகை நட்சத்திரத்தின் வடிவம் போல உள்ளது என உவமிக்கப்படுகின்றன. இதில் நட்சத்திர வடிவினைக் குறித்து உவமை எழுந்துள்ளது.*

### *5.17.2. திருவாதிரை*

*திருஆதிரை எனும் நட்சத்திரம் ஆதிரை எனும் பெயரால் பரிபாடலில் இடம்பெறுகிறது. மார்கழி திருவாதிரைநாளில் சிவபெருமானுக்கு விழா செய்யத் தொடங்கினர் என்ற செய்தியை,*

***"மாயிரு திங்கள் மறுநிறை ஆதிரை***
***விரிநூல் அந்தணர் விழவு தொடங்க"[168]***

***(பரிபாடல், பாடல் எண் 11, அடி 77-78)***

*எனும் பாடல் விளக்குகிறது. தீச்சுடர் போன்ற செம்மீனாகத் தோன்றும் திருவாதிரையின் நாளைச் சிவனுக்குரியதாகக் கருதிக் கொண்டாடியதை பரிபாடல் குறிப்பிட்டுள்ளது. பரிபாடல் திருவாதிரை நாள்மீனுக்குரிய இறைவனாக சிவபெருமானைக் குறிப்பிடுகிறது. உயிர்களுக்கெல்லாம் முதல்வனாகியக் சிவபெருமானை ஆதிரை முதல்வன் என்றுக் குறிப்பிடுகிறது.*

**"ஆதிரை முதல்வனின் கிளந்த"[169]**

***(பரிபாடல், பாடல் எண் 8, அடி 6)***

*கலித்தொகையும் சிவபெருமானை ஆதிரையான் என்றுக் குறிப்பிட்டுள்ளது.*

**"அரும்பெறல் ஆதிரையான் அணிபெற மலர்ந்த"[170]**

***(கலித்தொகை, பாடல் எண் 150, அடி 20)***

*எனும் அடிகள் பெறுதவற்கரிய ஆதிரை நாளினையுடையச் சிவபெருமான் திருமார்பு அழகு பெறுமாறு செண்பகம் மலர்ந்து பருவம் பொய்யாததை விளக்குகிறது. திருவாதிரை நாளிற் பிறந்தவன் எனும் பொருளில் சிவபெருமான் ஆதிரையான் என்றுக் குறிப்பிடுகிறது.*

*சிவபெருமானுக்கும் திருவாதிரை நட்சத்திரத்திற்கும் இயைபு இருப்பதைக் குறிப்பிடுவதாக இச்சான்றுகள் அமைகின்றன. இதன்வழி சங்ககாலம் முதல் தற்காலம் வரை மார்கழி மாதத்தில் வரும் திருவாதிரை கூடிய நிறைமதி நாளில் சிவபெருமானை வேண்டித் திருவாதிரை நோன்பு இருந்து வருகின்றனர். இன்றும் மார்கழி திருவாதிரை நாளில் தில்லை நடராசப் பெருமானுக்குச் சிறப்பு விழா நடந்து வருகிறது.*

### *5.17.3. உரோகிணி*

*சந்திரனுக்கு 27 நட்சத்திரங்கள் மனைவியராக இருந்தாலும் அவன் உரோகிணியிடம் அதிக பாசம் வைத்திருந்தான். அதனால் தான் சந்திரன் உரோகிணியைக் கூடும் நாள் சிறப்பாகக் கருதப்பட்டது. உரோகிணி நட்சத்திரம் சகடம் எனும் பெயரில் அகநானூற்றில் வந்துள்ளது.*

**"அம்கண் இருவிசும்பு விளங்க திங்கள்**
**சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்துக்**
**கடிநகர் புனைந்து கடவுள் பேணி"[171]**

***(அகநானூறு, பாடல் எண் 136, அடிகள் 4-6)***

*திருமண நன்னாளுக்குச் சந்திரன் உரோகிணியுடன் இணையும் நாளைத் தேர்ந்தெடுத்தத் தகவல் இவ்வடிகளில் இடம்பெறுகின்றது.*

*பத்துப்பாட்டுள் நெடுநல்வாடையிலும் ரோகினி நட்சத்திரம் நினைவவன் என்று நட்சத்திரப் பெயரே நேரடியாகக் குறிக்கப்பட்டுள்ளது.*

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போர்மேற்சென்ற காரணத்தால் அவன் மனைவி பிரிவுத் துயரால் வருந்திய நிலையில் கட்டிலில் படுத்திருந்தாள். அக்கட்டிலின் மேற்பகுதியில் ஓவியம் வரையப்பட்டிருந்தது. அதில் மேடம் முதலான பன்னிரு இராசிகளின் படங்கள் (ராசி மண்டலம்) வரையப்பட்டிருந்தது. அவற்றுள் சந்திரன் உரோகிணி நட்சத்திரத்தோடு கூடியிருக்கும் காட்சி வரையப்பட்டிருந்தது. தலைவனும் தலைவியும் சந்திரனையும் ரோகிணியையும் போல ஒன்றி இருக்க வேண்டும் என்பது ஓவியத்தின் குறிக்கோளாகும்

**"விண்ஊர்பு இழிதரும் வீங்கு செலல் மண்டிலத்து**
**முரண் மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய**
**உரோகிணி நினைவனை நோக்கி நெடிது உயிரா"**[172]

***(நெடுநல்வாடை, அடிகள் 161-163)***

எனும் அடிகள் அரமாதேவியின் துயரம் திங்களை உரோகிணியுடன் கண்டவுடன் மிகுந்ததைக் கூறுகிறது. உரோகிணியைப் போல தானும் தன் கணவனைப் பிரியாமல் வாழும் பேறு பெறவில்லை என்று அரசமாதேவி வருந்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

### 5.17.4. உத்தரம்

உத்தரம் என்ற நட்சத்திரப் பெயர் நெடுநல்வாடையில் காணப்படுகிறது.

**"துணைமான் கதவம் பொருத்தி இணை மாண்டு**
**நாளொடு பெயரிய கோள் அமை விழுமரத்து"**[173]

***(நெடுநல்வாடை, அடிகள் 81-82)***

இருபத்தேழு விண்மீன்களில் உத்தரம் என்ற விண்மீனின் பெயரைக் கொண்ட கற்பலகையானது வாயிலின் இருவகதவுகள் அமைந்துள்ள நிலைக்கு மேல் செருகப்பட்டிருப்பதைக் குறிக்கும் விதமாக உத்தரம் எனும் நட்சத்திரம் இடம்பெறுகிறது.

யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் இறப்பினை முன்னுணர்த்துமாறு நட்சத்திர நிகழ்வுகளைக் கூறும் புறப்பாடல் உத்தர நட்சத்திரம் குறித்துக் கூறுகின்றது. பங்குனி மாதத்தின் முதற்பதினைந்தில் உச்சமாக

*விளங்கும் உத்தர நட்சத்திரம் சாய்ந்தது என்பதை,*

**"பங்குளி உயர் அழுவத்து**

**தலைநாள்மீன் நிலை திரிய"[174]**

***(புறநானூறு, பாடல் எண் 229, அடிகள் 5-6)***

*எனும் பாடல் உணர்த்துகிறது.*

***5.17.5. மகம்***

*மாசி மாத்து மகநட்சத்திரத்தின் தென்பாகத்தில் சந்திரன் செல்லின் செழிப்பையும் வடபாகத்தில் செல்லின் பஞ்சத்தையும் குறிப்பதான சந்திரனது கதியை மகவோட்டம் என்பர். பட்டினப்பாலையில் மக்கள் மகவோட்டம் பார்த்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. மகம் என்னும் நாள்மீன் சந்திரனுக்கு அருகில் வரும் என்பதை,*

**"மழைநீங்கிய மாக விசும்பின்**

**மதிசேர்ந்த மகவெண்மீன்**

**உருகெழு திறல் உயர்கோட்டத்து"[175]**

***(பட்டினபாலை, அடிகள் 34-36)***

*எனும் அடிகள் விளக்குகின்றன. முபமதியுடன் மகநட்சத்திரம் கூடிய செய்தி கூறப்பட்டுள்ளது. பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குரு சிம்ம ராசியில் மகநட்சத்திரத்தோடு கூடுகின்ற நாள் மகாமகம் எனத் தமிழகத்தில் கும்பகோணத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.*

***5.17.6. பரணி***

*பரணி நாள்மீன் அடுப்பு வடிவம் ஆனது. சங்ககாலத்தில் பரணி நட்சத்திரத்தில் குழந்தை பிறப்பது சிறந்தது என்றுக் கருதினர். பரணியில் பிறந்தான் தரணியாள்வான் என்றப் பழமொழி இதனை மெய்ப்பிக்கிறது. பரணியை வேழம் என்றுப் பரிபாடல் குறிக்கிறது.*

**"எரிசடை எழில் வேழம்"[176]**

***(பரிபாடல், பாடல் எண் 11, அடி 2)***

இதில் எரி கார்த்திகையையும் சடை என்பதுத் திருவாதிரையையும் எழில் வேழம் என்பது பரணி நட்சத்திரத்தையும் குறித்து வந்துள்ளது.

### *5.17.7. திருவோணம்*

திருமால் எடுத்த அவதாரத்தோடு தொடர்புடைய நட்சத்திரமாக திருவோணம் விளங்குகிறது. திருவோண நாளில் கொண்டாடிய விழா ஓணவிழாவாகும். இதனை மதுரைக்காஞ்சி,

> ***"கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்***
> ***மாயோன் மேய ஓண நன்னாள்"***[177]
>
> ***(மதுரைக்காஞ்சி, அடிகள் 590-591)***

என்று குறிப்பிடப்படுகிறது.

### *5.17.8. வடமீன் (அருந்ததி)*

வானத்தின் வடதிசையில் விளங்கும் ஏழு முனிவருள் வசிட்ட முனிவரின் துணைவி அருந்ததி என்பது தொன்மம். அருந்ததி, சாலினி என்று அழைக்கப்படுகின்ற இவ்வடமீன் பெண்களின் கற்போடு தொடர்புபடுத்தப்பட்டு மக்களால் வழிபடும் தன்மையுடையதாகக் காணப்படுகிறது. இன்றும் திருமணச் சடங்கில் இவ்விண்மீனைப் பார்க்கச் செய்கின்ற வழக்கம் நிலவி வருகிறது.

> ***"வடமீன் விளங்குஆல் உறை எழுமகளிருள்***
> ***கடவுள் ஒருமீன் சாலின்"***[178]
>
> ***(பரிபாடல், பாடல் எண் 11, அடிகள் 43-44)***

என்றுப் பரிபாடல் குறிப்பிடுகிறது. இருண்டு தோன்று விசும்பின் உயர்நிலை உலகத்து அருந்ததி அனைய கற்பின் என்று விளக்குகின்றது.

மகளிரின் கற்பினுக்கு, வடதிசைக்கண் தோன்றும் அருந்ததி என்ற விண்மீனை ஒப்பாகக் காட்டுதல் தமிழர் வழக்காகும். காரியின் மனைவியைக் குறிப்பிடும் புறப்பாடல்,

> ***"வடமீன் புரையும் கற்பின் மடமொழீ***
> ***அரிவை தோள் அளவு அல்லதை"***[179]
>
> ***(புறநானூறு, பாடல்எண். 122, அடிகள் 8-9)***

என்று காரியின் மனைவியின் கறபினைச் சிறப்பித்து கூறுகிறது. கலித்தொகையும் தலைவி நிலைபெற்று கற்பினை உடையவள் என்பதை,

**"வடமீன் போல் தொழுதுஏத்த வயங்கிய கற்பினாள்"**[180]

***(கலித்தொகை, பாடல்எண்.2, அடிகள் 21)***

*எனும் அடிகள் சிறப்பித்துக் கூறுகின்றன.*

*பதிற்றுப்பத்து சேரமன்னனின் மனைவியை தெய்வச் சார்புடைய அருந்ததிக்கு ஒப்பாகக் காட்டுகிறது.*

**"விசும்பு வழங்கு மகளிருள்ளும் சிறந்த**

***செம்மீன் அனையள், நின்தொல் நகர்ச்செல்வி"***[181]

***(பதிற்றுப்பத்து, பாடல்எண். 31, அடிகள் 27-28)***

*எனும் அடிகள் சேரனின் மனைவி வானுலகில் திரியும் தெய்வப் பெண்களுக்குள் சிறந்த அருந்ததியை ஒத்தவள் என்பதைக் குறிப்பிடுகின்றது.*

*திருமணநாளில் மணப்பெண் அருந்ததி பார்க்கும் வழக்கம் உண்டு. மக்கள் தம் வாழ்நாளின் அளவை அறிய அருந்ததியைப் பார்ப்பார் என்பது மரபு. அருந்ததியோடு ஒத்த கற்பினையும், ஒளிபொருந்திய நெற்றியையும் உடையவள் சேரனின் மனைவி என்பதைக் கூறும்,*

**"வதுவை மகளிர் நோக்கினர் பெயர்ந்து**

***வாழ்நாள் அறியும் வயங்கு சுடர் நோக்கத்து***

***மீனொடு புரையும் கற்பின்"***[182]

***(பதிற்றுப்பத்து பாடல் எண் 89, அடிகள் 17-19)***

*பாடல் இவ்வழக்கத்தைப் புலப்படுத்துகின்றது.*

*பெரும்பாணாற்றுப்படை அருந்ததியை சிறுமீன் என்று குறிக்கிறது. வசிட்ட முனிவரின் பத்தினி அருந்ததி ஆவாள். அவளின் கற்பின் திறம் பற்றி வானத்தின் கண், வட திசையில் சிறு விண்மீனாகத் திகழும் பேறு பெற்றவள். பார்ப்பனியின் இயல்பைக் கூறும் பொருட்டு இடம்பெறும்,*

**"பெருநல் வானத்து வடவயின் விளங்கும்**

***சிறுமீன் புரையும் கற்பின் நறுநுதல்"***[183]

***(பெரும்பாணாற்றுப்படை, அடிகள் 302-303)***

*எனும் அடிகள் பெரிய வானத்தின்கண் வடதிசையில் விளங்குகின்ற அருந்ததியின் கற்பினை ஒத்தவள் பார்ப்பனி என்று விளக்குகிறது.*

*தவமுனிவர்கள் தங்கள் தவவலிமையால் பெற்ற ஞானத்தைக் கொண்டு எதிர்காலத்தை உணர்வர். சிவனின் கரு முருகனாகும் என்று உணர்ந்தனர். சிவன்உமையைத் திருமணம் செய்த நாளில் இந்திரன் கேட்ட வரத்திற்கு ஏற்ப புணர்ச்சி தவிர்ந்து கருப்பத்தை சிதைத்து இந்திரன் கையில் கொடுத்தார். வடமொழியல் சப்தரிஷிகள் என்று சொல்லப்படும் ஏழு முனிவர்களது மனைவியர், ஏழுமகளிர் என அழைக்கப்பட்டனர். ஏழு மகளிருள் அருந்ததி தவிர்த்த அறுவகை கார்த்திகை மகளிர்களும் முருகனை வளர்த்து வந்தனர் என்பது புராணம். அருந்ததியை பரிபாடல் சாலி என்றழைப்பதை,*

***"வடவயின் விளங்குஆல் உறைஎழு மகளிருள்***
***கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய"*** [184]

***(பரிபாடல் பாடல்எண் 5, அடிகள் 43-44)***

*எனும் அடிகளில் காணமுடிகிறது.*

### *5.18. பக்தி இலக்கியங்களில் நட்சத்திரங்கள்*

*பெரியபுராணத்தில் சித்திரை மாத சதய நட்சத்திரச் சிறப்பு கூறப்பட்டுள்ளது.*

***"வானவர்கள் மலர்மாரி மண்நிறைய விண்உலகின்***
***. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .***
***தான் நிறைந்த சித்திரையில் சதயமாம் திருநாளில்"*** [185]

***(பெரியபுராணம், பாடல் எண் 1618, அடிகள் )***

*தேவர்கள் மலர்மழை பொழிந்தநாள் சதய நட்சத்திரம் என்றுக் கூறப்பட்டுள்ளது.திருநாவுக்கரசர் தேவாரத்தில் திருவாதிரை நட்சத்திரம் இடம்பெற்றுள்ளது.*

***"மே- திருவாதிரை நாள் வீதிவிடங்கட்பெருமான்***
***பவனிதன்னில்"*** [186]

***(திருநாவுக்கரசர் தேவாரம், பாடல் எண் 1499, அடிகள் )***

*சிவனின் திருவுலா நடைபெறும் நாள் திருவாதிரை நட்சத்திரத்தன்று நடைபெறுவதாகக் கூறப்பட்டுள்ளது. சிவனுக்குரியது திருவாதிரை எனில் திருமாலுக்குரியது திருவோணம். நட்சத்திரங்கள் இருபத்தேழில் திரு எனும்*

அடைமொழி பெற்றவை இவையே. பெரியாழ்வாரின் திருமொழியில் திருவோண நட்சத்திரத்தன்று இருக்கும் விரதம் கூறப்பட்டுள்ளது.

**“செந்நெல்லரிசி சிறுபருப்பு செய்த ஆதாரம் நறுநெல்பலகால்**
**பன்னிரண்டு திருவோணம் கட்டென்பன் இப்பிள்ளை**
**பரிசுஅறிவன்”[187]**

***(பெரியாழ்வாரின் திருமொழி, பாடல் எண் 208, அடிகள் )***

என்னும் பாடலில் விரதமிருக்கும் காலத்தை நட்சத்திரம் குறிக்கின்றது. பெரியாழ்வாரின் மற்றொரு பாடல்,

**“உடுத்துக் களைந்த நின் பீதக ஆடை உடுத்து கலத்தது உண்டு**
**தொடுத்த துழாய் மலர்சூடிக் களைந்த சூடுமித்தொண்டர்**
**களோம்**

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

**விடுத்த திசைக் கருமத் திருத்தித் திருவோணத் திருவிழாவில்”[188]**

***(பெரியாழ்வார், திருப்பல்லாண்டு, பாடல் எண் 9, அடிகள் )***

என்று திருவோண நட்சத்திரத்தினத்தன்று நடைபெறும் திருவிழா பற்றிக் கூறியுள்ளார். அஸ்தம் நட்சத்திரத்தின் பத்தாம் நாளில் தேவகி வயிற்றில் கண்ணன் தோன்றியதாகப் பெரியாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

**“மந்த களிற்று வசுதேவர் தம்முடை**

. . . . . . . . . . . . . . . . .

**அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்”[189]**

***(பெரிய திருமொழி, பாடல் எண் 28, அடிகள் )***

என்றப் பாடல் அடிகள் விளக்குகின்றது.

### *5.19. சோதிடம்*

பழந்தமிழில் சோதிடம் எனும் சொல் வழக்கில் இல்லை. இச்சொல்லுக்குப் பதில் கணியம் எனும் சொல் பயிலப்பட்டது. யாதும் ஊரே யாவரும் கேளிர் என்றப் புறநானூற்றுப் பாடலில் விதிப்படியே எல்லாம் நடக்கும் எனக்கூறியப் புலவர் கணியன் பூங்குன்றனார், கணியத்தொழில் புரியும் குலத்தவர் என்பது அவர் பெயரிலேயே உள்ளது. தீதும் நன்றும் பிறர்தர வாரர் என்ற அடிப்படை சோதிட உண்மையைக் கூறியுள்ளார்.

*களவொழுக்கம் இல்லாத இயல்பான ஒழுக்கம் உடையத் தமிழர் நாளும் ஓரையும் பார்த்து வாழ்ந்த நிலையைத் தொல்காப்பியர்,*

**"மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்**

**துறந்த ஒழுக்கம் கிழவோற்கில்லை"[190]**

***(தொல்காப்பியம், நூற்பா 1081)***

*எனக் கூறியுள்ளார்.*

**"கரரும்பு அவிழ்ந்த கணிவாய் வேங்கை"[191]**

***(நற்றிணை, பாடல் எண் 373, அடி 6)***

**"கணிவாய்ப் பல்லிய காடிறந்தோரே"[192]**

***(அகநானூறு, பாடல் எண் 151, அடி 15)***

*என வரும் பாடலடிகளின் கணி எனுஞ்சொல் சாதகத்தைக் கணித்துத் தருவோரைக் குறிப்பிடுகின்றன. வேங்கை பவுணர்மியன்று பூக்கும்.*

*நாளும் கோளும் பார்த்துச் செயலாற்றிய முறைக்குச் சோதிடம் எனப் பெயரிட்டு வழங்கப்பட்டுள்ளது.*

## *5.20. சோதிடத் தகவல்*

*சந்திரனின் சுழற்சியால் வளர்பிறை தேய்பிறை எனக் காலங்கள் பகுக்கப்பட்டு முழுநிலா வரை வளர்நிலை என்பதால் வடமொழியில் சுக்லபட்சம் என்றனர். முழுநிலா முதல் அமாவாசை வரை தேய்பிறை (கிருஷ்ண பட்சம்) ஆகும். 12 திங்கள் ஓராண்டு என்று கணக்கிடப்படுவதால் திங்கள் கோளுக்குத் தனிச்சிறப்பு உள்ளது. சோதிடக் கலையில் மாத காரகன் சந்திரன் எனப்படுகிறான். மதி எனும் கூர்த்த அறிவன் பெயராலும் அழைக்கப்பெறும் திங்கள் கோள் தமிழ் இலக்கியத்தில் உவமையாக வந்துள்ளது.*

**"எண் நாட் டிங்கள் அனைய"[193]**

***(புறநானூறு, பாடல் எண் 118, அடி 2)***

*என எட்டாம் நாள் பிறையைக் குறித்து வந்தது. உவா என்றும் இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது.*

**"உவவுமதி உருதான் ஓங்கல் வெண்குடை"[194]**

***(புறநானூறு, பாடல் எண் 3, அடி 1)***

சூரியனும், சந்திரனும் எதிர்எதிராக நிற்கும் நாளில் சூரியனின் மறைவு இதில் சுட்டப் பெறுகிறது.

**"உவவுத் தலைவந்த பெருநாள் அமையத்து**
**இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்**
**புன்கண் மாலை மலை மறைந்தாங்கு"**[195]

***(புறநானூறு, பாடல் எண் 65, அடிகள் 6-8)***

எனும் பாடலடிகள் உவவுத் தலை வந்த பெருமான் என்று முழுமதிநாளான பௌர்ணமியைக் குறித்து வந்தது. முழுமதி நாளான பெருநாளில் ஞாயிறும், மதியமும் தம்முன் நோக்கிக் கொள்ள அவற்றுள் ஒரு சுடரான ஞாயிறு மலையின்கண் மறைந்த மாலைக்காலம் குறிக்கப்படுகிறது.

சூரியன் சந்திரன் இருசுடர்களாகும். ஆயிரம் பிறை காண்பவன் இறைநிலைக்கு நிகரானவனாகக் கருதப்படுகின்றான். இந்து சமயங்களில்ட சிலர் சதாபிே-க விழாவை இத்திங்கள் பிறையை அடிப்படையாக வைத்தே கொண்டாடுகின்றனர். அமாவாசை முடிந்த மூன்றாம் நாள் பிறை காண்பதுச் சிறப்பு.

வதனமோ சந்திர பிம்பமோ என்ற தியாகராச பாகதவர் பாடல் முதல் இன்று வரை சந்திரன் கோளும் சூரியகோளும் பல திரைப்படங்களின் பாடல்களில் உவமையாக இடம்பெற்று வருகிறது. கவிஞர்களின் வருணனைக்கு கற்பனைக்கு இடம்தரும் கோள் சந்திரன். சந்திரன் மனித வாழ்வில் பலநிலைகளில் இடம்பெறும் கோள். மக்கள் வாழ்நாள் சந்திரனுடன் தான் உள்ளது. பிறை தொழுதல் மணம் நிகழ்கிறது. ஆயுள் கூடுகிறது. வளர்வதும், தேய்வதுமான ஆகிய நாள்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறப்பு பெறுகின்றது.

எட்டாம் நாள் பிறை தீய நாள் எனினும் துர்க்கை, பைரவர் வழிபாட்டிற்கு ஏற்றதாகிறது. வளர்பிறை 15ஆம் நாள் ஒவ்வொன்றிலும் வாழ்வின் நிகழ்வுகளை நிர்ணயம் செய்யும் வழக்கம் இன்றும் தொடர்கிறது. தமிழ்நாட்டுச் சோதிடக் கலையில் சந்திரமுறையே பின்பற்றப்படுகிறது. விதி, மதி, கதி என்பதில் நடுவண் அமைந்த முறையே சந்திரமுறை. கதி என்னும் சூரியமுறை மேலை நாடுகளில் காணப்படுவதாகும். பாம்பு பற்றிய திங்கள் சந்திர கிரகணம் ஆகும். பரிபாடலில்,

***“பாம்பு ஒல்லை மதியம் மறைய”[196]***

***(பரிபாடல், பாடல் எண் 11, அடி 9)***

*எனக் குறிக்கப்பட்டுள்ளது. பாம்பு இராகு எனும் நிழல் கோளைக் குறிக்கும்.*

*துன்பம் விளைவிக்கும் கோள் தூமகேது. இது வானிலிருந்து எரிகல்லாய்க் கீழே வீழின் துன்பம் வரும் என நம்பினர். வால் நட்சத்திரத் தோற்றத்தாலும் கெடுதல் வரும் என்பர். சேரநாட்டில் வால்நட்சத்திரம் தோன்றியதால் சேரமன்னனின் மரணம் நிகழ்ந்ததாகப் புறநானூறு பாடல் குறிக்கின்றது.*

***“கனை எரி பரப்ப, கால் எதிர்பு பொங்கி***
***ஒரு மீன் வீழ்ந்தன்றால், விசும்பினானே”[197]***

***(புறநானூறு, பாடல் எண் 229, அடி 11-12)***

*எரிநட்சத்திரம் வீழ்ந்த ஏழுநாள் கழிந்தபின்தான் அரசனின் சாவு நிகழ்ந்தது. எனினும் அந்த நட்சத்திர வீழ்ச்சிதான் காரணம் என மக்கள் நம்பினர். மக்களின் அந்த நம்பிக்கையே இச்சோதிடச் செய்திகளை வளர்த்துவிட்டது.*

*வெள்ளி தெற்கே பயணித்தால் பஞ்சம் வரும் என்ற நம்பிக்கையால் தான் புலவர்களும் உலகியல் அறிந்து வெள்ளிமீனின் தென்திசைச் செலவுக் குறித்துப் குறிப்புகளைப் பாடல்களை அமைத்துள்ளனர்.*

*2015 கார்த்திகை மாதம் சனி விருட்சத்தில் வருவதால் பெருமழை பொழியும் என்று தான் பஞ்சாங்கத்தில் குறித்தனர் அப்பெருமழை தலைநகரை உலுக்கிவிட்டது என்பது வரலாறு. 60 ஆண்டுகளுக்கு ஒருமுறை இவ்வாறு நடந்தே தீரும். சனி சுற்றிவர 30 ஆண்டுகள் தான். எனினும் பிரபவ முதல் அட்சய வரையுள்ள 60 ஆண்டுகளில் மன்மத ஆண்டும் அதற்கு அடுத்த துர்முகி ஆண்டும் உலகப் பிரளயத்திற்கு அறிகுறியைக் காட்டும். பிரளய காலங்களில் உலகில் ஏதேனும் ஒருபகுதி வெள்ளக் காடாக மாறும் என்பதே கருத்து. கடல்கோளால் தான் தமிழ்நாட்டில் பேரிடர் வந்துள்ளது. நீர்ப்பெருக்கே நிலத்தை நிர்மூலமாக்கும் என்பது வரலாறாக உள்ளது.*

*மீன ராசியில் சனி புகுந்தால் மழைகுறையும் என்று சோதிடத்தகவலை திருஞானசம்பந்தர்,*

**"விலங்கமர் புயன்மறுத்து மீன்சனி புக்கு**

**ஊன் சலிக்கும் காலந்தானும்**

**கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய**

**மெய்யர் வாழ்கழுமலம்"[198]**

**(திருஞானசம்பந்தர் தேவாரம், பாடல் எண், அடிகள் )**

*எனத் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார்.*

*சிலப்பதிகார ஆசிரியர் மக்களின் நம்பிக்கையை முன்னிறுத்தி மதுரை தீயால் அழித்தமைக்கு,*

**"ஆடித்திங்களை ஒள்ளெரி உண்ணும் இவ்வூர்"[199]**

**(சிலப்பதிகாரம், காதை, அடிகள் )**

*எனச் சோதிடத் தகவல்களை முன்னிறுத்தியுள்ளார்.*

### *5.21. தூமகேது*

*சங்கத் தமிழர்களிடம் நிமித்தம் பற்றிய நம்பிக்கை இருந்தது. தங்களுக்கு ஏற்படும் நன்மை தீமைகளுக்கு ஏற்ப நிமித்தங்களை கணக்கிட்டனர். திசை எட்டும் எரிகொள்ளிவீழ்தல், இலையில்லாத நெடுங்கோடு வற்றல் பற்றல், செங்கதிரோன் பல இடத்திலும் செறிந்து தோன்றுதல், அஞ்சத்தக்க பறவைகளின் ஒலி, பல் நிலத்தில் வீழ்தல், யானை ஏறுதல், ஆடையைக் களைதல் போன்றவைகளைக் கனவில் காண்பது இவைத் தீய நிமித்தமாகக் கருதினர்.*

*வானத்தில் இருந்து ஒரு நட்சத்திரம் விழுந்தால், அது விழுந்து ஏழுநாளுக்குள் துன்பம் வரும் என்பதை நம்பினர. வானத்து நட்சத்திரங்கள் மிகுதியாகத் தோன்றினாலும் பூமி மீது வானிலிருந்து நட்சத்திரங்கள் எரிந்துவிழுந்தாலும் அவை தீய சகுனங்களாகக் கருதப்பட்டன.*

**"மிக வானுள் எரிதோன்றிய**

**குளமீ னோடும் நாள்புகையினும்"[200]**

**(புறநானூறு, பாடல் எண் 395, அடிகள் 34-35)**

*என்று குறிப்பிடுவதிலிருந்து எரிமீன், குளமீன், துளிமீன் என்ற விண்மீனின் வகைகள் தோன்றுவதாலும் எரிந்து விழுவதாலும் உலகம் துன்பம் அடைவது உறுதி என்று நம்பினர். இது தீய சகுனமாகக் கருதப்பட்டது.*

*தூமகேது வானத்தில் தோன்றினால் அழிவு ஏற்படும் என நம்பினார். தூமகேது வால்நட்சத்திரம் என்றும் அழைக்கப்பட்டது. தூமகேது தோன்றினால் மழைபெய்யாமல் பெருங்கேடு உண்டாகும் என்று நம்பினர்.*

**"மைம்மீன் புகையினும் தூம் தோன்றினும்**

**தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்"**[201]

***(புறநானூறு, பாடல் எண் 117, அடிகள் 1-2)***

*தூமகேது வானத்தில் தோன்றினால் அழிவு ஏற்படும் என்னும் நம்பிக்கை இன்றும் உள்ளது. வெள்ளிமீன் விடியற்காலையில் கிழக்கே உதிப்பதால் இதனை, விடிவெள்ளி என்றும் கூறுவர். வெள்ளி மீன் தோன்றினால் இரவு விடியும் என்று நம்பினர். வெள்ளிமீன் வடக்குத் திசையில் தோன்றினால் மழை பெய்யாது எனவும் நம்பிக்கை இருந்து வந்தது. வெள்ளி தென்திசையில் தோன்றினால் அதனால் பஞ்சம் ஏற்படும் என்று நம்பினர்.*

### *5.22. விண் எரிகற்கள்*

*விண் எரிகற்கள் புவியின் வளிமண்டலததில் நுழைந்ததும் அங்குள்ள வளி மண்டலங்களின் அணுத்திரள்களோடு மோதுகின்றன. இதனால் அவை எரிந்து உருக்குலைந்து போகின்றன. மேலும் இரவு வானில் ஒளிமிக்க கோடுகளை உருவாக்குகின்றன. விண்எரி கற்களின் தொகுதி புவியின் வளிமண்டலத்தில் நுழையும் போது எரிமீன் பொழிவுகள் ஏற்படுகின்றன. விண் எரிகற்கள் பெரிதாக இருப்பின் வளிமண்டலத்தால் முழுவதும் எரிக்கப்படாமல் புவியில் வந்து விழும். இவ்எரிகற்களுக்கு விண்வீழ் கற்கள் என்றுப் பெயர்.*

*வானத்திலிருந்து எரிகொள்ளி வீழ்வது தீமையை விளைவிக்கும் என்று பண்டைத்தமிழர் நம்பினர். எட்டுத்திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து விழுவது தீய செயல் நிகழ்வதைக் குறிக்கும் எனக் கோவலூர் கிழார்*

**"திசையிரு நான்கு முற்க முற்கவும்"**[202]

***(புறநானூறு, பாடல் எண் 41, அடி 4)***

*எனும்பாடலில் குறிப்பிடுகிறார். கருவூர் முற்றியிருந்தானின் வீரத்தைப் பாடும்போது எட்டுத்திசைகளிலும் எரிகொள்ளி எரிந்து வீழ்ந்த தீய குறிகளைக் கண்டாலும் அவன் போரை மேற்கொண்டான் என்ற செய்தி பேசப்பெறுகின்றது.*

*குறிஞ்சி நில மக்கள் உயரமாகப் பரண் கட்டி அதிலே நின்று தங்கள் தினைப் புனத்தை இரவு நேரத்தில் காவல் செய்வர். இரவிலே தினைப்புனத்தில் யானைகள் மேய வரும். அவர்கள் விரட்டுவார்கள். கார்த்திகை மாதத்திலே சிறுவர்கள் தீப்பொறி சுற்றுவது போல் இருக்கும். யானைகள் அதனைக்கண்டு அஞ்சி ஓடும். எப்போதாவது வானிலிருந்து விண்வீழ் கொள்ளி எரிந்துவிழும். அந்த விண்வீழ் கொள்ளியைக் கண்டதும் யானைகள் குன்றவர் சுற்றும் கொள்ளியோ என்று அஞ்சியோடும். இக்கருத்தினை,*

**"ஏனல் அம் சிறுதினை காக்கும் சேணோன்**
**ஞெகிழியன் பெயர்ந்த நெடுநல் யானை**
**மீன்படு சுடர்ஒளி வெரூஉம்**
**வான்தோள் வெற்பன்"** [203]

***(குறுந்தொகை, பாடல் எண் 357, அடிகள் 5-8)***

*என்னும் குறுந்தொகை பாடல் காட்டுகிறது.*

### *5.23. சங்க இலக்கியத்தில் சோதிடக் கூறுகள்*

*தெய்வப் பரவலுக்கான ரிக்வேதத்தில், வேதத்தின் ஓர் அங்கமாக வடமொழியின் ஆதி இலக்கியத்தில் சோதிடம் உள்ளது. இன்றோ அதிர்ஷ்டம் என்னும் நல்லூழை நாடியும், நோய், மரணம் முதலிய துன்பங்களிலிருந்து விடுதலை பெறவும், எதிர்காலத்தை அறியவும் மக்கள் சோதிடத்தை நம்புகின்றனர். வேத காலத்தில் வேள்விகள் இயற்றுவதற்கு நல்ல நாள், திதி, கரணம், யோகம் பார்க்க சோதிடக்கலை பயன்படுத்தப்பெற்றது. கோளும் நாளும் அவரவர் வினைப்படித் தானாக வந்துசேரும் என்பது தேவாரக் கருத்தாகும். புறநானூற்றில் சோதிடத் தகவல் இடம்பெற்றுள்ளது.*

**"நன்று ஆய்ந்த நீள் நிமிர்சடை**
**முது முதல்வன் வாய்போகாது**
**ஒன்று புரிந்த ஈரிரண்டின்**
**ஆறு உணர்ந்த ஒரு முது நூல்**
**இகல் கண்டோர் மிகல் சாய்மார்"**[204]

***(புறநானூறு, பாடல் எண் 166, அடிகள் 1-5)***

என்ற அடிகளில் இகல் கண்டோர் என்போர் வேத நூலை ஏற்காது மாறுபட்டவர். அவர்கள் சமணர், புத்தர் போன்றோர்க்கு எதிரானவர் எனச் சமயப்பூசல் எழுந்த காலத்தை உணரமுடிகிறது. நீண்ட சடையுடையச் சிவபெருமான் வாக்கை விட்டு அகலாத அறம் நிறைந்த நான்கு கூற்றும் ஆறு அங்கமும் உடையப் பழைய நூல் வேதம். அதற்கு மாறான புத்தர் முதலியப் புறச்சமயத்தார் செல்வாக்கைச் சாய்க்க, வியாகரணம், சோதிடம், நிருத்தம், சந்தம், சிக்கை, கற்பம் என்ற ஆறு அங்கங்களில் சோதிடம் ஒன்று என்றக் குறிப்பு வந்துள்ளது.

**"கணிமேவந்தவன் அல்குல் அவ்வரியே"** [205]

***(புறநானூறு, பாடல் எண் 344, அடி 7)***

கணி, கணிகன், கணிதர், கணிவன் சோதிடரைக் குறிக்க உதவும் சொற்கள் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது.

**"பழையன் மோவர் அவையகம் விளங்க**
**நான்மொழிக் கோசர் தோன்றியன்ற**
**தாம் எம் தோன்றிய நாற்பெருங் குழுவும்"** [206]

***(மதுரைக்காஞ்சி, அடிகள் 508-510)***

என்ற மதுரைக்காஞ்சி அடிகளில் வரும் நாற்பெருங்குழு எனும் சொற்றொடரில் புரோகிதர், படைத்தலைவர், தூதர், ஒற்றர் ஆகியோர் குறிக்கப்படுகின்றனர். வேள்வி இயற்றுபவரைப் புரோகிதர் என்று அழைக்கின்றனர். பதிற்றுப்பத்து, வேள்வி பற்றி,

**"சொல் பெயர் நாட்டம் வேள்வி நெஞ்சம் என்று**
**ஐந்துடன் போற்றி அவை துணையாக**
**எவ்வம் சூழாது விளங்கிய கொள்கை**
**காலை அன்ன சீர்சால் வாய்மொழி**
**உருகெழு மரபின் கடவுட் பேணியர்**
**கொணடதீயின் சுடர் எழுதோறும்**
**விரும்பு மெய் பரந்த பெரும் பெயர் ஆவுதி"** [207]

***(பதிற்றுப்பத்து, பாடல் எண் 21, அடிகள் 1-7)***

என்கிறது. சொல் இலக்கணம் சொல்லும் நூல், பொருளிலக்கணம் சொல்லும் சோதிட நூல், வேதம், புலன்வழி செல்லாது உள்ளே அடங்கியத் தூய மனம் என்று

சொல்லப்படும் ஐந்தையும் ஒருங்கே போற்றி அவற்றின் துணையோடு எவ்வுயிர்க்கும் துன்பம் செய்யாமல் செய்யத் தொடங்கிய வேள்வித் தீயைப் புலப்படுத்துகிறது. சோதிட நூலில் குறிப்பிடப்படும் வேள்வி என்பதால் சோதிடத்தில் காணலாகும் நாள் பார்த்தல் பற்றிய நம்பிக்கை இருந்த உண்மை புலப்படுகிறது.

### 5.24. நவகோள்களின் கோயில்கள்

ஐம்பூதங்களுக்குக் கோயில்கள் இருப்பன போல நவகோள்களுக்கும் சிறப்பாகப் பேசப்பெறும் கோயில்கள் உள்ளன. சூரியனுக்குச் சூரியனார் கோயில், சந்திரனுக்குத் திங்களூர், செவ்வாய்க்கு வைத்தீஸ்வரன் கோவில் புதனுக்குத் திருவெண்காடு வியாழனுக்கு ஆலங்குடி சுக்கிரனுக்குக் கஞ்சனூர், சனிக்குத் திருநள்ளாறு இராகுக்குத் திருநாகேஸ்வரம் கேதுவுக்குக் கீழப் பெரும்பள்ளம் எனத் தஞ்சாவூர் மாவட்டத்தில் அமைந்த ஊர்களும் புதுவை மாநிலத்தில் அமைந்தனவுமாக கோயில்கள் உள்ளன. கோள்களின் இயக்கத்தால் பாதிக்கப்பட்டவர்கள் பரிகாரம் செய்ய இக்கோயில்களுக்குச் சென்று வழிபட்டு வருகின்றனர்.

திருநெல்வேலி மாவட்டத்திலும் ஒன்பது கிரகங்களுக்கும் தனித்தனிக் கோயில்கள் குறிக்கப் பெறுகின்றன. இரட்டைத் திருப்பதி கோயிலில் இராகு, கேது என இரு கோயில்கள் வகுக்கப் பெற்று வழிபாடு செய்கின்றனர். நவத்திருப்பதிகளில் ஒன்று திருக்கோளூர். கோள் என்றுக் கிரகத்தின் பொதுப்பெயரால் அழைக்கப் பெறும் இக்கோயில் திருவைகுண்டம் அருகே உள்ளது. இது மதுரகவி ஆழ்வார் அவதரித்த ஊராகும்.

**முடிவுகள்**

சூரியன் முதன்மைக் கோள் என்பதால் ஞாயிறு பற்றியச் செய்திகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

மண்டல கிரகங்களான மற்றொரு கோள் சந்திரன். இக்கோளும் உவமைக்குப் பல இடங்களில் எடுத்தாளப்படுகின்றன.

அறிவன் என்றப் பெயரில் புதன், சுக்கிரன் எனவும் சுக்கிரன், படிமகன் என்றப் பெயரில் செவ்வாயும் சங்க இலக்கியத்தில் இடம்பெறுகின்றன.

மைம்மீன் என வண்ணத்தின் அடிப்படையில் கருமை காரி எனச் சனிக்கோள் இடம் பெற்றுள்ளது.

இராகு, கேது என்றப் பெயர்களில் வராது பாம்பு, கரவம் எனப் பிற பெயர்களில் தான் இக்கோள்கள் இடம்பெற்றுள்ளன.

உவமை கூறவே, மிகுதியாகக் கோள்கள் வந்துள்ளன.

உற்பாதங்களை அறிவிக்க திங்கள் விண்மீன் இணைவுகள் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

விண்மீன்கள், கிரகங்களின் நகர்வுகள் மக்களின் வாழ்வில் மாற்றம் ஏற்படுத்துவதைச் சங்கத் தமிழர்கள் நம்பியுள்ளனர்.

சோதிடத் தகவல்களாகவும் நவகோள்கள் உள்ளன. கோள்கள் நிற்கும் நிலையைக் கொண்டு நாட்டிற்கு ஏற்படும் நன்மை தீமையை ஆராய்ந்தறிந்துள்ளனர்.

நவகோள்களுக்கான வழிபாட்டுத் தலங்களுள் தமிழ்நாட்டில் கோயில்கள் உள்ளன.

சங்க இலக்கிய காலம் முதல் இன்று வரை கோள்கள் பற்றிய நம்பிக்கை இருந்து வருகின்றன.

வானவியல் விளக்கவுரையாகப் பஞ்சாங்கம் திகழ்கிறது. மழை, பயிர் ஆகியவற்றின் அளவை முன்னரே அறிவிக்கிறது. இயற்கையின் சீற்றத்தை முன்கூட்டியே தெரிவிக்கின்றது. வாரம், நட்சத்திரம், திதி, கரணம், யோகம் ஆகிய ஐந்தின் விளக்கம் பஞ்சாங்கம் ஆகும்.

ஆகாயப் பூதத்தில் ஏறுபடும் மாற்றங்களுக்கு ஏற்ப இடங்கள் தோறும் பஞ்சாங்கம் என்ற குறிப்பேடு பலவாகப் பல்கிவிட்டன.

திருநெல்வேலியில் உள்ளோர் வாக்கியப் பஞ்சாங்கத்தையே ஏற்க காஞ்சி புரத்தார் திருக்கணிதப் பஞ்சாங்கமே சுத்தமானது என்பர்.

சாதாரண மக்கள் புரோகிதர் உதவியின்றிப் பஞ்சாங்கத் தகவல்களை அறிய இயலாது.

தற்போது கைப்பேசியில் பஞ்சாங்கத்தைப் பதிவுச் செய்துக் கொள்கின்றனர். நேரம், காலம் குறிப்பிடக் கைபேசிகள் உதவுகின்றன.

பின்னர் வருவதை முன்னர் அறிவிக்கும் குறி நிமித்தம் என்றுக் கூறப்பட்டுள்ளது. விண்மீன்களும் கோள்களும் நிற்கும் நாள்கள் வழி நன்மை தீமைகளை அறிந்துப் பழந்தமிழர் செயல்பட்டுள்ளனர்.

நாள் நிமித்தமே முதன்மையாகப் பின்பற்றப்பட்டுள்ளது.

வள்ளலை நாடிச் செல்லும் வறுமையாளர்கள் நல்ல நாள் பார்த்துச் சென்றத் தகவல் புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஒருவர் பிறக்கின்ற போது திங்களையடுத்து நிற்கும் மீன் அவரது நாள்மீன் ஆகும். அதற்கு ஏற்பவே அவரது வாழ்வில் நல்லவை கெட்டவை விளையும் என்பதுச் சோதிட நூல் நம்பிக்கை.

பறவைகள், விலங்குகள் பயிரினங்கள் போல்வனவும் நம்பிக்கை அடிப்படையில் நிமித்தங்களாய் இடம்பெற்றிருப்பதைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகின்றது.

# ஆய்வு முடிவுகள்

மாற்றம் ஒன்றே நிரந்தரம். மாற்றம் நிகழக் காலச்சுழற்சியே காரணம் ஆகும். தனக்கு ஏற்படும் ஒவ்வொரு நன்மை தீமைக்கும் காலங்களின் மாற்றமே காரணம் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் காலத்தினைக் கடவுளாக மக்கள் காண்கின்றனர். இழந்தால் பெற முடியாதது உயிர் மற்றும் காலம் ஆகும். கால மாற்றம் பூமியில் ஏற்படுத்தும் தட்ப வெப்ப நிலைக்கேற்ப தமிழர்களின் வாழ்வியல் சூழல்கள் அமைந்து இருப்பதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

காலம் என்பது உண்மையானது. உலகத்தை முழுமையடைச் செய்வது. அனைவராலும் உணரக்கூடியது. காலத்தை இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என முக்காலமாகப் பிரிக்கலாம். கண்ணிமைக்கும் நொடிப்பொழுதில் இருந்து பேரளவுக் காலமான ஊழி வரையிலானக் காலக்கணிப்புகளைத் தமிழர்கள் வரையறை செய்துள்ளனர். காலத்தைக் கணக்கிட்டு அறிதல் இன்றியமையாததாகக் கருதப்பட்டு வந்துள்ளது. காலத்தை ஒட்டியே அவர்களின் வாழக்கை நிலைபெற்றது. வான்வெளியில் இயங்கப்பெறும் கோள்களின் போக்கினை ஒட்டியே காலம் உணரப்பெற்றது.

சங்ககால மக்களின் வாழ்வானது அகவாழ்வு, புறவாழ்வு என்று இருதிறமாக அமையப் பெற்றுள்ளது. அவ்வாழ்வினை அவர்கள் இயற்கையோடு வாழ்ந்தனர். முதற்பொருளான நிலமும் பொழுதும் இயற்கை வாழ்விற்கு அடிப்படைக் காரணியாக அமைந்தது. காலமாற்றத்தினால் நிலத்தில் ஏற்படும் இயற்கைத் தோற்றங்களும் மாற்றங்களும் அவர்களது வாழ்வினை நிர்ணயம் செய்தது. நிலத்தைத் திணையாகக் கொண்டனர். திணை என்றால் நிலம், ஒழுக்கம் என்றுப் பொருள் வழங்கி அதனைப் பாகுபடுத்தியுள்ளனர். நால்வகை நிலமாகக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பிரித்தனர். குறிஞ்சியும் முல்லையும் திரிந்துப் பாலை ஆயிற்று. இவ்ஐவகை நிலங்களுக்கும் ஐவகை ஒழுக்கங்களை வகுத்தனர். அவ்வொழுக்கம் நிலைபெற அவ்வவ் நிலத்தில் ஏற்படும் காலநிலை மாற்றம் காரணமாகின்றது. ஐவகைத் திணை ஒழுக்கங்களும் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

அகவாழ்வின் நெறிமுறைகளில் பொய்யும், வழுவும் தோன்றியதால் ஒழுக்கங்களில் இடையூறுகள் ஏற்பட்டது. அவற்றிற்குக் கைக்கிளை, பெருந்திணை என்ற இருவேறு திணைகளையும் வகுத்தனர். ஐவகை நிலமக்களும் தங்கள் நிலக்கூறுகளுக்கேற்ப பருவங்களோடு தொடர்புடையத் தொழில்களைச் செய்து ஒரு நிலத்துப் பொருளை ஒருவருக்கொருவர் பண்டமாற்று செய்துப் பொருளாதார நிலையைச் சமன்செய்தனர்.

அகவாழ்வின் நிகழிடமாக நிலமும், அதற்கு உறுதுணையாக காலமும் அமைகிறது. மக்கள் நல்வாழ்வுக்கு இரண்டுமே காரணமாதலின் முதற்பொருள் கவனத்திற்குரிய ஒன்றாகத் திகழ்கின்றது.

பூமியில் வாழும் மனிதன் காலச்சூழலுக்கேற்ப தங்கள் வாழ்வினை மேற்கொண்டுள்ளான். ஒவ்வொரு காலக்கூறுகளும் அவர்களின் வாழ்க்கை சூழலை நிர்ணயிக்கும் காரணிகளாக அமைவதை, கருத்துக்களால் வகுத்துக் கூறப்படும் நோக்கில் சங்க இலக்கியத்தில் கால வகைகள் என்னும் தலைப்பில் மேற்கொண்ட ஆய்வு அமைந்துள்ளது.

பெரும் பொழுதுகள் எனும் இயலில் ஐந்திணைகளின் பெரும்பொழுதுகள் ஓர் ஆண்டின் பருவங்களாக பகுத்துக்கூறப்பட்டது. தமிழர் அகம், புறம் எனும் வாழ்வில் நெறியோடு வாழ்ந்துள்ளனர். மக்களின் வாழ்வு காலத்தோடு நெருங்கியத் தொடர்பு உடையதாகின்றது. காலமானது அனைத்திற்கும் மேலானதாகக் கருதப்பட்டு கால மாற்றத்திற்கேற்ப அகஉணர்வுகளைக் கொடுக்க வல்லதாக அமைந்துள்ளது. முதற்பொருளாக் கொள்ளப்பட்ட நிலமும் பொழுதும் உயிர்களை இயக்கும் களமாகவும் காரணமாகவும் இருந்துள்ளது.

நிலத்தை ஐவகையாகப் பிரித்துக் காலத்தை அங்கு நிலவும் பருவத்திற்கேற்ப நுட்பமாகப் பகுத்தனர். பெரும்பொழுது எனும் பகுப்பில் ஓராண்டின் பருவங்கள் ஆறாகப் பகுக்கப்பட்டுள்ளது. புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் ஆகிய ஒழுக்கங்கள் அந்தந்த நிலத்திற்கு உரியனவாக அமைந்துப் பொழுதோடு பொருந்தி அமைகின்றது. அந்தந்த நிலமக்களின் மனஉணர்வோடு தொடர்புபடுத்திக் கூறப்படுகின்றது. பயிரினங்களும், உயிரினங்களும் பலன்களைத் துய்த்து இன்புற பெரும்பொழுதுகள் துணை நிற்பதைச்மீ சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

பெரும்பொழுதுகள் ஆறும் மழைக்காலம் பனிக்காலம், கோடைக்காலம் என்ற மூவகைப் பிரிவுகளில் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்ற வரிசையில் அமைகின்றன. கார்காலம் மழைநீர் துளித்தல், நீர்ப்பெருக்கம், வெள்ளோட்டம் ஆகிய நிகழ்வுகளைக் குறிக்கிறது. பருவ வரிசையில் மழையின் பெருமையை உணர்த்தும் கார்ப்பருவம் முதலில் கூறப்பெறுகின்றது. கார்கால மழையினால் பள்ளங்கள் நிரம்பியும், சமவெளிகள் பள்ளங்கள் தோன்றியும், நிலம் மாற்றம் பெறுதல் உண்டு. மழை பொழியும் தன்மையைக் கொண்டு முதல் மழை தலைப்பெயல் மழை, பருவம் மாறி முன்கூட்டியே பெய்யும் புதுமையை வம்பமாரி என்றும் அழைத்துள்ளனர். கார்கால மழைத்துளியின் தன்மையைப் பொறுத்து அது இறங்கிப் பெய்தல் உண்டு.

புவிக்குத் தேவையான நீர்வளத்தைக் கொண்டுவரும் கார்காலம் இடையறாத மழையைக் கொண்டது ஆகும். நீர்வளத்தைத் தரும் கார்காலம் நிலவளத்தைக் கொண்டு வருவதால் மக்களின் வாழ்க்கைத் தொடங்கும் காலமாக முக்கியத்துவம் பெறுகின்றது.

தலைவன் தலைவியர் இல்லறக் கடமையாற்றும் காலமாக கார்காலம் விளங்கியது. பிரிந்தத் தலைவரின் கார்காலத்தில் இல்லம் திரும்பினான். பிரிந்தவர் தங்கள் துணையைக் கூடும் காலமாகத் திகழ்ந்து ஓர் ஆண்டின் நீர்த்தேவையைப் பூர்த்தி செய்யும் மழையின் வெள்ளத்தைக் கண்டு மக்கள் கொண்டாடினர். மண்வளத்தைப் பயன்படுத்தும் உழவர்கள் தங்கள் தொழிலுக்கு ஏற்ற பருவமாகக் கார்காலத்தை மகிழ்வுடன் வரவேற்றனர். கார்காலம் அரசர்கள் பகையினை மேற்கொள்ளாதப் பருவமாகத் திகழ்ந்துள்ளது.

தலைவன் கார்ப்பருவத்தில் வருவான் என்று எதிர்நோக்கியத் தலைவி, அவன் வராமையைக் கண்டு கலங்குவாள். அவன் வரவை எதிர்நோக்கி பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்கும் பருவமாகக் கார்காலம் விளங்குகிறது. கார்காலம் துணையுடன் இன்புறும் பருவமாக இருந்துள்ளது.

முல்லைத்திணைக்குரியப் பெரும்பொழுதாகக் கார்காலம் குறிக்கப்படுகிறது. தலைவனைப் பிரிந்தத் தலைவி தலைவன் வராமை கண்டு ஆற்றியிருக்கும் பருவமாக விளங்குகிறது. திணை ஒழுக்கத்தை நிலைநிறுத்தும் பருவமாகத் திகழ்கிறது.

கார்காலத்தில் நீர்நிலைகளும் சுனைகளும் பெருகி காட்டின் வனப்பிற்கு வளம் சேர்த்துள்ளது. கார்காலச் செடிகள், பயிரினங்கள், பூத்தலினால் கவின்பெறும் கானம், இல்லறம் நலமாக விளங்க ஏதுவாகின்றது. மக்களின் அகவாழ்வு அவர்களின் வளமான வாழ்வின் ஆதாரமாகும். வளத்தைத் தரும் கார்காலம் மக்களின் உள்ளுணர்வைத் துளிர்க்கச் செய்கின்றது. பருவகாலச் சூழல்கள் அகவாழ்வைப் பாதிக்கும் காரணியாக அமைகின்றன. ஒவ்வொரு பருவப் புனைவுகளும் சங்ககாலத் தமிழர்களின் அகஉணர்வுச் சூழல்களை விளக்கி வரைகின்றன.

நிலத்திற்குப் புத்துயிர்கொடுக்கும் கார்கால வர்ணனை அக்காலச் சமூகச் சூழலையும் இயற்கை வளங்களையும் எடுத்துக்காட்டுகிறது. பெரும்பொழுதின் நிகழ்விடமாக நிலம் திகழ்கிறது. நிலத்தின் இயற்கைத்தோற்றத்திற்குப் பருவகாலச் சூழல் காரணமாகின்றது. தலைவன் தலைவியரிடையே தோன்றும் ஏக்கம், காதல், காமக்குறிப்பு இவற்றை நிலப் பின்னணியில் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அந்நிலப் பின்னணியை அகத்திணைக் கூறுகளோடு விளக்கப் பருவங்களினால் ஏற்பட்ட மாற்றங்களை வர்ணனையாகக் கொடுக்கப் பெறுகின்றன. கார்கால வர்ணனை உலகம் புத்துயிர்ப் பெற்று அனைத்து வளங்களுக்கும் ஆதாரமாக இருக்கின்றது.

வாழ்வினை மணமும் நிறமும் கொண்டதாக அக்காலமக்கள் துய்த்ததை மலர்கள் மலர்ந்த இயற்கைக் காட்சிகள் புலப்படுத்துகின்றன. கார்காலம் பல்வகை மலர்கள் மலரும் காலமாக விளங்கியது. பயிரினங்கள் துளிர்க்கும் காலமாக விளங்கி உலகம் கவின்பெறக் காரணமான காலம் கார்காலம் ஆகும்.

கார்காலம், தன் மழையைப் பொழிந்து ஒய்ந்தப் பின் கூதிர்காலம் தொடங்குகிறது. மழையின் பின் தங்களது தொழில்களைத் தங்குத் தடையின்றி செய்யும் காலமாகக் கூதிர்காலம் விளங்குகிறது. காதலர் கூடி, தலைவன் தலைவியர் களவுமேற்கொள்ளும் காலமாக விளங்கியுள்ளது. கூதிர்காலம் இரவும் பகலும் எதுவென அறியாது மயங்கும் காலமாகும். வாடைக் காற்றின் இனிமையை நுகரும் காதலர்க்குக் கூதிர்காலம் சிறப்பானதாகும். குளிர்ந்த வாடை யினால் உயிரினங்கள் ஒடுங்கி இருப்பிடங்களில் உறையும் காலமாகும். இக்காலத்தில் மலர்கள் மலர்கின்றன.

தனித்திருப்போரைப் பிரிவுத் துயருக்கு உட்படுத்தும் காலமாகப் பனிக்காலம் இருக்கின்றது. ஆண்டு முழுவதும் தேவைப்படும் பொருளினைத் தேடுவதற்கானக் காலமாக பனிக்காலம் அமைந்துள்ளது. மழையினால் தளிர்த்த இயற்கை அழகினைக் கண்டு ரசிக்கும் பருவம் ஆகும். தலைவி, தன் நலனுக்குச் சிறப்புத் தரும்படியான இயற்கைக் காட்சிகளைக் கண்டுத் தலைவனை எதிர்பார்க்கும் பருவமாக அமைந்துள்ளது.

இளவேனில் எல்லாச் செயல்களுக்கும் சிறப்பு வாய்ந்தப் பொழுதாக அமைந்துள்ளது. தலைவனை எதிர்பார்த்தத் தலைவியின் மனத்துடிப்புப் பெருகி உள்ளக் கிளர்ச்சியுடன் திகழும் காலமாகும். கதிரவனும் திங்களும் தங்கள் ஒளியினைச் சிறப்புடன் விளங்கச் செய்யும். வேள்விகள் பல இயற்றும் காலமாக அமைந்துள்ளது. வழிபாடுகள் விழாக்கள் நடத்த ஏதுவானது. புதுமை நலம் நுகரும் காலமாக விளங்கித் தமிழாராய்ச்சிக்குரியதாக விளங்கி நூல்கள் பல அரங்கேற்றும் காலமாக இருந்துள்ளது.

பனிக்காலத்தில், உதிர்ந்த இலைகள் அனைத்தும் தளிர்த்ததினால், தலைவன் தலைவியரின் கூட்டம் நிகழ, இயற்கை புத்துணர்ச்சியைத் தரும் காலமாக அமைகின்றது. மகப்பேறு எய்துதற்குரிய காலமாக இளவேனில் காட்சியளிக்கிறது.

வெயில் முனைப்பாக விளங்கும் காலம் முதுவேனில் காலமாகும். ஞாயிறு ஆற்றலுடன் கதிர்களை வீசி சுட்டெரித்தலினால் உயிர்கள் வாடும் சூழல்முதுவேனில் பருவத்தில் உருவாகின்றது. பயிரினங்களும் உயிரினங்களும் வாடி அடுத்தப் பருவ மாற்றத்தை எதிர்பார்க்கும் பருவமாக விளங்குகிறது. கோடைக்காற்று, கோடை வெப்பம், கோடைகால மழையைத் தருவித்து, பருவநிலையை நிலைநிறுத்தும் காலமாக அமைந்துள்ளது.

பிரிந்தத் தலைவன் கார்காலத்தில் இல்லறக் கடமையாற்ற இல்லறம் திரும்புவர். அதற்குப் பின் வரும் கூதிரிலும் இல்லில் இருந்துக் கூட்டம் நிகழ்த்தினர். பின்னர் வரும் முன்பனி, பின்பனிப் பருவங்களில் பிரிவு மேற்கொண்டுள்ளனர். இளவேனில் வந்ததும் இல்லுய்த்துள்ளனர். பின்னர் முதுவேனிலில் பிரிந்துள்ளனர்.

முதுவேனிலின் முடிவில் கார்காலத்திற்காகப் பிரிந்தவர்கள் காத்திருந்தனர். மீண்டும் கார்காலத்தில் இல்லறத்தில் கூடியுள்ளனர். முறையான வாழ்வினை மேற்கொள்ள பருவக்காலம் துணைநின்றது. பருவக்காலத்தை ஒட்டியே அவர்களது அகவாழ்வு அமைந்தது. இயற்கைச் சூழலும் அதற்குத் துணைநின்றது.

பருவக்காலங்களில் அகமாந்தர் அடையும் வாழ்க்கை மாறுதல்களையும் இயற்கைச் சூழலோடு பொருந்தி நின்ற அவர்களது மன உணர்வையும் தெரிந்துகொள்ள முடிகிறது. இவற்றால் முன்பனி, பின்பனி, முதுவேனிற் போன்றப் பருவங்கள் செலவு மேற்கொள்ளும் பருவங்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. கார், கூதிர், இளவேனில் என்னும் பருவங்கள் செலவைத் தடுத்துக் காமக்கிளர்ச்சியை உண்டாக்கி, தலைவன் தலைவியர் இன்ப நாட்டத்தில் ஈடுபடும் பருவங்களாகக் காட்டப்படுகின்றன. காலிற்பிரிவு, கலத்திற்பிரிவு என்ற இரு பிரிவுகளுக்கேற்பக் கார்காலமும் இளவேனிற்காலமும் பிரிவிற்குப்பின் இல்லம் திரும்பும் பருவங்களாகக் குறிக்கப்படுகின்றன. நாம் ஆறுபருவங்களையும் கண்டு உணர்ந்தாலும் அதனை உணர்ந்து அதற்கேற்ற இயற்கை வாழ்க்கைச் சூழலைச் சங்கத் தமிழர் அனுபவித்து வாழ்ந்துள்ளனர்.

ஞாயிற்றின் ஆற்றலும் மேகங்களின் இயக்கமும் பருவகாலச் சூழலை நிர்ணயிக்கும் கருவிகள் ஆகும். இந்த அறிவியல் உண்மையை நிலைநிறுத்துவது போல் கதிரவன் சுட்டெரிக்கும் காலமாக முதுவேனில் சுட்டப்படுகிறது. மேக இயக்கத்தால் மழை பெய்யும் தன்மை கார்ப்பருவத்தில் நடைபெறுகிறது. இயற்கையாக, ஆறுப் பருவங்களைச் சங்கத்தமிழர் நுட்பமாக அறிந்துள்ளனர். அப்பருவங்களைக் காலங்களுக்குட்படுத்தி, அதற்கேற்ப என்ன பருவங்களில் என்ன பூ பூக்கும், எந்த காய்க் காய்க்கும் என்பதை வகைப்படுத்தி உணர்த்துகின்றனர். பறவைகள், விலங்குகள், மனிதர்கள் ஆகியோர்ககளுக்கு ஒவ்வொரு பருவத்திலும் ஏற்படும் அகவுணர்வுகளையும் உணர்த்துகின்றது.

முதுவேனில் கூடும் கூட்டத்தை விட, கார், கூதிர் ஆகியத் தண்ணிய, பதமானக் காலங்களில் கூடினால் அடையும் இன்பம் மிகுதியாகும்.

முன்பனி, பின்பனி காலங்களுக்குள்ளே வேறுபாடு இல்லை. அதிக பனிக்காலம் பற்றிய அதிக அளவிலான சான்றுகளும் இல்லை.

பெரும்பொழுதானது மக்களின் வாழ்வுக்கு எல்லைக்கற்களாக அமைந்ததை இயற்கைச் சூழல்களோடு விளக்கப்பட்டுள்ளன. மக்களது அகச்சூழல்களை அவர்களின் மன உணர்வுகளோடு புலவர்கள் சிறப்பாகப் பொருத்திக் காட்டியுள்ளனர்.

இரண்டாவது இயலான சிறுபொழுதுகள் எனும் இயலில் ஒருநாளின் கூறுகள் விளக்கப்பட்டுள்ளன. சிறுபொழுதின் ஆற்றலால் உயிரினங்களும், பயிரினங்களும் மாற்றங்களை அடைகின்றன. பிரிவுற்றார் காலையிலும் நண்பகலிலும் படும் துயரைவிடவும் மாலையிலும், இரவிலும் எய்தும் துயர் மிகுதியாகும்.

சிறுபொழுது ஐந்து எனத் தொல்காப்பிரால் பகுக்கப்பட்டாலும் சிறுபொழுது ஆறு என ஐந்நிலங்களுக்கும் கணக்கிடப்பட்டு யாமம், வைகறை, விடியல், நண்பகல், மாலை எனப் பகுத்துக் கூறப்பட்டுள்ளது. அப்பொழுதுகளில் நிகழும் நிகழ்வுகளும் விளக்கப்பட்டுள்ளன.

வைகறை, இருள் புலராத காலை நேரத்தைக் குறித்துள்ளது. விடியல் முன்னரே அறிவிக்கும் பொழுதாக விளங்குகிறது. வைகறை விடியல், நண்பகல், எற்பாடு குறித்தச் செய்திகள் குறைந்த அளவில் காணப்படுகின்றன. மக்களின் அன்றாட செயல்பாடுகளும், தொழில்களும் நிகழ்வுகளும் விளக்கப்பட்டுள்ளன. மாலை, யாமம் (இரவு) குறித்தச் செய்திகள் மிகுதியாகக் கூறப்பட்டுள்ளன.

உலக உயிர்கள் விழிப்படைந்துத் தங்கள் கடமையைச் செய்யத் தயார் படுத்தும் காலமாக விடியல் பொழுது காட்டப்படுகின்றது. நண்பகல் வெப்பக் கதிர்கள் அதிகமாக வீசி, மக்களின் தொழில்கள் நடைபெறும் காலமாக அமைந்துள்ளது. பகலில் குறியிடத்துக் கூடும் கூட்டம் காதலர்க்கிடையே இருந்ததைப் பகற்குறியாகக் காட்டப்பட்டுள்ளது.

கதிரவன் படும் பொழுது, உலகம் பொலிவிழந்து வெப்பம் குறைந்தக் காலமாக அமைநதுள்ளது.

மாலை சிவந்த வானத்தின் காட்சிகளைக் கொண்ட அழகு மிகுந்ததாகக் காட்டப்படுகிறது. வழிபாடு, பலியுணவு படைத்தல், வேள்விசெய்தல் போன்றவை நடக்கும் காலமாகத் திகழ்கிறது. உயிரினங்கள் தங்கள் உணவினைத் தேடும் காலமாக உள்ளது. தலைவன் தலைவியர் மகிழ்ந்திருக்க வேண்டியப் பொழுதாக அமைந்துள்ளது. அல்லாதவர்கள் பிரிவை எண்ணி தவிக்கும் காலமாக அமைந்து அவர்களுக்குத் துன்பத்தைத் தருவதாக உள்ளது.

யாமப்பொழுது, உலக உயிரினங்கள் ஒடுங்கி அடங்கும் பொழுதாகும். தனிமைத்துன்பம், காமத்துன்பம் இவற்றைக்கொண்டு வரும் இரவுப்பொழுது, பல்வேறு நிகழ்வுகளைக் கொண்டு விளக்கம் பெறுகிறது.

சிறுபொழுது குறித்தச் செய்திகள், மாந்தர் தம் அகச்சூழலையும் வாழ்வியல் சூழலையும் காட்டுகிறது. அவர்களது வாழ்வும் உணர்வும் இயற்கைத் தோய்வோடு அமைந்திருந்ததைக் காட்டுகிறது. பருவப் புனைவுகள்  மக்களின் வாழ்வியல் கூறுகளோடு இயைந்துக் காட்டப்படுகின்றன. மலை, காடு, வயல், கடல் இவற்றால் ஆன நிலக்கூறுகள் ஒரு நாளின் காலக்கூறுகளுக்கு உடன்பட்டு நிற்கின்றன. அதன்வழி மாந்தர்களின்  வாழ்வியல் கூறுகள் நிர்ணயித்து வரப்பட்டுள்ளது.

காலநுட்பங்கள் எனும் மூன்றாவது இயலில் காலங்களைத் துல்லியமாகக் கணக்கிட முறை விளக்கப்படுகின்றது. கதிரவனின் தோற்றத்தைக் கொண்டு இரவுபகல் கணிக்கப்பட்டுள்ளது. பொழுது, நாள், திங்கள், பருவம், ஆண்டு எனக் கால அளவின் பெருக்கத்தைக் கணித்தும் அதனை வாழ்வில் பயன்படுத்தியும் வந்துள்ளனர்.

நாள் என்பதுப் பகற்கூறு, இரவுக்கூறு இரண்டையும் குறிக்கின்றது. பகற்கூறு இரவுக்கூறில் நடைபெறும் நிகழ்வுகளும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

மாதம், ஆண்டு, விழாக்கள் கொண்டாடப்பட்டக் காலகட்டமாகக் குறிபிடப்பட்டுள்ளன.  ஆண்டின் பெருக்கமான ஊழிக்காலம் அவற்றின் வகைகள் குறிப்பிடப்படுகின்றன. ஊழிக்காலம் தாண்டியக் காலங்களையும் வகுத்தமையை சங்கஇலக்கியங்கள் கூறுகின்றன.

கண் இமைக்கும், கைநொடிக்கும் காலமும் ஒரு மாத்திரை என மிகச் சிறியக் கால அளவையை எண்ணிட்டனர். மாத்திரை போன்றச் சிறுகால அளவைத் துடி, கலை என்றழைத்துள்ளனர். நாழிகை என்பது மாத்திரையை விடவும் சற்றுப் பெரிய கால அளவையாகக் கருதியுள்ளனர்.

ஓர் இரவின் காலக்கூறு யாமம் என்று வழங்கப்பட்டுள்ளது. முந்தைய யாமம் மக்கள் தங்கள் தொழில் முடிந்து உறங்கச் செல்லும் காலமாகும். இரவின் நடுப்பகுதி, அரைநாள், நடுநாள் என வழங்கப்பட்டது. கடையாமத்தின் இறுதிப்பகுதி வைகறைப் பொழுது என அழைக்கப்பட்டுள்ளது.

பாணர்கள் என்பது ஒருநாளின் பாதியாகக் கொண்டு இரவு பகல் என பிரிக்கப்பட்டுள்ளது.

சங்கத்தமிழர்கள் விழாக் காலங்களை இயற்கையில் நிகழும் பருவக் காலங்களை ஒட்டியே நிகழ்த்தியுள்ளனர். காலங்களுக்கு ஏற்ப பருவ மாற்றங்களுக்குத் தக்க வகையில் விழாக்களைக் கொண்டாடியுள்ளனர்.

ஐம்பூதங்கள் எனும் நான்காவது இயலில், ஐம்பூதங்கள் உலகை இயக்கும் காலதோற்றத்தைப் பெறக் காரண கருவிகளாக அமைந்துள்ளன. காலம் என்னும் அழியாப்பொருள், நிலத்தில் உருவாக்கும் மாற்றத்தை நிகழச் செய்யும் நிலைக்களன்களாக இயங்குகின்றது.

ஐம்பூதங்களுக்கும் களங்களுக்குமானத் தொடர்புக் கூறப்பட்டுள்ளது. ஐம்பூதங்களும் ஐம்புல உணர்வோடு இயைந்து இருந்ததைச் சங்க இலக்கியச் சான்றுகள் நிறுவுகின்றன. ஐம்பூதங்களின் சேர்க்கையான உலகம், காலத்தினால் பெறும் மாற்றம் விளக்கம் பெற்றுள்ளது. வளி என்னும் காற்று, பூதம் என்னும் சொல்லாட்சியைக் கொண்டுள்ளது. பூதங்கள் ஐந்தும் நிலம், தீ, நீர், வளி, விசும்பு என வகுக்கப்பட்டுள்ளன.

எட்டுத்தொகையில் பரிபாடலும் பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சியும் ஐந்துப் பூதங்களை நீரும் நிலனும் தீயும் வளி விசும்போடு ஐந்தும் என வகுத்துக் கூறுகின்றன. பிற இலக்கியங்களில் பூதங்களைத் தனித்தனியே கூறப்பட்டுள்ளன. நிலம் என்னும் பூதம் சிறப்பான ஒன்றாகக் கருதப்பட்டுத் திணை அடிப்படையில் குறிஞ்சி, முல்லை,

மருதம், நெய்தல் எனப் பகுக்கப்பட்டுள்ளது. இயற்கையை இறைவனாகக் கொண்ட தமிழர்கள் ஐம்பூதங்களையும் கடவுளாக்கி இன்றும் அதனை வழிபடுகின்றனர். சிவவடிவங்களாகக் கொள்ளப்பட்ட ஐம்பூதங்களுக்கான கோவில்கள் தமிழகத்தில் காணப்படுகின்றன.

சங்க இலக்கிய வருணனைகளுக்கும் ஐம்பூதங்கள் உவமையாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. கூறப்படும் பொருளின் உயர்விற்கு ஏற்ப அவை கையாளப்படுகின்றன. விசும்பு என்று ஆகாயப் பூதம் கூறப்படுகிறது. ஐம்பூதங்களே பருவ மாற்றங்களுக்குக் காரணமாக இருப்பதை மழை என்னும் செயல்பாடு புலப்படுத்துகிறது. கடல் நீர் காற்று என்னும் ஆவியாகி மின்னல் என்னும் நெருப்பாகி ஆகாயத்திலிருந்து நிலத்தை அடையும் சுழற்சி உலகின் முக்கிய நிகழ்வாகிறது. இதனால் நிலம் அடையும் தோற்றப் பொலிவு மக்கள் மனதின் அகவுணர்வுகளுக்குக் காரணமாகி அவர்களது வாழ்க்கைச் சூழலை அமைக்கிறது. இவ்வுண்மையை சங்கஇலக்கியப் பாடல்கள் உணர்த்தி நிற்கின்றன.

நமது புவிக்கோள் சுழல்வதும் விண்கோள்கள் இயங்குவதும் கதிரவன் உதிப்பதும் மறைவதும் உலகில் ஒளியின் வீச்சு படர்வதும் இருள் சூழ்வதும் கால வரிசைப்படிதான். காலக்கணக்கு தொடக்கத்தில் வேளாண்மை, பண்டிகைகள், வழிபாடு, வாணிபம் என்னும் சமூகநோக்கங்களுக்காகவும் பின்னர் சோதிடம், வானியல் போன்ற நோக்கங்களுக்காகவும் பின்பற்றப்பட்டுள்ளது. நாளும் கோளும் நல்ல நிலையும் நிற்பதால் மழை பொழிதலும் அதனால் உலகம் இன்பம் அடைதலும் உண்டு எனத் தமிழர்கள் நம்பினர். கோள்களின் நிலை மாற்றத்தால் மழை இன்மை நேர்தலும் உண்டாகும் எனக் கருதினர். எனவே, நாளம் கோளும் மக்களின் வாழ்க்கை விதியை முன்னின்று நடத்தும் முக்கியப் பொருளாக அந்நாளில் நிலைபெற்றிருந்தது. நாள் கோள்களின் இயக்கத்தினால் காலமானதுச் சுழல்கிறது என்பதையும் ஞாயிறும் திங்களும் பகல், இரவுகளை ஆக்குகின்றன என்பதை அறிந்தவர்களாகவும் அக்காலத் தமிழர்கள் விளங்கியுள்ளனர்.

ஞாயிறு உலகின் முழுமுதற் பொருளாய் விளங்கியதால் ஞாயிற்றின் இயக்கத்தைக் கொண்டு பிரபஞ்சம் முழுவதும் செயல்படுவதை நம்பினர். திங்களின் இயக்கமே மாதம் என்னும் காலக்குறிப்பினைக் கணக்கிட உதவியது.

உரோகிணியைத் திங்கள் கூடும் நாளை திருமணத்திற்கு உரிய சிறந்த நாளாகச் சங்ககால மக்கள் நம்பியுள்ளனர். வானில் நிகழும் வானவில்லும் மின்னலும் விண்மீன் வீழ்வும் கோள்நிலையும் வைத்து மழை, பனி, வெயில் போன்றக் காலத்தின் இயல்புகளைக் கணித்துள்ளனர். அவர்களின் அகவாழ்வில் காலம் பெரும்பங்கு வகித்துள்ளது. நாழிகையைக் கணக்கிடுதல் நன்நிமித்தம் பார்த்தல், மழை பொழியும் காலங்களை அறிதல் ஆகிய வாழ்வியல் நிகழ்வுகளை வானத்தில் உள்ள கோள்களையும் விண்மீன்களையும் அவற்றின் இயக்கங்களையும் கொண்டு முடிவுசெய்துள்ளனர்.

சங்கத்தமிழர் கடைபிடித்த நம்பிக்கைகள் சகுனமாகக் கருதிய நிகழ்வுகள், மகிழ்வுடன் கொண்டாடிய விழாக்கள், அறமாகக் கருதி கொண்டு ஒழுகியச் சமூகக் கடமைகள் போன்ற அனைத்தும் காலத்தை ஒட்டியும் இயற்கையாக நிகழும் பருவமாற்றங்களுக்கு ஏற்பவும் அமைந்துள்ளன. அப்பருவ மாற்றங்கள், மக்களின் அகஒழுக்கங்களுக்கு உறுதுணையாக நின்று உரிப்பொருள் ஒழுக்கத்தை நிலைநிறுத்துயுள்ளன. காலமும் காலநிலை மாற்றங்களுமே மக்களின் செயல்கள், அன்றாட நிகழ்வுகள், சமுதாய ஒழுங்குகள் சிறந்து விளங்கக் காரணமாக உள்ளன. முதற்பொருளான காலம் நிலைபெற்ற இவ்வுலகினை இயக்கும் காரணியாக அமைவதைச் சங்க இலக்கியச் சான்றுகள் நிறுவுகின்றன. இவ்வாராய்ச்சியின் தொடர்ச்சியாக பெரும்பொழுதின் தொழில்கள், சங்க இலக்கியத்தில் பருவப்புனைவுகள், புறவாழ்வில் காலங்களின் பங்கு என்னும் களங்களில் ஆய்வினை நிகழ்த்தலாம்.

## துணைநூற் பட்டியல்

### முதன்மை ஆதாரங்கள்


*1.சுப்பிரமணியன். ச.வே., (ப.ஆ) - சங்க இலக்கியம் மூலம் முழுவதும்*
*மணிவாசகர் பதிப்பகம்*
*சென்னை*
*முதற்பதிப்பு 2006*

*2. பாலசுப்பிரமணியன். கு.வெ. - நற்றிணை மூலமும் உரையும்*
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை*
*முதற்பதிப்பு 2004*

*3. நாகராஜன். பி., (உ.ஆ) - குறுந்தொகை மூலமும் உரையும்*
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை*
*முதற்பதிப்பு 2004*

*4. ஆலிஸ். அ. - பதிற்றுப்பத்து மூலமும் உரையும்*
*நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்,*
*சென்னை*
*முதற்பதிப்பு 2004*

5. துரைச்சாமிபிள்ளை. சு. ஔவை. (உ.ஆ) - பதிற்றுப்பத்து மூலமும் உரையும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை 1973

6. விசுவநாதன். அ., (உ.ஆ) - கலித்தொகை மூலமும் உரையும் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை மூன்றாம் பதிப்பு 2009

7. செயபால். இரா. (உ.ஆ) - அகநானூறு மூலமும் உரையும் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை முதற்பதிப்பு 2004

8. குருநாதன். வ. - புறநானூறு மூலமும் உரையும் வடிவேல் பதிப்பகம் தஞ்சாவூர் முதற்பதிப்பு 2003

9. துரைசாமிப் பிள்ளை. ஔவை - செவ்விலக்கியக் கருவூலம்
புறநானூறு
தமிழ்மண் அறக்கட்டளை
சென்னை
2008

10. பாலசுப்பிரமணியன். கு.வெ., (உ.ஆ) - புறநானூறு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை
முதற்பதிப்பு 2004

11. நாராயண வேலுப்பிள்ளை. (உ.ஆ) - பெரும்பாணாற்றுப்படை
பத்துப்பாட்டுத் தெளிவுரை
முல்லை நிலையம்
சென்னை
முதற்பதிப்பு 1995

12. பொதுவன் செங்கை (உ.ஆ) - பத்துப்பாட்டு
சிறுபாணாற்றுப்படை
செய்தியுரை
செங்கைச்செல்வி
வெளியீடு
சென்னை
2009

13. சுப்பிரமணியன். ச.வே., - சிறுபாணாற்றுப்படை தெளிவுரை
(உ.ஆ) மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்
முதற்பதிப்பு 2009

14. சுப்பிரமணியன். ச.வே., - சங்க இலக்கியம்
(உ.ஆ) பத்துப்பாட்டுத் தெளிவுரை
மதுரைக்காஞ்சி
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்
முதற்பதிப்பு 2009

15. சோமசுந்தரனார் - மலைபடுகடாம்
கழக வெளியீடு
1978

## துணைமை ஆதாரங்கள்


1. அடைக்கலசாமி. ஆர்., - தமிழ் இலக்கிய வரலாறு
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி
ஐந்தாம் பதிப்பு 1989

2. அருணாசலம். மு. - தமிழ் இலக்கியம் சொல்லும்
கதைகள்
சாகித்ய அகாதெமி
புதுதில்லி
முதற்பதிப்பு 1984

3. அறவாணன். க.ப., - தமிழ்ச் சமுதாய வரலாறு
தமிழ்க்கோட்டம்
புதுச்சேரி
முதற்பதிப்பு 1992

4. ,, - தமிழ் மக்கள் வரலாறு
தொல் தமிழர் காலம்
தமிழ்க்கோட்டம்
சென்னை
முதற்பதிப்பு 2005

5. ,, - தமிழ் இலக்கியச் சமூகவியல்
தமிழ்க்கோட்டம்
புதுச்சேரி
முதற்பதிப்பு 1992

6. ஆநிரைக் காவலன் - புறநானூற்றில் உயிரினங்கள்
மெய்யப்பன் பதிப்பகம்
சிதம்பரம்
முதற்பதிப்பு 2002

7. இராகவையங்கார். இரா. - தமிழகக் குறுநில வேந்தர்கள்
நாம் தமிழர் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு 2009

8. இராசா. சி - புறநானூறு அகராதி
பாவை பப்ளிகே-ன்ஸ்
சென்னை
முதற்பதிப்பு 2010

9. இராமலிங்கம். அரங்க - சங்க இலக்கியத்தில் வேந்தர்
ஐந்திணைப் பதிப்பகம்
சென்னை
1987

10. கந்தசாமி - புறத்திணை வாழ்வியல்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
முதற்பதிப்பு 1944

*11. கந்தையா பிள்ளை. ந. சி. - தமிழகம்*
*திருநெல்வேலி சைவசித்தாந்த*
*நூற்பதிப்பு கழகம்*
*சென்னை*
*மறுபதிப்பு 1955*

*12. ,, - சங்கத்தமிழ்ப் புலவர் அகராதி*
*ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்*
*சென்னை*
*இரண்டாம் பதிப்பு 1960*

*13. குருநாதன். வ. - சங்ககால அரச வரலாறு*
*தமிழ்ப் பல்கலைக்கழகம்*
*தஞ்சாவூர்*
*2001*

*14. கோவிந்தா, க. - பண்டைத் தமிழரின் போர் நெறி,*
*வள்ளுவர் பண்ணை,*
*சென்னை.*

*15. சண்முகம்பிள்ளை, மு. - சங்கத்தமிழர் வாழ்வியல்,*
*உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*சென்னை,*
*இரண்டாம் பதிப்பு, 1997*

*16.சுப்பிரமணியன். ச.வே. (உ.ஆ) - தொல்காப்பியம் தெளிவுரை*
*மணிவாசகர் பதிப்பகம்*
*சென்னை*
*11ஆம் பதிப்பு 2010*

*17.சுப்பிரமணியன். ச.வே. (உ.ஆ) - தொல்காப்பியம் பொருளதிகாரம்*
*மெய்யப்பன் பதிப்பகம்*
*சிதம்பரம்*
*2009*

*18.சுப்பிரமணியன். ச.வே. (உ.ஆ)- பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்*
*சுப்பிரமணியன். ச.வே.(ப.ஆ)*
*மெய்யப்பன் பதிப்பகம்*
*சிதம்பரம்*
*2007*

*19.சுப்பிரமணியன். ச.வே. (உ.ஆ) - சங்ககால கபிலர் பாடல்கள்*
*மணிவாசகர் பதிப்பகம்*
*சென்னை*
*முதற்பதிப்பு 2011*

*20.சுப்பிரமணியன். ச. வே. (ப.ஆ)- தமிழின் பெருமையும், தமிழர் பெருமையும்*
*மெய்யப்பன் பதிப்பகம்*
*சிதம்பரம்*
*முதற்பதிப்பு 2010*

## அகராதிகள்


1. கருப்பக்கிளார் (தொ. ஆ) - சிறப்புப்பெயர் அகராதி
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்
திருநெல்வேலி

2. கதிரைவேற்பிள்ளை (தொ.ஆ) - தமிழ் மொழி அகராதி
ஏசியன் எடுகே-னல் சர்வீஸஸ்
புதுதில்லி
1981

3. கழகப் புலவர் குழுவினர் (தொ.ஆ) - கழகத் தமிழ் அகராதி
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம்
திருநெல்வேலி
முதற்பதிப்பு 1914

4. சந்தியா நடராஜன் (ப.ஆ) - தமிழ்ப் பேரகராதி
இரண்டாம் பாகம்
சந்தியா பதிப்பகம்
சென்னை
2004

5. சிங்காரவேலு முதலியார் (தொ.ஆ) - அபிதான சிந்தாமணி
ஏசியன் எடுகே-னல் சர்வீஸஸ்
புதுதில்லி
1981

6. சுப்பிரமணியக் கவிராயர். சே.வ.ரா - தமிழ்ச் சொல்லகராதி
(தொ. ஆ.) உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்
சென்னை
1998

7. சுப்பிரமணியன். ச.வே. - மெய்யப்பன் தமிழ் அகராதி
(தொ.ஆ) மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
2006

8. மூர்த்தி. அ. சி. - லியோவின் தமிழ் அகராதி
லியோ புக் பப்ளி-ர்ஸ்
சென்னை
2008

9. வீரமாமுனிவர் - சதுரகராதி
வீரமாமுனிவர் ஆய்வுக்கழகம்
பாளையங்கோட்டை
1979

**ஆய்வுக்கோவை**


1. அகத்தியலிங்கம். ச. (ப.ஆ) - இந்தியப் பல்கலைக்கழகத்தமிழ் ஆசிரியர் மன்றம் ஆய்வுக்கோவை, தொகுதி 1 1986

2. இளந்திரையன். சாலை. (ப.ஆ) - இந்தியப் பல்கலைக்கழகத்தமிழ் ஆசிரியர் மன்றம் ஆய்வுக்கோவை தொகுதி 2 1981

3. கண்ணகி கலைவேந்தன் (ப.ஆ) - ஔவைத் தமிழ் ஆய்வு மாலை தொகுதி 1 ஔவைத் தமிழ் அறநெறி மற்றும் பண்பாட்டு ஆய்வுமையம் தஞ்சாவூர் முதற்பதிப்பு 2003

4. ஜெகதீசன். இரா. - பத்துப்பாட்டு ஆய்வுக்கோவை தொகுதி 3 சிறுபாணாற்றுப்படை குறிஞ்சிப் பதிப்பகம் ஆம்பூர் முதற்பதிப்பு 2013